# கம்பன் அடிப்பொடி
# கலைக் களஞ்சியம்


தொகுப்பாசிரியர் :
கம்பன் அடிகூடி **பழ. பழனியப்பன்**







**உமா பதிப்பகம்**

171, (புதிய எண். 18), பவளக் காரத் தெரு,
மண்ணடி, சென்னை - 600 001.
தொலைபேசி : 2521 5363, 2525 0092

கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்களின்
**நூற்றாண்டு விழா** கொண்டாடப் பெறும்
05.04.2009, வெளியிடப் பெற்றது.

# நூல் விவரப் பட்டியல்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | கம்பன் அடிப்பொடி கலைக் களஞ்சியம் |
| தொகுப்பாசிரியர் | : | கம்பன் அடிசூடி பழ. பழனியப்பன் |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு ஆண்டு | : | முதல் பதிப்பு - ஏப்ரல் - 2009 |
| பதிப்புரிமை | : | © கம்பன் அடிப்பொடி நூற்றாண்டு விழாக் குழு |
| தாள் | : | J.K. மேப்லித்தோ |
| நூல் அளவு | : | 14 x 22 செ.மீ. டெம்மி |
| எழுத்து | : | 11 புள்ளிகள் |
| பக்கங்கள் | : | xvi + 24 + 400 = 440 |
| பைண்டிங் | : | கலிக்கோ கட்டு |
| விலை | : | ரூ. 150.00 |
| ஒளி அச்சு | : | **விக்னேஷ்வர் கிராபிக்ஸ்** சென்னை - 600 005. |
| அச்சிட்டோர் | : | **பரமேஸ்வரி கிராபிக்ஸ்** சென்னை - 600 005. |
| தயாரிப்பு | : | **இராம. லெட்சுமணன்** உமா பதிப்பகம், சென்னை - 600 001. |
| நூல் வெளியீடு | : | **உமா பதிப்பகம்** சென்னை - 600 001. |

30-24



மலர்ந்தது :
6.6.1908

உதிர்ந்தது :
28.7.1982

## கம்பன் அடிப்பொடி சா. கணேசன்

## கடோபநிஷதம்

நசிகேதன் :

எமதர்மனே! மரணத்திற்குப் பிறகு மனிதன் வாழ்கிறான் என்று சிலரும், இல்லை என்று சிலரும் கூறுகின்றனர். உண்மை என்ன? (1.1.20)

எமதர்மன் :

மனத்தைச் சார்ந்திருக்கும் எல்லா ஆசைகளும் விலகும்போது மனிதன் மரணமற்றவன் ஆகிறான். இங்கேயே இறை நிலையை அடைகிறான். (2.3.14)

மனத்தின் எல்லா முடிச்சுகளும் அவிழும் போது மனிதன் மரணமற்றவன் ஆகிறான். 'உபதேசம்' 'இவ்வளவு'தான். (2.3.15)

**கம்பன்**

**மரணம் தோற்றம் என்று இவற்றிடை மயங்குப; அவர்க்கு உன்**
**சரணம் அல்லது ஓர் சரண் இல்லை, அன்னவை தவிர்ப்பான்.**

*(மீட்சிப்படலம் 106; பிரமன் உணர்த்தல்)*

# கம்பன் அடிப்பொடி சா. கணேசன் நூற்றாண்டு விழாக் குழுவினர்

'சரணம்', V-110.1, ஆறாவது பிரதான சாலை,
அண்ணா நகர், சென்னை - 600 040.
தொலைபேசி : 91-44-2626 9601 கைபேசி : 94450 22137
மின்னஞ்சல் : msampala@yahoo.com

**தலைவர்**

**டாக்டர் நீதிபதி அரு. இலக்குமணன்**

தலைவர் - இந்திய சட்ட ஆணையம், உச்ச நீதிமன்ற நீதிபதி (ஓய்வு)

**துணைத் தலைவர்கள்**

**திரு சத்தி அ. திருநாவுக்கரசு**

(அழகப்பா பல்கலைக்கழக மேனாள் ஆட்சிக்குழு உறுப்பினர்)

**டாக்டர் எஸ்.ஏ.பி. ஜவஹர் பழனியப்பன்**

தலைவர், குமுதம் குழுமம்

**செயலாளர்**

**கம்பன் அடிசூடி பழ பழனியப்பன்**

**துணைச் செயலாளர்**

**திரு நா. மெய்யப்பன்**

**பொருளாளர்**

**திரு எஸ். பெரியணன்**

(முன்னாள் ரோட்டரி மாவட்ட ஆளுனர்)

**செயற்குழு**

**பேராசிரியர் கணை சிற்சபேசன்**

**இயக்குநர் எஸ்பி. முத்துராமன்**

**பொறியாளர் எஸ். நாச்சியப்பன்**

**திரு இராம நாராயணன்.**

தலைவர், தமிழ்நாடு இயல்.இசை. நாடக மன்றம்

**திரு இராம லெட்சுமணன்,** உமா பதிப்பகம்

**கவித்தென்றல் காசு. மணியன்**

# உள்ளே...

## கம்பன் அடிப்பொடி வாழ்ந்த வண்ணம்

## கம்பன் அடிப்பொடியின் கை வண்ணம் - கலை வண்ணம்

### கல் வண்ணம்



### கலை வண்ணம்



### கவி வண்ணம்



### தமிழ் வண்ணம்

**கம்பன் தமிழ் வண்ணம்**



**பணிவண்ணம்**



**வரலாற்று வண்ணம்**



## கம்பன் அடிப்பொடியைக் கண்ட வண்ணம்

**தனி வண்ணம்**



**தொட்ட துறை வண்ணம்**

## கம்பன் பணி வண்ணம்







கம்பன் அடிப்பொடி வணங்கி மகிழ்ந்த,
அவர் சார்ந்த பிள்ளையார்பட்டிக் கோயில்

**கற்பக விநாயகர்**



## கவிச்சக்கரவர்த்தி கம்பன்

அன்னை ஆய், அத்தன் ஆகி
அருளும் ஆசான் ஆகிப்
பின்னும் என்னை ஆண்டு கொண்ட
பெருந் தெய்வம் தானே ஆகிக்
கன்னி எனும் தமிழ்த்தாய் ஈன்ற
கவிச்சக்கரவர்த்தி ஆன
என்னுடையன் கம்பன் பாதம்
என்றும் என் உச்சி மீதே!

- கம்பன் அடிப்பொடி

# தமிழ்த்தாயின் ஐம்பொன் சிலை

வடித்தவர் : சிற்பகலா சாகரம் ம. வைத்திநாத ஸ்தபதியார்



## தன் நேர் இலாத தமிழ்

ஓங்கல் இடை வந்து
உயர்ந்தோர் தொழ விளங்கி
ஏங்கு ஒலி நீர் ஞாலத்து
இருள் கடியும் - ஆங்கு அவற்றுள்
மின் நேர் தனி ஆழி
வெம் கதிர் ஒன்று; ஏனையது
தன் நேர் இலாத தமிழ்!



காரைக்குடி கம்பன் மணிமண்டப தமிழ்த்தாய்

திருக்கோயிலில் கொலு வீற்றிருக்கும்

**தமிழ்த்தாய்**

சிலை வடித்தவர் : சிற்பகுரு டாக்டர் **வை. கணபதி ஸ்தபதியார்**

"முன்னமருட் கம்பனெனும் நாமம் கேட்டான்
    மூர்த்தியவன் இராமகாதை முழுதும் கேட்டான்
பின்னருள்ள சான்றோர்கள் பேசக் கேட்டான்
    போர்த்துமவன் சேவடிக்கே பிச்சன் ஆனான்
அன்னையுடன் அத்தனுமே கம்ப னென்றான்
    அவன் பெயராய்த் தன் பெயரை ஆக்கிக் கொண்டான்
தன்னைமறந் திட்டான்தன் நாமம் கெட்டான்
    தலைப்பட்டான் சேர்ந்திட்டான் தலைவன் தாளே."

— கவிஞர் சொ.சொ.மீ. சுந்தரம்



*"நின்னை வணங்கி, நீ வகுத்த நெறியில் நிற்கும்
இது அல்லால் என்னை அடியோம் செயற்பால?"*

त्वमेव माता च पिता त्वमेव,
त्वमेव बन्धुश्च सखा त्वमेव,
त्वमेव विद्या द्रविणं त्वमेव,
त्वमेव सर्वं मम देव देव ॥

*"Who can say more than this rich praise that
you alone are you?"*

அமரர் கம்பன் அடிப்பொடி
அடிமலர்க்கு



**Dr. Justice AR Lakshmanan**
Chairman,
Law commission of India

1, Janpath
New Delhi - 110 011.
22.03.2009

# முன்னுரை

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற தமிழறிஞரான கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்களின் நூற்றாண்டு விழாக் குழுவிற்கு தலைமையேற்று வழி நடத்த வேண்டுமென திருவாளர்கள் பொறியாளர் எஸ். நாச்சியப்பன், அழகப்பா பல்கலைக் கழக மேனாள் ஆட்சிக்குழு திரு. சக்தி அ. திருநாவுக்கரசு, கம்பன் அடிசூடி பழ. பழனியப்பன் ஆகியோர் என்னை அணுகிய போது பெரு மகிழ்ச்சியுடன் இசைந்தேன். ஏனெனில் என் தந்தையாருடைய கெழுதகை நண்பர், விடுதலை வேள்வி வீரர், பல்கலை அறிஞர் சா. கணேசனுக்கு என்னால் ஆன அணில் பங்கைச் செய்து அஞ்சலி செலுத்த வேண்டுமென்ற நெடுநாள் பெரு விருப்பமே காரணமாகும்.

காரைக்குடி மண்ணை கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் மண்ணாக்கியவருக்கு காரைக்குடியில் ஒரு சிலை அமைக்கவும், அவர் பற்றி இத்தலைமுறையினரும், இனிவரும் தலைமுறையினரும் அறிய வேண்டிய அவசியம் கருதி ஒரு நிரந்தரப் புகைப்படக் காட்சியினை அமைக்கவும், இப்பெரும் மனிதரின்

நூற்றாண்டு நினைவாக அஞ்சல் தலை ஒன்றினை வெளியிடவும் வேண்டுமெனக் கருதி நான் தொடர்பு கொண்டதுமே இந்திய அரசு அமைச்சர் பெருமக்களான ப. சிதம்பரம், எஸ். ரகுபதி, ஆ. இராசா ஆகிய மூவருமே உடனே மனமகிழ்வோடு இசைந்தனர். தமிழக அரசு அமைச்சரான கே.ஆர். பெரியகருப்பன் அவர்களும் தொடங்கி வைக்க இசைந்தார்கள். குமுதம் குழுமத் தலைவர் எஸ்.ஏ.பி. ஜவஹர் பழனியப்பன், கம்பன் அடிப்பொடியோடு நெருங்கிப் பழகிக் களித்த கணபதி ஸ்தபதியார், தோழர் தா. பாண்டியன், இராஜேஸ்வரி நடராஜன் ஆகியோரும் உடனே இசைந்தனர். இவர்களுக்கெல்லாம் நன்றியை சொல்லில் சொல்லிக் காட்டிவிட முடியாது.

இம்மாமனிதரின் பல்துறை அறிவை பலரும் அறியச் செய்ய **'கம்பன் அடிப்பொடி கலைக் களஞ்சியம்'** என்ற பேரில் ஒரு அறிவுக் களஞ்சியத்தை வெளியிட எண்ணினேன். அதனை அவருடைய தலைமாணாக்கரான கம்பன் அடிசூடி மிக அருமையாக இத்தொகுப்பின் மூலமாக நிறைவேற்றியுள்ளார்கள்; பதிப்பகத் துறையில் முத்திரை பதித்த என் நண்பர் உமா பதிப்பகம் இராம. லெட்சுமணன் என் வேண்டுகோளை முழுமனதுடன் ஏற்று மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டு இதனை ஓர் முன்மாதிரியாக ஆக்கிக் கொடுத்துள்ளார்கள். இதனைப் படிக்கும் எவரும் மகிழ்வார்கள் என்பதில் யாதொரு ஐயமும் இல்லை எனத் துணிந்து கூறலாம். அத்தகைய பல்துறை அறிவுச் சுரங்கம்; கலைக் களஞ்சியம்; ஞானக் கருவூலம் இந்நூல். இதனைப் புரட்டும் எவரும் அறிவு வேட்கை பெறுவர்; இதனைப் பார்க்கும் எவரும் படிக்க ஆர்வமுறுவர்; இதனைச் சுவைக்கும் எவரும் பலரோடும் பகிர்ந்து கொள்ளக் காமுறுவர்.

*நடமாடும் கலைக் களஞ்சியமாக விளங்கியவரைப் பற்றிய கலைக் களஞ்சியத்தை பார்த்து மகிழுங்கள்! படித்து மகிழுங்கள்!*

**- நீதிபதி அரு. இலக்குமணன்**

*தலைவர்,*
*கம்பன் அடிப்பொடி சா. கணேசன்*
*நூற்றாண்டு விழாக் குழு*

# பணிவுரை

**மே**லொரு பொருளுமில்லா மெய்ப் பொருள், பால் நினைந்தூட்டும் தாயினும் நம்மாட்டு சாலப் பரிவுடையதாலே, மனிதனாய் அவதரித்தது; அதனால் கம்பன் மானுடம் வென்றதெனப் பாடி மகிழ்ந்தான். மகாகவி பாரதியோ கம்பனையே 'கம்பன் என்றொரு மானிடன் வாழ்ந்ததுவும்' என்று ஏத்திப் பாடி மகிழ்ந்தான். இன்று அவன் இருந்திருந்தால் 'கம்பன் அடிப்பொடி என்றொரு மானிடன் கம்பன் புகழ் பாடியதும்' என்று கவி புனைந்து மகிழ்ந் திருப்பான்.

ஆம். கம்பன் அடிப்பொடி தொட்ட தொட்ட துறையெலாம் மேதா விலாசம் உடையவராய் விளங்கினாலும், அவரை ஒரு மனிதர், மனிதரிலும் மனிதப் புனிதர் என்பதே அவருக்குச் சூட்டும் சரியான புகழாரமாய் விளங்கும். இது உண்மை. வெறும் புகழ்ச்சி இல்லை என்பதன் அடையாளச் சின்னமே அவர் நூற்றாண்டை நினைவு கூர்ந்து வெளிவரும் இந்த எளிய 'கம்பன் அடிப்பொடி கலைக் களஞ்சியம்' எனும் நூல்.

'கம்பன் அடிப்பொடியைக் கண்ட வண்ணம்...' என்ற மூன்றாம் பகுதியில் அவரோடு பல்வேறு துறைகளில் பழகியவர்கள் அந்தந்தத் துறையில் அவர் மேன்மையினை கண்டு காட்டிடுவர்.

'கம்பன் அடிப்பொடி கைவண்ணம், கலை வண்ணம்' எனும் இரண்டாம் பகுதியோ, அவருடைய பல்துறைப் புதிய பார்வையை, புகலரும் புலமையை, கசடற்ற கல்வியை, அறிவு விலாசத்தை, உயர்ஞானத்தை எல்லாம் விண்டுரைத்திடும்.

'கம்பன் அடிப்பொடி வாழ்ந்த வண்ணம்' பகுதி அவரை ஒரு மானிடன் என்றே வெளிச்சம் போட்டுக் காட்டும். அவர்தம் உறவினர் மட்டுமன்று, அவருக்கு உற்றாராயிருந்து உறவானவர்களும் மனிதனாய் அவர் வாழ்வாங்கு வாழ்ந்ததை, தாங்கள் அனுபவித்த வண்ணம் படம் பிடித்துக் காட்டிடுவர்; மனிதனாய் வாழ்ந்து மனிதப் புனிதராய் உயர்ந்ததை கேள்வி ஞானத்தால் மட்டுமல்லாது, தாம் கண்டு கேட்டு உயிர்த்து அனுபவித்ததை எல்லாம் மனம் நெகிழ சத்தியம் புகன்றிடுவர்.

வாழ்ந்த தலைமுறையினர், வாழ்கின்ற தலைமுறையினர் என்றிவர்களது கருத்து, அனுபவப் பரிமாற்றங்கள் எழுத்தில் வடிக்கப் பெற்றால் வரும் தலைமுறையினரைப் பண்படுத்திப் பயன் சுரக்கும், நலம் பயக்கும் என்ற நம்பிக்கையே இம்முயற்சி.

இப்படியொரு முயற்சியில் இறங்கியுள்ளோம் என்றதுமே தாமே முன் வந்து உதவிய உற்றார், உறவினர், அன்பர்கள், கம்பன் கழகங்கள், கலைஞர்கள், அச்சகத்தார், பதிப்பகத்தார் என்று எங்கள் முயற்சியைத் திருவினையாக்கிய அனைவருக்கும் நன்றி என்ற ஒற்றை வார்த்தையில் கொட்டிக் காட்ட முடியாத ஆழ்ந்த பேரன்பால் எங்கள் சென்னிதனை நிலம்படிய வைத்து வணங்கி மகிழ்கின்றோம். இப்புனிதப் பணியில் எம்மையெல்லாம் ஆட்கொண்ட கம்பன் அடிப்பொடியே காப்பு; அம் மானுடத் தெய்வம் அவர்கட்கெல்லாம் அருள் பொழியட்டும்!

**காரைக்குடி** **– கம்பன் அடிகூடி**
5.4.2009

# என்றுமுள...

**“என்றுமுள தென்தமிழ் இயம்பி இசை கொள்ள**
**நன்று வரவென்று பல நல்லுரை பகர்ந்தோம்”**

- என்று கம்பன் அடிப்பொடி தாம் எழுதும் கம்பன் திருநாள் வேண்டுகோள் கடிதங்களில் கம்பனின் அகத்தியப் படல அடிகளை ஒட்டி எழுதி, தம் நன்றியறிதலை பதிவு செய்வது வழக்கம்; நாமும் அதை ஒட்டியே இப்போது, அவருடைய நூற்றாண்டு நினைவாக வெளியிடப் பெறும் **இக்கலைக் களஞ்சிய நூலை ஆக்கிக் கொடுத்தவர்கள், அருகிருந்து காத்ததனை களிப்புடனே தந்தவர்கள் எல்லோருக்கும் நல்லுரை பல பகர்ந்து மகிழ்கிறோம்.**

விழா ஒன்றினை ஒட்டி மலரொன்றினைத் தயாரித் தளிப்பது எத்தனை கடினமான வேலை என்பதனை அனுபவித்தவர்கள் அறிவார்கள்; அதிலும் நூற்றாண்டினை ஒட்டி எனில், பழைய செய்திகள், படங்கள், இவற்றை எல்லாம் சேகரிப்பதோடு அதனை அடையாளம் தெரிகிறாற் போல் அழகுற அடுக்கி அமைத்துப் பதிப்பது என்பது பகீரதப் பிரயத்தனம் என்ற வழக்குப்போல மிகக் கடினமான முயற்சி.

இந்த நூல் இப்படி வெளிவருகிறதென்றால் அதற்கு முழுக்க முழுக்கக் காரணராய் அமைந்தவர் உமா பதிப்பக இராம. லெட்சுமணன் அவர்கள்தான்; நீண்ட நெடுங் காலத்திற்குப் பிறகு துணிந்து வை.மு.கோ. உரை என்றே அழைக்கப் பெற்ற கோபாலகிருஷ்ணமாச்சாரியாரின் உரையை அப்பழுக்குச் சொல்ல முடியாத வகையில் ஆர்வத்துடன் பதிப்பித்தவருக்கு இது ஒன்றும் பகீரத

முயற்சியாகாது; ஏனெனில் அவருடைய ஆர்வமும் அக்கறையும் அத்தகையது. எடுத்த எந்தவொரு செயலிலும் முழு ஈடுபாட்டுடன் செயலாற்றும் செம்மலாம் **உமா பதிப்பகம் இராம. லெட்சுமணருக்கு** கம்பன் பாடிப் பரவிய அந்த இராம லெட்சுமணர்கள் 'நன்றுகள்' பலவற்றை அளிப்பார்களாக!

கம்பன் அடிப்பொடியாரின் மைத்துனரான மீனாட்சி சுந்தரனாரின் மைந்தரும் புகைப்படக் கலைஞருமான **சுப்பு** என்று எல்லோராலும் அன்புடன் அழைக்கப் பெறும் சுப்பிரமணியன் அவர்கள் தம்மிடமிருந்த பழைய படங்களை எல்லாம் ஆர்வத்துடன் அள்ளித் தந்ததுதான் துணை நின்ற மற்றுமொரு காரணமாகும்;

அதே ஈடுபாட்டுடன் படங்களும் கட்டுரைகளும் தந்துவிய, கம்பன் அடிப்பொடியின் உயிர் நண்பர் ஆத்தங்குடி பெ.மு. சுப்பையா செட்டியாரின் புதல்வரும், தொல்பொருள் ஆய்வு அறிஞருமான **சுப. இராசகோபால்** அவர்கள் மறக்க முடியாத மாபெரும் துணையாவார்.

படங்கள், செய்திகள் தந்துதவிய **திருப்பத்தூர், புதுச்சேரி கம்பன் கழகத்தார்,** அடிப்பொடி தம் பேரன் **ச. கண்ணன்,** பேர்த்தியர் **வாசுகி அண்ணாமலை, கண்ணகி சாமிநாதன்,** தொண்டர் காரைக்குடி **உ. அஞ்செழுத்து** என்று இவர்களுக்கும், மேற்சொன்னோர்களுக்கும் அடிப்பொடி அருள் சுரந்து ஆசியருள்வாராக!

இந்நூலின் இவ்வகை அமைப்பிற்கும், பகுப்பிற்கும், படிதிருத்தத்திற்கும் துணை நின்ற தம்பி, புதுவைப் பாரதிதாசன் மகளிர் கல்லூரிப் பேராசிரியர் டாக்டர் **சேதுபதி**க்கு அடிப்பொடியின் கடைக் கண்ணளி பொழியுமாக!

மிகப் பழைய கட்டுரைகளை எல்லாம் தேடித் தந்ததோடு பல்வகையாலும் கேட்டபொழுதெலாம் கேட்டதினும் மேலாய், அடிப்பொடிபால் கொண்ட அன்பும்

நன்றியும் கொஞ்சமும் குறையாது, உதவிக் கரம் நீட்டிய கம்பன் அறிநிலை மேலாளர் என்பதினும் தம்மை அடிப்பொடியால் வளர்ந்தவர் என்று சொல்லிக் கொள்வதில் பெருமைப்படும் **எம். ஸ்ரீதரனுக்கு** அடிப்பொடி அனைத்து நலன்களையும் அருளுவாராக!

என்றுமுள தேன்தமிழ் பொழிந்து, சொற்கண்டு பிறர் வெஃகச் செய்த கற்கண்டுக் கவிச்சக்கரவர்த்தி புகழ் பாடிக் களித்த கம்பன் அடிப்பொடி கலைக் களஞ்சியம் இது இவ்வண்ணம் வெளிவரச் செய்த **இறை அருளுக்கு நன்றி** பல சொன்னோம் நயந்து பணிந்து புகழ்ந்து.

5.4.2009

**– கம்பன் அடிகுடி**

*செயலாளன், கம்பன் அடிப்பொடி*

*சா. கணேசன் நூற்றாண்டு விழாக் குழு*

## பஞ்சரத்னக் கீர்த்தனைகள் : அருட்கவி ஐந்து

தியாகராஜ சுவாமிகள் நாட்டை, ஆரபி, கௌளை, வராளி, ஸ்ரீராகம் என்ற ஐந்து கனராகங்களில் இயற்றிய சாஹித்யங்கள் தெற்கத்திய இசைக்கலைக்கு அவருடைய தனிப்பெரும் சேவையாக அமைந்ததோடல்லாமல், அவருக்கு உலகளாவிய பெருமையையும் புகழையும் ஈட்டித் தந்தன. ஆதி தாளத்தில் அமைக்கப் பெற்ற இந்த ஐந்து ரத்னங்களும் விஸ்தாரமான நிரவல்களுக்கு இடம் அளித்துக் கேட்போரின் செவிக்குத் தேன் பாய்ச்சுவன. கௌளை போன்ற சில கட்டுப்பாடுகள் நிரம்பிய வட்டத்திற்குட்பட்ட ராகம் கூட அவர்தம் கை வண்ணத்தால் கலை அழகு நிரம்பப் பெற்று இசை ஒளி வீசி மிளிர்ந்தன.

இவைகளைத் தம் உஞ்ச விருத்தி பஜனைகளில் பாடி மகிழ்வதிலும், மகிழ்விப்பதிலும் பெரும் மகிழ்ச்சி கொண்டிருந்தார். இவைகளை அவர் இயற்றிப்பாட இரண்டு காரணங்கள் இருந்தன. ஒன்று அவர் பாடல்கள் மெல்லிசைகளாக, அவர் காலத்திய ராக ஆலாபனை, தாளம், பல்லவி, நிரவல், ஸ்வர கற்பனை போன்றவற்றிற்கு அதிக இடந்தராதவை என்ற ஒரு விமரிசனம் இருந்து வந்தது. இரண்டாவதாக அவருடைய சீடர்கள் தியாகராஜர் தான வர்ணங்களில் சிறந்தவற்றை இயற்ற வேண்டுமென விரும்பினர். அதனாலேயே கவித்துவமும் இசை மேதைத்தனமும் இணைந்து சிறந்த இத்தகு கீர்த்தனைகளை இயற்றத் தூண்டுகோலாயின.

இவற்றுக்கு இன்னொரு பெரிய முக்கியத்துவமும் உண்டு. அவர் சமாதி முன் ஆண்டு தோறும் நடைபெறும் தியாகராஜ ஆராதனையின் பகுள பஞ்சமி உத்ஸவத்தில் காலையில் ஆண்டு தவறாது பாடி ஆராதிக்கப் பெறும் பெருமை உடையன.

இதேபோல் உலகமகாகவி கம்பனுக்கும் பஞ்சரத்னங்களை உண்டாக்க வேண்டும் என்ற பேரவாக் கொண்ட, கம்பனை இனங்

காட்டிய அமரர் கம்பன் அடிப்பொடி சா. கணேசனார், தம் இனிய நண்பர் இசைப் பேரறிஞர், பேராசிரியர் டாக்டர் எஸ். இராமநாதன் அவர்களின் துணையோடு கம்பன் பாடிய 96 வண்ணங்களும் உள்ளடங்கிய பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட பாடல்களில் இப்படிச் சில பாடல்களைத் தேர்ந்தெடுத்து அதே ஐந்து கனராகங்களில், தாளத்தில், 'கம்பன் அருட்கவி ஐந்து' எனப் பெயரிட்டு கம்பன் கவியரங்கேற்றிய பங்குனி அத்தத் திருநாளில் அவன் சமாதி கொண்டருளும் நாட்டரசன் கோட்டை பள்ளி படைக் கோயிலில் ஆராதனையின் போது பாடிப்பரவி வந்தார்கள்; இன்றும் அப்படியே நாமும் பின்பற்றுகிறோம்.

தியாகராஜரின் பாடல்களில் காணப்பெறும் கவித்துவம், மேதா விலாசம், ஸ்வர விஸ்தாரம், கருத்து வீச்சு, இசைப்புலமை இவற்றோடு ஒப்பும், ஈடும் மிக்க வகையில் கம்பன் பாடல்களும் சாந்நித்தியம் நிரம்பப் பெற்றவை என்பதைக் கேட்டு இன்புறுவோர் நிச்சயம் அநுபவித்து, ஆனந்தித்து உணர்ந்திடுவர்.



# கம்பன் அருட்கவி ஐந்து

**1. பால காண்டம் கடவுள் வாழ்த்து** **(நாட்டை)**

*உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்,*
*நிலைபெறுத்தலும் நீக்கலும், நீங்கலா*
*அலகு இலா விளையாட்டு உடையார் அவர்*
*தலைவர் : அன்னவர்க்கே சரண் நாங்களே.* (ப.3/பா.1)

**2. கருடன் துதி** **(ஆரபி)**

*'வாணாள் அளித்தி, முடியாமல்; நீதி*
*வழுவாமல் நிற்றி; - மறையோய்!*
*பேணாய், உனக்கு ஓர் பொருள் வேண்டும் என்று;*
*பெறுவான் அருத்தி பிழையாய்;*
*ஊண்ஆய், உயிர்க்கும் உயிர் ஆகி நிற்றி;*
*உணர்வு ஆய பெண்ணின் உரு ஆய்,*
*ஆண் ஆகி, மற்றும் அலி ஆகி! - ஆர், இவ்*
*அதிரேக மாயை அறிவார்?* (ப. 1289/பா.254)

**3. விராதன் துதி** **(கௌளை)**

*'வேதங்கள் அறைகின்ற உலகு எங்கும் விரிந்தன உன்*
*பாதங்கள் இவை என்னின், படிவங்கள் எப்படியோ?*
*ஓதம் கொள் கடல் அன்றி, ஒன்றினோடு ஒன்று ஒவ்வாப்*
*பூதங்கள்தொறும் உறைந்தால், அவை உன்னைப் பொறுக்குமோ?* (ப. 415/பா. 47)

*'நீ ஆதி பரம்பரமும்; நின்னவே உலகங்கள்;*
*ஆயாத சமயமும் நின் அடியவே; அயல் இல்லை;*
*தீயாரின் ஒளித்தியால்; வெளி நின்றால் தீங்கு உண்டோ?*
*வீயாத பெரு மாய விளையாட்டும் வேண்டுமோ?* (ப. 416/பா 53)

**4. இராமன் முடிசூட்டு விழாவைக் கொண்டாடும் நகரம்** **(வராளி)**

*வங்கியம் பல தேன் விளம்பின; வாணி முந்தின பாணியின்*
*பங்கி அம்பரம் எங்கும் விம்மின; பம்பை பம்பின; பல் வகைப்*
*பொங்கு இயம் பலவும் கறங்கின; நூபுரங்கள் புலம்ப, வெண்*
*சங்கு இயம்பின; கொம்பு அலம்பின, சாம கீதம் நிரம்பவே.* (ப. 264/பா. 64)

**5. தேவர்கள் துதி** **(ஸ்ரீராகம்)**

*'உன்னை உள்ளபடி அறியோம்; உலகை உள்ள திறம் உள்ளோம்;*
*பின்னை அறியோம்; முன் அறியோம்; இடையும் அறியோம், பிறழாமல்;*
*நின்னை வணங்கி, நீ வகுத்த நெறியில் நிற்கும் இது அல்லால்,*
*என்னை, அடியோம் செயற்பால?-இன்ப-துன்பம் இல்லானே!* (ப. 1347/பா.222)

---

(பக்க, பாடல் எண்கள் சென்னைக் கம்பன் கழகப் பதிப்பின்படி)



18.3.1946 கம்பன் திருநாளின் தொடக்க நாளில் கம்பன் திருஉருவப் படம் காரைக்குடி மேல மடத்திலிருந்து கல்லுக்கட்டி வழியாக விழா நடந்த மீனாட்சி உயர்நிலைப் பள்ளிக்கு ஊர்வலமாகக் கொண்டுவரப் பெற்று விழாத் தொடங்கப் பெற்றுது.



சா.க. அவர்கள் ஓவியர் எஸ்.கே. அய்யாவின் துணை கொண்டு முதன் முதலில் கம்பனுக்கு அமைத்த உருவப் படம்; உடனிருப்பவர் கற்றுச் சொல்லி என அந்நாளில் அழைக்கப் பெற்ற, இன்றைய சுருக்கெழுத்தாளர் போன்ற, கம்பன் சொல்வதை எழுதுபவர்.



''என்றும் பணியுமாம் பெருமை'' என்ற வள்ளுவர் வழி வாழ்ந்த சா.க.



நாட்டரசன்கோட்டைக் கம்பன் அருட்கோயிலில் பங்குனி அத்தத்
திருநாள் வழிபாட்டில்; உடன் உதவுவோர் மெ.நா. சிதம்பரம், பின்னாளில்
கம்பன் அறநிலையத் தலைவரான மு.மெ. முத்துராமன்,
இந்நாள் கம்பன் கழகச் செயலாளர் கம்பன் அடிசூடி







சிற்பகுரு வை. கணபதி ஸ்தபதியாரைக் கொண்டு சா.க. முதன் முதலாக வடிவமைத்த, தற்போது கம்பன் மணி மண்டப வளாகத்தின் தமிழ்த்தாய் திருக்கோயிலில் உள்ள தமிழ்த்தாய் சிலை; இடப்புறம் முன்றிலில் உள்ள வரித்தாய் சிலை; வலப்புறம் உள்ள ஒலித்தாய் சிலை.



ம.பொ.சி., புதுச்சேரி கம்பன் கழகத் தலைவர் ந. கோவிந்தசாமி ஆகியோருடன்; இடது கோடியில் இருப்பவர் நேதாஜியின் தளபதிகளுள் ஒருவரும், சா.க.வின் தோழரும், கம்பன் கழகத் தூணாக விளங்கியவர்களுள் ஒருவருமான அபிசீனியா பழ. நாச்சியப்ப செட்டியார்.



கம்பன் அடிபபொடியும், அவாதம தலை மாணாககனும், இன்றைய கமபன கழகச் செயலாளனுமான கமபன அடிசூடியும் 'வேழமுக வேலேநதி' என்ற பட்டி மணடப அறிமுக நிகழ்ச்சியை அவா அமரரான 1982ஆம ஆணடுக் கமபன திருநாளில நிகழததுகின்றனா.



கம்பன் மணி மண்டபத்திற்கு விஜயம் செய்தருளிய சிருங்கேரி சாரதா பீடம் சங்கராச்சாரிய ஸ்வாமிகள் ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த மஹா ஸ்வாமிகள், அன்றைய இளவல், இன்றைய ஸ்ரீ பாரதி தீர்த்த மஹா ஸ்வாமிகள் ஆகியோருடன் அளவளாவுதல். சா.க. அருகிலிருப்பவர் கம்பன் திருநாள் தவறாது உணவு உபசாரம் செய்த இராஜாஜியின் சீடர் ஆத்தங்குடி பெ.மு. சுப்பையா செட்டியார்.



1962 ஆம் ஆண்டு காஞ்சிப் பெரியவர்கள் ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் முதன் முதலாக இளையாத்தங்குடியில் கூட்டிய வியாஸ வித்வத் சதஸில் அவர்கள் ஆணைக்கிணங்க ஏழுப் பத்து நாட்கள் சா.க. அமைப்பாளராக முழுப் பொறுப்பேற்றுப் பணியாற்றியமை கண்டு பாராட்டி மகிழ்ந்து "சொல்லின் ரத்ன சேகரன்" என்று விருது வழங்கிக் கௌரவித்தார்கள்.



1981 கம்பன் திருநாளில் அறிமுகமான புதிய உத்தி நிகழ்ச்சியான "இன்று சந்திக்கும் இவர்கள்" என்ற தலைப்பில் மனோவேடம் தாங்கி கோசலை - கைகேயியாக இன்றைய இலக்கியச் சுடர் த. இராமலிங்கமும், இன்றைய சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி வி. இராமசுப்பிரமணியனும், தலைவர் ச.வே. சுப்பிரமணியனார்.



உ ததரா பிரதேச அலிபூா சிறையில சா க வுககு வழஙகப பெறற கைதி அடை யாள அட டை










சா.க எழுதிய சில நூல்கள்

# கம்பன் அடிப்பொடி
# சா. கணேசன் நூற்றாண்டு
# (1908 - 2008)

### வாழ்க்கை, பணிக் குறிப்புகள்

★ மலர்ந்தது: 06-06-1908 (கீலக, வைகாசி, மகம்); உதிர்ந்தது: 28-07-1982. பிள்ளையார்பட்டிக் கோயிலைச் சார்ந்த காரைக்குடி சாமிநாதன் செட்டியார்-நாச்சம்மை ஆச்சியின் மைந்தர்.

★ 5-4-1920ல் காரைக்குடி சா.லெ.ராம. உயர்குடும்ப மீனாட்சி ஆச்சியை மணந்தார்; மங்கையர்க்கரசி என்ற மகளைப் பெற்றார்கள்.

★ காரைக்குடி ரெங்க வாத்தியார் பள்ளியில் தொடக்கக்கல்வியும், தமிழ் இலக்கியங்கள், இலக்கணங்களை பண்டித வித்துவான் சிதம்பர ஐயரிடமும், பர்மா தோங்குவா பண்டித சேதுப் பிள்ளையிடமும் பயின்றார்.

★ காந்தி அடிகள் காரைக்குடி வந்தபோது அவருக்கு பணிவிடை செய்யும் தொண்டர் படைத் தலைமை ஏற்றதோடு 1927ல் காங்கிரஸ் இயக்கத்தில் இணைந்தார். சா. கணேசனின் கற்பக நிலையத்திற்கு காந்தி அடிகள் எழுந்தருளிய பெருமை பெற்றார்.

★ 1935ல் தந்தையார் காலமானதும், பொறுப்பை ஏற்ற சா.க. குடும்பத் தொழிலைக் கவனிக்க பர்மா செல்ல நாள் குறிக்கப் பெற்றது. அதே சமயம் காரைக்குடியில் நடைபெற இருந்த முப்பத்தாறாவது காங்கிரஸ் மாநாட்டு, செயலாளராக நியமிக்கப் பெற, பர்மா போகமுடியாது போனதால், தொழில் பெரும் இழப்பிற்குள்ளானது. தன்னலத்தினும் தாய்நாட்டு நேசமே அவரை ஈர்த்தது.

★ கம்பனின் இராமாவதாரக் காப்பியத்தால் பெரிதும் ஈர்க்கப் பெற்று காரைக்குடியில் 1939 ஏப்ரல் 2, 3 (வெகுதானிய ஆண்டு பங்குனி 20, 21) ஆகிய நாட்களில் ரசிகமணி டி.கே.சி. அவர்கள் தலைமையில் கம்பன் திருநாளைத் தொடங்கினார்கள்.

★ 1936 முதல் தீவிர தேசியப் போராட்டத்தில் பங்கேற்று, 1941ல் காந்தி அடிகள் தொடங்கிய தனி நபர் சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டு ப ாதயாத்திரையாக தில்லிக்கு பயணமாகி 66 நாட்களில் 586 மைல்களைக் கடந்ததும் கைதாகி உத்தரப்பிரதேச அலிபுரத்தில் சிறைவாசம் அனுபவித்தார்.

★ காரைக்குடியிலிருந்து 30 கல் தொலைவில் உள்ள நாட்டரசன் கோட்டையில் கம்பன் சமாதிக் கோயில் வளாகத்தில் பங்குனி அந்தத் திருநாளில் (மார்ச் 24, 1940) கம்பன் திருநாளையும், அதற்கு முந்திய மகம், பூரம், உத்தரம் ஆகிய மூன்று நாட்களில் காரைக்குடியிலும் கொண்டாடினார். கம்பன் பிறந்த நாளை நாம் அறிய சான்று ஏதும் கிடைக்காததால், அவன் தன் இராமாவதாரக் காப்பியத்தை அரங்கேற்றியதாக தனிப்பாடல் ஒன்றின் துணையால் அறிய முடிந்த நாளையே (கி.பி. 886 பெப்ருவரி 23உ புதன்கிழமை) கம்பன் கவிச்சக்கரவர்த்தியாக அவதரித்த நாளாகக் கொண்டு கொண்டாடினார்.

★ 1940 முதல் இப்படி ஆண்டு தவறாது 44 ஆண்டுகள் தொடர்ந்து தம் வாழ்நாள்வரை (1982) கொண்டாடினார். 1983 முதல் கம்பன் கழகம் கம்பனடிப்பொடி விரும்பிய வண்ணமே கம்பனடிசூடி பழ. பழனியப்பனை செயலாளராகக் கொண்டு தொடர்ந்து அதே முறைப்படி திருநாளை இருபத்தி ஐந்து ஆண்டுகளாக நடத்தி வந்து 2009ல் 70-ஆம் ஆண்டு கம்பன் திருநாள் நிறைவைக் கொண்டாடுகிறது.

★ 1966ல் கம்பன் திருநாள் வெள்ளி விழாவைக் கொண்டாட இருந்தபோது நிலவிய யுத்த சூழ்நிலை காரணமாக அந்நிதி முழுவதையும் தாய்நாடு காக்க அளித்துவிட்டு ஒருநாள் விழாவாக நாட்டரசன்கோட்டை கம்பன் சமாதியில் 'தாய்நாடு காக்கும் தரம்' என்ற தலைப்பில் நடத்தினார்.

★ 1968ல் சா.க. தம் மணிவிழாவினைக் கொண்டாட ஒப்பாததால், அன்பர்கள் அளித்த ஒரு இலட்சம் ரூபாய் நிதியைக் கொண்டு கம்பன் மணி மண்டபத்தைக் கட்டத் தொடங்கி, 1972 முதல் கம்பன் திருநாள் அங்கு நடைபெற்று வருகின்றது.

★ உலகில் எங்கும், எம்மொழிக்கும் இல்லாததான மொழிக்கான கோயிலாக தமிழ்த் தாய் திருக்கோயிலை காரைக்குடியில் முதலமைச்சர் கலைஞர் அவர்களின் நிதி உதவியால் (1975ல் கால்கோள் செய்து) எடுத்த பெற்றியர். அறுகோண வடிவில் அமைக்கப் பெற்ற அற்புதமான கல் திருப்பணி அது .அதேபோல் ஒலித்தாய், வரித்தாய் ஆகியவர்க்கும் முதலில் வடிவமைத்த பெருமைக்குரியவர்.

★ 1941ல் காந்தி அடிகள் தொடங்கிய தனிநபர் சத்தியாக்கிரகத்தில் பங்கேற்று பாத யாத்திரையாக தில்லிக்கு பயணித்து 66 நாட்களில் 568 கல் தொலைவைக் கடந்ததும் கைதாகி உத்தரப்பிரதேச அலிபூரில் நான்கு மாதங்கள் சிறையிலடைக்கப்பட்டார்.

★ விடுதலைப் போராட்டக் கூட்டங்களை பிரிட்டிஷ் அரசு தடை செய்ய, அப்போது கானாடுகாத்தானில் நிகழவிருந்த கூட்டத்தில் பேச திரு. சத்தியமூர்த்தியுடனும், டாக்டர் சுப்பராயனுடனும் சென்ற கணேசனை போலீசார் தடுத்து நிறுத்தி, தடையை மீறினால் சுட்டு விடுவதாக மிரட்டினர். அப்போது தன் சட்டையைக் கிழித்து நெஞ்சைத் திறந்து காட்டி சுடுங்கள் என்று அஞ்சாது நின்றவரை போலீசார் ஏதும் செய்யாது திகைத்து நின்றனர். அன்று முதல் தம் வாழ்நாள் இறுதிவரை அவர் சட்டை அணிவதை விட்டுவிட்டார். காந்தி அடிகளைப் போன்று கதர் நான்குமுழ வேட்டியும், மேலில் ஒரு துண்டு மட்டுமே அணிந்தார்.

★ 1942 'வெள்ளையனே வெளியேறு' கலவரத்தின் போது சா.க அவர்களை எங்கு கண்டாலும் சுடும்படி உத்தரவு பிறப்பிக்கப் பட்டது. அதனால் அவர் தலைமறைவானதும், பிரிட்டிஷ் அரசு ஜப்தி உத்தரவு பிறப்பித்து அவர் வீட்டிலிருந்த பல லட்சம் மதிப்புள்ள சொத்துக்களைக் கைப்பற்றியது. அந்த உத்தரவைக் கேள்விப்பட்டதுமே, தம் மற்ற சொத்துக்களைப் பற்றிக் கவலைப் படாது தாம் சேகரித்திருந்த ஐயாயிரம் நூல்களை தம் நண்பர்கள்

உதவியோடு இரவோடு இரவாக தம் வீட்டிலிருந்து அப்புறப் படுத்திக் காப்பாற்றினார். தாய்நாட்டின் மீதும், தாய்மொழியின் மீதும் அவர் கொண்டிருந்த காதல் அத்தகையது.

★ 1942 ஆகஸ்ட் போராட்டத்தின் போது போலீஸார் அவர் வீட்டைச் சூறையாடி சேதப்படுத்தினர். தலைமறைவான கணேசன் மாறுவேடங்களில் ஊர் ஊராகச் சென்று மக்களை சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட ஊக்கமூட்டவே அதனால் எரிச்சலடைந்த போலீசார் தம் நண்பர்களை துன்புறுத்தக் கண்டு பொறுக்காது, தம் வழிகாட்டி இராஜாஜியின் ஆலோசனைப்படி சென்னை போலீஸ் கமிஷனரிடம் சரணடைந்து, பதினெட்டு மாத காலம் மீண்டும் அலிபூரில் சிறைவாசம் அனுபவித்தார்.

★ சிறைவாசத்தின் போதும், தம் நண்பர் மெ.நா.சித. சிதம்பரம் அவர்களைக் கொண்டு 1944-ஆம் ஆண்டுக் கம்பன் திருநாளைவிடாது கொண்டாடினார்கள். விழா அழைப்பிதழில் கூட சிதம்பரம் அவர்கள் தான் கையெழுத்திட்டார்கள்.

★ அலிபூர் சிறைவாசத்தில் உடனிருந்த மற்றவர்களுக்கு கம்ப ராமாயணம் உள்ளிட்ட இலக்கியங்களில் பாடம் நடத்தினார். அப்படிப் பாடங் கேட்டவர்களில் ஒருவரான கல்கி பத்திரிக்கை அதிபரும், எம்.எஸ். சுப்புலெட்சுமியின் கணவருமான சதாசிவம் பின்நாளில் அதனை நினைவு கூர்ந்து கம்பனடிசூடி மூலம் சென்னைக் கம்பன் விழாவில் ஆண்டுதோறும் கம்பனடிப்பொடி பெயரால் கம்பனைக் கற்கும் ஒரு சிறந்த மாணாக்க அறிஞருக்கு (Kamban Scholar Student) பரிசு வழங்க அறக்கட்டளை நிறுவினார். அலிபூரில் பண்டித ஜவகர்லால் உள்ளிட்ட பல தேசியத் தலைவர்களையும் சந்தித்து அளவளாவும் பேறு பெற்றார். அழகப்பர் கல்லூரிகளுக்கு பின்னாளில் விஜயம் செய்தபோது பண்டித நேரு பெருமகனார் இதனை நினைவு கூர்ந்து கணேசனைக் கண்டதும் 'கம்பரே, நலமா' என்று வினவினார்.

★ தியாகிகளுக்காக வழங்கப்பெற்ற நிலம், ஓய்வூதியம் ஆகியவற்றை அரசிடமிருந்து பெற்றால் அது தன் தொண்டிற்கான கூலியாகி விடும் என அவற்றை வாங்க மறுத்து விட்டார்கள்.

★ 1962 முதல் 1967 வரை தமிழ்நாடு சட்டமன்ற உறுப்பினராகவும், 1968 முதல் 1974 வரை தமிழ்நாடு மேலவை உறுப்பினராகவும் பணியாற்றினார்கள்.

★ 1968-ல் சென்னையில் நிகழ்ந்த இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டின் கலைக் காட்சிக் குழுவிற்கு பேரறிஞர் அண்ணா அவர்களின் வேண்டுதலால் தலைமை ஏற்று, கண்டோரெல்லாம் வியக்கும் வண்ணம் அருமையான கலைக்காட்சியையும் நடத்திய தோடு, ''கையேடு'' என்ற கருத்துக் கருவூலத்தையும் பதிப்பித்து வெளியிட்ட பெற்றியர்.

★ மலேயாவில் ஒரு கோயிலில் உள்ள சிலை மாரியம்மனா அல்லது திரௌபதி அம்மனா என்றெழுந்த வழக்கில் அதைத் தீர்த்து வைக்க முடியாது நீதிபதிகள் திணறினர். இலக்கிய நுட்பமும் சிற்ப நூலறிவும் உடைய ஒருவர்தான் தீர்க்க முடியும் எனக் கருதிய அவர்கள் தமிழக அரசை வேண்ட, அழைப்பின்பேரில் அங்கு சென்று, சாட்சிகளை விசாரித்து, சிலையை நேரில் பரிசோதித்து, சட்ட நுணுக்கத்தோடும், காரண காரியத் தொடர்போடும் தமிழில் தீர்ப்பு எழுதி வழங்கித் தீர்த்து வைத்த பீடுடையவர்.

★ கோயில் கட்ட வேண்டுமா? சிற்ப சாஸ்திர விளக்கம் பெற வேண்டுமா? ஆகம விதிகளை அறிய வேண்டுமா? தமிழ் இலக்கண ஐயமா? சங்க இலக்கியத்தின் நீள அகலங்களை அளக்க வேண்டுமா? கம்பராமாயணத்தில் எத்தனை உரிச்சொல் பிரயோக மாகியுள்ளது? எவ்வளவு வண்ணங்கள் உள்ளன? எழுத்தியல், சொல்லியல், மொழியியல், மரபுக் கவிதை, அரசியல், பொருளா தாரம், தேர்தல் சட்டம், வட்டெழுத்து ஆராய்ச்சி, தொல் பொருளியல், சமையற்கலை - என்று எதைப் பற்றிக் கேட்டாலும் ஆர்வத்தோடும், தெளிவோடும் அந்தத்துறை வல்லுனர்களே வியக்கும் வண்ணம் விவரங்களை எடுத்துச் சொல்லும் அபாரமான அறிவும், கல்வியும், ஞானமும் படைத்தவர் தமிழ்நாட்டிலேயே கணேசன் ஒருவர்தான் என்றார் 1970ல் தமிழக மக்கள் சார்பாக 'கம்பன் அடிப்பொடி' என்ற பட்டத்தை சூட்டி மகிழ்ந்த சென்னை உயர்நீதிமன்ற நீதிபதியும், சிறந்த தமிழறிஞருமான நீதிபதி எஸ். மகராஜன் அவர்கள்.

★ காஞ்சிப் பெரியவர் ஆணையை ஏற்று காரைக்குடி அருகில் இளையாத்தக்குடியில் 1962ல் முதன்முதலில் அகில இந்திய வித்வத் சதஸை சிறப்பாக நடத்தி, பெரியவர்களால் ''தொண்டர் குலசேகரன்'' என்ற பாராட்டு விருது பெற்றவர்.

★ சா. கணேசன் எழுதிய கீழ்க்கண்ட சில ஆய்வு நூல்கள் மிகப் பிரசித்தமானவை: 'பிள்ளையார்பட்டித் தலவரலாறு, இராஜ ராஜன், தமிழ்த் திருமணம், Some Iconographic Concepts என்ற ஆங்கில நூல்'

★ இந்திய தொல்பொருளாய்வுத் துறையின் கட்டுப்பாட்டில் உள்ள தஞ்சைப் பெரு உடையார் கோயில் வளாகத்தில் அக்கோயிலைக் கட்டிய மாமன்னன் இராஜராஜனின் திருவுருவச்சிலையை நிறுவப் போராடி வெற்றி பெற்று நிறுவியதோடு, அவனுடைய ஜன்ம தினமான சதயத்தில் பெரு உடையாருக்கு பிரம்மாண்ட முறையில் சதயப் பெருவிழாவாக எடுத்து, அபிஷேக ஆராதனைகள் நிகழ்த்துவதையும் தொடங்கி வைத்து, இன்றளவும் அது கடைப்பிடிக்கப் பெற்று வருகின்றது.

★ சில தமிழ் அறிஞர்களின் துணையோடு கம்பராமாயணத்திற்கு சரியான மூல பாடம் ஒன்றினை அமைப்பதற்கு எண்ணற்ற ஏட்டுச் சுவடிகள், பழைய பதிப்புகள் ஆகியவற்றினை ஆராய்ந்து அவற்றின் துணை கொண்டு முடிந்த அளவிற்கு பாடபேதமற்ற, கல்லாதார்க்கும் எளிதில் புரியும்படி சந்தி பிரித்து பொருள் மாலையுடன் ஒரு பதிப்பினை, ஆறு காண்டங்களையும் ஒன்பது சிறு சிறு தொகுதிகளாய் ஓவிய வித்தகர் கோபுலுவின் அட்டைப் படங்களுடன், தம் நண்பர் மர்ரே - கம்பெனி எஸ். ராஜம் அவர்களின் துணையோடு ப்திப்பித்தார்கள். ஒரு பல்கலைக் கழகமோ, அரசு சார்புடைய நிறுவனமோ செய்ய வேண்டிய பணியினை தனி மனிதராய் செய்து முடித்தார்கள்.

★ வள்ளல் அழகப்பர் காரைக்குடியில் நிறுவிய அழகப்பா கல்வி நிலையங்கள், இந்தாயாவின் பதினொரு அறிவியல் ஆராய்ச்சி நிலையங்களில் ஒன்றான மைய மின் வேதியல் ஆராய்ச்சி நிறுவனம் ஆகியவற்றிற்கு நில ஆர்ஜிதம் முதல் கட்டிடம் கட்டி தொடக்க விழா வரை அனைத்துப் பணிகளையும் ஒருங்கிணைத்து

தாமே முன்னின்று நடத்திக் கொடுத்தார்கள். அழகப்பர் கல்வி அறநிலையின் தொடக்க அறங்காவலராகி, தம் வாழ்நாள் வரை பணியாற்றினார்கள்.

★ கம்பன் கற்பகம் என்ற பெயரில் முன்னைய குருகுல மாதிரியில் பாரம்பரியப் பண்பாடு, கலாச்சாரம் சார்ந்த தொடக்கப் பள்ளியை ஆரம்பித்து நடத்தினார்கள். அதன் உபரி வருமானத்திலிருந்து கம்பன் திருநாளை நடத்த உதவுகிறாற்போல தம் கெழுதகை நண்பரும், கம்பன் மணி மண்டபம் எழும்ப நிதி திரட்டி உதவிய அழகப்பர் கல்வி அறநிலையச் செயலாளருமான கானாடு காத்தான் க.வெ.சித.வெ. வேங்கடாசலம் செட்டியார் அவர்களின் யோசனையின் படி தொடங்கினார்கள்.

★ கணேசன் பல மைய, மாநிலஅரசின் ஆலோசனைக் குழுக்களில் பல்வேறு பணிகளில் உதவினார்கள்: மதுரைக் காமராஜர் பல்கலைக்கழக ஆட்சி - ஆலோசனைக் குழு, தமிழ் அகாதெமி, தமிழ் வளர்ச்சி மற்றும் ஆராய்ச்சிக் கழகம், தென்னிந்திய தொல்பொருள் கழகம், இந்திய தொல்பொருள் ஆய்வுத்துறை ஆலோசனைக் குழு, இந்து சமய அறநிலையத்துறை ஆலோசனைக் குழு.



# நான் ஒரு கம்பன் அடிமை

– சா. கணேசன்

எங்கள் குடும்பத்தில், என் தந்தையார் காலத்தில் புரட்டாசி மாதந்தோறும் கம்பராமாயணம் படித்தல் வழக்கம். பக்கத்தில் உள்ளவர்கள் பலரும் கதை கேட்க வருவார்கள். பட்டக சாலையில் உள்ள மாடத்தில் இராமர் பட்டாபிஷேகப் படம் கொலுவிருக்கும். அதற்குப் பலவகை அலங்காரங்கள் செய்யப்பட்டிருக்கும் அதன் எதிரில் மரத்தாலான சிக்குப் பலகையில் கம்பராமாயண வசனப் புத்தகம் மஞ்சள்-குங்குமம்-மாலை சார்த்தப்பெற்று மங்கலமாக அமர்ந்திருக்கும். இராமர் படத்திற்கு வழிபாடு நடந்து தீபாராதனை காட்டப்பெறும்; அதன் பிறகு கம்பராமாயணப் புத்தகத்திற்கும் அப்படியே நடைபெறும்.

எல்லாம் ஆன பின் என் தந்தையார் அல்லது என் சிறிய தந்தையார் இறை வணக்கம், பல சுருதி முதலிய பாடல்களைப் படித்தபின், இராம கதையை முதல் நாள் விட்ட இடத்திலிருந்து படிப்பார்கள். இருவருக்கும் இயலாத வேளைகளில் என்னைப் படிக்கச் சொல்வார்கள்.

கம்பன் கவிகளில் சில ஆங்காங்கே காணப்படினும், கதை முழுவதும் வசனமாகவே இருக்கும். பெரியவர்கள் படிக்கக் கேட்கும் பொழுதும், நானே படிக்கும் பொழுதும், பலவித ஐயப்பாடுகளும், குழப்பங்களும் ஏற்படும். அவற்றையெல்லாம் பெரியவர்களிடம் கேட்பதற்கு அச்சம். முறையாக ஆசிரியரை அடுத்து, இலக்கிய இலக்கணப் பாடம் கேட்காத குறை வேறு. இளமைத் துடிப்பும் எதையும் கிண்டல் செய்யும் இயல்பும் சேர்ந்து கொண்டிருந்த காலம். ஆனாலும் தமிழ்ப் படிக்க வேண்டும் என்ற ஆர்வத்தை எந்தை பிரான் கம்பன் எப்படியோ தூண்டிவிட்டு விட்டான்.

என் பன்னிரண்டாம் ஆண்டில் எங்கள் குடும்ப ஆதரவு பெற்று வாழ்ந்த பண்டிதர் சு. சிதம்பரம் ஐயரவர்களிடம் தமிழ்ப் பாடம் கேட்கத்தொடங்கினேன். ஆறுமுக நாவலர் பால பாடங்கள், ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி, இலக்கணச் சுருக்கம் முதலியவற்றைப் பாடங் கேட்டேன். பதினாலாவது ஆண்டில் தந்தையாருடன் பர்மாவுக்குப் புறப்பட்டுவிட்டேன்.

பர்மாவில் இரங்கூனில் மூன்றாண்டுகள் வசித்தேன். அப்பொழுது சில தோழர்களின் உதவியுடன் ''தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கம்'' என்ற பெயருடன் ஒரு சங்கத்தைத் தொடங்கினேன். அதில் ஞாயிறுதோறும் ஏதாவது சொற்பொழிவு நடைபெற ஏற்பாடு செய்தேன். பெரியவர் ஒருவரைத் தலைமைப் பேச்சுக்கும் மற்றப்படி நாங்கள் இரண்டு மூன்று பேச்சுக்கும் தயார் செய்வோம். கட்டுரைக் கோவை அல்லது ஆனந்தபோதினி போன்ற பத்திரிகைகளில் காணப்பெறும் சிறு கட்டுரைகளை மனப்பாடம் செய்து அதைச் சொற்பொழிவாகச் செய்துவந்தோம். ஓராண்டுக்குப் பிறகு நாமே ஏன் நூல்களைப் படித்துக் குறிப்பெடுத்துக் கொண்டு பேசலாகாது என எண்ணினேன். நூல்கள் வேண்டுமே! அதற்கு வழி?

இரங்கூனில் 'நவீன கதா புத்தகசாலை' என்ற பெயரில் ஒரு நல்ல புத்தகக் கடை இருந்தது. தேச பக்தி மிக்க, காந்தியடியாரான, வலங்கிமான் இஸ்லாமியர் ஒருவர் அதை நடத்திவந்தார். அங்கு நல்ல தமிழ் நூல்கள் கிடைக்கும். அவரிடம் எனக்கு வேண்டிய புத்தகங்களை யெல்லாம் தவணை முறையில் வாங்கிச் சேர்த்தேன். அந்நாளில் நல்ல புத்தகங்களே வெளிவந்தன; விலையும் மலிவு. எனவே, மூன்றாண்டு களில் சுமார் 800 புத்தகங்கள் சேர்ந்தன. இவ்வளவுக்கும் பணம் வேண்டுமே?

எனக்குக் காலை மாலைப் பலகாரம் காபிக்காக நாள் ஒன்றுக்கு ரூபாய் ஒன்று தருவார்கள். காலை மாலைப் பலகாரங்களைத் துறந்து அந்த ரூபாய்க்குப் புத்தகங்களே வாங்கினேன். அப்படி வாங்கிய நூல்களை நானாகவே முயன்று கற்றேன்.

என் இளமைக் காலத்தில் காரைக்குடியில் ஒரு சிறந்த கம்பன் அறிஞர் இருந்தார். அவர் தனவைசிய ஊழியன் பத்திரிகையில் உதவி ஆசிரியராகப் பணியாற்றி வந்தார். நல்ல தமிழ்ப் புலமையுடையவர்.

ஆஜானுபாகுவான உடம்பு, நீண்ட முகம்; பரந்துயர்ந்த நெற்றியில் பட்டை நாமம் பளிச்சிடும். மிக்க ஆசாரசீலர். கம்பனை நன்கு தோய்ந்து கற்று ஆய்ந்து அருமையாக உரையாற்றுவார். அக்காலத்துக் கம்பராமாயணப் பிரசங்கிகளில் தலையானவர் அவர் என்பது என் கருத்து. ''கம்ப நாடர்'' என்றொரு மாத இதழும் வெளியிட்டு வந்தார். அதில் கம்பனைப்பற்றிய கட்டுரைகளும், ஆராய்ச்சிகளும் அவரே எழுதி வெளியிட்டு வந்தார். வான்மீகத்துடன் ஒப்பிட்டுக் கம்பனின் மேம்பாட்டினை மனமாரப் பாராட்டுவார். அவர்தான் எனக்குக் கம்பனை இனம் காட்டியவர் என்பேன். அவருடைய நேர்மைக்கு ஓர் எடுத்துக்காட்டு: ஏதோ ஒரு கட்டத்தை வான்மீகத்துடன் ஒப்பிட்டுக் கம்பனின் மேன்மையை உயர்த்திப் பாராட்டினார். அப்பொழுது அச்சபையிலிருந்த வடமொழி வல்ல அந்தணர் ஒருவர் எழுந்து,

''கம்பனை வான்மீகியினும் உயர்ந்தவர் என்று ஒரு பிராமணர் கூறலாமா?'' என்று ஒருவகை ஆவேசத்துடன் கேட்டார். அதற்கு மோ.வே.கோ. விடுத்த பதில் என்னைப் பெரிதும் ஆட்கொண்டுவிட்டது.

''கம்பனின் உண்மையான உயர்வைக் கூற என் பிராமண நிலை தடையாக இருப்பின், ஸ்வாமி! என் பூணூலை இப்பொழுதே அறுத்தெறிந்து விடுகிறேன்!'' என்பதுதான் அவர் கூறிய பதில்.

அதன் பிறகு வ.வெ.சு. ஐயர். பல மொழி கற்றவர்; சிறந்த தேச பக்தர்; திறனாய்வுத் துறையின் முன்னோடி; கம்பனை உலகறியச் செய்த உத்தமர். அவர் காரைக்குடிக்குப் பலமுறை வந்துள்ளார். அப்பொழு தெல்லாம் கம்பன் பெருமையை எப்படியெல்லாமோ கூறி என்னை ஆட்கொண்டவர்.

''கம்பன் காப்பியத்திற்கு வான்மீகம்தான் மூலம்; ஆனால், கம்பன் வான்மீகத்தை மொழிபெயர்க்கவில்லை. முனிவன் படைத்த இறவாக் கதையை மட்டுமே அவன் எடுத்துக் கொண்டான். ஆனால், அந்தக் கதைப்போக்கை மிக நுட்பமாகப் பின்பற்றிக் கொண்டான். என்றாலும் கம்பராமாயணம் முற்றிலும் ஒரு மூலக் காப்பியமே. ஆம்; அது வான்மீகியின் ராமாயணம் அல்ல; ஆனால், அஃதொரு மகோன்னத மான கவிதை;

''கம்பனுடைய சந்நிதானத்திலே உலக மகா கவிகளான மில்டன், போப், ஷேக்ஸ்பியர், தாந்தே, விர்ஜில், ஹோமர், பைரன், ஷெல்லி

முதலியவர்கள் மட்டுமின்றி ஆதி கவியான வான்மீகியும் முடி சாய்த்து அடிவணங்கி நிற்கவேண்டியவர்!''

என்றெல்லாம் அளந்து கணித்து அறுதியிட்டு வ.வெ.சு ஐயர் கூறும்பொழுதுதான் கம்பன் வான்முட்டும் பெரும் புகழை அடியனால் அறிய முடிந்தது.

அதன் பிறகு திருவாளர் பி.ஸ்ரீ. 'குமரன்' பத்திரிகையின் துணை ஆசிரியராய் வந்து காரைக்குடியில் பல ஆண்டுகள் வசித்துவந்தார். அக்காலத்தில் அவர் பெரும்பாலும் எங்கள் குழுவிலேயே இருந்து வந்தார். பேச்செல்லாம் தமிழ்; நாடு; இலக்கியம்; காந்தி! இப்படியே போய்க் கொண்டிருக்கும். கவிதைகளை, சிறப்பாகக் கம்பன் கவிதை களை உள்ளம் கொள்ளுமாறு எடுத்துரைப்பார். சுவையாகவும், நகைமுகத்துடனும் உரையாடல் நடைபெறும். குமரனில் கம்பன் கட்டுரை வாரம் தவறாமல் வரும். பி.ஸ்ரீ.யின் கையெழுத்து நன்றாக இருக்காது. அதனால் அவர் சொல்லப் பிறர் எழுதுவது பெரும்பாலான வழக்கம். அப்படி நான் எழுதிய நிலையும் உண்டு. அதனால் கம்பன் கருத்தாழம் எனக்குப் புலப்படலாயிற்று.

அந்நாளில் பி.ஸ்ரீ.யிடம் பேசிக் கொண்டிருந்த காலங்களில், ''திருநெல்வேலியில் டி.கே.சி என்றொரு பெரியவர் இருக்கிறார். கவிதை நயத்தைச் சுண்டிப் பார்த்து அதன் அருமைப்பாடுகளை விளக்கிக்காட்டிக் கேட்போர் உள்ளத்தில் ரசனை ஊட்டுவதில் அவர் ஒரு ரசவாதி!'' என்று அடிக்கடி கூறுவார். அதன் பயனாக எனக்கு டி.கே.சி.யிடம் காணாமலே காதல் அரும்பிற்று.

இந்த நிலையில் மீண்டும் பர்மா சென்றேன். இப்பொழுது இரங்கூனுக்கடுத்த தோங்குவா என்ற ஊரில் வாழ்ந்து வந்தேன். எங்கள் வீட்டுக்கு அடுத்த வீட்டில் சிவகங்கையைச் சேர்ந்த சேதுப்பிள்ளை என்பவர் ஒரு செட்டியார் கடைமேல்வராக இருந்துவந்தார். அவர் ஒரு பெரும் புலவர் என்பதைப் பின்னர்த்தான் அறிந்தேன். அவரிடம் ஏதாவது பாடம் கேட்கலாமே என்று எண்ணி அவரை அணுகினேன். மிக்க அன்புடன் இசைந்தார்கள். தினமும் காலை பாடம் கேட்பதென்று ஏற்பாடாயிற்று எடுத்த எடுப்பிலேயே நூலைத் தொடங்கிவிட்டார். ஆம், பாடம் கேட்க நான் கொண்டுசென்ற நூல் கம்பராமாயணம். ''தருகை நீண்ட'' ''அஞ்சிலே ஒன்று பெற்றான்'' என்பன கம்பன் பாடலாகா;

''உலகம் யாவையு''மே அவன் பாடிய முழுமுதல் வணக்கம் என்றார். இப்படியொரு பட்டிக் காட்டுக் கர்நாடக உருவத்துக்குள் எப்படிப்பட்ட அறிவுத் தெளிவு; திறனாய்வுச் செறிவெல்லாம் பதுங்கிக் கிடக்கின்றன என்று வியந்து நின்றேன்.

சுமார் ஏழெட்டு மாதங்களே அப்பெருமான் அடிக்கீழ் இருந்து பாடம் கேட்டேன். என்ன அறிவு! அப்பப்பா! துணைநூல் அல்லது விளக்க நூல் ஏதுமின்றி இலக்கணச் சூத்திரங்கள் உள்பட எல்லா வற்றையும் மனப் பெட்டகத்தில் அடுக்கிவைத்துக் காத்து வந்திருக்கிறார்.

தொல்காப்பியம்; நன்னூல், யாப்பருங்கலம், வீரசோழியம் போன்ற நூல்கள் மட்டுமின்றி உரையாசிரியர்கள் காட்டும் மேற்கோள் சூத்திரங்களையுமன்றோ மனத்தகத்து அடக்கி வைத்துக் கொண்டிருக் கிறார் என்று பல முறை வியந்து மலைத்து நின்றிருக்கிறேன். அந்தச் சில மாதங்கள் என் வாழ்வுக்கு வழிகாட்டித் தொண்டுக்குக் கைகொடுத்த காலம் என்று என்றென்றும் அவரை வழிபட்டுக் கொண்டிருக்கிறேன்.

அவர் என்னைவிட்டுப் பிரிந்து தாய்நாடு திரும்பியபின் சுமார் மூன்றாண்டு கழித்து யானும் தாய்நாடு வந்து அவரைச் சில முறை தரிசித்தேன். கம்பன் திருநாள் தொடங்குவதற்கு முன்னமேயே அவர் அமரராகிவிட்டார்.

தாய் நாடு திரும்பியதும் அரசியல் பணியில் முழுமூச்சாக ஈடுபட்டு விட்டேன். அரசியல் மேடைகளிலும் கம்பனைப்பற்றிப் பேசுவது இயல்பாகிவிட்டது. 1938 இறுதியில் ரசிகமணி டி.கே.சி அவர்களைச் சந்திக்கும் பேறு கிட்டிற்று. கம்பன் திருநாளைக் காரைக்குடியில் நடத்த ஏற்பாடுகள் செய்தேன். அப்பொழுது கம்பன் திருநாளுக்கு மிகச் சிலரே ஒத்துழைப்பு நல்கினர். அவர்களுள் திரு. சொ. முருகப்பா, அரு. சோமசுந்தரம், VR. M. செட்டியார், நீலாவதி-ராமசுப்பிரமணியம் தம்பதிகள் ஆகியோரே ஒத்துழைப்பு நல்கினார்கள். ரசிகமணி டி.கே.சி. அவர்களே நான்கு நாளும் தலைமை தாங்கினார்கள். சொ. முருகப்பா, அரு. சோமசுந்தரம், VR. M. செட்டியார், நீலாவதி அம்மையார், M.S. பூர்ண லிங்கம் பிள்ளை, ப. ராமசாமி முதலியோருடன் யானும் பேசினேன். இப்படியாக முதல் ஆண்டுக் கம்பன் திருநாள் 1939-இல் நிகழ்ந்தது.

அதன் காரணமாக திரு. டி.கே.சி. அவர்களின் தொடர்பு செட்டிமார் நாட்டிற்கே வலுவாக ஏற்பட்டது. காரைக்குடிக்கு அடிக்கடி

வரத் தொடங்கினார்கள். பல சொற்பொழிவுகளை நடத்தினார்கள். வகுப்புகளும் நடத்தினார்கள். கம்பன் பித்தும், கவிதை வெறியும் பெருகத் தொடங்கின. கம்பனுக்குள்ள பெருமைகளை என்னைப் போன்றே ஏராளமானவர்கள் அறியச் செய்த தனிப்பெருமை ரசிகமணி டி.கே.சி. அவர்கட்கே உண்டு.

''காரைக்குடியில் கம்பன் பணி தொடங்கி விட்டது. இனி அது உலகெங்கும் பரவிவிடும்!'' என்று மனமாரப் பாராட்டி அவர்கள் கூறிய ஆசியும் வாழ்த்துமே கம்பன் கழகத்துக்கு நீரும், உரமுமாய் அமைந்து வளர்த்து வருகிறது. சான்றோர் வாக்குப் பொய்க்காதன்றோ?

இங்ஙனம் வளர்ந்த எளியேனின் கம்பன் பக்தி ஆராய்ச்சிப் பேரறிஞர், பேராசிரியர் ச. வையாபுரிப் பிள்ளை அவர்களால் மேலும் வளம் பெற்றது. அவர்களுடன் கம்பன் பதிப்புப் பற்றிச் செய்த சர்ச்சைகள் எல்லாம் நல்ல பாடங்களைத் தேர்ந்தெடுக்கவும் கம்பனின் பல்துறைப் புலமைகளையெல்லாம் அறியவும் எனக்குச் சுடர்விளக்காய் நின்று உதவுகின்றன.

கம்பனுக்கு ஒரு நல்ல பதிப்பு மலிவு விலையில் கிடைக்கச்செய்யப் பெருமுயற்சி செய்தவர் மர்ரே கம்பெனி அதிபர் திரு. எஸ். ராஜம். பாடாந்தரம் கண்டு நல்ல பாடம் தேர்ந்தெடுப்பது உள்படப் பதிப்பு வேலையில் என்னை ஆட்படுத்தியவர் அவரே! கல்விக் கடல் இராம ராசன் முதலான நல்ல புலவர்கள் பலருடைய துணையுடன் அப் பணியில் ஈடுபட்டேன். எண்ணற்ற ஏட்டுச் சுவடிகளும் அச்சுப் பிரதி களும் ஒப்புநோக்கப்பட்டன. ஏற்கெனவே எடுத்த பாடக் குறிப்பு களையும், புதிதாக நாங்கள் எடுத்த பாடக் குறிப்புகளையும் ஒப்பிட்டுப் பார்த்தோம். பல்வேறு காரணங்களைக் கொண்டு சரியான பாடத்தை ஒருவாறாக நிர்ணயித்தோம். பொருத்தமில்லாத பாடல்களை, பிராக் கட்டுள் அடக்கியோ அன்றிப் பிற்சேர்க்கையிலோ வெளியிட்டோம். இப்படிப் பணியாற்ற அடியேற்குக் கிடைத்த வாய்ப்பு ஒரு பெரும் பேறாகும். அதனாற் கிட்டிய அனுபவமும் தெளிவும் எழுதிக்காட்ட முடியாத ஒன்றாகும். எந்தைபிரான் கம்பன் அருள்தான் என்னை எப்படியெல்லாமோ ஈடுபடுத்தி என் பணிக்கு ஆக்கம் அளித்து வருகிறது.

இங்ஙனம் பல பெரும் அறிஞர்களின் கூட்டுறவும், கம்பன் அடியார்களின் அன்பும் ஏழையேனைக் கம்பன் அடிப்பொடி ஆக்கின. இவர்களிட்ட பிச்சையாலேயே கம்பனின் மேதா விலாசத்தையும் கவிதாசன்னதத்தையும், படைப்பாற்றலையும், பல்துறைப் பலமொழிப் புலமையையும் அடியேனும் கூடக் கண்டு மகிழ முடிகின்றது. இப்பொழுதெல்லாம் எளியேன் கம்பனை அணுகும்போது, அவன் பெருமைக்கு முன் என் சிறுமையும் தோன்றுவதால் ஒருவிதப் பயமே, பத்தியால் ஏற்பட்ட ஓர் அச்சமே (Reverential fear) என்னை ஆட்கொண்டு விடுகின்றது. எனவே, இன்று நான் ஒரு கம்பன் அடிமை!

கம்பனெனும் கார்முகில்பெய்
　　கவிமழைநீர் திரண்டோடி
ஐம்புலனாம் நிலம்திருத்தி
　　அன்பறமாம் பயிர்வளர்த்துத்
தம்பொருவில் 'இராமாவ
　　தாரம்' எனும் தனியாறாய்ப்
பம்புதமிழ் எனும்கடலில்
　　பரந்துநலம் சுரந்திடுமால்!



# கம்பன் புகழ் பாடிக்
# கன்னித் தமிழ் வளர்ப்போம்!

யான் பிறந்த கீலக,வை காசி,மகம் இசைநாளில்
மான்கரந்த சிவன்மைந்தன், வள்ளிமகிழ் தமிழ்த்தெய்வம்,
தேன்நிறைந்த மலர்மார்பன், திருமுருகன் அடிபரவ
வான்சிறந்த திருத்தணிகை மனமகிழச் சென்றடைந்தேன்.

திருத்தணிகை மலைஏறித் திருமுருகன் திருமுற்றத்து
அருத்தியுடன் வழிபாட்டை அடிநாயேன் புரிபொழுதில்
கருத்தினிலே உதித்தசில கவிகளைப்பின் கண்டபடி
உருத்தெரிய எழுதிஅவண் ஓதிமன நிறைவுகொண்டேன்

அவைதாம்:

என்னை இந்த உலகத்தில்
　　ஈன்று புறமே தருதற்கு,
தன்னை உருக்கிப் பலகாலும்
　　தாங்க ஒண்ணா நோன்புஇயற்றி
மன்னும் அன்பு மாறாமல்
　　வளர்த்துக் காத்த கற்பரசி
**அன்னைத் தெய்வம் நாச்சம்மை**
　　அடிகள் என்றன் முடிக்குஅணியே! 1

எந்தன் வாழ்வில் நலம்சிறக்க,
　　என்றும் இறைவன் தனைநினைக்க,
சிந்தை தெளிந்து நான்நடக்க,
　　செம்மை வழியே கடைப்பிடிக்க
நந்தல் இல்லா அறம்உணர்த்தி
　　நாளும் என்னைப் புரந்துநின்ற
**தந்தை சாமி நாதன்அருள்**
　　சரணம் என்றன் தலைக்குஅணியே. 2

எழுத்தும் எண்ணும் இலக்கமுடன்
எழுதப் படிக்கக் கற்பித்த
பழுத்த ஆசான் அரங்க(ன்)ப்பேர்ப்
பரம ஞானி சேவடியும்
வழுத்தும் நூல்கள், பிறமொழிகள்,
மற்றும் மேன்மைக் கலைஅறிவும்,
கொளுத்தி விட்டோர் பதமலரும்
கொண்டேன் சென்னிக்கு அணிஆக! 3

வீறு மிக்க கவிகம்பன்
மேன்மைப் பணிக்கே ஆள்ஆக்கி
நூறு நூறு புலவர்அருள்
நோக்கம் என்மேல் படரச்செய்து
ஆறு பத்தாம் ஆண்டுகளை
ஆனந் தம்மாய் யான்கழிக்கும்
ஆறு செய்த ஆண்டவன்தாள்
அகத்தும் சிரத்தும் அகலாவே. 4

'அன்னைஆய், அத்தன் ஆகி,
அருளும்நல் ஆசான் ஆகி
பின்னும்எனை ஆண்டு கொண்ட
பெரும்தெய்வம் தானே ஆகி,
கன்னிஎனும் தமிழ்த்தாய் ஈன்ற
கவிச்சக்ர வர்த்தி ஆன
என்உடையன் கம்பன் பாதம்
என்றும்எனது உச்சி மீதே!' 5

என்றுமே எண்ணம் தன்னில்,
இயம்புசொல், செய்கை தம்மில்,
நன்றுஅலாது ஏதும் தோன்றா
நலம்தனை நல்கி, நாளும்
இன்றுபோல் காத்து, நாயேன்
எழில்-தமிழ்த் தொண்டே ஆற்றக்
குன்றின்மேல் ஓங்கும் கோலக்
குமர! நீ அருளு வாயே! 6

ஆண்டுகள் ஆறு பத்தும்
அடியெனை வாழ வைத்து,
வேண்டுவ வேண்டி யாங்கு
விருப்புடன் ஈந்து காத்த
காண்தகு முருக! நின்தாள்
கைதொழுது ஏத்தி நின்றேன்
மீண்டும்நல் கம்பன் தொண்டில்
விடுத்துஎனைப் புரப்பாய் என்றே! 7

முன்னைச் சிவனார் அருள்தமிழை
முழுமை செய்த அகத்தியனார்,
பின்னை அன்னோன் மாணாக்கன்
பெரும்பேர் ஆசான் காப்பியனார்,
இன்னும் புலவர் பல்லோர்கள்,
இலக்க ணங்கள் பலதந்து,
கன்னித் தமிழை நெறிப்படுத்திக்
காசினி மொழியாய் ஆக்கிவைத்தார். 8

சங்கத்து இருந்து தமிழ்ஆய்ந்தோர்,
தனியாய்ப் பாக்கள் மொழிந்தவர்கள்,
அங்குஅப் பாக்கள் தமைத்தொகுத்தோர்,
ஆன்ற கவிதை பலவடித்தோர்,
மங்கா அறநூல் வகுத்தவர்கள்,
மாகாப் பியங்கள் புனைந்தவர்கள்,
சங்கை இல்லாத் துறைநூல்கள்
தந்த நல்ல கலைவாணர், 9

பாட்டுஆக, கவிஆக, பாசுரமாய்,
பாஇனமாய்ப் பாடல் ஆக,
தீட்டாத ஓவியம்ஆம் திகழ்கவிதை
யொடுபண்ணாய் செய்யுள் ஆக,
நாட்டார்கள் தாம்கற்க நற்புலவர்
உபகரித்த நல்நூல் யாவும்
ஏட்டோலை வாரிஅதில் எழுதிவைத்துக்
காத்துஅவற்றை இலங்கச் செய்தோர், 10

ஆயிரம்பல் ஆயிரம்ஆம் ஆண்டுகளாய்
ஆர்வமுடன் அவற்றைக் கற்று,
மேயினபேர் உவகையுடன் விழுமியநல்
மாணாக்கர் விரும்பிக் கேட்க,
தாயினுமே அன்புகொடு தனித்தனியே
நூல்பலவும் தருமாறு ஊட்டி
மா-இரு-செந் தமிழ்வளர்த்த மாண்புநிறை
கணக்காயர் மதிவல் லார்கள், 11

மன்னுபுகழ் நூல்பலவும், மனத்துவமும்
உலகியலும் மாணக் கற்று,
பன்னஅரிய கலைதெரிந்து பரத்துவத்தின்
நிலைஉணர்ந்து பரிவு மிக்கு
தொல்நூல்கள் பலவுக்கும் சுடர்உரைகள்
வகுத்துமனத் துரிசு நீக்கும்
பல்நூறு பெரும்புலவர் பாரில்இருள்
அகற்றுகின்ற பரிதி போல்வார், 12

எத்தனையோ நூற்றாண்டாய் ஏடுகளில்
பெயர்த்துஎழுதி, ஈட்டி வைத்த
அத்தனையும் இன்றுஇல்லை; அந்து,கரை-
யான்,நெருப்புக்கு அகப்ப டாமல்
பத்திரமாய் இருந்தவற்றைப் பாடுபட்டுத்
தேடிவைத்துப் பலவாறு ஆய்ந்தே
உத்தமமாய் அச்சிட்ட உ.வே.சா.
போன்றதமிழ் உணர்ச்சி யாளர், 13

அன்னவர்கள் யாவருக்கும் அகம்மலரக்
கைகூப்பி, அவர்தம் செய்ய
பொன்அடிகள் முடிசேர்த்துப் பொருந்துமுறை
தொழுதுஏத்திப் புகழ்ந்து பாடி,
கன்னிவளர் தமிழ்த்தாயார் கமலமலர்த்
தாள்பணிந்து கம்பன் என்னும்
என்உடையன் திருஅடிகள் என்றும்எனது
உச்சிசேர்த்து இனிப்பென் அம்மா! 14

தன்நிகர்இல் கம்பன் அவன் தமிழ்மணக்கப்
புகழ்புரிந்த சடைய னுக்கும்,
பன்னஅரிய அவன்படைப்பைப் பனைஏட்டில்
எழுதிவந்த பருணி தர்க்கும்,
பின்அதனை அச்சியற்றிப் பெரும்பாலோர்
கற்கவழி பிறப்பித் தோர்க்கும்,
மன்னும்அதன் சீர்பரவும் மாண்பினர்க்கும்,
இடையறாமல் வணக்கம் செய்வேன்! 15

நல்லவர்கள் எல்லாரும் நலம்சிறந்து
மகிழ்பூத்து நாளும் வாழ்க!
**அல்லவர்கள் அவர்எல்லாம் நல்லவர்கள்**
**ஆகி,நலம் அரும்பி வாழ்க!**
பல்லவர்கள், சோழரொடும் பாண்டியர்கள்
வளர்த்தகலை படர்ந்து வாழ்க!
**எல்லைஇலான் திருஅருளால் இடுக்கண்ஒழிந்து**
**இந்தியநாடு இனிது வாழ்க!** 16

'வாழிதமிழ்ச் செய்யமொழி! வாழிதமிழ் நல்கலைகள்
வாழிதமிழ் வேதம்அருள் வள்ளுவனார்-வாழிஅரோ
**இன்பம் பெருக இருசெவியும் தேன்பாய்ச்சும்**
**கம்பன்ஆம் எங்கள் கவி!'**

திருத்தணிகை **சா. கணேசன்**
3.6.1968

*(தம் அறுபதாம் ஆண்டு நிறைநாளில் யாருக்கும் அறிவிக்காமல் தனியே திருத்தணி சென்று வழிபட்டெழுதியவை...)*

# இன்பமுடன் வாழ்க!

*தன் அறுபதாம் ஆண்டு நிறை நாளில் குடும்பத்தார் யாரையும் உடனழைக்காது தனியாய், திருத்தணி சென்று வழிபாடு நிகழ்த்தியதும், தம் குடும்பத்தவரை தனித்தனியே வாழ்த்திப் பாடிய வாழ்த்துரை.*

கீலக.வைகாசி - மகநாளில்

3.6.68

**அன்பார் மாப்பிள்ளை!** அழகார் குடிஓம்பி
இன்பமுடன் வாழ்க இசைந்து

எங்கும் புகழ் மணக்க எல்லார்க்கும் நன்குதவி
**மங்கைநீ** வாழ்க மகிழ்ந்து

என்னருமைக் **காந்தி!** இறையருளால் நன்னலங்கள்
மன்னிப் பொலிக மலர்ந்து

என்னுடை பேரா! **எழிற்கண்ணா!** நீ வாழ்க
மன்னுசிறப் பெல்லாமும் வாய்ந்து

எண்ணுபுகழ்க் **கம்பன்பேர்** ஏற்றவனே எஞ்ஞான்றும்
புண்ணியனாய் வாழ்க பொலிந்து

**வாசுகிப்பேர்ச்** செல்வி! வளமெலாம் பெற்றுநீ
தேசுடனே வாழ்வாய் செழித்து

**திருவாசகச்** செல்வ! செம்மேனி எம்மான்
அருளால்நீ வாழ்க நலம் ஆர்ந்து

**கண்ணகிப்** பேர்த்தி! களிப்புடனே நீ வாழ்க!
பெண்ணலங்கள் எல்லாமும் பெற்று

தொல்லை எலாம் போய் அகல,
　　தோன்றாத் துணை ஆவான்
எல்லா நலனும்
　　இனிதளிக்க - பல்லாண்டு
கன்னித் தமிழினைப் போல்,
　　கம்பனைப்போல், வளளுவம்போல்
மனனிப் பொலிவீர் மகிழ்ந்து.

---

| | | |
|---|---|---|
| மாப்பிள்ளை | : | பழ. சண்முகம் |
| மகள் | : | மங்கையர்க்கரசி |
| பேரன்மார் | : | காந்தி, கண்ணன், கம்பராமன், திருவாசகன் |
| பேத்திமார் | : | வாசுகி, கண்ணகி |



# செம்புலமை மெய்க்கீர்த்தி!

*"கம்பனும் - மில்ட்டனும்" என்ற தலைப்பில் கம்பனை ஆய்ந்து முனைவர் பட்டம் பெற்ற பேராசிரியர் எஸ். இராமகிருஷ்ணன் ஆய்வைத் தொடங்கும் நாளில் மருத்துவமனையிலிருந்த கம்பன் அடிப்பொடி SRK-யின் முயற்சியை வாழ்த்தி அனுப்பி வைத்த வாழ்த்துக் கவிதை இதோ :*

கம்பனுடன் மில்ட்டன்
கவிநயத்தைக் கண்டளந்து
செம்புலமை மெய்க்கீர்த்தி
சேர்ந்தொளிர - தம்பி, நீ,
கன்னித் தமிழ்வளர்த்துக்
காசினியில் பல்லாண்டு
மன்னிப் பொலிக மகிழ்ந்து

*(Ph.d.,-என்று ஆங்கிலத்தில் அழைக்கப் பெறும் முனைவர் தகுதியை "செம்புலமை மெய்க்கீர்த்தி" எனத் தமிழில் புதிய சொல்லாக்கம் செய்தவர் கம்பன் அடிப்பொடி. 37ஆம் ஆண்டுக் கம்பன் திருநாளில் 28.3.1975 அன்று நீதிபதி மு.மு. இஸ்மாயீல் தலைமையில் குருதேவர் தெ.ஸா. மீனாட்சி சுந்தரனாரைக் கொண்டு செம்புலமை மெய்க்கீர்த்தி பெற்றமைக்காக SRK-ஐப் பாராட்டி பொன்னாடை அளித்துக் கௌரவித்தார்.)*



# என் சகோதரர்

– ஆத்தங்குடி **பெ.மு. சுப்பையா செட்டியார்**

திரு. கம்பன் அடிப்பொடி, சா. கணேசன் அவர்கள் எனக்கு ஓர் உடன்பிறவாச் சகோதரர். 25 வயது முதல் 80 வயது வரை, திரு. சா. கணேசன் அவர்களுடன் ஒரு நெருங்கிய சகோதர வாஞ்சை நிலைத்திருந்தது.

பர்மாவிலும், மலேசியாவிலும், செட்டி நாட்டிலும் நிறைந்த செல்வமும், செல்வாக்கும் தேடி வைத்திருந்த திரு. சாமினாதன் செட்டியாரவர்கள், திரு. சா. கணேசன் அவர்களை இளவயதிலேயே விட்டுப் பிரிந்து விட்டார்கள். அரங்க வாத்தியாரிடம் திண்ணைப் படிப்பு மூலம் எழுத்தறிவு பெற்ற சா. கணேசன் அவர்கள் அடுத்துப் பள்ளிப் படிப்பு, கல்லூரிப் படிப்பு, சட்டப் படிப்பு, தொழில் படிப்பு என்று எதுவும் படித்துவிடவில்லை. தேசத் தொண்டில் கொண்டிருந்த பற்று அவர்களுக்கு அதற்கு வாய்ப்பும் கொடுக்கவில்லை. அவர்கள் பெற்றிருந்த அனுபவக்கல்வி இன்ன துறைதான் என்றில்லாது எல்லாத் துறைகளிலும், தமிழ் மொழிதான் என்றில்லாது, ஆங்கிலம், ஹிந்தி, சமஸ்கிருதம் ஆகிய மொழிகளிலும் அவர்களைச் சிறக்கச் செய்திருந்தது. கலைமகள் அவர்களிடம் குடிபுகுந்து கொண்டாள் என்று கூடச் சொல்லலாம். குருபக்தியோடு அவர்கள் பலரிடம் பழகிக் கல்வி பெற்றார்கள். அவர்களது வாழ்நாளில் இருந்து அவ்வனுபவக் கல்வி புகட்டியவர்களையும், அவர்களது வாழ்நாளுக்கு அப்பாற்பட்டவர்களையும் கூட அவர்கள் வாழ்த்தி வணங்கியதை அவர்கள் இயற்றிய 'தமிழ்த் தொண்டத் தொகை' பாடல்கள் முப்பதும் காட்டுகின்றன. அதில் ஒரு பாடல்.

"வழுத்துமென்தாய் உயர்நாச்சி யம்மையார்க்கு மடியேன்
மதித்தந்தை திருசாமி நாதற்கு மடியேன்
எழுத்தறிவு நல்லரங்க வாத்தியார்க்கு மடியேன்
இலக்கியஞ்சொல் சிதம்பரப்பேர் ஏந்தலுக்கு மடியேன்
பழுத்ததமிழ் நிறைசேதுப் பிள்ளைக்கு மடியேன்
பலவழியில் ஊக்குவித்த ராஜாஜிக் கடியேன்
முழுத்தகுதிக் 'குருதேவர்' தெ.பொ.மீக் கடியேன்
மும்மைவளர் செந்தமிழ்த்தாய் முளரித்தாள் சரணே"

தேசத் தொண்டில் சகோதரர் திரு. சா. கணேசன் அவர்கள் கொண்டிருந்த ஈடுபாடு பிரமிக்கத்தக்கதொன்று. தந்தையார் நடத்தி வந்த தொழில் முறைகளைக் கவனிக்க அவர்களது தேசப்பற்று இடம் கொடுக்கவில்லை. அதனால் அவர்களது திரண்ட செல்வம் குறைந்தது தேசத் தொண்டிற்கும், இலக்கியத் தொண்டிற்கும் அவர்கள் ஒதுக்கிய கவனத்தில் ஒரு வீசம் அளவு தொழில் முறைகளுக்கு ஒதுக்கியிருந்தால் கம்பன் மணி மண்டபத்தை அவர்கள் ஒருவராகவே முடித்திருப்பார்கள்.

ஒரு முறை பம்பாயிலிருந்து நாமக்கல் கவிஞர், திரு. சா. கணேசன் ஆகியோருடன் சென்னைக்கு ரயிலில் திரும்பி வந்து கொண்டிருந்தேன். காது மந்தத் தன்மையால் நானும், கவிஞரும் உரக்கப் பேசிக்கொண்டிருந்தது, அந்த ரயில்பெட்டியில் பயணம் செய்து கொண்டிருந்த ஒரு ஆங்கிலேயருக்குப் பிடிக்கவில்லை. அவர் எங்களைக் கண்டித்தார். திரு சா. கணேசன் அவர்கள் அவரிடம் எங்கள் காது மந்தத் தன்மையை எடுத்துக் கூறிப் பொறுத்துக் கொள்ளச் சொன்னார்கள். இரண்டு, மூன்று முறை அவரைச் சாந்தப்படுத்த முயன்றார்கள். ஆனால், அவர் விடவில்லை. அவரது விடாப்பிடியான கோபத்தில், நாங்கள் இந்தியர் அவர் ஆங்கிலேயர் என்ற ஏற்றத்தாழ்வு உணர்வும், இளப்பமான கருத்தோட்டமும் இருப்பதை திரு சா. கணேசன் அவர்கள் புரிந்துகொண்டார்கள். உடனே 'வந்தேமாதரம்' என்று கர்ச்சித்தார்கள். ரயிலில் பயணம் செய்து கொண்டிருந்த எல்லோரும் திடீரென உணர்வு பெற்று, 'வந்தே மாதரம்' என்று எதிரொலித்தார்கள். ஆங்கிலேயர் அயர்ந்து போனார். அடுத்த ரயில் நிலையத்தில், ரயிலில் இருந்து அவரை இறக்கி, அதிகாரிகளிடம் 'இடைஞ்சலானவர்' என்று ஒப்படைத்த பிறகே, பயணம் மேற்கொள்ளச் செய்தார்கள்.

யாரிடமும் பிறருக்காக அன்றித் தமக்காக உதவி கேட்கும் எண்ணம் அவர்களிடம் இருந்ததில்லை. சந்தர்ப்பச் சூழ்நிலைகளால், பிறர் அவர்களுக்கு ஏதும் உதவி செய்திருந்தால், என்றென்றும் மறக்காது அதற்குக் கைம்மாறு செய்ய வாய்ப்பை எதிர்நோக்கிக் கொண்டே இருக்கும் குணம் அவர்களுடையது. தேசியத் தொண்டால் அவர்களது வீடு அவர்கள் கைவிட்டுப் போகும் சூழ்நிலை ஏற்பட்டது. அதை அவர்களுக்குத் தக்கவைக்கும் சிறிய புண்ணியப்பணி எனக்குப் பல ஆண்டுகளுக்கு முன் கிட்டியது. அதை அவர்கள் என்றென்றும் மறக்கவே இல்லை. எதிர்பாராது வட்டியும் முதலுமாகத் திருப்பினார்கள். அத்தோடு முடிந்தது என்று சும்மா இருக்கவும் இல்லை. இன்னும் ஏதாவது கைம்மாறு செய்ய வாய்ப்புக் கிடைக்காதா என்று எதிர்நோக்கிக் கொண்டே இருந்தார்கள். பல உதவிகளைப் பல சமயங்களில் எனக்குச் செய்த அவர்களது இந்தக் குணப்போக்கு என்னையும் அவர்களுக்குப் போட்டியாக ஏதேனும் கைம்மாறு செய்ய மாட்டோமோ என்ற தவிப்பை உண்டாக்கித் தொடர்ச்சியாக்கிவிட்டது.

சகோதரர் திரு. சா. கணேசன் அவர்களது உள்ளம் தூய்மை யானது. அதற்கு மிகுந்த சக்தியும் இருந்தது. நன்கு வளர்ந்த எனது குழந்தைகள் இறந்து, நீண்ட இடைவெளிக்கும் தவிப்பிற்கும் பிறகு 1947இல் என் மனைவி மீண்டும் கருவுற்றிருந்தாள். ஒரு தினம் திரு. சா. கணேசன் அவர்கள் என் வீட்டிற்கு வந்திருந்தார்கள். வந்த இடத்தில் கம்பராமாயணச் சொற்பொழிவை மேற்கொண்டார்கள். சிறிய கிராமத்தில் எதிர்பாராத அளவு, நிறைய அன்பர்கள் திரண்டு விட்டார்கள். சொற்பொழிவு 3 தினங்கள் நிகழ்ந்தது. அனுமன் 'கண்டேன் சீதையை' என்கிற இடம் வந்தபோது எனது இல்லத்திற்கு ஒரு போலீஸ்காரர் வந்தார். 'திருடன் அகப்பட்டான்' என்ற செய்தியை யும் சொன்னார். ஆம்! ஓரிரு வாரங்களுக்கு முன்னர், நான் சென்னை சென்றிருந்தபோது, தனித்திருந்த எனது மனைவியிடமிருந்து திருடர்கள் நகைகளைப் பறித்துச் சென்றிருந்தனர். அந்தத் திருடர்களைப் பிடித்த செய்திதான், தூய வலிமை மிக்க உள்ளமுடைய அவர்களது சொற் பொழிவின் இடையே வந்தது. அடுத்த சில மாதங்களில் ஆண் குழந்தையும் பிறந்து, எனக்கு வாரிசும் உண்டாகியது. குழந்தை பிறந்ததும், வாழ்த்தவும் வந்தார்கள். கோர்ட், போலீஸ் என்றலைந்த

எனக்கு நகைகள் திரும்பக் கிடைக்கவும் செய்தார்கள். அதுமட்டுமல்ல; இந்த நிகழ்ச்சியை நான் மறந்த நிலையில் 35 ஆண்டுகள் கழிந்து, அண்மையில் ஒருமுறை அவர்களே இதை நினைவு கூர்ந்துள்ளார்கள்.

சகோதரர் திரு. சா. கணேசன் அவர்களது விடாப்பிடியான பிடிவாதப் போக்கு அவர்களைப் பலருக்கும் கோபக்காரராகவே காட்டும். பலர் இவர்களைப் பகைத்துக்கொண்டும் உள்ளார்கள். இக்குணம் இவர்களுடன் பலரும் பேசுவதற்கே பயப்படும் அளவுக்கு இருந்துள்ளது. சகோதரர் அவர்களைத் தட்டிப் பேசி, எதையும் அவர்களிடம் வெளிப்படையாக எடுத்துச்சொல்லும் அளவுக்கு எனக்கு இடம் கொடுத்திருந்தார்கள். இவர்களைவிட்டு விலகியவர்களைச் சேர்த்து வைக்கும் முயற்சியைப் பல சமயங்களில் மேற் கொண்டுள்ளேன். அச்சமயங்களில் இவர்களைத் தட்டிக் கேட்கும்போது ''என் மீதா குற்றம்? நானா சேரமாட்டேன் என்கிறேன்?'' என்று கூறி, விலகியவர்கள் செய்த ஒவ்வொரு சிறுஉதவியைக்கூட அச்சமயங்களில் எடுத்துச் சொல்வதையும், நற்குணங்களைப் பாராட்டுவதையும் கண்டு ஆச்சரியப்பட்டிருக்கின்றேன்.

நான் தந்தையாகக் கருதி 'வாப்பா' என்றழைத்த திரு. சி.வி. சிடி. வெங்கடாசலம் செட்டியார் அவர்களும் சகோதரர் திரு. சா. கணேசன் அவர்களும் அழகப்பா கல்லூரி நிர்வாகத்தில் இணைந்து செயல் புரிந்தவர்கள். இருவரும் செட்டி நாட்டுப் பகுதியில் மிக்க செல்வாக் குடையவர்கள். இவ்விருவருக்குமிடையே ஒரு முறை மனத்தாங்கல் ஏற்பட்டுப் பிரிந்துவிட்டார்கள். இவர்களது இந்தப் போக்கு, அரசியல் தேர்தல் களங்களில் கூட நீடித்தது. இருவரும் எப்படியாவது ஒன்று சேரமாட்டார்களா என்று முயற்சிகள் செய்து இறைவனை வேண்டிய வண்ணம் இருந்த போது, நீண்ட இடைவெளிக்குப் பின் இருவரும் ஒன்று சேர்ந்தார்கள். பிரிந்தவர்கள் கூடினால் ஏற்படுகின்ற ஒரு எல்லையற்ற அன்பூற்று இருவரிடமும் பெருக்கெடுத்தது. சகோதரர் துவக்கியிருந்த கம்பன் மணி மண்டபப்பணியை திரு. சி.வி. சிடி அவர்களே முன் நின்று முடிக்க முனைந்தார்கள். சகோதரரை இழுத்துக் கொண்டு சென்று பல இடங்களிலும் நன்கொடை திரட்டித் தந்தார்கள். வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி உடைந்ததுபோல் திரு. சி.வி. சிடி அவர்களை இறைவன் அழைத்துக்கொண்டு விட்டான். அவர்கள்

இன்னும் ஓராண்டிருந்திருந்தால் கம்பன் மணிமண்டபப்பணி முற்றிலும் பூர்த்தியாயிருக்குமே என்று திரு. சா. கணேசன் அவர்கள் பலமுறை என்னிடம் கூறியிருக்கிறார்கள்.

நாங்கள் இருவரும் ராஜாஜி பக்தர்கள். ஒருவரை மற்றொருவர் விஞ்சிவிட வேண்டுமென்ற போட்டிப் போக்கு இருவரிடமும் உண்டு. எனது வீட்டில் நிகழ்ந்த வைபவங்களில் ராஜாஜியின் புத்தகங்களை அச்சிட்டு, எல்லோருக்கும் இலவசமாகக் கொடுக்க நான் முனைந்தேன். 'பஜகோவிந்தம்', 'ஸோக்ரதர்' ஆகிய நூல்களைத் தேர்வு செய்து, அனுமதி பெற்று, அச்சேற்றி முடிக்கும் வரையிலான எல்லாப் பொறுப்பு களையும் அவர்களே ஏற்றுக்கொண்டு உதவி செய்தார்கள். உதவி செய்ய வந்தவர்கள் ராஜாஜியைப் போற்றி, ''ராஜாஜியின் ஒரு தொண்டர் மற்றொரு தொண்டருக்கு இப்பொறுப்பைக் கொடுப்பதன் மூலம் ராஜாஜிக்குப் பணி செய்ய வாய்ப்புத் தந்து போற்றியுள்ளார்!'' என்ற அளவுக்கு முன்னுரையும் எழுதி அச்சிட்டுள்ளார்கள்.

சகோதரர் அவர்கள் உபயோகிக்கும் பொருள்கள் என்றும் ஒரே மாதிரியாக இருப்பதில் கவனம் செலுத்துபவர்கள். உடை, செருப்பு, பணப்பை எல்லாம் என்றும் ஒரே மாதிரியாக இருக்கும், அவர்களைப் போலவே சட்டையணியாது முரட்டுக் கதர் வேட்டி, துண்டு அணியும் எனக்கு, அந்த '8' கால் ஓரக்கரையில்லாத கதராடை எளிதில் எங்கும் கிடைத்துவிடாது. அவர்கள் பேரைச் சொல்லிக் காரைக்குடி கதர்க் கடையில் கேட்டால் நிச்சயம் கிடைக்கும், அவர்கள் உபயோகிக்கும் 'மணிபர்ஸ்' நிறைய நோட்டுக்களும், சில்லரைகளும் கொள்ளக்கூடிய ஒரு அடக்கமான அமைப்புடையது. ஒரு முறை அதைப் போல் ஒன்று பெறப் பல இடங்களில் முயற்சித்துக் கிடைக்காததை அவர்களிடம் கூறினேன், கிடைக்குமிடம் கேட்டபோது 'அது எனக்காகத் தயாராவது' என்று கூறிவிட்டு விட்டார்கள். அதைப் பற்றிய நினைப்பே மறந்து போன நிலையில் எதிர்பாராதவிதமாகத் திடீரென்று ஒரு தினம் எனக்கு அதே போல ஒரு 'மணிபர்ஸ்' தயார் செய்து கொடுத்து வியப்பில் ஆழ்த்தியுள்ளார்கள்.

1945-இல் எனது குலதெய்வம் பெரியநாயகி அம்மன் அமைந்த வேலங்குடியில் குற்றால முனிவர் டி.கே.சி., தமிழ்க்கடல் ராய.சொ. சீர்திருத்தச் செம்மல் சொ. முருகப்பா இன்னும் பலருடன் திரு. சா.

கணேசன் அவர்களும் வந்திருந்து ஜனநடமாட்டம் ஏதுமில்லாத சோலையில் வனபோஜனம் என்ற அமைப்பை ஏற்படுத்திக் கொண்டு, கம்பராமாயணம், திருவாசகம் இன்னும் பிற இலக்கியங்கள் பற்றிச் சம்பாஷித்ததையும் 'தனித்தனி முக்கனி பிழிந்து' என்ற பாடல்படியே கனிகள் பிழிந்து கற்கண்டும், தேனும் கலந்து உண்டு மகிழ்ந்ததையும் இன்றும் நினைவில் கொள்ள முடிகிறது.

40 ஆண்டுகளாகக் கம்பன் விழாக்களில் சமையல் கூடத்தில் பந்தி விசாரிக்கும் வாய்ப்பை எனக்கு நல்கிப் பல பெரியோர்களை மகிழ்விக்கவும். அவர்களது அன்பையும் நட்பையும் பெறவும் செய்த அவர்களது கருணையை மறக்கவே இயலாது.

புதுடில்லி, அலகாபாத், காசி, சாரநாத், சிம்லா என்று மூன்று மாதங்கள் அவர்களுடன் மார்கழி மாதக் குளிரில் பல இடங்களுக்கும் சென்ற போது, அவர்கள் தெய்வத் தலங்களில் கொண்டிருந்த பற்றையும், வரலாற்றுச் சின்னங்களைக் கண்ட ஆர்வத்தையும், கடுங்குளிரிலும் சட்டையணியாத பிடிவாதப் போக்கையும், அரசியல் தலைவர்களைக் கண்டு பொது விஷயங்களுக்காகப் பாடுபட்ட திறனையும், புதுடில்லி தமிழ்ச் சங்கத்தில் பொங்கலன்று (1947) பொங்கல் விழாவில் தமிழ்ச் சொற்பொழிவு ஆற்றிய சிறப்பையும் இன்றைக்கும் எண்ணி மகிழ்ச்சியடைய முடிகிறது.

அவர்கள் ஆவிபிரியும்போது, கோவையில், திரு. ஜி.கே. சுந்தரம் அவர்களுடன் ராமபஜனை செய்யும் வாய்ப்பைக் கம்பனும், கன்னித் தமிழ்த் தாயும் எனக்குத் தந்தார்கள். ஆனால், அவர்கள் எப்படியாவது கம்பன் மணிமண்டபப் பணியை முடித்துவிட வேண்டும் என்று கொண்டிருந்த எல்லையற்ற ஆவலைப் பூர்த்தி செய்து அவர்களது மகிழ்வைக் காணும் வாய்ப்பைத் தரவில்லை. அவர்களது ஆத்மா சாந்தியடைய அவர்கள் மேற்கொண்ட பணியை நிறைவேற்றுவது, அவர்களிடம் உதவி பெற்று வளர்ந்து, ஞானம் பெற்றுச் சிறந்த ஆயிரக்கணக்கானவர்களின் கடமையாகும். அவர்களது 'தமிழ்த் தொண்டத் தொகை' இறுதிப் பாடல், கம்பன் அடிப்பொடி பக்தர்களாகிய நம் ஒவ்வொருவருக்கும் அவ்வுணர்வை ஏற்படுத்திப் பணியை முடிக்க, ஆவன செய்யத் தூண்ட இறைவனடி வேண்டுகின்றேன்.

"தொன்றுதொட்டுத் தமிழ்மரபைக் காப்பார்கட் கடியேன்
துயர்அகலத் தமிழமுதம் ஊட்டுவார்கட் கடியேன்
என்றுமுள தென்தமிழ்த்தாய்க் கெழில்முடியைச் சூட்டும்
எந்தைபிரான் கம்பன்தன் அடியார்க்கும் அடியேன்
நின்றுவளர் கம்பன்அற நிலைகாப்பார்க் கடியேன்
நெடியதமிழ்த் தாய்கோயில் புரப்பார்கட் கடியேன்
முன்றுளிர்க்கும் இடுக்கணவை முரிப்பார்கட் கடியேன்
மும்மைவளர் செந்தமிழ்த்தாய் முளரித்தாள் சரணே."



# தந்தை சா. கணேச ஸ்தபதி

**- வை. கணபதி ஸ்தபதி**

**த**ந்தை சா. கணேசன் அவர்கள் நாடறிந்த பேரறிஞர். அப் புனிதரைப் பல திறப்பட்ட அறிஞர்கள் தத்தமக்கு உரியவராகக் காண்பார்கள். அவர்களைத் தமிழறிஞராகவும், புலவராகவும், அரசியலறிஞராகவும், ஆசிரியராகவும், பேச்சாளராகவும், எழுத்தாள ராகவும், சிந்தனையாளராகவும், இலட்சியவாதியாகவும், தியாகி யாகவும், ஆராய்ச்சியாளராகவும் காண்பார்கள். பொதுவாக உயர் நிலையிலுள்ள பேரறிஞர்கள் இப்படித்தான் காட்சியளிப்பார்கள். அம்முறையிலே சிற்பியாகிய நான் தந்தை சா. கணேசன் அவர்களை ஒரு சிற்ப அறிஞராகவே காண்கிறேன்.

**கலைக் காவலர் பரம்பரை:**

தமிழகம் கண்ட ஐம்பெரும் கலைகளில் சிற்பக் கலை ஒன்று. நமது தமிழகத்தில் பல்லவ, சோழ, பாண்டிய, விஜயநகர, நாயக்க மன்னர்கள் இக்கலையை ஆதரித்துப் போற்றி வளர்த்தமை வரலாறு அறியும். ஆனால், தனிப்பட்ட சமூகங்கள் இக்கலையைப் போற்றி வளர்த்த செய்திகள் வரலாற்றில் இன்னும் இடம் பெறவில்லை. தமிழகத்தில் மாமன்னர்களுக்குப் பின் முடிசூடா மன்னர்களாகத் திகழ்ந்து இக்கலையைப் போற்றி ஆதரித்த தன்னிகரற்ற சமூகம், 'நகரத்தார்' என்று கௌரவித்து அழைக்கப்படும் நாட்டுக்கோட்டைச் செட்டிமார்கள் சமூகம் ஆகும். இப்பெருங்குடி மக்கள், ஈட்டிய செல்வத்தின் பெரும் பகுதி யினைப் பழமையான திருக்கோயில்களைப் புதுப்பித்தல், புதிதாக நிறுவுதல், புதியன சேர்த்தல் போன்ற நற்பணிகளில் அர்ப்பணித் திருக்கிறார்கள். கோடிக்கணக்கான ரூபாய்களை இத்தகைய

பணிகளுக்கு வாரி வழங்கிய வேறொரு சமூகம் தமிழகத்தில் இன்னும் தோன்றவில்லை.

**பரம்பரைச் சிறப்புகள்:**

வள்ளன்மையும், கலை ஆர்வமும், தெய்வ பக்தியும் கொண்ட அப்பெருமக்கள் சிற்பிகளைப் போற்றி ஆதரித்த முறை, நினைத்து நினைத்து இன்புறத்தக்கது. அவர்கள் சிற்பிகள்மீது நிறைந்த வாஞ்சை கொண்டவர்கள்; அவர்களோடு நெருங்கிப் பழகுவதில் பிரியமும், பெருமையும் உடையவர்கள். ஆனால், இப்பெருமக்கள் விஷயத்தில் சிற்பிகளாகிய நாங்கள் மற்றவர்களிடையே கண்டிராத ஒரு தனிப்போக்கைக் கண்டிருக்கிறோம். புரவலரும் புலவரும் போன்று, சிற்பிகளோடு நெருங்கிப் பழகியதன் பயனால் சிற்பக் கலையின் நுணுக்கங்களை ஆர்வத்துடன் ரசித்துச் சிற்பிகளோடு வாதிட்டு ஆழ்ந்த உண்மைகளையும், இரகசியங்களையும் வெளிக்கொணர்ந்து ஒவ் வொருவரும் சிற்ப அறிவுக் களஞ்சியமாகவும் திகழ்ந்திருக்கிறார்கள். கோவிலுக்கு அளவு நிர்ணயம் செய்தல், கோவில் உறுப்புகளில் அடக்க, சுருக்க, கழற்றிகள் ஒழுங்குபடுத்துதல், மண்டபப் பத்திகள், உயரங்கள் ஆகியவற்றை அழகுபட வகுத்தல், பிராகாரங்கள், கோபுரங்கள் நிர்மாணித்தல், இன்னோரன்ன பல தொழில் நுணுக்கங்களைச் சிற்பி களோடு நல்ல கலை உணர்வுடனேயே ஏற்றுச் செய்வித்திருக் கின்றார்கள். சிலர் சாஸ்திர ஞானமும் ஆகம நூலறிவும், நடைமுறைத் தொழில் நுணுக்கங்களும் சிறந்த அளவில் கைவரப்பெற்றுப் பிறர் வியக்கும் பேரறிவு படைத்தவர்களாகவும் விளங்கி இருக்கிறார்கள். திருப்பணிகளில் இவர்கள் நிர்வாகம் செய்த முறைகளைப்பற்றித் தனித்த ஒரு நூலே எழுதலாம். நிர்வாகத்திறன் அவர்களின் உடன்பிறப்பு.

**கலை உள்ளமும் ரசனையும் :**

இத்துணைசிறப்புகள் வாய்ந்த இவ்வணிகப் பெருங்குடியில் அவதரித்தவர், தந்தை சா. கணேசன் அவர்கள். பரம்பரைச் சிறப்புகள் அனைத்தையும் ஒருங்கே பெற்றிருப்பதுடன், மற்றவர்களிடம் காணாத தனிச் சிறப்புகளும் வாய்க்கப் பெற்றவர்கள், அவர்கள். தமிழ் இலக் கியத்தில் ஈடுபாடும் ரசனையும் எவ்வளவு அவர்களிடம் காணப்படு கின்றனவோ, அவற்றைவிடச் சிற்பக்கலையில் ஈடுபாடும் ரசனையும்

அவர்களிடம் மேலோங்கியிருக்கக் காணலாம். சிற்பங்களைப் பார்த்துப் புரிந்து ரசிப்பது எல்லோராலும் இயலாது. ஒன்று, சிற்பியாக இருத்தல் வேண்டும்; அல்லது சிற்பங்களை அடிக்கடி பார்த்து, ஆராய்ந்து, அவற்றின் உட்கருத்தையும் நயத்தையும் அறியும் கலை உள்ளம் வாய்ந்தவர்களாக இருத்தல் வேண்டும். இத்தகைய உள்ளம் கொண்டோர் நம் நாட்டில் மிகமிகக் குறைவு. என் வாழ்க்கையில், சிற்பத் துறையில் பல வேறு அலுவல்களின் ஈடுபட்டிருக்கும், பல நிலைகளில் உள்ளவர்களைச் சந்தித்துப் பேசியும் இருக்கின்றேன். அவர்களின் ரசிகத்தன்மையை ஓரளவு அறிய முயன்றுமிருக்கிறேன். ஆனால், தந்தை சா. கணேசன் அவர்களிடம் கண்ட கலை உள்ளத்தின் பரப்பையும் ஆழத்தையும் வேறு யாரிடத்திலும் நான் காணமுடியவில்லை. ஒரு சிற்பத்தின் சிறந்த கலைக் கூறுகளை, அதனைக் கண்டவுடன் தொட்டுப் பேசும் ஆற்றல் அவர்களுக்கே உரிய தனிச் சிறப்பாகக் காண்கிறேன். எங்கெங்கு மற்றவர்கள் தயங்குகிறார்களோ, பிறர் கருத்தை எதிர்பார்க்கிறார்களோ அங்கெல்லாம் நயத்தோடு எடுத்துரைக்கும் ஆற்றல் நிரம்ப அவர்களிடம் இருக்கின்றது. தந்தை சா. கணேசன் அவர்களுடன் எத்தனையோ கோவில்களுக்கும் கலைக்கூடங்களுக்கும் சென்று வரும் பேறு பெற்றிருக்கிறேன். ஆங்காங்கே உள்ள சிற்பங் களைப் பார்த்து அவர்கள் பேசுவதை அவர்கள் தரும் புது விளக்கங்களை - சுட்டிக் காட்டும் நயங்களைக் காதாரக் கேட்டு, உள்ளம் மகிழ்ந்து, வியந்துமிருக்கிறேன். இவர்களுக்கு மட்டும் இத்துணை ரசிகத் தன்மை எங்ஙனம் தோன்றியது என்று நான் துணிந்து இதுவரை அவர்களைக் கேட்க முடியவில்லை. அவர்களே ஒரு முறை பிறரிடம் இதுபற்றிச் சொல்லிக்கொண்டிருந்த உண்மை என் மனதை நெகிழச் செய்துவிட்டது. அவர்கள் சொன்னதெல்லாம் இதுதான்: ''கம்பன் ஒரு சகலகலா வல்லவன். அவனைப் புரிந்து கொள்ள நான் எடுத்துக் கொண்ட முயற்சிகள் பலமுனைப்பட்டவை. இதனால் ஒன்றல்ல. பல துறைகளைப்பற்றி ஆழ்ந்து ஆராய வேண்டியதாயிற்று. இவையெல்லாம் கம்பன் கொடுத்த பிச்சை.''

### கலை வளம் பெற - உயர:

ஒரு சிறந்த, ரசிகர், ஒரு சிறந்த கலைஞருக்கு ஒப்பாவார். ஓர் உண்மைக் கலைஞன் இத்தகைய ரசிகரைத்தான் தேடித் திரிவான்.

எத்தனை ஆயிரம் சாதாரண மக்கள் அவனது படைப்புகளைப் புகழ்ந்துரைத்தாலும், ரசிகர்களில் மேதையாக விளங்கும் ஒருவரின் புகழுரைக்கு ஈடாக அவன் வேறு எதையும் பெரிதாக நினைப்பதில்லை. ஒரு படைப்பில் கலைஞன் வைத்த பொருள் நயங்களையும் உருவ அமைப்பு நயங்களையும் கண்டுணர்ந்து அவற்றையே சுட்டிக் காட்டிக் காட்டி ரசித்து இன்புறும் உள்ளமே சிறந்த ரசிக உள்ளம். இத்தகைய ரசிக உள்ளத்தை லட்சத்தில் ஒருவரிடந்தான் காணமுடியும். தந்தை சா. கணேசன் அவர்களிடம் இவ்வுள்ளம் பேரளவில் அமைந்திருப்பதைக் கண்டேன். இத்தகைய பெருமக்களால்தான் உண்மையாகக் கலை வளமும், வளர்ச்சியும் பெற முடியும்; தொழிற்கரங்களை இயக்கவும் முடியும். அவர்களால்தான் கலைப்படைப்புகளின் தரமே உயர்கிறது, சிறந்த இலக்கியங்களுக்கு உரையாசிரியர்கள் காணும் சிறப்பான விளக்கங்களைப் போல.

**கலை நூலறிவு:**

சிற்பங்களைச் செம்மையாக இயற்றுவதற்கு ஒரு சிற்பிக்குத் துணைபுரிவன சிற்ப நூல்கள். பெரும்பாலும், சிற்பிகளே அவற்றை விரும்புவர். அவை அவர்களுக்கே உரியவை, இலக்கணம், இலக்கிய கர்த்தாவிற்கு உரியது போல. அவற்றை மற்றவர்கள் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டுமென்பதில்லை. என்றாலும், ஆய்வு உள்ளம் படைத்த தந்தை சா. கணேசன் அவர்கள் சிறந்த சிற்ப நூல்களையெல்லாம் திரட்டி, அவற்றை விரும்பிப் படித்தும் உள்ளார்கள். ஆங்கிலம், தமிழ், சமஸ்கிருதம் ஆகிய மும்மொழிகளில் வெளிவந்த எல்லா நூல்களுமே அவர்களிடம் இருக்கின்றன. ஏன், சிற்பிகளிடம் இல்லாத நூல்களும் இவர்களிடம் உண்டு என்றால் மிகையாகாது. அலகாபாத் பல்கலைக் கழக சமஸ்கிருதப் பேராசிரியர் திரு. பி.கே. ஆச்சார்யார் அவர்கள் பதிப்பித்த 'மானசாரம்' என்ற சிற்ப நூலின் சமஸ்கிருத மூலம் மட்டுந்தான் எங்கள் வீட்டிலுண்டு. ஆனால், தந்தை சா. கணேசன் அவர்களிடம் மூலத்துடன் அதைப்பற்றிய பிற ஆறு துணை நூல்களும் இருக்கின்றன. அந்த நூல்களை அவர்களிடம் வாங்கிப் புரட்டிப் பார்த்தால் அவர்கள் அவற்றினுள்ளே புகுந்து படித்துப் பலவித கேள்விக் குறிகளையும், கருத்துரைகளையும் ஆங்காங்கே எழுதி இருப்பதைக் காணலாம். புத்தகங்களை வாங்கி, அலமாரியில் அடுக்கி வைத்து அழகு

பார்ப்பதில்லை. படித்த பின்னரே அவை அடுக்கி வைக்கப்படுகின்றன. அது மட்டுமல்ல, நூல்கள்மீது அவர்கள் கொண்ட ஆசை கொஞ்ச நஞ்சமல்ல. எதை வேண்டுமானாலும் கொடுப்பார்கள். ஆனால், புத்தகங்களை மட்டும் கொடுக்கமாட்டார்கள். அவர்களிடமிருந்து புத்தகத்தைப் பெறுவோர் யாருமிருந்தால் முற்பிறப்பில் நிரம்பப் புண்ணியம் செய்திருக்க வேண்டும். என்னைப் பொறுத்த வரையில் அத்தகைய புண்ணியம் செய்தவனாகவே கருதிக் கொள்கிறேன். காரணம், அவர்கள் கொடுத்த இரண்டு நூல்கள் பத்து ஆண்டுகளாக என்னிடம் இருக்கின்றன. (இவற்றைக் கண்டிப்பாகத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் - இது உத்தரவு). சிற்ப நூல்களை மட்டும் அல்லாமல் அவற்றிற்குத் துணை நூல்களான ஆகம நூல்களையும், நாட்டியக் கலை நூல்களையும் அவர்கள் நிரம்பக் கற்றிருக்கிறார்கள்.

## கருவிகளின் செயல் முறை அறிவு:

கலை உள்ளமும் கலை நூலறிவும் மட்டும்தான் அவர்களிடம் உண்டு என்பதில்லை. அவர்களிடம் கலைத்துறைச் செயல்முறைக்கு வேண்டிய கருவிகளும் உண்டு. அவர்களுடைய கைப்பெட்டியில் எந்த நேரத்திலும் ஒரு ஸ்கேல், பென்சில், ரப்பர், மேக்னடிக் காம்பஸ், டேப், டிராயிங் பென்சில், கலர் பென்சில், கருவிப்பெட்டி (Instruments Box). பூதக்கண்ணாடி ஆகியவை எல்லாம் இருக்கும். இவை தொழில் புரிவோருக்கு அல்லவா வேண்டும்? தந்தை சா. கணேசன் அவர்கள் கோவில்களுக்குச் சென்றால் இவைகளெல்லாம் தொழிற்படத் தொடங்கும். எடுத்துக்காட்டாக, அண்மையில் பத்தினித் தெய்வம் கண்ணகிப் பெருமாட்டிக்குக் கோட்டம் நிறுவ மனை தேர்ந்தெடுக்கப் பூம்புகாருக்கு அவர்களுடன் நானும் சென்றிருந்தேன். அவர்களே இடத்தைத் தேர்ந்தெடுத்தது மட்டுமல்லாமல் கோட்டம் நோக்க வேண்டிய திசையையும் 'மாக்னடிக் காம்பஸ்' (Magnetic Compas) கொண்டு தீர்மானித்து, கயிறு பிடித்து, வரை கோடிட்டுக் கூடியிருந்த பெரியோர்கள் வியக்கக் கோட்டத்தின் பார்வை பற்றிய உட்கிடக்கையையும் விளக்கினார்கள்; கிழக்கு நோக்கிய இக்கோட்டம் ஈசானியப்பார்வை உடையதாக இருத்தலுக்குக் காரணம் ஊர் மக்களின் நல்வாழ்விற்குத் தேவை என்ற சிற்ப ரகசியம் அவர்களுக்கு நன்கு தெரிந்திருந்தமையால்தான்.

**படைப்பாற்றல்:**

இதுமட்டுமல்ல, ஒரு சிற்பியானவன் ஏற்கெனவே உருவாக்கப் பட்டிருக்கும் சிற்ப வடிவங்களின் இலக்கணங்களைக் கற்றிருப்பதுடன் புதிதாக வடிவங்கள் இயற்றத்தக்க பொது அறிவும் கற்பனையும், அவ்வடிவத்தின் அமைதியை நிர்ணயிக்க உருவ அமைப்பு முறையும் தெரியப் பெற்றிருக்க வேண்டும். இவற்றையும் தந்தை சா. கணேசன் அவர்கள் கைவரப் பெற்றிருக்கிறார்கள். காரைக்குடிக் கம்பன் கழகத்தில் கம்பரின் திருவடிவமும், தமிழ்த்தாயின் வடிவமும் தந்தை சா. கணேசன் அவர்களின் படைப்புகள். கம்பனை ஓர் இலக்கியப் பேராசிரியராகவும் ஒப்பற்ற தமிழ் மகனாகவும் சித்திரித்து, அதற்கேற்ற அமைதியையும் அதில் ஏற்றியிருக்கிறார்கள். தமிழ்த் தாய்க்கு அவர்கள் கொடுத்த வடிவழகும் கருத்தழகும் சிற்ப உலகில் அது உயர்ந்த இடத்தைப் பெறச் செய்துவிட்டது.

பூம்புகாரில் கடவுள் மங்கலம் செய்யப்படவிருக்கும் திருமா பத்தினி கண்ணகியின் வடிவம், அவர்கள் உள்ளத்திலே மலர்ந்த காட்சியின் பிம்பம். அது மட்டுமல்ல, 'சுவாமி சின்மயானந்தா' அவர்களுக்குச் சடைமுடி தரித்துப் பிறை சூடி, பாசம் அங்குசம் தாங்கி, ஞானமுத்திரை காட்டிய ஞான விநாயகர் ஒன்று அவர்களால் உருவாக்கி அளிக்கப் பெற்றிருக்கின்றது. தமிழ்த்தாயை, என் தந்தையார் திரு. ம. வைத்தியநாத ஸ்தபதி அவர்களும்; கண்ணகி, ஞான கணபதி ஆகிய இரு வடிவங்களை நானும் செதுக்கிக் கொடுத்து, அவர்கள் அடைந்த பெருமையில் பங்கேற்கச் செய்திருக்கிறார்கள் என்பதைப் பணிவோடு இங்கு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். மேற் குறிப்பிட்ட செய்திகள் அவர்களுடைய படைக்கும் ஆற்றலுக்கு (Creative spirit) மிகச் சிறந்த சான்றுகளன்றோ!

பூம்புகார் நகர அமைப்பை மயன் என்ற தமிழகப் பெருந்தச்சன் ஆதியில் சமைத்ததாக இலக்கியத்தில் குறிப்புண்டு. ஆனால், கடல் கொண்ட அப்பெருநகரத்தை எவரும் கண் எதிரே கண்டதில்லை. சிலப்பதிகார நூலை ஆராய்ந்து, தமிழகத் தொல்பொருள் ஆய்வுத் துறையினர் நிகழ்த்திய பூம்புகார் கலைக்காட்சியில் முதல் முதலாக அப்பட்டினத்தை உருவாக்கி, ஒரு சிறந்த 'மாடல்' மூலமாக நம் கண்ணெதிரே காட்டிய பெருமை, பெருமளவு தந்தை சா. கணேசன்

அவர்களையே சாரும் என்றால் மிகையன்று. அதைக் கண்ணுற்ற தமிழறிஞர்கள், ஆராய்ச்சியாளர்கள் அவர்களைப் போற்றிப் புகழ்ந்து பாராட்டினார்கள். தஞ்சைக் கலைக் கூடத்தின் சிருஷ்டி கர்த்தாக்களில் ஒருவராயிருந்து அவர்கள் ஆற்றிய பணியை அறிஞர் உலகம் நன்கறியும்.

**சிற்பக் கலை ஆராய்ச்சி:**

தந்தை சா. கணேசன் அவர்களுக்குச் சிற்பத்துறை ஆராய்ச்சி தேனினும், இனியது. கோலாலம்பூரில் நடைபெற்ற முதலாவது உலகத் தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கில் தமிழகச் சிற்பக்கலை பற்றிச் சிறந்த ஆராய்ச்சி உரை (Research Paper) ஆற்றிய ஒருவர், தந்தை சா. கணேசன் அவர்களே. இதனைச் சிற்பியர் உலகம் ஊடுருவிக் கவனித்துக்கொண்டிருந்தது; அளவற்ற பெருமையும் கொண்டது. இதனைத் தொடர்ந்து இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டிலும் அவர்கள் கலைக் காட்சியை உருவாக்கியதன்மூலம் தமிழகம் எத்தனையோ கலை பற்றிய அரிய செய்திகளைத் தெரிந்துகொள்ளும் வாய்ப்பையும் அவர்களால் பெற்றது.

சிற்பத்துறையில் ஈடுபடுவோருக்குத் தைரியமாக வாதிட்டுத் தெளிந்த முடிவு காணும் ஆற்றல் இன்றியமையாதது. இதுவும் தந்தை சா. கணேசன் அவர்களுக்கு வாய்த்திருக்கிறது என்பது அண்மையில் வெளியாயிற்று. மலேசியாவில் (சிங்கப்பூரில்) வெகு நாள்களாக வைத்து வழிபட்ட ஒரு படிமம் திரௌபதியா அல்லது வேறு வடிவமா என்பதை உறுதிப்படுத்த, மலேசியப் பெருங்குடி மக்களால் அவர்கள் அழைக்கப்பட்டதும், அவர்கள் முடிவு கூறி வந்ததும் நாடறியும்.

**பக்தியுணர்வும் பணியும் :**

தந்தை சா. கணேசன் அவர்கள் எத்தனையோ கும்பாபிஷேகங் களுக்குத் தலைமை தாங்கி, இரவு பகலாகப் பக்தி உணர்வோடு இறைபணியாற்றி உள்ளார்கள் இன்னும் அனேக கும்பாபிஷேகங்கள் அவர்களை எதிர்நோக்கியிருக்கின்றன. சமீபத்தில் ராஜராஜசோழனின் ஆயிரமாவது சதயத் திருநாளைச் சிறப்பாக நடத்தி, தஞ்சைப் பெருவுடையானின் அகம் குளிரக் குடமுழுக்குச் செய்த பேரின்பக்

காட்சி கலையுணர்வு, பக்தியுள்ளம் படைத்த மக்களின் உள்ளத்திலே இன்னும் நிழலிட்டுக்கொண்டிருக்கிறது.

**சிற்பிகளிடம் வாஞ்சை :**

எல்லாவற்றிற்கும் மேலாகத் தந்தை சா. கணேசன் அவர்களிடத்தில் மெய்சிலிர்க்க நான் கண்ட தனி இயல்பு ஒன்று உண்டு. சிற்பக்கலைமீது அவர்களுக்கு எவ்வளவு பிரியம் உள்ளதோ அதைவிடப் பன்மடங்கு சிற்பிகள்மீது அவர்கள் கொண்டிருக்கும் வாஞ்சை. சிற்பிகளை வலிய இழுத்துப் பெருமையடையச் செய்ய ஆசைப்படுவார்கள் அவர்கள். ஒரு முறை என் தந்தையார் திரு ம. வைத்தியநாத ஸ்தபதி அவர் களுக்குச் 'சிற்ப கலாசாகரம்' என்ற பட்டம் வழங்க வேண்டுமென்று அவர்களின் அன்புள்ளத்தில் தோன்றி ஒரு பொற்பதக்கம் செய்துவிட்டு என் தந்தையை அழைத்தார்கள். இதைக் கேட்ட என் தந்தையார் ''நான் இதுவரை பெற்ற பேரும் புகழும் தங்களால் ஏற்பட்டதுதான். இவை போதும். தங்களின் உண்மையான அன்பிற்கு நான் ரொம்பக் கடமைப்பட்டவன். என்னை மன்னித்துவிடுங்கள்!'' என்று கூறி என் தந்தையார் மறுத்துவிட்டார்கள். இதை வெகுநாள்களுக்குப் பின் கூறி, என்னிடம் பதக்கத்தைக் காட்டி, வருத்தத்தைத் தெரிவித்து, ''இப்பதக்கத்தைப் பெறுவதற்கு யோக்கியதை உள்ள வேறு யார் வரப்போகிறார்களோ தெரியவில்லை; அதுவரை இப்பதக்கத்தை வைத்திருப்பேன்!'' என்று அவர்கள் சொல்லிய பொழுது, அவர்கள் சிற்பிகளின்மீது வைத்திருக்கும் பெருமதிப்பிற்காகவும் காட்டும் ஆதரவிற்காகவும் அவர்களின் திருப்பாதங்களில் விழுந்து வணங்க வேண்டுமென்ற ஆசையே என் உள்ளத்தில் தோன்றியது. நான் என் தந்தையாரிடம் அப்பதக்கத்தை ஏன் பெற்றுக்கொள்ளவில்லை யென்று கடுமையாக வாதிட்டேன். அதற்கு, ''திரு. சா. கணேசன் அவர்கள் என் முதலாளியின் மகன். அவர்களிடந்தான் என் வாழ்க்கையையே முதன் முதலில் ஸ்தபதி என்ற முறையில் தொடங்கினேன். அதுமுதற்கொண்டு என் வாழ்க்கை தனிப் பெரும் சிறப்புடையதாகத் திகழ்ந்தது. முதலாளி அவர்கள் (என் தந்தையார், தந்தை சா. கணேசன் அவர்களை இவ்வாறுதான் அழைப்பார்கள்) நகரத்தார்களிலே தலைசிறந்த அறிவாளி. என் வயதும் அவர்கள் வயதும் ஒன்றுதான். இருப்பினும், அவர்கள் என்மீது வைத்துள்ள மதிப்பின் காரணமாக, நான் அவர்கள்

இல்லத்திற்குச் சென்ற போதெல்லாம் என்னை, 'அண்ணா! வாங்கோ!' என்று உள்ளன்போடு பல அறிஞர்களுக்கு மத்தியில் அழைத்துப் பெருமைப்படுத்தினார்களே! அதைவிடவா, 'சிற்ப கலா சாகரம்' என்ற பட்டம் பெரியது? அவர்கள் 'அண்ணா' என்றழைக்க எவ்வளவு புண்ணியம் செய்திருக்க வேண்டும்!'' என்று உணர்ச்சி வசப்பட்டு என் தந்தையார் அவர்கள் கூறியது என் நெஞ்சைவிட்டு இன்னும் அகலவில்லை.

என் தந்தை திரு ம. வைத்தியநாத ஸ்தபதி அவர்கள் அரசினரால் நிறுவப்பட்ட சிற்பக்கலைக் கல்லூரியின் கண்காணிப்பாளராகப் பணியாற்றி வரும் காலத்தில், நான்காவது ஆண்டில் அவர்களுக்குத் திடீரென்று கடுமையான வாதநோய் ஏற்பட்டது. இச்செய்தி கேட்ட தந்தை சா. கணேசன் அவர்கள் கவலைப்பட்டது எவ்வளவென்று என் உள்ளமே அறியும். அவர்கள் மீண்டும் தன்னிலை பெற வேண்டுமென்று கவலைப்பட்டவர்களில் அவர்களுக்கீடாக எவரையும் நான் அந்நேரத்தில் காணவில்லை. சென்னை 'ஜெனரல் ஆஸ்பத்திரி'க்கு நேரடியாக வந்ததோடுமல்லாமல், அன்றாடம் பல முறை 'போன்' மூலம் 'டாக்டர்'களோடு தொடர்புகொண்டு விசாரித்து, எனக்கும் செய்திகள் தந்து என்னைத் தேற்றுவார்கள். சென்னையில் குணமடையாத என் தந்தையார் அவர்களைப் பிள்ளையார்பட்டிக்குத் தம் சொந்தச் செலவிலேயே அழைத்துச் சென்றார்கள். அங்குள்ள பிரபல வாத நோய் மருத்துவரிடம் எல்லா வசதிகளையும் செய்து கொடுக்கச் செய்தார்கள். நோயைத் தீர்க்க வேண்டுமென்றும் முழுச் செலவைத் தாமே ஏற்றுக் கொள்வதாகவும் மருத்துவருக்கு எழுதிக் கொடுத்த கடிதத்தில் அவர்கள் குறிப்பிட்ட செய்தி ஒன்று என் அகத்திலே ஆழப் பதிந்து என்னை அவர்களுடைய அன்பு உள்ளத்திற்கு அடிமையாக்கிவிட்டது. அக்கடிதத்தில் ''வைத்தியனாத ஸ்தபதிக்கு வாத நோய் ஏற்பட்டிருப்பது சிற்பக் கலைக்கே வாத நோய் ஏற்பட்டதற்கு ஒப்பாகும்; நீங்கள் அவருக்குப் புத்துயிர் கொடுக்க முடியுமானால் மாபெரும் சிற்பக் கலைக்கே நீங்கள் புத்துயிர் கொடுத்ததற்கு ஒப்பாகும். இதைவிட நான் உங்களுக்கு என்ன சொல்ல வேண்டும்? இனி அவர் உங்கள் பொறுப்பு!'' என்று அவர்கள் எழுதியிருந்தார்கள். இவ்வார்த்தைகள் எங்கள் குடும்ப வரலாற்றில் பொன் எழுத்துகளால் பொறிக்கப்பட

வேண்டியவை என்று மதித்து, அன்று அக்கடிதத்தை மருத்துவரிடம் காட்டிவிட்டு, இன்றும் நானே வைத்திருக்கிறேன்.

## தொழிலாளர்மீது மாசற்ற அன்பு

தந்தை சா. கணேசன் அவர்கள் எங்கள்மீது மட்டுமல்ல, மற்றத் தொழிலாளிகளின்மீதும் உண்மையான அன்புடையவர்கள். எடுத்துக் காட்டாக, அவர்கள் குணத்தை அறிந்தும், சொல்லுக்கு ஏற்றவாறும் நடந்துகொண்டு அவர்கள் இடும் தச்சு வேலைகளைப் பல ஆண்டு களாகச் செய்து வந்த ஒரு தச்சு வேலைக்காரர் திரு. கணபதி ஆச்சாரி என்பவர். இவர் காரைக்குடியைச் சேர்ந்தவர். அவர்மீது தந்தை சா. கணேசன் அவர்கள் வைத்திருந்த அன்பு மிகமிகப் பெரியது. அத் தொழிலாளி இறந்துவிட்டதும், அவரைப்பற்றித் தந்தை சா. கணேசன் அவர்களின் அன்புப்பேரன் கம்பனிடம் விசாரித்தேன். அதற்குக் கம்பன் வியப்புடனும் பரபரப்புடனும் சொல்லிய செய்தி என் நெஞ்சை உலுக்கிவிட்டது. கம்பன் சொன்னான், 'அண்ணே, கணபதி ஆசாரி செத்துப்போனார். ஐயா ரொம்ப ரொம்பக் கவலைப்பட்டார்கள். இதிலே ஓர் அதிசயத்தைக் கண்டேன். எங்கள் வீட்டில் எத்தனையோ துக்க நிகழ்ச்சிகள் நடந்திருக்கின்றன. ஐயா எதற்கும் கலங்கியதே இல்லை. ஆனால், கணபதி ஆசாரி இறந்ததைக் கேட்டு ஐயா கண்ணீர் விட்டார்கள். இது மாதிரி நேரு இறந்த பொழுதுதான் கண்ணீர் சிந்தியதை நான் ஐயாவிடம் பார்த்தேன். எனக்கெல்லாம் ரொம்ப ஆச்சரியமாக இருந்தது.'' இந்தக் கணபதி ஆசாரி வித்வான் இல்லை. பெரிய கலைஞருமில்லை. ஆனால், கைத்திறன் படைத்த ஒரு தச்சுத் தொழிலாளி. இத்தகையோர்மீதும் அவர்கள் அன்பு கொண்டிருந்தார்கள் என்றால், அவர்கள் தொழிலாளர்பால் கொண்டிருந்த பாச உணர்வு எவ்வளவு உண்மையும் தூய்மையும் ஆகும்.

தந்தை சா. கணேசன் அவர்கள் கலை உள்ளம், கலை நூலறிவு, கலைத்துறைச் செயல்முறை அறிவு, கற்பனைத்திறம், படைக்கும் ஆற்றல், ஆராய்ச்சித்திறன், பரம்பரை நிர்வாகத்திறன், நீண்ட அநுபவம், கலைஞர்கள்மீது மாசற்ற அன்பு, அவர்கள் வாழவும் வளரவும் வேண்டுமென்ற உண்மைப் பேரார்வம் ஆகிய எல்லாம் சேர்ந்த ஒரு திருவடிவமாகவே அவர்கள் எனக்குக் காட்சியளிக்கிறார்கள்.

அவர்களைத் தமிழகத்தின் 'தனிப்பெரும் ஸ்தபதி' என்று அழைத்துப் பேரின்பம் அடைகிறேன்.

எல்லோர்க்கும் தந்தை ஒருவரே. ஆனால், எனக்கு மட்டும் இருவர். ஒருவர், என்னைப் பெற்று உணவூட்டி வளர்த்தார். மற்றவர், என்னை ஏற்று உணர்வூட்டி வளர்த்தார். முன்னையவர் என்னைக் கலைத்துறையில் நட்டு வைத்தார்; விட்டுவிட்டார். பின்னையவர் அரண் அமைத்து உரமிட்டார், அணைத்துக்கொண்டார். முன்னையவருக்கு நான் பிள்ளை. பின்னையவருக்கு நான் மகன். நான் எவ்வளவு புண்ணியம் செய்திருக்க வேண்டும்?

**''கலை வாழ, கலைஞர்கள் வாழ-அவர்கள் புகழ வாழ வேண்டும்! என் வழிபடு தெய்வத்திடம் இஃதே என் பிரார்த்தனை.**



# நெஞ்சம் சுமக்கும் நினைவுகள்

- ராஜேஸ்வரி நடராஜன்

*கம்பன் வாழ்க!*
*கம்பன் புகழ் வாழ்க!*
*கன்னித் தமிழ் வாழ்க!*

என்று கம்பீரமான ஒரு குரல் ஓங்கி ஒலிக்க, அதனைத் தொடர்ந்து, அரங்கத்தில் கூடியுள்ள கம்பன் அடியார்களின் ஒருமித்த குரல் இன்னும் கூடுதலாக ஓங்கி ஒலிக்க, கம்பன் திருநாள் விழா களை கட்டி விடும். அந்தக் கம்பீரமான குரலுக் குரியவர்தான், கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன் அவர்கள். உள்ளூர் அன்பர்கள், உறவினருக் கெல்லாம் அவர் சாவன்னா கானா. கம்பன் அடியார்க்கெல்லாம் அவர் சா. கணேசன்தான். கம்பன் விழாவை முதல் முதலில் 1934ஆம் ஆண்டு, கொண்டாடிய சிறப்பு, திருநெல்வேலிக்கே உரியது. ஆனால் அதன் பின்னர் ஓரிரு ஆண்டுகள் கழித்துக் காரைக்குடியில் திரு. கணேசன் அவர்களால் உருவாக்கப்பட்ட கம்பன் கழகத்தின் ஆதரவில், கம்பன் திருநாள் கொண்டாடப்பட்டு, இடையறாது நாற்பது ஆண்டுகளுக்குமேல் நடைபெற்றது, கவிச் சக்கரவர்த்தி கம்பன் புகழைத் தமிழ் நாடெங்கும் கொட்டி முழக்கிய பெருமை திரு. கணேசன் அவர்களுக்கே உரியது. அதன் பின்னர் தான் மிகுந்த தன்னடக்கத்துடன், ‘கம்பன் அடிப்பொடி’ என்ற திருநாமத்தைச் சூட்டிக் கொண்டார்.

அவருடைய வார்த்தைகளிலேயே சொல்வதானால்,

*அன்னை ஆய், அத்தன் ஆகி*
*அருளும் ஆசான் ஆகிப்*
*பின்னும் என்னை ஆண்டு கொண்ட*
*பெருந் தெய்வம் தானே ஆகிக்*
*கன்னி எனும் தமிழ்த்தாய் ஈன்ற*
*கவிச்சக்கர வர்த்தி ஆன*
*என்னுடையன் கம்பன் பாதம்*
*என்றும் என் உச்சி மீதே!*

'கம்பன் அடிப்பொடி' என்ற பெயருக்கு விளக்கம் கிடைத்து விட்டதல்லவா? அப்படி ஓர் ஈடுபாடு, காதல், பக்தி, கம்பன் மீது. காரைக் குடியோடு நின்றுவிடாமல், அதனைத் தாய்க்கழகமாகக் கொண்டு, சென்னை, புதுச்சேரி, கோவை, கள்ளிப்பட்டி என்று, இன்று எத்தனையோ பெரிய நகரங்களிலும், சிறிய ஊர்களிலும் ஆண்டு தோறும் கம்பனுக்கு விழா எடுக்கிறார்கள் என்றால், அதற்கு மூலகர்த்தா, கம்பன் அடிப்பொடிதான். இமாலய சாதனை என்றே சொல்லலாம். கம்பனை எரிப்போம், கொளுத்துவோம் என்று முன்னர்த் தீப்பந்தம் ஏந்தியவரும்கூட இன்று மேடையேறிக் கம்பன் புகழ் பாடுகிறார்கள் என்றால் நம்ப முடிகிறதா? எல்லாவற்றுக்கும் கம்பன் அடிப்பொடியின் உழைப்பும், ரசவாதமும்தான் காரணம்.

நாற்பது ஆண்டுகளுக்கு முன்னர்க் கம்பன் அடிப்பொடிக்கு அறுபது ஆண்டுகள் நிறைவு பெற்றன. அதனைப் பெரிய அளவில் மணிவிழாவாகக் கொண்டாட, அவருடைய நண்பர்கள் முனைந்தனர். கட்டுரை கேட்டு, எனக்கும் என் கணவருக்கும் கடிதம் வந்தது. மிகுந்த ஆர்வத்துடன் நானும், ''அடக்கத்துக்கு வயது அறுபது'' என்று ஒரு கட்டுரையை எழுதி, மணிவிழாமலர் வேலையைக் கவனித்துக் கொண்டிருந்த பேராசிரியர் பூ. அமிர்தலிங்கம் அவர்களுக்கு அனுப்பியும்விட்டேன். மறுநாள் திடீரென்று திருத்தணியிலிருந்து எங்களுக்கு ஒரு கடிதம் வந்தது. கம்பன் அடிப்பொடியிடமிருந்துதான். ஆவலாய்ப் பிரித்துப் படித்தால் ஒரே அதிர்ச்சி. காரைக்குடியில் எல்லா ஏற்பாடுகளையும் செய்து கொண்டு உற்றாரும் உறவினரும் காத்திருக்க, எவரிடமும் சொல்லாமல் கொள்ளாமல் ஆள் அம்பேல் ஆகித் திருத்தணி மலைமீது போய்த் தணிகைக் குமரன் திருமுன் அமர்ந்து விட்டதாகக் கடிதம் கூறியது. எனக்கும் என் துணைவருக்கும் 'சப்' என்றாகிவிட்டது. என்ன, இப்படிச் செய்து விட்டார்களே என்று பேசிப்பேசி மாய்ந்து போனோம்.

கடிதம் இப்படித் தொடங்கப்பட்டிருந்தது.

அன்புடையீர், வணக்கம்.

1. **யான்பிறந்த, கீலக, வைகாசி, மகம் இசைநாளில்**
**மான்கரந்த சிவன்மைந்தன், வள்ளிமகிழ் தமிழ்த்தெய்வம்**
**தேன்நிறைந்த மலர் மார்பன் திருமுருகன் அடிபரவ**
**வான்சிறந்த திருத்தணிகை மனமகிழச் சென்றடைந்தேன்**

2. திருத்தணிகை மலைஏறித் திருமுருகன் திருமுற்றத்தில்
அருத்தியுடன் வழிபாட்டை அடிநாயேன் புரிபொழுதில்
கருத்தினிலே உதித்த சிலகவிகளைப் பின்கண்டபடி
உருத்தெரிய எழுதி, அவண்ஓதி மனநிறைவு கொண்டேன்

என்று முதல் இரண்டு பாடல்களை எழுதி, அடுத்து அன்னை நாச்சம்மைக்கும், தந்தை சாமிநாதனுக்கும் உரியமுறையில் வணக்கம் செலுத்தியிருந்தார் தொடர்ந்து, தமிழ் வளர்த்த கவிஞர் பெரு மக்களுக்கும், தமிழ் தழைக்க உழைத்த தமிழ்ச் சான்றோர்களுக்கும் வாழ்த்தும் வணக்கமும், பல பாடல்கள் மூலம் தெரிவித்திருந்தார் அத்தனையும் கன்னல் சுவை ததும்ப.

வாழி தமிழ்ச் செய்ய மொழி, வாழி தமிழ் நல்கலைகள்
வாழி தமிழ் வேதம் அருள் வள்ளுவனார் - வாழிஅரோ
இன்பம் பெருக இருசெவியும் தேன் பாய்ச்சும்
கம்பன் ஆம் எங்கள் கவி!

என்று முத்தாய்ப்பு வைத்துக் கையெழுத்தும் இட்டிருந்தார்.

அதே கம்பன் அடிப்பொடிக்கு இன்று நூற்றாண்டுவிழாக் கொண்டாட முன் வந்திருக்கிறது கம்பன் திருக்கூட்டம். அன்றுபோல் இன்றும் நம்மிடையே இருந்திருந்தால்...? கேள்விக்குறிதான்! முன்பு சொன்னதுபோலவே, ஆங்கிலத்தில் ''நான்சென்ஸ், யார் வேலை இது? நத்திங் டூயிங்!'' என்று கண்ணில் கனல் பறக்க நம்மைக் கடிந்திருப்பார். நல்லகாலம் தப்பித்தோம்! இந்த நூற்றாண்டு விழாவைக் கொண்டாடத் தமிழ்கூறும் நல்லுலகம் கடமைப்பட்டிருக்கிறது. முன்பு ஏற்பட்ட ஏமாற்றம் தீரச் சிறப்பாகவே கொண்டாடுவோம்.

கம்பன் அடிப்பொடியை நினைத்தவுடன், சட்டையைத் துறந்த அவருடைய கரிய திருமேனி கண்முன் வந்து நிற்கிறது. அந்தக் கரிய திருமேனிக்குள்ளே ஒளிந்திருக்கும் வெள்ளை உள்ளம். இடுப்பிலும், தோளிலும் தூய கதர் ஆடை. அது காந்தியத்தில் அவருக்குள்ள பற்றையும் ஈடுபாட்டையும் உணர்த்தி நிற்கும். பரந்த நெற்றியிலே சின்னஞ்சிறு சந்தனப்பொட்டு. விசாலமான நெற்றியும் முன்தலை வழுக்கையும், அவரது அறிவின் ஆற்றலைப் புலப்படுத்தும். தீர்க்கமான, ஆழ்ந்த பார்வையும், அடக்கமே உருவான தோற்றமும், அவரது மன உறுதியையும், தன்னடக்கத்தையும், தமிழர் பண்பையும் பறைசாற்றும். எப்படி இந்தத் தோற்றத்தை ஒருமுறை பார்த்தால், பின்னர் மறக்க

முடியாதோ, அப்படித்தான் அவரது கம்பீரமான குரலையும் ஒருமுறை கேட்டால், வாழ்நாள் முழுவதும் அதன் ரீங்காரம் காதில் ஒலித்துக் கொண்டே இருக்கும்.

'கம்பன் அடிப்பொடி' என்று வெகு பவ்யமாகப் பெயர்சூட்டிக் கொண்டாலும், தமிழ்நாட்டைப் பொறுத்தவரை, கம்பனுடைய தானைத் தளபதி அவர்கள்தாம். கம்பனிடம் காதல் கொண்ட அத்தனை தமிழ் அறிஞர்களையும், கட்டி இழுத்து வராத குறையாய், கம்பன் திருநாளின் போது, கூட வைத்துக் கம்பன் புகழ் பாட வைத்துக் கேட்டோரைக்கிறங்க வைத்து, அற்புதமான சாகசங்களைப் புரிந்தவர் அவர். ரசிகமணி டிகேசி என்ன, சிலம்புச் செல்வர் ம.பொ.சி. என்ன, தெ.பொ.மீ., A.C., பால்நாடார், தோழர் ஜீவா, இராமகிருஷ்ணன், பாஸ்கரத் தொண்டை மான், பேராசிரியர் அ.ச.ஞா., ஜஸ்டிஸ் மகராஜன், பேராசிரியர் முத்துசிவம், திருமதி. நீலாவதி ராமசுப்பிரமணியம், தமிழ்க்கடல் ராய.சொ., முருகப்பா தம்பதிகள் என்று பட்டியல் நீண்டு கொண்டே போகும். கவிச்சக்கரவர்த்திக்காக மட்டுமல்ல, கம்பன் அடிப்பொடியின் அன்புக் கட்டளைக்காகவும், கூடுகிற கூட்டம் அது. மூன்று நாட்கள் காரைக்குடியில் நடக்கின்ற கல்யாணக் கோலாகலமும் அதை ஒட்டிய விருந்துபசாரமும், கடைசியில் கம்பன் சமாதி அமைந்துள்ள நாட்டரசன் கோட்டையில் நடக்கின்ற வழிபாடும், எளிதில் மறக்கக் கூடியவையா என்ன! அந்தப் பெரும்பேறு எனக்கும் பதினெட்டு ஆண்டுகள் சித்தித்திருக்கின்றது.

கணேசன் அவர்களுக்கு, நாட்டுப்பற்றும், தமிழ்ப்பற்றும், இரண்டு கண்கள் போன்றவை. அதனால்தான் அவர் ஒத்துழையாமை இயக் கத்தின்போது, மூதறிஞர் இராஜாஜியுடன் சிறைவாசம் மேற்கொள்ள வேண்டியதாயிற்று. அப்போது இவரை மற்றொரு நண்பருக்கு அறிமுகம் செய்தபோது, மூதறிஞர் இராஜாஜி, இப்படிச் சொன்னதாகச் சொல்வார்கள்; ''கணேசன் அரசியல்வாதிகளுக்குள்ளே ஒரு நல்ல தமிழறிஞர். அதே சமயம், நல்ல தமிழறிஞர்களுக்குள்ளே சிறந்ததோர் அரசியல்வாதி!'' - என்பதாக. சிறைக் கூடத்தைத் தமிழ்க்கூடமாக மாற்றி, அன்றாடம் அங்குள்ள நண்பர்களுக்குத் தமிழ் இலக்கிய வகுப்புகளும் நடத்தியிருக்கிறார் - அரசியல் காரணமாக, வழி வழியாகத் தம் தந்தை கடல் கடந்த நாட்டில் நடத்தி வந்த வணிகத்தையும் சரிவரக் கவனிக்காமல் விட்டுவிட நேர்ந்ததாகவும் சொல்வார்கள் - அவர்

தந்தை மேற் கொண்டிருந்த வணிகத்தின் பெருமை, காரைக்குடியில் அரண்மனை போல காலம் காலமாக நிற்கும் கற்பக நிலையம் கட்டடத்தைப் பார்த்தாலே தெரியவரும். அரசியலும், தமிழ்ப்பற்றும் கணேசன் அவர்களைத் திசை திருப்பிவிட்டன என்றுதான் சொல்ல வேண்டும்.

கம்பன் கண்ட இராமனைப் போலவே, கணேசன் அவர்களுக்கும், போகும் இடமெல்லாம் சகோதரர்கள்தாம். சைவரா, வைஷ்ணவரா, கிறிஸ்தவரா, முஸ்லீமா, பணம் படைத்தவரா, இல்லாதவரா - என்ற பாகுபாடெல்லாம் பார்க்காமல் தமிழ் அறிஞர்கள், அதுவும் கம்பன் அடியார்களைக் கம்பன் குடைநிழலில் அரவணைத்துக் கொள்வார். கம்பன் அடிப்பொடி பல்கலை வித்தகர். கல்லூரிப் படியேறாமலே சகலமும் கற்றுணர்ந்த மேதை அவர். கலை, இலக்கியம், கல்வெட்டு ஆராய்ச்சி, தொல்பொருள்துறை, கவிபாடும் ஆற்றல் என்று எல்லா வற்றிலும் அவர் பார்வை பதிந்திருந்தது. மேலோட்டமாக நுனிப்புல் மேய்கிற கணக்கில் பேசுவது அவரிடம் கிடையவே கிடையாது.

எந்த விஷயமாக இருந்தாலும், துருவித் துருவி ஆராய்ந்து தாம் தெளிவுபெற்ற பிறகே, அதை மற்றவர்களுக்கு உணர்த்துவார். நேர்மை, நேரந் தவறாமை இரண்டும் அவருக்குப் பக்கபலம். இதில் எல்லாம் கண்டிப்பும் கறாருமாய் இருப்பார். வள்ளல் அழகப்பச் செட்டியாராக இருந்தாலும் சரி, கவியரசு கண்ணதாசனாகவே இருந்தாலும் சரி, உரிய நேரத்தில் கம்பன் விழா மேடைக்கு வரவில்லை என்றால், காத்திருக்க மாட்டார். தாட்சண்யம் காட்டாமல், ''கம்பன் வாழ்க!'' என்று முழங்கி, விழாவை உரிய நேரத்தில் ஆரம்பித்துவிடுவார். இதற்குப் பயந்தே, எல்லோரும் உரிய நேரத்தில் மேடை ஏறிவிடுவார்கள்.

கம்பன் விழா நிகழ்ச்சிகளில் புதுப்புது உத்திகளைக் கையாண்டு, பொலிவு பெறச் செய்வார். கருத்தரங்கம் என்றும், கவியரங்கம் என்றும், பட்டிமண்டபம் என்றும் புதிய நிகழ்ச்சிகளைப் புகுத்தி, விழாவைக் கலகலப்பாக்குவார். என்னையும் என் கணவரையும் பட்டிமண்டப நிகழ்ச்சிகளில், எதிரெதிர் அணிகளில் நிறுத்தி, மோதவிடுவார் பார்வையாளருக்கு அது குதூகலத்தை ஏற்படுத்தும். இந்த நிலை, எல்லா ஊர்களிலும் நடைபெற்ற பட்டிமண்டப நிகழ்ச்சியிலும் பின்னர் வாடிக்கையாகி விட்டது.

பிள்ளையார்பட்டித் தலவரலாறு ஒன்று எழுதி, என் தந்தைக்கும், எனக்கும் தனித்தனியே அனுப்பியிருந்தார். அருமையான நூல் அது. என் தந்தையைப் பிள்ளையார்பட்டிக்கு அழைத்துப் போய்த் தேசிக விநாயகப்பிள்ளையாரிடம் ஆற்றுப்படுத்தி வைத்தவர் அவர்தாம். தந்தையால் பத்து மணித்துளிகள் கூடப் பேசாமல் இருக்க முடியாது. அப்படிப்பட்டவரைப் பிள்ளையார்பட்டியில், ஐந்து நாட்கள் மௌன விரதம் இருக்கச் செய்து சாதனை படைத்தார். பிள்ளையார்பட்டித் தேசிக விநாயகரைப்பற்றி, ஒருபா ஒருபஃது என்ற முறையில் அருமையான பாடல்களை எழுதி வழங்கினார். இதெல்லாம்தான் என் தந்தை பின்னாளில், பிள்ளையார்பட்டிப் பிள்ளையார் என்ற விரிவான நூலை எழுதுவதற்கு உறுதுணையாக அமைந்தது. அதை எழுதும்படி வேண்டிக் கொண்டவர் பழ. கண்ணப்பச் செட்டியார் அவர்கள். இப்படி எல்லா நல்ல காரியங்களுக்கும் தூண்டுகோலாகவும், உற்ற துணையாகவும் இருந்து செயல்படுத்திய பெருமைக்குரியவர்.

வெண்பாவுக்குப் புகழேந்தி என்பார்கள். என் சிற்றறிவுக்கு எட்டிய வரையில், கவிமணிக்கும் 'வெண்பா'. என்றால், சர்க்கரைப் பொங்கல் தான். அதுபோன்றே, கம்பன் அடிப்பொடிக்கும் வெண்பா சரளமாக வரும். ஆரவாரம் எதுவும் இல்லாமல், எளிய சொற்களில், செம்பாக மாகப் பாடல்களைப் பாடி அசத்தி விடுவார். கணேசனுக்குக் கவி பாடுவது எவ்வளவு எளிதான காரியமாக இருக்கிறது என்று நண்பர்கள் மூக்கில் விரலை வைத்து வியந்து நிற்பார்கள். தொட்டதைத் துலங்க வைக்கும் வித்தை தெரிந்த வித்தகர் அவர்.

என் தந்தைக்கும், கணேசன் அவர்களுக்கும் இடையே இருந்த அந்நியோன்னியம், பாசப்பிணைப்பு தனித்தன்மை வாய்ந்தது. பாஸ்கரன் வீட்டில் திருமணமா, மணிவிழாவா, எல்லா நிகழ்ச்சிகளிலும் முதல் ஆளாகத் தம்பதி சமேதராக வந்து கலந்து கொள்வார். திருமணம் என்றால் பத்துப் பதினைந்து நாட்கள் கூடவே இருந்து எல்லா வேலைகளையும், குறைவில்லாமல் பார்த்துக் கொள்வார். ஆச்சியும் தம் பங்குக்குச் செட்டிநாட்டுப் பக்குவங்களையும் செய்து எல்லோரையும் மகிழ்விப்பார்கள். ஆனால், கணேசன் அவர்களுக்கும், பாஸ்கரன் அவர்களுக்கும் கலை சம்பந்தமாகவோ, இலக்கியம் சம்பந்தமாகவோ ஏதாவது சர்ச்சை என்று வந்துவிட்டால், இருவரும் முட்டிக் கொள்வார்கள், மோதிக் கொள்வார்கள். எட்டி நின்று வேடிக்கை

பார்க்கும் கள்ளிப்பட்டிக் கோதண்டராமர் போன்ற நண்பர்கள், இரண்டு கற்கண்டுப் பர்வதங்கள் மோதுகின்றன. உதிர்வது கற்கண்டுப் பொடிகள் தானே என்று அதை வரவேற்பார்கள்.

கம்பனுடைய கால ஆராய்ச்சியைப் பொறுத்தமட்டில், சின்னப் பட்டம், பால்நாடார் ஐயா அறுதியிட்டுச் சொல்லும், 9-ஆம் நூற்றாண்டு என்பதில் இருவரும் எந்தவிதத் தயக்கமும் இல்லாமல், கைகோத்துக் கொள்வார்கள். சிலை என்றால் ஆகம விதிப்படி அமைந்திருக்கிறதா என்று பார்ப்பார் கணேசன். தொண்டைமானோ அதில் கலைநயம் இருக்கிறதா, ஆங்கிலத்தில் சொல்கிறோமே Form என்று, அந்த உருவ அமைப்பு சரியாக இருக்கிறதா என்றே முதலில் பார்ப்பார்கள். பிரச்னையே அப்போதுதான் ஆரம்பமாகும். ஊடல் எல்லாம் கொஞ்ச நேரம்தான். பின்னர் ஒரே குலாவல்தான். இதெல்லாம் ஒரு நாடகம் என்று நாங்களும் சிரித்து மகிழ்வோம்.

எங்கள் குடும்பமும், கம்பன் அடிப்பொடியின் குடும்பமும் அப்படிப் பிணைக்கப்பட்டிருந்தது. என் கணவருக்கு அழகப்பா கல்லூரியில் வேலை வாங்கிக் கொடுத்து, எங்கள் திருமணத்தையும் நல்லபடியாக நடத்தி வைத்து, அந்த ஆண்டே, என்னையும் என் கணவரையும் முதன் முதலாகக் கம்பன் விழா மேடை ஏற வைத்து, காரைக்குடியில் வீடு பார்த்துக் கொடுத்துக் குடியமர்த்தி, அவ்வப்போது வந்து எங்களைப் பார்ப்பதுடன், கற்பக நிலையத்துக்கு நேரம் கிடைக்கும்போதெல்லாம் வரவழைத்து, ஒரு தந்தையின் ஸ்தானத்தில் இருந்து அன்பு காட்டியவர் அவர்கள்.

அந்த நன்றிக் கடனுக்காக என் கணவர், எங்கள் இரண்டாவது பையனுக்குக் கணேசன் என்றே பெயர் சூட்டி மகிழ்ந்தார். ''அப்படியா சங்கதி! என் பெயரைக் கெடுத்து விடாமல் பார்த்துக்கொள்ளுங்கள்!'' என்று சிரித்துக் கொண்டே அங்கீகரித்தார்கள் - திருக்குற்றாலத்தில் தொண்டைமான் மடம் ஒன்று இருக்கிறது. எங்கள் அப்பா அதை ஒட்டினாற்போல் ஒரு சிறு விடுதி போன்ற வீட்டைக் கட்டி, அதற்குக் ''கூத்தர் குடில்'' என்று பெயரும் சூட்டிப் பால்காய்ச்சியிருக்கிறார்கள். எங்களுக்கெல்லாம் அழைப்பே இல்லை. குற்றாலத்து நண்பர்களைக் கொண்டே பால் காய்ச்சும் வைபவம் நடந்திருக்கிறது. கம்பன் அடிப்

பொடிக்கு வாழ்த்துப் பாடல் கேட்டுக் கடிதம் போயிருக்கிறது. பாடல்கள் ஐந்தை அனுப்பிவிட்டு, எனக்குக் கடிதம் எழுதியிருந்தார்கள்.

**சா. கணேசன்** 22.8.62

கற்பக நிலையம், காரைக்குடி-1

*அன்புள்ள மகளுக்கு,*

யாவரும் நலம்தானே? குற்றாலத்துக்குப் போனீர்களா? பால் காய்ச்சிய அப்பா பருகப் பால் தந்தாரா? பாட்டுக்காக அழைப்பு வந்தது. பாடல் ஐந்து பறந்து சென்றன. ஆனால், பதில் மட்டும் வந்தபாடில்லை. நீயும் மாப்பிள்ளையும் பார்க்கட்டுமே என்று அதை அடியிற் காண்க என்று கூறி அமைகிறேன். எல்லார்க்கும் என் அன்பு.

என்றுமுங்கள்
**சா. கணேசன்**

பாடல்களில் இரண்டை மட்டும் கீழே தந்திருக்கிறேன்.

1. **தொண்டைமான் நற்குடியில் தோன்றினார் குற்றாலத்தே**
**கண்ட மடத்தருகே கட்டினான் - தொண்டைமான்**
**முத்தைய பாஸ்கரனாம் மூதறிஞன் பைந்தமிழ்ப் பூங்**
**கொத்தலரும் கூத்தர் குடில்.**

2. **குற்றாலநாதன் குழல்வாய் மொழியருளால்**
**வற்றாத செந் தமிழ்க்கும் மாண்கலைக்கும் பற்றாகும்**
**கொங்கலரும் கூத்தர்குடில் அதனில் பாஸ்கரன்தான்**
**தங்கி நிதம் வாழ்க தழைத்து!**

இடப்பற்றாக்குறை கருதி இரண்டு பாடல்களோடு நிறுத்திக் கொள்கிறேன். இப்படி என்னுடைய அனுபவங்களைச் சொல்லிக் கொண்டே போகலாம். பிறகு அதுவே சொந்த இராமாயணமாகிவிடும். அதனால் மேலும் இரண்டொன்றை மட்டும் சொல்லிக் கட்டுரையை நிறைவு செய்ய விரும்புகிறேன்.

முதல் உலகத் தமிழ்நாடு சென்னையில் நடந்த சமயம், தொல் பொருள்துறை சார்பிலும், ஒரு கண்காட்சிக்கு ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. தொல்பொருள்துறை என்ற துறை உருவாவதற்குக் காரண

கர்த்தாவாக இருந்தவரே கம்பன் அடிப்பொடிதான். அந்தத் துறையின் இயக்குநராக இருந்த டாக்டர் இரா. நாகசாமி அவர்களும், கம்பன் அடிப்பொடியும் பொறுப்பேற்று நடத்திய கண்காட்சி அது. கண்காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. தினசரி, என் கணவர் அலுவலகத்திலிருந்து திரும்பியதும், என்னையும் உடன் அழைத்துக் கொண்டு அங்கே வர வேண்டுமென்று எழுதப்படாத கட்டளை. அன்றாடம் நானும் ஏதாவது பலகாரம், காப்பி அல்லது பால் என்று தயார் செய்து எடுத்துக்கொண்டு போவேன். பகல் 12 மணிவாக்கில் என்னைத் தொலைபேசியில் கூப்பிடுவார்கள். அன்று செய்து கொண்டு வரவேண்டிய பலகாரம் பற்றி உரிமையோடு அறிவிப்பார்கள். இட்லி, தோசை, வடை, அப்பம், வெள்ளைப் பணியாரம், சுண்டல் போன்றவை தாம். வெள்ளை அப்பம் செட்டிநாட்டுப் பலகாரம். அதைச் செய்ய வேண்டிய பக்குவத்தையும் சொல்லிவிடுவார்கள்.

கண்காட்சி இரவு 8 மணி அளவில் முடிந்துவிடும். எஞ்சியிருக்கிற நாலைந்து நண்பர் களோடு அமர்ந்து உண்டு மகிழ்வார்கள் அதன் பின்னர் அரைமணி நேரம் கண்காட்சி பற்றிய பேச்சு. அப்படி இப்படி என்று நாங்கள் வீடுதிரும்ப இரவு 10 மணிக்கு மேல் ஆகிவிடும். உலகத் தமிழ் மாநாடு நிறைவு பெற்றுக் கண்காட்சியும் நிறைவு பெற்ற கடைசி நாளன்றும் போயிருந்தோம் 'அன்னபூரணி சிலை' ஒன்றை எனக்குப் பரிசாகக் கொடுத்து, ''இத்தனை நாளும் எங்களுக்கு அன்னம் படைத்தவள் நீதானே! அதற்குத்தான் இந்தச் சிலை'' என்றார்கள்.

பூம்புகார்க் கலைக்கூடத்தில் கிடைக்கக் கூடியதுதான் என்றாலும், அவர்கள் கையால் பெற்றது, என் கண்ணீல் நீரை வரவழைத்துவிட்டது. ''என்ன இது!'' என்று கடிந்து கொண்டார்கள். இப்போதும் அந்தச் சிலை சற்றே சிதிலமடைந்தாலும் என் நூலகத்தை அலங்கரித்துக் கொண்டுதான் இருக்கிறது. எங்கள் வீட்டு வரவேற்பறையில், தந்தையார், ஐயா ரசிகமணி, என் கணவர் படங்கள் அணி செய்கின்றன. அத்துடன், கம்பன் அடிப்பொடி, ஜஸ்டிஸ் மகராஜன் படங்களும் இடம்பெற்றுப் பொலிவூட்டுகின்றன. கம்பன் அடிப்பொடியின் படத்தைப் பார்ப்பவர்களுக்குச் சட்டென்று அடையாளம் தெரியாது. அவர்கள் சிறையிலிருந்து வெளிவந்தபோது எடுத்த படமாதலால், தாடி மீசையுடன் தமிழறிஞர் வ.வே.சு. அய்யரைப் போன்ற தோற்றமிருக்கும்.

கம்பன் அடிப்பொடி முதலில் இந்த வீட்டுக்கு வந்தபோது, 'அட! இந்தப்படம் என்னிடம் கூட இல்லையே, உனக்கு எங்கே கிடைத்தது?'' என்று கேட்டார்கள். அப்பாவிடமிருந்து திருடிக்கொண்டு வந்தேன் என்றேன். ''எங்கள் பழக்கம் உன்னையும் தொற்றிக் கொண்டு விட்டதா!'' என்று பெரிதாகச் சிரித்தார்கள்.

கம்பனுக்கு மணி மண்டபம் கட்டியவர், தமிழ்த் தாய்க்கென்று அழகிய கோயிலை எடுத்த பெருமைக்குரியவர் கம்பன் அடிப்பொடி. தம்முடைய ஈடுபாட்டையும் பக்தியையும் உருவாக்கிக் காட்டிய பெரிய மனசு அவருடையது. அவருடைய ஆற்றலுக்கும் ஏற்றது அது. என்னைப் போன்றவர்கள், வீட்டில் படத்தை வைத்தும், பூசலார் நாயனாரைப் போன்று, நெஞ்சில் நினைவுகளைச் சுமந்தும்தானே ஆராதிக்க முடியும்! இந்த வயதிலும், அதைத்தான் செய்து கொண்டிருக்கிறேன்.

கம்பன் அடிப்பொடியின் திருவடிகளுக்கு, மீண்டும் மீண்டும் வணக்கம் செலுத்தி, இந்தக் கட்டுரையை நிறைவு செய்கிறேன்.

***நன்றி! வணக்கம்!***



# எங்கள் ஐயா

**- வாசுகி அண்ணாமலை**

உலகம் போற்றும் உத்தமர் ஐயா சா. கணேசன் கம்பன் அடிப்பொடி அவர்கள் முதலில் விடுதலை போராட்டத்தில் சேர்ந்து இந்திய நாட்டு விடுதலைக்காக போராடி அதற்காக வீடு, சொத்து, சுகம், குடும்பம் எல்லாவற்றையும் மறந்து பல தியாகங்களை செய்து நாடு விடுதலை அடையும் வரை தளராத மனத்துடன் செயல்பட்டவர்கள்.

நாட்டு விடுதலைக்காக போராடிய போது ஆங்கிலேய காவலர்களால் அடிபட்டு அலிபுரம் சிறையில் இருந்தார்கள். அலிபுரம் சிறையிலிருந்து விடுதலை ஆகி வீட்டுக்கு வந்தவுடன் மக்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்தார்கள். அதனால் மக்களிடம் நல்ல மதிப்பு, மரியாதை, புகழ், நல்ல பெயர் எல்லாம் ஐயாவுக்கு கிடைத்தது. பின்னர் இந்தியா விடுதலை அடைந்தவுடன் அரசியலில் ஈடுபட்டார்கள்.

ராஜாஜியின் சுதந்திரா கட்சியில் சேர்ந்து நாட்டு நலனுக்காக பாடுபட்டார்கள். ராஜாஜியுடன் நெருங்கிய நண்பர் ஆனார்கள். பின்னர் பல அரசு சார்ந்த பொறுப்பான பதவிகளில் அங்கம் வகித்து ஒரு சிறந்த அரசியல்வாதியாகவும், பொது சேவை செய்பவர்களாகவும் திகழ்ந்தார்கள்.

அவர்கள் கருப்பாக இருந்தாலும் நல்ல திருத்தம். சிரித்த முகம், நெற்றியில் சந்தனப் பொட்டு, கண்களுக்கு கண்ணாடி, உடுத்திக் கொள்ள 4 முழு கதர் வேஷ்டி, இடது தோளில் மடிப்பு கலையாத துண்டு, கையிலே சில்வர் வெற்றிலைப் பெட்டி, கால்களில் தோல் மிதியடி, நிமிர்ந்த நடை, நேர்மையான நேர்டி பேச்சு, நல்ல எண்ணம் இவையெல்லாம் தான் ஐயாவை எடுத்துக் காட்டும்.

தமிழ் வார்த்தை நன்றாக இருக்கும். திக்கி திணற மாட்டார்கள். குரல் கணீர், கணீர் என்று மணி ஓசை மாதிரி இருக்கும்.

கம்பன் வாழ்க! கம்பன் புகழ் வாழ்க! கன்னித் தமிழ் வாழ்க! இதை ஐயா சொல்லும் போது எல்லோர் உள்ளத்தையும் தொடுவது போல் இருக்கும்.

''எல்லோரிடத்திலும் நன்றாக பழக வேண்டும். நன்றாக பேச வேண்டும். நம்மால் முடிந்தளவு எல்லோருக்கும் உதவிகளை செய்ய வேண்டும். ஒருவர் நமக்கு கெடுதல் செய்திருந்தாலும் அவர்களுக்கு நாம் நன்மை செய்ய வேண்டும். சண்டைக்காரராக இருந்தாலும் அவர்கள் நம்ம வீட்டிற்கு வந்தால் அவர்களை வாங்க என்று கேட்க வேண்டும்'' என்பார்கள்.

எக்காரணத்தைக் கொண்டும் ஐயாவுக்கு யாரும் பொய் சொல்லக்கூடாது. பொய் சொன்னால் அவர்களுக்கு பிடிக்காது. எப்போதும் உண்மைதான் பேச வேண்டும்.

ஐயா பேச்சுக்கும், சொல்லுக்கும் தனி மதிப்பு உண்டு. கோபம் வரும், ஆனால் இரக்க குணம் உண்டு. அவர்கள் எந்த பிரதி உபகாரமும், கைமாறும் எதிர்பார்க்காமல் பல பேருக்கு பலவிதமான பெரு உதவிகளை காலதாமதமாக்காமல் செய்யும் உயர்ந்த உள்ளம் உடையவர்கள்.

**எங்கள் ஐயா**
**உண்மையின் வடிவம்;**
**சுறு சுறுப்பின் உருவம்;**
**பேச்சாற்றல் மிக்கவர்;**
**கலையார்வம் கொண்டவர்;**
**வாழ்வில் சிறந்தவர்;**
**சிந்தனைகளை செயலாக்குவதில் சிற்பி;**

ஆடம்பரத்தை ஒதுக்கி சிக்கனத்தை கடைப்பிடித்தவர் எங்கள் ஐயா!

ஐயாவின் சிரிப்பு எங்கே? உதவும் கை எங்கே? தமிழ் பேச்சு எங்கே? எந்த நாள் காண்போம் இனி?

***(இக்கட்டுரையை எழுதியவர் கம்பன் அடிப்பொடியின் மகள் மங்கை யர்க்கரசியின் மகள் வாசுகி அண்ணாமலை. தம் பெயர்த்திக்கு எழுதிய சிந்தனைக் கருவூலங்களை - ஆனால் அதே சமயம் ரத்னச் சுருக்கமான மூன்று கடிதங்களை இங்கே பிரசுரிப்பதில் மகிழ்வடைகிறோம்.)***

## கடிதம் - 1

கம்பன் அடிப்பொடி
KAMBAN ADIPPODI

Phones: 600 & 296
KAMBAN MANIMANDAPAM
KARAIKUDI - 623 002

ஓம்.
௨௬. 4. 76.

அன்புள்ள அண்ணாமலை, வாசுகி
இருவருக்கும் இறைவன் எல்லா நலன்களையும்
அருளப் பிரார்த்தித்து எழுதியது.

நீங்கள் நலமே சென்றடைந்த செய்திக்
கடிதம் கண்டேன். வாழ்க!

நீங்கள் இனியவர்கள். இறைவன் உங்
கட்கு எல்லா நலன்களுடன் நல்ல குழந்
தைகள் அருள்வான். கவலற்க!

உங்கள் வாழ்வு வளமுடன் சிறந்து விளங்
கும்; கடவுளை நம்பு. என்றும் நல்லதே
எண்ணுக, நல்லதே பேசுக, நல்லதே செய்து,
பெரியவர்கள், பாராட்ட, வாழ்த்த அறவழியில்
வாழுங்கள். ஒரு குறைவு மின்றி சிறந்த
வாழ்வு வாழ்வீர்கள்.

நீங்கள் இருவரும் இருவர் பலர் ஒருவர்
உள்ளம் ஒன்றி, உணர்வும் ஒன்றிட
இருவரும் ஒரு பொருளையே காண்பது
போல, ஒரு நெஞ்சம், ஒரு வழியும்
உடையவர்களாக நல்வாழ்வு வாழ இறை
வன் திருவருள் புரிய வேண்டும். இதுதான்
என் பிரார்த்தனை.

என்றும் உங்கள்,
கம்பன் அடிப்பொடி

## கடிதம் – 2

வாசுகியின் தம்பி திருவாசகன் என்ற அற்புத அறிவு படைத்த சிறுவன் இறைமை எய்திய போது எழுதியது.

கம்பன் அடிப்பொடி
KAMBAN ADIPPODI

ஓம்,
6. 2. 80

Telephone: 600
KAMBAN MANIMANDAPAM
KARAIKUDI - 623 002

அன்புள்ள வாசுகிக்கு, இறைவன் சோதனை
என்ற நிலைக்கும் உண்டாக்குகிறான்!
திருவாசகன் இறைமை எய்தி விட்டான்.
என் செய்வோம்? ஒரு வழியாய் நினைத்தே!
ஆம்; அவன் இனியும் துயரப்படமாட்டான்.
அந்த வகையால் ஆண்டவன் அவனுக்கு
நிலைத்தான் புரிந்திருக்கிறான். இனி அவன்
அருமையை எண்ணி மகிழ்வோம்! வேறு
என்ன எழுதுவேன்? சிவகாமிக்கு
என் அன்பு.

அன்புள்ள,
கம்பன் அடிப்பொடி.

## கடிதம் – 3

(கம்பன் அடிப்பொடி தம் நெருங்கிய நண்பர்கட்கும் அன்பர்களுக்கும், உறவினர்க்கும் அஞ்சலக மஞ்சள் நிற அட்டையில் எழுதி வாழ்த்தும் பொங்கல் வாழ்த்து இவ்வளவே! "பால் பொங்கிற்றா? வாழ்க!' பெயர்த்திக்கு மட்டும் கொள்ளுப் பேரனுக்கு ஒரு முத்தத்துடன் வாழ்த்துகிறார்!)

கம்பன் அடிப்பொடி
KAMBAN ADIPPODI

ஓம்.
12. 1. 77

KAMBAN MANIMANDAPAM
KARAIKUDI - 623 002

அன்புடையீர்,

ஆகா; கொள்ளுப்பையனுக்கு ஒரு முத்தம்!

பால் பொங்கிற்றா?

வாழ்க!

அன்புடன்
கம்பன் அடிப்பொடி.

# நடமாடும் கலைக் களஞ்சியம்

**– ஜி.கே. சுந்தரம்**

திரு. சா. கணேசனை நான் முதன் முதல் எப்போது, எங்கே சந்தித்தேன் என்பது நினைவில்லை. ஆனால், அவர் அழுத்தமான ஒரு காங்கிரஸ் பக்தர் என்பதையும், மிகத் தீவிரமான காந்தியவாதி என்பதையும் அறிவேன். அவர் காரைக்குடித் தொகுதிச் சட்டமன்ற உறுப்பினராக இருக்கும் போது, மிக நீண்ட நாட்களாகவே, அவர் சட்டை அணிவதில்லை என்பதையும் கேள்விப்பட்டேன். 1957இல் காங்கிரஸ் கட்சியில் பிளவு ஏற்பட்டுக் காங்கிரஸ் சீர்திருத்தக்கட்சி, பொதுத் தேர்தலில் நின்றபோது, காமராஜ் தலைமையில் இயங்கிய காங்கிரஸ் வேட்பாளர்களைத் தேர்தலில் நிறுத்தி, ஆச்சரியப்படத்தக்க நிலையில் வெற்றி கண்டார். அப்போது அவரைப் பற்றி அதிகம் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது. அவர் நல்ல தமிழறிஞர் என்பதையும், நாகரிகமும் தெளிவான பண்பட்ட மொழியறிவும் உடையவர் என்பதையும் உணர்ந்தேன்.

ராஜாஜி அவர்கள், சுதந்திரா கட்சியை ஏற்படுத்தியபோது, திரு. கணேசன் பெயர் அடிக்கடி கூட்டங்களில் குறிப்பிடப்பட்டது. ராஜாஜி அவர்கள் கணேசன் மீது பெருமதிப்புக் கொண்டிருந்தார். சுதந்திராகட்சி ஏற்பட்டபோது, தென்மாவட்டங்களில் கட்சி அமைப்பதில், இவர் முக்கியப் பங்கை மேற்கொண்டிருந்தார். அரசியல் கட்சி அமைப்பதிலும், செயலாற்றுவதிலும், மிகுந்த அறிவும் அனுபவமும் அவருக்கு இருந்தது. ஒவ்வோரிடத்திலுமுள்ள தொண்டர்கள் பற்றியும், அவர்களுடைய திறமைகளைப் பற்றியும் பரந்த முறையில் அறிந்து வைத்திருந்தார். பொதுக் கூட்டங்களில், ஆளுங்கட்சியை ஆணித்தரமாக அவர் தாக்கிப் பேசுவதையும், அதே சமயத்தில் மிகவும் திறமையாக இலக்கியங்

களிலிருந்து மேற்கோள்கள் காட்டுவதையும் பன்முறை கேட்டிருக் கின்றேன். அவரது பேச்சென்றால் எப்போதும் நல்ல கூட்டம் இருக்கும். தேர்தல் கூட்டங்களிலும், பிரயாணங்களிலும் நாங்கள் பலமுறை சந்தித்துப் பழகியுள்ளோம். அதனால், நான் அவருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புகள் பல பெற்றேன். அவரது எளிமையையும், கொள்கையில் லட்சியமாக இருப்பதையும், எந்த வகையிலும் தம்மை உணர்ச்சிக்கு ஆளாக்கிக் கொள்ளாத தன்மையையும் கண்டு, அவரைப் போற்றினேன்.

சமய உணர்விலும், இலக்கியத்திலும், புராதனக் கல்வெட்டா ராய்ச்சியிலும் - சிறப்பாகக் கம்பராமாயணத்திலும் அவர் கொண்டுள்ள ஆர்வம் மிகவும் ஆழமானது.

அவர் சுதந்திரா கட்சி மாநிலத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பணியாற்றியபோது, பெரும்பாலும் சென்னை அலுவலகத்திலேயே தங்கியிருந்தார். நான் ராஜ்யசபா உறுப்பினனாகத் தேர்ந்தெடுக்கப் பட்டேன். நான் சென்னை சென்ற போதெல்லாம், அவரது அலுவல கத்திற்குச் சென்று அவரிடம் பேசி மகிழ்வேன். அரசியல் பற்றிக் குறிப்பாகக் கதர் நூற்றல், சிறை வாழ்க்கை, அப்போதைய அரசியல் நிலைகளைப் பற்றிப் பேசுவோம். பிற மாநிலங்களில் சுதந்திரா கட்சியின் அன்றாட நடவடிக்கைகள் எனக்குத் தெரியாமல் இருந்தன. பிற மாநில நடவடிக்கைகள், அவை பற்றிய அவர் தம் கருத்து, அங்குள்ள தனி நபர் பற்றிய விளக்கங்களையெல்லாம் விளக்குவார் அவர், தமது பொருளாதாரக் கருத்தில் ஆழமாக மூழ்க மாட்டார்; மாநிலப் பொருளாதாரச் சுமையைப் பற்றி எப்போதும் ஆராய்ந்து கொண்டே இருப்பார்.

ராஜாஜிக்குப் பிறகு சுதந்திரா கட்சி ஒற்றுமையின்றிக் கலைந்தது. திரு. கணேசனுக்கு அரசியலில் ஆர்வம் இல்லை. தம் முழு நேரத்தையும் கம்பனுக்காகவே தியாகம் செய்தார். நானும் அரசியலில் கொண்ட ஆர்வத்தை விட்டு விட்டேன். காரைக்குடிக் கம்பன் விழாவைப் பற்றிச் சிறப்பாகக் கேள்விப்பட்டேன். அவரும் என்னைப் பலமுறை அழைத்தார். நானும் சென்று காண முடிவு செய்தேன். என் முதல் எண்ணம் இலக்கிய ரசனையே ஆகும். அந்த இதிகாசத்திலிருந்து எவ்வளவு தெரிந்துகொள்ள வேண்டியதிருக்கின்றது என்பதேயாகும்.

திருவாளர்கள் தெ.பொ. மீனாட்சிசுந்தரம், கி.வா.ஜ.,எஸ். ராதா கிருஷ்ணன், தமிழ்க்கடல் ராய.சொ., சீனிவாசராகவன், கோதண்டராமன் போன்ற பல அறிஞர்களின் பேச்சுக்களை நான் கேட்டேன். அடுத்த ஆண்டு, அதற்கடுத்த ஆண்டு என்ற முறையில் காரைக்குடி விழாவிற்குச் சென்று வரலானேன். நீதிபதி இஸ்மாயீல் போன்ற பேச்சாளர்கள், இளந் தமிழ்க் கவிஞர்கள் கருத்துரைகளை அதிகமாகக் கேட்டேன். அந்நாளில் பத்துக்கும் மேற்பட்ட கம்பன் கழகங்கள் பல்வேறு நகரங்களில் தொடங்கப்பட்டிருந்தன. அகில இந்திய வானொலி நிலையம் கம்பன் விழா நிகழ்ச்சிகள் முழுவதையும் ஒலிபரப்பியது. கம்பன் கழகம் இலக்கியத்திற்கும், சமூக நலனுக்கும், பண்பாட்டுக்கும் பல ஆக்க வேலைகளைச் செய்கிறது என்பதைக் கண்டேன். நானும் ஒரு கழகத்தைக் கோவையில் தொடங்கினேன். என் தமிழ் மொழிப் பேச்சாற்றலையும் அறிவையும் - இதுபோன்ற விழாக்களில் பங்கு கொள்ளும் அளவிற்குப் - போதுமான அளவில் விருத்தி செய்து கொண்டேன்.

திரு. சி.வி.சி.டி. வெங்கடாசலம் செட்டியார் அவர்கள், காரைக்குடிக் கம்பன் நிறுவனத்தை வளர்ப்பதற்கு மிக்க அக்கறை கொண்டிருந்த தோடல்லாமல், நிதி உதவியும் செய்தார். கணேசனார் மணிமண்டபம் கட்டுவதற்கு ஆலோசனை கேட்கக் கோவைக்கு வந்திருந்தார். மணிமண்டபத்திற்கு ஓர் எதிர்பாராத விபத்து ஏற்பட்ட பின்புங்கூட, அவர் மணிமண்டபத்தை முடிப்பதில் மிகுந்த உறுதிப்பாடு கொண்டு பணிகளைத் தொடர்ந்து செய்து வந்தார். அறநிலையத்திற்கு நிதி உண்டாக்க வேண்டுமென்று திரு. கணேசனும், திரு. வெங்கடாசலம் செட்டியாரும் விரும்பினர். கம்பன் விழா, நிற்காமல், தொடர்ந்து நடைபெறுவதற்குப் போதுமான ஒரு நிரந்தர நிதியை உண்டாக்க வேண்டுமென்று நானும் உறுதி செய்தேன். எனவே, நிறுவனங்கள், நண்பர்கள் ஆகியவர்கள் மூலம் ஒரு லட்சம் ரூபாய் நன்கொடை பெற்றுக் காரைக்குடி கம்பன் அறநிலைக்கு ஒரு நிரந்தர நிதியை ஏற்படுத்தினோம்.

இதற்கிடையில் 1974இல் என் அறுபதாம் ஆண்டு நிறைவு மணி விழாவைக் கொண்டாட விரும்பினேன். செட்டிநாட்டார் இந்தச் சடங்கு களில் நன்கு துறைபோயவர்கள். ஆதலால் நான், சா. கணேசனிடம் எனது மணி விழாவை வைதீக முறைப்படி சிறப்பாகச் செய்து கொடுக்

குமாறு வேண்டிக்கொண்டேன். அவரும் முழு மனதோடு ஒத்துழைத்துக் கோவையில் விழாவை நடத்தி முடித்ததோடமையாமல், திருக் கடையூரிலும், திருநள்ளாற்றிலும் சிறப்பாகச் செய்து நிறைவேற்றினார். காஞ்சி, கும்பகோணம் போன்ற ஸ்தலங்களுக்குச் சென்றபோது, அந்தந்தக் கோவில்களின் ஸ்தல வரலாறுகள், தீர்த்தம், மூர்த்திகளின் பெருமைகள் ஆகியவற்றையும் கூட இருந்து நன்கு புரிந்து கொள்ளு மாறு ஒவ்வொன்றையும் விளக்கிக் கூறினார். அப்பொழுதுதான், அவர் கோவில்கள், சிற்பங்கள், புராணங்கள், ஆகம சாஸ்திரங்கள் ஆகியவை பற்றிய ஒரு நடமாடும் கலைக் களஞ்சியம் என்பதை உணர்ந்தேன். அவர்பால் கொண்ட மரியாதை பன்மடங்கு உயர்ந்தது.

ஒவ்வொரு முறையும், அவர் கோவைக்கு வருகை தரும் போதெல்லாம், நாங்கள் அவரைப் பகலுணவிற்கும், இரவு உணவிற்கும் அழைப்போம். அப்பொழுது, என் மனைவி, மகள் ஆகியவர்கள், சமய சம்பந்தமான இனிய உரையாடல் விருந்தைப் பெறுவார்கள். அவர்கள் மனம் விட்டுப் பேசும் உரையாடல்களில், பல ஐயங்களைத் தெளிவு செய்து கொள்வார்கள். என் மகன் கரிவரதனின் திருமணத்தில் சமையல் ஏற்பாடு, பரிமாறுதல் போன்ற பொறுப்பு முழுவதையும் தாமே ஏற்றுக் கொண்டு நடத்திக் கொடுத்தார். இவ்வாறு ஒன்றுபட்ட மனம், நெறி, நோக்கம், விருப்பம், கொள்கை - ஆகியவற்றுடன் எங்கள் நட்பு என்னும் மலர் அரசியலில் அரும்பிக் காரைக்குடி விழாவில் போதாகிக் கம்பன் விழாக்களில் மலர்ந்து, மணம் வீசத் தொடங்கியது.

கம்பன் அடிப்பொடி, சா. கணேசன் அவர்கள் என் வாழ்வில் மந்திரியாய், நல்லாசிரியனாய், பண்பிலே தெய்வமாய், பார்வையிலே நண்பனாய் அமைந்தார். வாழ்க அவர் திருநாமம்!



# நடமாடும் பல்கலைக் கழகம்

**- க.கு. கோதண்டராமன்**

கம்பன் அடிப்பொடி ஒரு நடமாடும் பல்கலைக் கழகம். அவருடைய கம்பன் பக்தியை - கம்பன் பணியை - கம்பனிடத்து அவர் கொண்டிருந்த எல்லையற்ற ஈடுபாட்டைத் தமிழ் உலகில் எல்லாரும் அறிவர். அவர் ஒரு சுதந்திரப் போராட்டத் தியாகி. 1942 வெள்ளையனே வெளியேறு போராட்டத்தில் கலந்த பெருந்தியாகி என்பதையும், தேவகோட்டை சப்ஜெயிலில் ஏற்பட்ட வழக்கில் சம்பந்தப்பட்ட மாவீரர் என்பதையும் சிலர் நன்கு அறிவர். மேலும் - சிற்பம், ஓவியம், பண்டைத் தமிழெழுத்து வடிவ ஆராய்ச்சி முதலான வரலாற்றுத் துறையில் பெரும் வல்லுனர் என்பதை அத்துறைகளின் வல்லுனர் நன்கறிவர். உலக நடப்புகளில் மிகச் சாதாரண விஷயங்களிலும், அவர் ஆழ்ந்த அறிவு பெற்று, வியக்கத்தக்க மனிதராய் விளங்கினார் என்பதை அவருடன் நெருங்கிப் பழகிய ஒரு சிலரே அறிவர். ஆம்! அவர் ஒரு நடமாடும் பல்கலைக் கழகம் என்பதைப் பழகிய அந்த ஒரு சிலரேதாம் அறிந்திருந்தனர்.

கொஞ்சம் தெரிந்தாலும் நூறாக விளம்பரப்படுத்திப் பெருமை தேடும் இந்தக் காலத்தில் அடிப்பொடி போன்றாரும் இருந்தார்கள் என்பதும் ஒரு அதிசயந்தான். விளம்பரத்தை அடியோடு விரும்பாதவர். தம் அன்பர்கள் அவ்வாறு செய்வதையும் அனுமதிக்காதவர். வளைந்து கொடுக்கும் இயல்போ, ஒருவரைக் கவர இச்சகமாகப் பேசும் இயல்போ இல்லாதவர். அஞ்சா நெஞ்சும், பிறர் தவறைச் சுட்டிக்காட்டும் இயல்புங்கொண்ட நக்கீரர். ஆகவே, அவர் புகழை உள்ளது உள்ளபடி

அறியத் தமிழ் மக்களுக்கு வாய்ப்பில்லாமல் போனது பற்றி ஆச்சரியப்பட வேண்டியதில்லை.

ஒரு சமயம், நானும் அடிப்பொடி அவர்களும் பேரூர் ஆருத்ரா தரிசனத்துக்குப் போயிருந்தோம். விடியற்காலம். ஏகப்பட்ட கூட்டம். தள்ளுண்டு நெருக்குண்டு மிகச் சிரமப்பட்டோம். நான் கஷ்டம் தாங்காமல் அவரை நோக்கி, ''அண்ணா, நாம் இன்னார் என்று தெரியப்படுத்திக் காவலர் உதவியுடன் தரிசனம் செய்யலாமே!'' என்றேன். ''அப்படித் தரிசனம் செய்யக் கூடாது. ஆண்டவன் முன்னிலையில் அனைவரும் சமம். நம் தனித் தன்மையை இறைவன் முன் காட்ட வேண்டாம். இப்படி எல்லோரையும் போல் இடிபட்டுக் கொண்டே தரிசனம் செய்வோம். அதிலொரு மகிழ்ச்சியும் இருக்கிறது!'' என்று கூறிவிட்டார், அடிப்பொடி. இவ்வாறு கூறும் மனப் பக்குவம் இன்று எத்தனை பேரிடம் காணமுடியும்? இடிபட்டே தரிசனம் செய்தோம்.

கோவையில் எனது வீட்டுக்கருகில் ''ஐடியல் ஸ்டோர்ஸ்'' என்ற பெரிய கடையொன்றிருந்தது. அதில் புதிது புதிதாய்ப் பொருள் பல கிடைக்கும். என் வீட்டில் தங்கியிருக்கும் போதெல்லாம் அக்கடைக்குப் போவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். மணிக் கணக்கில் பொருட்களை எடுத்துப் பார்த்துக் கொண்டிருப்பார். சில பொருட்களின் உபயோகம் என்ன என்பதை அறிய, ''இது எதற்காக?'' என அவரிடம் கேட்பேன். ''கடைக்காரரைக் கேள்,'' என்பார் அவர். கடைக்காரரைக் கேட்டால், அவர், தம் கடையில் தாமே விற்கும் பொருளின் உபயோகத்தைக் கூற முடியாமல் விழிப்பார். அடிப்பொடியோ, அதன் உபயோகம் என்னவென்று ஊகித்துச் சொல்லி விடுவார். கடைக்காரரும் நானும் வியப்பில் மூழ்கி மகிழ்வோம். இவ்வாறு பல தடவை.

வைகுண்ட ஏகாதசி மகோற்சவத்தையொட்டி நடைபெறும் கம்பன் விழாவில் கலந்து கொண்ட பின், ஓரிரு தினங்கள் கள்ளிப்பட்டியில் தங்கிச் செல்வார். (23 ஆண்டுகள் தவறாமல் அவர் கலந்து கொண்ட பாக்கியம் எங்களுக்குண்டு.) ஏகாதசியன்று விடிய விடிய விழித்திருந்து விட்டு, மறுநாள் துவாதசி பகலிலும் தூங்காமலிருந்து, மாலையில் சந்திர தரிசனம் பார்த்து விட்டுத்தான் தூங்க வேண்டும். பேராசிரியர் அ.ச.ஞா., தமிழ்க்கடல் ராமராசன் போன்றாரும் உடனிருப்பர். விரதமிருக்கும்

என்போன்றாரைப் பகலில் தூங்கவிடாமல் காப்பது அடிப்பொடியின் பொறுப்பு. வெட்டிப் பேச்சே இருக்காது. அபூர்வ விஷயங்கள், அரிய விஷயங்கள் அப்போது அவரிடமிருந்து வெளிவரும்.

கைக்கடிகார உலகில் 'ஒமேகா' (Omega) பிரசித்தமானது. ஒரு சமயம் கடிகாரங்கள் பற்றிப் பேச்சு வந்தபோது, ''ஒமேகா என்று ஏன் பெயர் வைத்தான், தெரியுமா?'' என்றார். தெரியாது என்றேன். ''ஒமேகா என்பது கிரேக்க எழுத்துக்களில் கடைசியெழுத்து, இதற்கு மேல் வேறு எழுத்துக்கிடையாது. அதுபோல், இதற்கு மேல் ஒரு கடிகாரம் கிடையாது. இனியொருவர் செய்யவும் முடியாது என்பதைக் குறிக்க இப்பெயரை வைத்தான்!'' என்றார். நாங்கள் வியப்பிலாழ்ந்தோம்.

மற்றொரு சமயம், ஏதோ ஒன்றைப் பற்றித் தீவிரமாக விவாதம் நடந்து கொண்டிருந்தது - அடிப்பொடியின் தலைமையில் தான். (அடிப்பொடி கலந்து கொள்ளும் கூட்டங்களில் அவர் தாம் தலைவர். வேறொருவர் அந்த இடத்தில் இருக்க விரும்பார்) விவாதத்தில் கலந்து கொண்ட ஓர் அன்பர், எதிராளியைப் பார்த்துச், ''சும்மா விதண்டாவாதம் செய்யாதீர்!'' என்றார். உடனே அடிப்பொடியவர்கள், ''விதண்டா வாதம் என்பதன் பொருள் தெரியுமா?'' - என்றார். யாவரும் விழித் தோம். ஆளுக்கொரு பொருள் கூறினோம். சரியாக அமையவில்லை. இறுதியில் அவரே விளக்கினார். ''வித்(து) + அண்ட(ம்) + வாதம் = விதண்டாவாதம். வித்து முதலா? அண்டம் முதலா? இந்த ஆராய்ச்சிக்கு முடிவு கிடையாது. அதுபோல் முடிவு காண முடியாமல் விவாதித்துக் கொண்டே போகும் வாதம் - விதண்டாவாதம்'' - என்றார். ஒன்றின் உட்பொருளை உணராமல் அதைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்ததை எண்ணி வெட்கினோம்.

வேறொரு சமயம். 'ஹம்பக்' என்று அடிக்கடி இப்பொழுது உலக வழக்கில் அடிபடும் சொல், எப்படி வந்தது என விளக்கினார். ''முதல் உலகப் போர் நடந்த காலம். ஜெர்மனிக்கும், பிரிட்டன் உள்ளிட்ட நேச நாடுகளுக்கும் கடும் போர். பிரசாரத் தந்திரத்தில் ஜெர்மனியின் கை ஓங்கியிருந்தது. ஜெர்மனியிலுள்ள பெரிய நகரங்களுள் ஹம்பர்க் (Hamburg) ஒன்று. அங்கிருந்துதான் ஜெர்மனி, உலகிற்குச் செய்திகளை அனுப்பிக் கொண்டிருந்தது. பல கட்டுக் கதைகளையும், பொய்ச் செய்திகளையும் பிறர் நம்பும் வகையில் ஹம்பர்க்கிலிருந்து அனுப்பிப்

பரப்பிக் கொண்டிருந்தது. கடைசியில் ஹம்பர்க் செய்திகள் நம்பத் தகாதவை - ஏமாற்றுபவை எனத் தெரிய வந்தது. அதிலிருந்து, ஏமாற்றும் வேலையை - பொய்யை மெய்போல் காட்டும் வேலையை ''ஹம்பக் வேலை'' என்று உலகினர் கூற ஆரம்பித்தனர்'' - என்று விளக்கி எங்களை வியப்பில் ஆழ்த்தினார்.

அடிப்பொடியவர்கள் யாரிடத்து எதைப் பேச வேண்டுமோ, அதை உணர்ந்து, அதற்குத் தக்கவாறு அவரிடம் பேசி அளவளாவுவார். எனது பண்ணையத்தையும் இதர காரியங்களையும் மேல் பார்க்கும் என் தம்பி பழனிச்சாமியோடு, கள்ளிப்பட்டியில் அவர் தங்கும் போது, பண்ணையம் (பண்ணை) பற்றியும், பண்ணை சம்பந்தப்பட்ட இதர விஷயங்களையும் பற்றித் தெளிவாகப் பேசி, என் தம்பியை வியப்பில் ஆழ்த்துவார். ஒரு சமயம், ''வண்டிச் சக்கரங்கள் எந்த மரத்தால் செய்யப்படுகின்றன?'' என்று தம்பியைக் கேட்டார். ''ஆரக்காலும், வட்டையும் தேக்கில் செய்வார்கள். கும்பத்தைத் தேக்கில் செய்யாமல் கருவேல மரத்தில் செய்வார்கள்'' என்றார் என் தம்பி. ''மிகவும் சரி! கும்பத்தை மட்டும் தேக்கில் செய்யாமல், கருவேல மரத்தில் செய்வது ஏன்?'' என மீண்டும் கேட்டார். தம்பியால் காரணம் சொல்ல இயலவில்லை. உடனே அடிப்பொடியவர்கள் தேக்கு மரத்தின் குணங்களையும், கருவேல மரத்தின் குணங்களையும் விளக்கிக் கும்பம் கருவேல மரத்தால் செய்யப்படுவதற்கான காரணத்தையும் கூறினார். அசந்து போய்விட்டார், என் தம்பி.

இவ்வாறு, பல விஷயங்களிலும் அவர் பெற்றிருந்த அறிவாற்றல் அபரிமிதமானது. சமையல் கலையிலும் வல்லவர். சிறையிலிருந்த போது சமையல் பொறுப்பு இவருடையதுதான். கறிவேப்பிலைப் பொடி செய்வது. நல்ல சுண்ணாம்பு தயாரிப்பது போன்ற பல விஷயங்களிலும் கெட்டிக்காரர். இப்படி எத்தனை விஷயங்கள்! எத்தனை பேச்சுக்கள்! இருபத்தெட்டு வருட நட்பில் அவரிடமிருந்து நான் தெரிந்து கொண்டவை எத்தனை எத்தனையோ!



# தீரன் கணேசன்

**- நீதிபதி எஸ். மகராஜன்**

**சு**மார் முப்பது ஆண்டுகளுக்கு முன், திருநெல்வேலிக் கம்பன் விழாவில், முதன் முதலாக நண்பர் கணேசனைச் சந்தித்தேன். தொட்டுப் பொட்டுப் போடலாம் போலிருந்தது அவருடைய ஸ்யாமள வண்ணம்; தும்பைப்பூ போன்ற வெண்ணிறக் கதர் வேட்டி; மடிப்புக் கலையாமல் தோள்பட்டையிலிருந்து தொங்கிக்கொண்டிருந்த பழுப்பு வண்ண மேல் வேட்டி; தங்கச் சட்டம் போட்ட மூக்குக் கண்ணாடி; முகில் கூட்டத்தைக் கிழித்துக்கொண்டு வந்து நிற்கும் முழுநிலாவையொத்த சந்தனப்பொட்டு; சட்டை போட்டு மறைக்க முடியாத ஓர் எளிமை; எளிமைக்குள்ளிருந்து எட்டிப் பார்க்கும் அசைக்க முடியாத ஓர் உறுதி; முகத்திலிருந்து வீசும் களங்கமற்ற, ஆனால், கவர்ச்சி நிறைந்த ஓர் ஒளி; கிட்ட நெருங்கிப் பழக அழைக்கும் ஒரு தோழமை, ஆனாலும், அந்தத் தோழமைக் குள்ளிருந்து திடீர் திடீரென்று கொப்புளிக்கும் ஒரு பயங்கரக் கண்டிப்பு.

''இவன் என் நண்பன்; இளம் வழக்கறிஞன்!'' என்று சொல்லி என்னைக் கணேசனுக்கு அறிமுகப்படுத்தினார், ஆ. முத்துசிவம். சில விநாடிகளில் மனமொன்றி உறவாடத் தொடங்கிவிட்டோம். கொஞ்ச நேரம் கழிந்தது. எண்பத்திரண்டாவது வயதிலே, வெள்ளக்கால் தமிழ்த் தாத்தா சுப்பிரமணிய முதலியார் அவர்கள் அன்று காலமாகிவிட்டதாகச் செய்தி வந்தது. கம்பன் விழாக் கொண்டாடிக் கொண்டிருந்த எங்களுக்கு இச்செய்தி வருத்தத்தைக் கொடுத்தது. செய்தியைக் கேட்ட கணேசன், ''இனறு நாம் எல்லோரும் உண்ணாவிரதம் இருக்க வேண்டும். தமிழ்ப் பெரியாருக்கு நாம் செலுத்த வேண்டிய நன்றிக் கடன் இது!'' என்று ஓர் உத்தரவு போட்டார்.

நாங்கள் எல்லோரும் இளவட்டங்கள்; சிறைச்சாலை போய் அறியாதவர்கள்; உண்ணாவிரதம் என்றால் ஓட்டம் எடுப்பவர்கள்;

தியாகத்துக்கும் எங்களுக்கும் வெகுதூரம். 'முதலியார் அவர்கள் இறந்துபோனதற்காக, அதுவும் 82-ஆவது வயதில் இறந்து போனதற்காக, உண்ணாவிரதம் இருக்கச் சொல்லுகிறாரே கணேசன். தான் வேண்டு மானால் இருந்துவிட்டுப் போகட்டும்; நம்மையும் சேர்த்திழுப்பானேன்?' என்று நினைத்துக் கொண்டு பசி தாங்க முடியாத நிலையில் நானும் முத்துசிவனும் கம்பி நீட்டிவிட்டோம். பக்கத்திலிருந்த சாப்பாட்டு விடுதிக்குப் போய், விலாப்புடைக்கத் தின்றுவிட்டு, ஒரு மணி நேரம் கழித்துக் கணேசன் உண்ணாவிரதம் இருக்கும் இடத்துக்குப் பயந்து பயந்து வந்தோம். எங்கள் முகத்தைப் பார்த்ததுமே, எங்கள் கள்ளத்தனம் தெரிந்துவிட்டது கணேசனுக்கு. எங்களைப் பார்த்து, ''தின்றுவிட்டு வந்தாச்சா?'' என்று கர்ஜித்தார். ''ஆமாம், ஆமாம். அவ்வளவுதான், ஐயா, உங்கள் தமிழ்ப்பற்று. ஒரு தமிழ் மகனுக்காக ஒரு நாள் பட்டினி கிடக்க முடியவில்லையே உங்களாலே!'' என்று சொல்லிச் சடைத்துக் கொண்டார்.

இதைக் கேட்ட எனக்கு அவமானம் தாங்க முடியவில்லை. 'அரசியல் உலகத்திலே உண்ணாவிரதம் ஒரு சிறந்த கருவியாக இருக்கலாம். ஆனந்தத்துக்காகவே அமைந்த இலக்கிய உலகத்திலே உண்ணாவிரதக் கரடியை அவிழ்த்துவிடுவது முறையல்ல!' என்று சொல்லி, என் மனத்தை நானே தேற்றிக்கொண்டேன்.

★★★

**தி**டீரென்று கப்பல் உடைந்து மூழ்கி மனித சஞ்சாரமில்லாத ஒரு தீவிலே, அலை என்னை அடித்துக்கொண்டு போய்விட்டதென்றால், தீரர் கணேசன் பக்கத்திலிருந்தால் போதும், எந்த நெருக்கடியையும் சமாளித்து, மனத்தளர்ச்சியைப் போக்கி, ராபின்ஸன் க்ருஸோவைப் போல, அந்தப் பாழும் தீவை ஒரு உல்லாஸ ஸ்வர்க்கம் ஆக்கிவிடுவார் அவர்.

நெருக்கடியென்றால், ஸப்த நாடியும் நமக்கு அடங்கிவிடும். மூலையிலிருந்து கொண்டு மண்ணாந்தையைப் போல் முனகிக் கொண்டிருப்போம் நாம். ஆனால், நெருக்கடியிலேதான் நண்பர் கணேசனுடைய முழு ஆற்றலும் தொழிற்படத் தொடங்கிவிடும். அப்படி ஓர் அபூர்வமான, பரபரப்பற்ற துணிச்சல் படைத்தவர் அவர்.

1954-இல் நண்பர் கணேசனோடு இராமநாதபுரம் கம்பர் விழாவுக்குப் போயிருந்தேன். அடுத்த நாள் ஒரு ஜீப் காரிலே திருப் புல்லாணியை நோக்கிப் புறப்பட்டோம். சித்திரை மாதத்து அருங் கோடை. மதியம் ஒரு மணியிருக்கும். கடும்பசி நேரம். ஒரே பாலை வனம். பாலைவனத்தின் மத்தியில் போய்க்கொண்டிருந்தபோது ஜீப் காரின் அச்சு முறிந்துவிட்டது. இந்த நிர்கதியான நிலையில், மாற்றுக் காருக்குச் சொல்லியனுப்பினோம். அது வந்து சேருவதற்குக் குறைந்தது மூன்று மணி நேரம் ஆகும். கோபமும், வெயிலும், பசியும் என்னை வதக்கி எடுத்துவிட்டன. ஏதோ குடி முழுகிப் போய்விட்டது என்ற உணர்ச்சியோடு ஜீப் காரைத் திட்டிக் கொண்டே நின்றேன். நண்பர் கணேசனோ உற்சாக மயமாகிவிட்டார். ஒரு ஜமுக்காளத்தை எடுத்து வந்து ஒரு கருவேல மரத்தடியில் விரித்தார். அவருடைய தோல் பையிலிருந்து (தோல் பையா அது? அக்ஷய பாத்திரம் அல்லது சமய சஞ்சீவி என்றே அதை அழைக்க வேண்டும்) நன்றாகச் சாணை பிடித்த ஒரு கத்தியை எடுத்து வந்தார். அந்தக் கத்தியின் தந்தப் பிடிக்குள்ளே தான் எத்தனை எத்தனை மாயக் கருவிகள்! கத்தியால் அரசங்குலையை அறுத்து வந்தார். குலையிலுள்ள பூக்களைக் கொய்து, அவற்றின் விசித்திர அமைப்பைப் பற்றிப் பேசத் தொடங்கினார். நான் தாவர இயல் படித்தவன்தான். ஆனால், பூவைப் பார்த்து ரஸிப்பதற்கு இதுவா நேரம்! என்னுடைய சுடுமூஞ்சித்தனத்தை லக்ஷியம் பண்ணாமல், நண்பர் ஓர் அரசிலையைச் சுருட்டி, அதில் ஒரு ஈர்க்கம் குச்சியைச் செருகி, வாயில் வைத்துப் பீப்பீ ஊதத் தொடங்கினார். அதில் ஆரோகண அவரோகணக்கிரமங்களைக் காட்டினார். கருவேல மரத்திலிருந்து காய்களைப் பிடுங்கி, புல்லாக்கு செய்து மூக்கில் போட்டுக்கொண்டார். ஒரு ஜோடி பச்சைத் தோடுகள் செய்து காதுகளில் மாட்டிக்கொண்டார். பிறகு, கம்பன் பாலைவனத்தை வருணித்திருக்கும் பாடல்களை அவருக்கே உரிய இராகத்தோடு பாடினார். உடனே என் பசியும், கோபமும், ஏமாற்றமும் எப்படியோ பறந்தோடிவிட்டன. சோர்வு நீங்கி நிமிர்ந்து உட்கார்ந்தேன். வெயிலையும் பாலைவனத்தையும் மறந்து ஸஹிருதய நிலையிலே அவருடைய ஆனந்தத்திலே நானும் கரைந்துவிட்டேன். மாப்பிள்ளை V.K.C. நடராஜன் மாலை 4 மணிக்கு ஒரு தனிக் காரில் எங்களை அழைக்க வந்தபோது தான், எனக்கு மண்ணுலக நினைவு வந்தது. வாழ்க்கையிலே மறக்க முடியாத இந்த நிகழ்ச்சியை நினைக்கும்போதெல்லாம் கணேசனுடைய தீரமும்

உறுதியும், சூழ்நிலையோடு போராடி வெற்றி பெறலாம் என்ற தன்னம்பிக்கையும் என் கண்முன் வந்து நின்று ஆர்வமூட்டும். நம் வாழ்க்கையின் சூழ்நிலை எவ்வளவு மோசமாக இருந்தாலும், மனித முயற்சியால் அதை மாற்ற முடியாது என்றாலும், அந்தச் சூழ்நிலையைப் பார்க்கும் பார்வையை நாம் மாற்றிக் கொள்ளலாமல்லவா? பார்வை மாறிவிட்டால் துன்பமும் இன்பமாக மாறிவிடுகிறது என்ற பாடத்தைத் தீரர் கணேசனுடைய வாழ்க்கையிலிருந்து நாம் உணர்ந்து பயன் பெறலாம்.

★★★

**பா**லைவனத்தைக் காட்டிலும் கொடியது சிறைவாசம். பூர்த்தி செய்ய முடியாத தேவைகளை மீண்டும் மீண்டும் உள்ளத்தில் கொண்டு வந்து நிறுத்தி மனிதனுடைய பேராண்மையைப் பரிஹசித்து, ஆன்ம வீரத்துக்கு உலை வைப்பது சிறைவாசம். அனிச்சமலரினும் மென் மையான பல உள்ளங்களில் நிரந்தரமான கசப்பையும், புளிப்பையும் ஏற்றிச் சீர்குலைத்திருக்கிறது அது. ஆனால், தீரன் கணேசனுடைய உள்ளத்தை அது குலைக்க முடியவில்லை. காரணம், அவருடைய இலக்கிய அறிவும், எதிர்நீச்சல் போடும் திறமையுமே. சிறை வாழ்க் கையில் அவர் சோம்பியிருந்த நேரமே கிடையாது. திறமையோடு காய்கறி திருத்தியும், பக்குவமாகச் சமையல் செய்தும், மற்றவர்களுக்குச் சுவையோடு உணவு பரிமாறியும், மற்ற நேரங்களில் சிறைச்சாலை வாசிகளுக்குக் கம்பராமாயணம், திருக்குறள் முதலிய அரிய நூல்களைப் பாடம் சொல்லிக் கொடுத்தும், இராஜாஜி போன்றவர்களிடம் அரசியல் பாடம் கற்றும், சிறை வாழ்வின் கொடுமைகளை வென்று, உள்ளத்தை உழைப்பால் தூய்மைப் படுத்திக் கரையேறியவர் கணேசன். ஆகவேதான், சிறைச்சாலை சென்று திரும்பிய சில சுதந்திர வீரர்களிடம் காணும் உள்ளக் கசப்பையும் புளிப்பையும் அவரிடம் காண முடியவில்லை.

★★★

**1935**-க்கு முன் B.Sc. வகுப்பில் Fitzgerald மொழி பெயர்த்த ''ஓமர்கையாம்'' என்ற நூலை எனக்குப் பல்கலைக் கழகத்தில் பரிசாகக் கொடுத்தார்கள். அந்தக் காலத்தில் அவ்வளவு அழகாக அச்சிட்ட புத்தகம் பார்ப்பது அரிது. வெல்வெட் அட்டையில் தங்கப்பூ வேலைப்பாடுகள்;

உள்ளே ஒவ்வொரு பக்கத்திலும் அலங்கார எழுத்துக்களில் ஒரு பாடல். பாடலுக்கு ஏற்ற ஓர் அழகிய வண்ணப் படம். இந்தப் புத்தகத்தை அருமையாகப் பாதுகாத்து வைத்திருந்தேன்.

1940-இல் சா.க. கையில் அந்தப் புத்தகம் போய்ச் சேர்ந்தது. அதைப் பார்த்ததும் அவருடைய உள்ளம் ஆங்கிலேயருடைய இலக்கியப் பக்தியை நினைத்து உருக ஆரம்பித்தது. ''மகாகவி கம்பனுக்கும் இந்த உபசாரம் நாம் செய்ய வேண்டும். அவனுடைய பாடல்களை இந்தத் தோரணையில் அச்சிட்டு அவனை உரிய முறையில் மதிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்'' என்று சொல்லிப் புத்தகத்தை மாதிரிக்காக வாங்கி வைத்துக்கொண்டார். 1942, ஆகஸ்டு மாதத்தில், பிரிட்டிஷ் போலீஸார் கணேசனுடைய காரைக்குடி வீட்டைக் கொள்ளை போட்டு, அங்குள்ள பல லக்ஷம் ரூபாய் பெறுமான நகைகளையும் பொருள்களையும் எடுத்துக்கொண்டு போய்விட்டார்கள். கொள்ளை போன சில நாள்களில் நண்பர் கணேசனைக் கண்டு பேசிக் கொண்டிருந்தேன். விடுதலைப் போராட்டத்திலே இந்தியத் தாய்க்குத் தான் கொடுத்த காணிக்கையென்று அந்தக் கொள்ளையைப் பெருமிதத்தோடு குறிப்பிட்டார்.

கொள்ளை போன பொருள்களோடு என்னுடைய ஓமர் கையாமும் போய்விட்டது என்று தெரிந்த எனக்கோ ஒரே கவலை. லக்ஷம் லக்ஷமாக இழந்துவிட்டு வெறுங் கையோடிருந்தவருடைய முகத்திலே தீரங் கலந்த அமைதி. அதைப் பார்த்ததும் என்னுடைய கவலை என் வெட்கத்திலே மூழ்கிற்று. தீரம் என்ற சொல்லுக்கு அகராதியைப் புரட்டிப் பார்த்தால் பொருள் தெரியாது, கணேசனுடைய வாழ்க்கையிலே விளக்கம் பெறுவது அது என்றுணர்ந்து என் மனம் பூரித்தது.

★★★

**கா**ர்காத்தார் என்ற வேளாளர் மரபைச் சேர்ந்த என் குடும்பத்தில், புரோகிதராக இருந்து மூன்று திருமணங்களை நடத்தி வைத்தவர் நண்பர் கணேசன். ஆக்குப்பிறையிலிருந்து மணவரை வரைக்கும் அவருடைய கண்காணிப்பில் எல்லாம் மிகத் திருத்தமாக நடக்கும். திருமணத்தன்று காலையுணவுக்காக முன்னேற்பாடுகள் செய்திருந்தேன். முந்தின நாள் மதுரையில் இட்லிமாவை அரைத்து இரவு 10 மணிக்குள் திருநகர்

திருமண வீட்டிற்கு மாவு வந்து சேர வேண்டியது. ஆனால், வர வேண்டிய மாவு இரவு 12 மணி வரையில் வந்து சேரவில்லை. மாவைக் கொண்டு வருவதற்காக ஒரு காரை அனுப்பினோம். காலை 2 மணி வரை காரும் வந்து சேரவில்லை. அந்தக் காரைத் தேடி 2, 3 கார்கள் அனுப்பினோம். 4 மணி வரை சென்ற கார்களும் திரும்பி வரவில்லை. "4 மணிக்கே இட்லி சுடத் தொடங்கினால்தான் வந்த விருந்தாளிகளுக்கு 6 மணிக்குள் இட்லி சுட்டு முடியும்," என்று சொல்லிச் சமையற்காரர்கள் அவசரப்படுத்தினார்கள். எனக்கோ ஒன்றும் ஓடவில்லை. எப்படிச் சமாளிக்கப் போகிறோமோ என்ற கவலையில் இரவு முழுவதும் உறங்கவில்லை. வெளியில் போய்ப் பார்ப்பதும் வீட்டுக்குள் ஏமாந்து வருவதுமாயிருந்த என்னைக் கவனித்துக்கொண்டே இருந்தார் நண்பர் கணேசன். இப்படி நெருக்கடியான நேரத்தில்தான் அவருக்கு ஹாஸ்யம் பொத்துக் கொண்டு வரும். சொல்லாராய்ச்சியிலும் இறங்கி விடுவார்.

"ஐயா, கார்காத்தார் என்ற சொல்லுக்கு இன்றுதான் பொருள் புரிந்தது. காருக்காகக் காத்துக்கொண்டிருப்பவர்தானே!" என்று ஒரு ஹாஸ்ய வெடியை எறிந்தார் நண்பர். அப்போது எனக்கேற்பட்ட குமுறலை அந்தக் கணமே காரில் வந்த இட்லி மாவு கரைத்துவிட்டது.

★★★

"**தி**றமையென்றால் அது கணேசனிடத்தில் தானிருக்கிறது!" என்று அடிக்கடி ரஸிகமணி டி.கே.சி. சொல்லுவார்கள். அது முற்றிலும் உண்மை. இலை நறுக்க வேண்டுமா? ஊறுகாய் போட வேண்டுமா? கோயில் கட்ட வேண்டுமா? சிற்ப சாத்திரத்தின் நுணுக்கங்கள் தெரிய வேண்டுமா? ஆகம விதிகளை அறிய வேண்டுமா? தமிழ் இலக் கணத்தின் சிறப்பியல்புகள் தெரிய வேண்டுமா? சங்க இலக்கியத்தின் நீள அகலங்களை அளக்க வேண்டுமா? கம்பராமாயணத்தில் எத்தனை உரிச்சொல் பிரயோகமாகியிருக்கிறது? எழுத்தியல், சொல்லியல், மொழியியல், அரசியல், பொருளாதாரம், தேர்தல் சட்டம், வெட்டெழுத்து ஆராய்ச்சி, தேசவளமை-எதைப் பற்றிக் கேட்டாலும், ஆர்வத்தோடும் தெளிவோடும் அந்தந்தத் துறையிலுள்ள வல்லுநர்களும் வியக்கும் வண்ணம் விவரங்களை எடுத்துச் சொல்லும் அபாரமான கல்வியும் அறிவும் படைத்தவர் தமிழ்நாட்டிலே கணேசன் ஒருவர்தான்.

★★★

சமீபத்தில் மலேயாவில் ஒரு சிக்கலான வழக்கு ஏற்பட்டது; ஒரு கோயிலில் உள்ள சிலை மாரியம்மன் சிலையா அல்லது திரௌபதி யம்மன் சிலையா என்பதைப்பற்றிய வழக்கு. வழக்கைத் தீர்த்து வைக்க முடியாமல் அங்குள்ள நீதிபதிகள் திணறினார்கள். சிறந்த இலக்கிய அறிவும், சிற்ப நூலறிவும், வரலாற்றறிவும் படைத்த ஒருவர் தான் இந்தச் சிக்கலைத் தீர்த்து வைக்க முடியும் என்றுணர்ந்து, இருசாராரும் நண்பர் கணேசனைப் பஞ்சாயத்தாராக நியமித்தார்கள். நடுவர் இதற்காகத் தமிழ்நாட்டிலிருந்து மலேயாவுக்குப் பறந்து சென்றார். சாட்சிகளை விசாரித்துவிட்டு, சிலையின் அம்சங்களை நேரில் கண்டு, அலசி ஆராய்ந்துவிட்டு நண்பர் கணேசன் தமிழில் ஒரு தீர்ப்பு எழுதி இருக்கிறார். முப்பது ஆண்டுகள் நீதிபதியாயிருந்தவருக்குரிய தெளி வோடும், அமைதியோடும், சட்ட நுணுக்கத்தோடும், காரண காரியத் தொடர்போடும், எல்லாவற்றிற்கும் மேலாக இலக்கியப் பயிற்சியால் மட்டுமே பெறக்கூடிய பரிவோடும் எழுதப்பட்டிருக்கிறது அந்தத் தீர்ப்பு. அதோடு மட்டுமல்லாமல் தமிழில் இப்படி ஒரு அரிய காரியத்தைச் சாதிக்க முடியும் என்பதை அத்தீர்ப்பு நிலை நாட்டுகிறது. அதைப் படித்த இருசாராரும் மனமுவந்து தீர்ப்பை ஏற்றுக்கொண்டார்கள்.

இப்படியாகத் தொட்டதையெல்லாம் திருத்தமாகச் செய்து முடிக்கும் திறம் வேறொருவரிடமும் நான் கண்டதில்லை.

★★★

**கோடி கொடுத்தாலும் கணேசன் தம் கொள்கையை விட்டுக் கொடுக்க மாட்டார்.** தேர்தலில் அவரோடு போட்டி போட்டவர்களுக்கு இந்த அரிய உண்மை தெரிந்திருக்கும்.

நில்லாதனவற்றை நிலையின என்று நினைத்து மயங்கும் இவ்வுலகில் நண்பர் கணேசனைப் போன்றவர்கள் மிகச்சிலரே!



# பரம்பரையில் ஒரு பரம்பரை

– நீதிபதி மு.மு. இஸ்மாயில்

**சு**தந்திர வேட்கையும், தேசப்பற்றும் தமிழகத்தில் ஒரு புதிய பரம்பரையைப் படைத்தன. உண்மையில், இந்தப் பரம்பரை இந்திய நாட்டுப் பரம்பரையேயாகும்.

அடிமைப்பட்டு நலிந்திருக்கும் ஒரு நாட்டின் மக்களை உரிமை எழுச்சியும், விடுதலை வேட்கையும் உடையவர்களாக ஆக்குவதற்குப் பல்துறை முயற்சிகள் வேண்டும். ஒரு நாடு இன்னொரு நாட்டின் மீது ஆதிக்கம் செலுத்துவதென்றால், ஏதோ இந்த ஆதிக்கம் அரசியல் அளவிலோ, நிர்வாகத்துறையிலோ மாத்திரம் நின்றுவிடும் என்று சொல்வதற்கில்லை. இன்னொரு நாட்டினர்க்கு அடிமையாக இருக்கிறோம் என்ற உணர்வே இல்லாமல் மக்கள் வாழ்வார்களேயானால் அவர்களுடைய கலை, பண்பாடு, இலக்கியம், நாகரிகம் அனைத்தும் கொஞ்சம், கொஞ்சமாக மறைந்து விடும். காரணம் என்னவெனில், அவற்றில் இவர்களுக்கு ஒரு பிடிப்பும், அவை பற்றிய ஒரு பெருமையும் இருக்குமாயின், அவை மேலும் மேலும் வளர்ச்சியுற அந்த வளர்ச்சியின் காரணமாக அந்நிய ஆதிக்கமே அசைவுற்று இறுதியில் அழிந்துவிடும்.

இதன் காரணமாகவே, ஆதிக்கம் செலுத்தும் அந்நியர்கள், அரசியல் அதிகாரத்தோடு தங்களுடைய நாகரிகத்தையும், கலையையும், பண்பாட்டையும் படிப்படியாக இந்த மக்களிடையே பரப்பி, அவற்றைப் பின்பற்றுவதில் கிடைக்கும் அரசியல் ஆதாயத்தின் காரணமாக அவற்றையே உயர்வானவையாகவும், பெருமையுடையவையாகவும் கொண்டு, தங்களுடைய சொந்த பண்பாடு, கலை, நாகரிகம் ஆகியவற்றை அடியோடு மறந்து விடுபவர்களாக ஆக்கி விடுகிறார்கள்.

இந்தப் பின்னணியில்தான் அரசியலில் அடிமைப்பட்டிருக்கும் மக்களிடையே சுதந்திர உணர்வை வளர்க்க முற்படும் பொழுது அந்த மக்களுடைய பண்டைய கலை, நாகரிகம் பண்பாடு, இலக்கியம் ஆகியவற்றிற்குப் புத்துயிர் கொடுத்து அவற்றை மறுமலர்ச்சி பெறச் செய்து, அவற்றைப் பற்றி மக்கள் புதியதொரு பெருமை உணர்வைப் பெறச் செய்வது அவசியமாகிறது.

இந்த அவசியத்தை உணர்ந்திருந்ததினால்தான் ஆங்கிலேயரிடம் அடிமைப்பட்டிருந்த இந்தியர்களிடையே சுதந்திர உணர்வை வளர்க்க முற்பட்ட அரசியல் தலைவர்களும், தேசபக்தர்களும், சமூக சீர்திருத்தவாதிகளும் இந்திய நாட்டின் மொழிகளில் இருந்த பழம்பெரும் படைப்புக்களை மக்களுக்கு அறிமுகப்படுத்தி அதற்காகப் பாமர மக்களும் புரிந்துகொள்ளக் கூடிய வகையில் எளிய நடையில் எழுதவும், பேசவும் தொடங்கியதோடு, தற்கால அறிவு வளர்ச்சிக் கேற்பப் புதிய, புதிய நூல்களை எழுதவும், பழம் பெரும் இலக்கியங் களைப் படைத்த கவிஞர்கள், ஞானிகள் ஆகியவர்களுடைய பரந்த, விரிந்த அறிவை விளக்கவும் தலைப்பட்டனர்.

ஆங்கிலேய அதிகார வர்க்கத்தை எதிர்த்து இந்திய மக்களைச் சுதந்திரப் போராட்டத்தில் இயங்கும்படி செய்த முயற்சியின்போது, இந்தியாவின் பல மொழிகளும் - குறிப்பாக வங்காளமும், தமிழும் - புதியதொரு முனைப்பைப் பெற்றன.

தமிழகத்தில் சிறந்த தேசபக்தர்களாகவும், வீரத் தியாகிகளாகவும் திகழ்ந்த சுப்பிரமணிய சிவா, வ.வே.சு. ஐயர், வ.உ. சிதம்பரம் பிள்ளை, சுப்பிரமணிய பாரதியார் முதலியவர்கள், சுதந்திர வேட்கை கொண்டு விடுதலைப் போராட்டத்தில் நேரடியாகப் பங்கு கொண்டதோடல்லாமல், சிறந்த இலக்கிய கர்த்தாக்களாகவும், ரசிகர்களாகவும் விளங்கினர். இவர்கள் தமிழல்லாத பிற மொழிகளையும் - ஆங்கிலம், பிரெஞ்சு உட்பட - கற்று அவற்றில் இருந்த இலக்கியங்களை ஆராய்ந்தது, தமிழில் இருந்த இலக்கியங்களை இன்னும் நுண்மையாக ஆராய்வதற்கும், அவற்றின் அழகையும், பெருமையையும் இன்னும் ஆழமாக நுகர்வதற்கும் உதவின.

இந்தப் பரம்பரையில் ஒருவராகத் தோன்றியவர்தான் காரைக்குடி அமரர் சா. கணேசன் அவர்கள். சிறு வயதிலேயே தேசத்தின் சுதந்திரப்

போராட்டத்தில் ஈடுபட்டவர். அப்படி அவர் ஈடுபட்ட காலத்தில் காந்திய சகாப்தம் தோன்றிவிட்டது. அந்த அறக்குரலுக்குச் செவி சாய்த்துப் பதினெட்டு வயதில், அதில் தம்மைப் பிணைத்துக் கொண்டவர். அதன் காரணமாகச் சிறைக்கும் சென்றார்.

தமிழ் இலக்கியங்களில் ஆழ்ந்த பற்றுக் கொண்டவர். பலமுறை சிறை சென்றதினால், தம் போன்ற வேறு சில தேசபக்தர்களையும் சிறையில் சந்திக்கும் வாய்ப்பு அவருக்குக் கிட்டிற்று. ஓர் இலட்சியத்தினால் ஈர்க்கப் பட்டு, அந்த இலட்சியத்திற்காகவே சிறைக்குச் சென்றவர்களாகையால் அங்கே அவர்களிடையே வம்புக்கோ, வீண்பேச்சுக்கோ இடமில்லை. அவர்களுடைய சிந்தனையும், சொல்லும் நாட்டைப் பற்றியும், நாட்டு நடப்பைப் பற்றியும், இந்திய சமுதாயத்தின் நிலைமையைப் பற்றியுமான வையாகவே இருந்தன. ஆகையால், அரசியல், சமயம், இலக்கியம், தத்துவம் ஆகியவை பற்றி அவர்களிடையே கருத்துப் பரிமாறல், பேச்சு, விவாதம், பயிற்சி ஆகியவை நிறைந்திருந்தன. இந்தச் சூழ்நிலையில், தாம் பயின்றிருந்த தமிழிலக்கியங்களிலுள்ள பெருமைகளையெல்லாம், தம்முடன் இருந்தவர்களுக்கு திரு. சா. கணேசன் விளக்கினார். இதன் காரணமாகத் தமிழ் இலக்கியங்களில் ஆர்வமும், ஈடுபாடும் பெற்றவர்கள் பலர்.

திருக்குறள், தேவாரம், திருவாசகம், நாலாயிரம் ஆகிய நூல்களோ டல்லாமல், சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி, கம்பராமாயணம் முதலிய காப்பியங்களிலும் அவருக்கு ஆர்வமும், பயிற்சியும் உண்டு. ஆனால், எல்லாவற்றையும்விட அவரை முழுமையாக ஆட்கொண்டது கம்பனுடைய ஒப்புயர்வற்ற இராம காதையேயாகும்.

கம்பனுடைய படைப்பை நுண்மையாகவும், முழுமையாகவும் அவரைப்போல் பயின்றவர்கள் மிகச் சிலரேயாவர். கம்பனுடைய படைப்பு அவரைக் கவர்ந்ததற்குப் பல காரணங்கள் இருக்க முடியும். கம்பனுடைய காப்பியத்தில் இல்லாத கவிமரபோ, ஞானமோ, சமய உணர்வோ, இறை பக்தியோ, விஞ்ஞான அறிவோ, பல்கலைச் செறிவோ வேறு எதிலும் இல்லை என்ற அசையாத நம்பிக்கையில், அழுத்தமாக நின்றவர் அவர். அவருடைய இந்த நம்பிக்கை, அறவே ஆதாரமற்றது என்று சொல்வதற்கும் இல்லை. தன்னுடைய காலத்தில் இருந்த அனைத்துப் படைப்புகளையும் கம்பன் படித்திருந்தான்

என்பதற்கு அவனுடைய காப்பியத்திலேயே எண்ணற்ற சான்றுகள் இருக்கின்றன. அவனுடைய இந்தப் பயிற்சியோடு, அவனுக்கு இயற்கையாக அமைந்திருந்த கவிதாவிலாசமும், கற்பனைத் திறனும், நுண்ணறிவும் ஒன்று சேர, அவனுடைய படைப்பாகிய இராமகாதை, எல்லாம் நிறைந்ததாக ஆகிவிட்டது.

பெரும்பாலும் கவிஞர்கள் தீர்க்கதரிசிகளாகவும் இருந்திருக் கிறார்கள். பிரபஞ்சத்தின் படைப்பைக் கூர்ந்து நோக்கிச் சிந்திப் பதிலிருந்து பிறப்பது, இந்தத் தீர்க்கதரிசனம். கம்பனுடைய உள்ளமோ மிகப் பரந்த உள்ளம். அந்த உள்ளத்தின் விசாலத்திற்கேற்ப அமைந்து விட்டது, அவன் பாடத் தேர்ந்தெடுத்துக் கொண்ட கதை. பரப்பினால் பரத கண்டம் முழுவதுமல்லாமல், இலங்கையையும் தன்னகத்தே சேர்த்துக் கொண்டிருக்கிறது அது; காலத்தினால் இராமனுடைய அவதாரத்திற்கு முன் தொடங்கி, இராவண வதத்திற்குப் பின், இராமன் முடிசூட்டிக் கொள்ளும் வரையில் தொடர்கிறது; பாத்திரத்திலோ மனித இனத்தில் சக்கரவர்த்தியில் இருந்து தொடங்கி வேடுவன் வரையில் தன்னுள் அடக்கிக் கொள்வதோடல்லாமல் அரக்கன், விலங்கு, பறவை முதலிய இனங்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கிறது. அத்தகைய கதையை விரிவாக ஒரு காப்பியமாகப் பாட வேண்டு மானால் பல்துறை அறிவு செறிந்திருக்க வேண்டுதல் இன்றியமை யாததாகிறது. கம்பனிடமோ இந்த அறிவுச் செறிவு அபரிமிதமாக இருக்கவே, அவனுடைய படைப்பு அளப்பரும் கருவூலமாக அமைந்து விட்டது. அத்தகைய் கருவூலத்தில், அமரர் கணேசன் தன்னையே பறிகொடுத்துவிட்டதில் வியப்பில்லை என்றே சொல்லத் தோன்றும்.

கம்பனிடத்தில் அவர் வைத்திருந்த அளவற்ற ஆர்வமே அவரை வேறு பல துறைகளுக்கும் இழுத்துச் சென்றது. தொல்பொருள் ஆராய்ச்சியிலும், சிற்பங்களின் நுணுக்கங்களிலும் தம்முடைய அறிவைச் செலுத்தினார் அவர். கம்பன் வாழ்ந்த காலம், அவன் காலத்தில் ஆண்ட தமிழக மன்னர்கள், அவன் காலத்திய தமிழகத்தின் நிலைமை ஆகியவற்றையெல்லாம் நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதே இத்துறைகளில் அவர் காட்டிய ஆர்வத்திற்குக் காரணமாகவும் இருக்கக் கூடும். ஆகம சாஸ்திரத்திலும் அவருக்கு ஆழ்ந்த ஈடுபாடு உண்டு. அதன் காரணமாகச் சமீப காலத்தில் தமிழகத்தில் உள்ள பல பெருங்கோவில்கள் புதுப்பிக்கப் பெற்று, புனருத்தாரணம் செய்யப்

பெற்றுக் குடமுழுக்கு நடத்தப் பெற்ற பணிகளில் முக்கியமான பங்கை அவர் பெற்றிருந்தார்.

கம்பனிடத்தில் அவர் கொண்டிருந்த ஈடுபாடு அளவிடற்கரியது. அவர் சம்பந்தப்பட்ட வரையில் கம்பன் தமிழில் மிகப் பெரிய கவிஞனாக மாத்திரம் இருக்கவில்லை. அவனைக் கடவுளாகவே அவர் கொண்டிருந்தார். கவிச்சக்கரவர்த்தி கம்பன் அவருக்கு 'எந்தை பிரான் கம்பன்' ஆவான். எனவே, 'சா. கணேசன்' என்னும் தம்முடைய பெயரையே 'கம்பன் அடிப்பொடி' என்று மாற்றிக்கொண்டார்.

கம்பனிடத்தில் அவர் கொண்டிருந்த ஈடுபாடு ஒரு புதிய பரம்பரையையே படைக்கும்படி அவரைச் செய்து விட்டது. தாம் படித்து மகிழும் கம்பனை, தாம் கொண்டாடும் அவன் பெருமையை, தாம் பாடும் அவன் புகழை உலகமும் நுகர வேண்டும் என்று விரும்பிக் கம்பன் கழகம் ஒன்றைத் தோற்றுவித்து, 1939-ஆம் ஆண்டிலிருந்து காரைக்குடியில் கம்பன் விழாக் கொண்டாட முனைந்தார். கம்பன் தன்னுடைய காப்பியத்தை அரங்கேற்றிய நாள் 'பங்குனி அத்தம்' என்று முடிவு கட்டி, அதற்கு முந்தின மூன்று நாட்களில் காரைக்குடியில் கம்பன் விழாக் கொண்டாடி, நான்காவது நாளான, அத்த நாளில், நாட்டரசன் கோட்டையில் கம்பன் சமாதிக்கு முன்னால் கம்பன் திருநாளைக் கொண்டாடினார்.

1939-இல் துவக்கிய இந்த வேள்வியைத் தம் ஆயுளின் இறுதி வரையில் ஓர் ஆண்டு கூடத் தவறாமல் செய்து வந்தார். சுதந்திரப் போராட்டத்தில் தாம் சிறை சென்ற போதும் தாம் சிறையில் இருந்த காலத்தில் இந்த விழா நடைபெறாமல் இருந்துவிடக் கூடாது என்பதற்காகத் தம் நம்பிக்கைக்குரிய பிறரைக் கொண்டு அதை நடத்துவதற்கு ஏற்பாடு செய்தார்.

காரைக்குடிக் கம்பன் விழா தமிழகத்தின், தமிழின் தனிப் பெரும் இலக்கிய விழாவாகவே காலப்போக்கில் அமைந்துவிட்டது. அங்கு அவர் ஏற்றி வைத்த விளக்கு தமிழகத்திலும், வெளியிலும் பற்பல ஊர்களில் புதிய புதிய விளக்குகளை ஏற்றி வைப்பதற்கு உதவியது. அவருடைய அக்கறையினாலும், ஆர்வத்தினாலும், ஈடுபாட்டினாலும், ஈர்க்கப்பட்ட ஆயிரக்கணக்கான தமிழர்கள் கம்பன் காப்பியத்தைப் படித்து, அதில் மூழ்கி, மகிழ்ச்சியில் திளைத்து, அதனை மற்றவர்களோடு

பகிர்ந்து கொள்வதற்காக ஊர்தோறும் கம்பன் கழகங்கள் தொடங்கினார்கள், கம்பன் விழாக்கள் நடத்தினார்கள். இப்படியாகக் கம்பனுடைய பெருமையில் மூழ்கிய அமரர் கணேசனுடைய முயற்சி, கம்பன் இயக்கமாக மலர்ந்து, தமிழகம் மாத்திரமல்லாமல், தமிழகத்துக்கப்பாலும் இன்று பரந்து ஒளிவிட்டுப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. இதில் ஈடுபட்ட அனைவரும் கம்பன் புகழ் பாடுபவர்கள் ஆகையினால், அவர்கள் ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்களைப் போலவும், அமரர் கணேசனை அக்குடும்பத்தின் தலைவராகவும் ஏற்றுக் கொண்டிருந்தார்கள்.

அமரர் சா. க.வின் கம்பன் பணி, வேறொரு வகையிலும் பலன் அளித்தது. அவர் நடத்திய கம்பன் விழாவின் கருத்தரங்கம், கவியரங்கம், பட்டி மண்டபம் முதலிய பல்வேறு நிகழ்ச்சிகளில் பங்கு கொள்வதற்குப் பலர் தேவைப்பட்டனர். ஆரம்பக் காலத்தில் கம்பனை நன்றாகப் படித்திருந்த பண்டிதர்கள் பலர் இருந்தபோதிலும், கம்பனுடைய காப்பியத்தின் அருமையையும், பெருமையையும் பாமர மக்களும் புரிந்து கொள்ளக் கூடிய வகையில் விளக்கக் கூடியவர்கள் மிக மிகச் சிலரே. ஆனால், சா.க.வின் நோக்கமோ கம்பனுடைய காப்பியத்தை எல்லா மக்களிடையேயும் பரப்புவது. ஆகையால், கம்பனைப் படித்து இந்தக் கோணத்தில் கம்பனைப் பற்றி எழுதவும், பேசவும் திறமையுள்ளவர்களைப் படைக்கவேண்டிய அவசியமாயிற்று. கம்பனில் சிறிதளவு ஈடுபாடு கொண்டவர்களாக இருந்தாலும் அவர்களை அழைத்து, கம்பன் விழா நிகழ்ச்சிகளில் அவர்களுக்கு இடமளித்து, அவர்களுக்கு ஊக்கமூட்டி, உற்சாகப்படுத்தினார். இந்த வகையில் கம்பனைப் படிக்கவும், அவன் படைப்பைப் பற்றி எழுதவும், பேசவும் தகுதியும், திறமையும் பெற்ற பலர் உருவாக்கப் பெற்றனர். நாற்பத்துநான்கு ஆண்டுகளாகத் தொடர்ந்து நடந்து வந்த கம்பன் விழாவாதலால், இந்த வகையில் பலர் தோன்றினார்கள், அவர்கள் தங்கள் பங்காக, வேறு பலரையும் தோற்றுவித்தார்கள்.

சென்ற நாற்பது ஆண்டுகளுக்கும் மேலாகக் கம்பனைப் பற்றி எழுதியும், பாடியும், பேசியும் வரும் எல்லோரும் அநேகமாகக் காரைக்குடிக் கம்பன்விழா பெற்றெடுத்தவர்களே என்று சொல்வது மிகையாகாது.

இதே நிலையே வேறொரு அற்புதமான பலனையும் அளித்தது. மொழி சமயத்திற்கு அப்பாற்பட்டது. இந்துக்கள், பௌத்தர்கள்,

சமணர்கள், கிறித்தவர்கள், முஸ்லீம்கள் ஆகிய பல மதத்தினரும் தமிழைத் தாய் மொழியாகக் கொண்டதன் காரணமாகவே, தமிழில் பெரும் அறிஞர்களாகவும், கவிஞர்களாகவும், இலக்கியக் கர்த்தாக் களாகவும் இருந்திருக்கிறார்கள். இன்றும் இருக்கிறார்கள். இவர்கள் அனைவருக்கும், சமய பேதமின்றித் தமிழ் பொது மொழியாவதோடு, தமிழ் இலக்கியங்கள் பொதுச் சொத்தும் ஆகும். இந்தக் கோணத்தில் பார்க்கும்போது, கம்பனின் காப்பியத்தில் எல்லா மதத்தினரும் ஈடுபட்டவர்களாகவே இருந்தார்கள். என்ற போதிலும், இராம காதை இந்துக்களின் கடவுளரின் ஒருவருடைய அவதாரத்தைப் பற்றியது ஆகையால், அது ஒரு இந்து சமய காவியம்; அதுவும் ஒரு வைணவ காவியம் என்ற எண்ணமும் இடம் பெறாமல் இல்லை. இந்த எண்ணமே தனித்து நிலைபடுமானால், இந்துக்களைத் தவிர, அதுவும் வைண வர்களைத் தவிர, வேறு யாருக்கும் கம்பனுடைய இராமாயணத்தில் அக்கறையோ, ஈடுபாடோ கொள்வதற்கு இடமோ, வாய்ப்போ இல்லாமல் போய்விடும். இந்தக் குறுகிய நிலை கம்பனுக்கு ஏற்படக் கூடாது என்பதற்காகக் கம்பன் விழாவில் கம்பனுடைய படைப்பு ஒரு சமயக் காப்பியமாக அணுகப்படாமல், ஓர் இலக்கியமாகவே அணுகப் பெற்றது. இதன் காரணமாகக் கம்பன் விழாவில் எல்லாச் சமயத்தினரும் தாராளமாக முழு மனதுடன் பங்குபெற ஒரு வாய்ப்பு உண்டாயிற்று. இதன் பலன் என்னவென்றால், கம்பனுடைய காப்பியத்தை மத பேதமின்றித் தமிழறிந்த அனைவரும் நுகர முடிந்தது; அதன் அழகையும், அருமையையும் அனுபவிக்க முடிந்தது.

இத்தகைய ஒரு பேரரங்கத்தைக் கம்பனுக்கு நிர்மாணித்துக் கொடுத்தவர் அமரர் சா.க. என்று சொல்வது முற்றிலும் உண்மை.

அமரர் சா.க. வின் தமிழ் ஆர்வம், இலக்கிய உணர்வு, கம்பன் பணி, தேசத் தொண்டு, தொல்பொருள் ஆராய்ச்சி, ஆலயக் கலையறிவு முதலிய பல்வேறு சிறப்புக்கள் அவருடைய வாழ்வை ஒளி நிறைந்த வாழ்வாக ஆக்கியதோடல்லாமல், வருங்காலத்தினர்க்கும் சிறந்த எடுத்துக்காட்டாகவும், வழிகாட்டியாகவும் அமைந்திருக்கின்றன வாகையால், இத்தகைய துறைகளில் நன்றியுடனும், திறமையுடனும் அவரைப் பின்பற்றி அவருடைய பணியையும், தொண்டையும் மேலும் பரவச் செய்வதைத் தவிர, அவருடைய நினைவுக்கு நாம் செலுத்தும் அஞ்சலி வேறெதுவும் இருக்க முடியாது.

# கர்ம வீரர் கணேசனார்

- வெ. சாமிநாத சர்மா

உலகத்தில் பெரும்பாலோர் வாழ்க்கைப் பாதையில், அறுபதாவது மைல்கல்லைக் காணு முன்பு, ஒரு திருப்பத்தைக் காண்கிறார்கள். அந்தத் திருப்பத்தில், நரையும் திரையும் அவர்களைச் சந்திக்கின்றன; தளர்ந்து வரும் மூப்பு அவர்களைக் கைகொடுத்து வரவேற்கிறது. இந்தச் சந்திப்பும் வரவேற்பும், அவர்களுக்கு மகிழ்ச்சி தருவதில்லை; மாறாக, ஏக்கத்தையே தருகிறது. இந்த ஏக்கத்தில் அதுவரை தங்களிடமிருந்து வந்த ஊக்கம், துணிவு, செயல் திறன் ஆகியவற்றை இழந்து விடுகிறார்கள். பசுமையாயிருந்த வாழ்க்கை, பாலைவனமாக அவர் களுக்குக் காட்சி தருகிறது.

பெரும்பாலோருக்கு இந்த அனுபவம் ஏற்படுகிறதென்றாலும், சிலர், இந்த அனுபவத்திற்குப் புறம்பானவர்களாயிருக்கிறார்கள். இவர்கள் உடல் தளர்ச்சியடைந்திருக்கலாம்; ஆனால், உள்ளம் எப்பொழுதும்போல் இளமைத் துடிப்பில் திளைத்துக் கொண்டிருக்கிறது. இவர்களுடைய செயல்திறன் சிறிதளவும் குன்றுவதில்லை. இவர்கள் தங்களுக்கு எத்தனை வயதாயிற்று என்று கணக்குப் போட்டுக் கொண்டிருப்பதில்லை; தாங்கள் செய்ய வேண்டிய வேலை எவ்வளவு இருக்கிறது என்று கணக்கிட்டுப் பார்க்கிறார்கள். இப்படிப்பட்ட வர்களைக் கர்ம வீரர்கள் என்று உலகம் அழைக்கிறது.

இத்தகைய கர்மவீரர்களில் ஒருவர், என் உழுவலன்பர் சாமிநாத கணேசனார். இவரிடத்தில் காணப்பெறும் தனித்தன்மை, உள்ளத் திண்மையைப் போல் உடல் திண்மையையும் போற்றிக் காப்பாற்றி வருவதுதான்.

நான் 1932-ஆம் ஆண்டு இரங்கூனுக்குச் சென்று தங்கத் தொடங்கிய காலத்தில் அன்பருடன் தொடர்பு ஏற்பட்டது. அப்பொழுது பார்த்த மேனியையே இப்பொழுதும் பார்க்கிறேன். அதே கனத்த குரல்; பேச்சில் அதே அழுத்தம்; செயலில் அதே சுறுசுறுப்பு. உடல் மேல் காணப்பெறும் ஒரு சிறு மாறுதலைத் தவிர வேறு எவ்வித மாறுதலும் இல்லை. அப்பொழுது சட்டை அணிந்துகொண்டிருந்தார்; இப்பொழுது திறந்த தோள்மீது ஒரு கதர்த்துண்டு மட்டும் தவழ்ந்து கொண்டிருக்கிறது.

நான் இரங்கூனுக்குச் சென்ற தொடக்கத்தில், "பாரத பண்டார்" என்ற பெயரில், கதர்-சுதேசிப் பொருள்கள் விற்பனை நிலையம் ஒன்றை நடத்தி வந்தேன். அப்பொழுது அன்பருடைய லேவாதேவித் தொழில், இரங்கூனுக்குச் சில மைல்கள் தொலைவிலுள்ள "தோங்குவா" என்ற ஊரில் நடைபெற்று வந்தது. அங்கிருந்த இவருடைய ஏஜெண்ட் "சாமிநாதன் செட்டியார்" என்பவர், ஒரு நாள், சில பொருள்களை வாங்கப் "பாரத பண்டாரு"க்கு வந்தார். பேச்சுவாக்கில், தமது பெரிய முதலாளி சாமிநாதன் செட்டியாருடைய தெய்வ பக்தி, தர்ம சிந்தனை முதலியவைகளைப்பற்றியும், சின்ன முதலாளி (கணேசனார்)க்குப் பொதுநலத் தொண்டில் இருக்கும் ஆர்வத்தைப்பற்றியும் உற்சாகத்துடன் கூறினார். கேட்டு மகிழ்ந்தேன். ஓரிரு நாள்களுக்குப் பிறகு, கணேசனார் 'பாரத பண்டாரு'க்கு வந்தார். முதற்சந்திப்பிலேயே, ஏஜெண்ட் சாமிநாதன் செட்டியார் இவரைப் பற்றிச் சொன்னவையெல்லாம், எழுத்துக்கு எழுத்து சரியென்று தெரிந்து கொண்டேன். அந்த முதற்சந்திப்பிலிருந்து கணேசனார் என் இளைய சகோதரராக என் உள்ளத்தில் திகழ்ந்து வருகிறார்.

தோங்குவாவில் தொழில் நடத்தும் பொறுப்பில் பெரும்பகுதியை ஏஜெண்டிடம் ஒப்புவித்துவிட்டு அன்பர், இரங்கூனிலேயே பெரும்பொழுதைக் கழிப்பார். அப்பொழுது ஏறக்குறைய தினந்தோறும் எங்கள் சந்திப்பு நிகழும். பாரத பண்டாருக்குத் தமது நண்பர்களைக் கூட்டிக்கொண்டு வந்து, கதர் வாங்கச் செய்வார்; சுதேசிப் பொருள் களையே உபயோகிக்க வேண்டுமென்று வற்புறுத்தி ஒரு குட்டிப் பிரசங்கம் செய்வார். அப்பொழுது அன்பருக்கு ஏறக்குறைய இருபத்தைந்து வயது இருக்கும். ஆயினும், இவருடைய பேச்சில் ஐம்பது வயதடைந்த ஒருவருக்கு இருக்கக்கூடிய அறிவும் அனுபவமும் நிறைந்து இருந்தன. இந்த அறிவும் அனுபவமும் இவர் இரங்கூனில்

தங்கியிருந்தவரை, பலதுறைத் தொண்டுகளில் ஈடுபடக்கூடிய வாய்ப்பையும், கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ள வல்ல ஆற்றலையும் இவருக்கு அளித்தன.

இரங்கூனுக்கு அடுத்த கம்பை என்னும் பகுதியில் நடைபெற்று வந்த செட்டியார் உயர்நிலைப்பள்ளி சிறந்த முறையில் இயங்க, அப்பள்ளியின் நிருவாகியாயிருந்த சிறுவயல் மு. சோமசுந்தரம் செட்டியார் அவர்களுக்கு, அன்பர் கணேசனார் பலவகையிலும் துணை வராக இருந்தார். படிக்கும் பிள்ளைகள் படிப்பிலேயே உயர்ந்திருந்தால் மட்டும் போதாது. பண்பாட்டிலும் உயர்ந்திருக்க வேண்டுமென் பதற்காகவும், பிள்ளைகளுக்குத் தெய்வ பக்தியோடு தேசபக்தியையும் குழைத்து ஊட்டுகின்ற முறையிலும், சில திட்டங்களை வகுத்துக் கொடுத்து நடைமுறையில் கொணரச்செய்தார். பள்ளியின் தமிழாசிரியர் ஓய்வு கொண்ட நாள்களில், கொப்பனாபட்டி அ.மெ. மெய்யப்ப செட்டியார் அவர்களும் அன்பர் கணேசனார் அவர்களும் தமிழ்ப் பாடங்களை எடுத்து நடத்தியதாக எனக்கு ஞாபகம்.

அந்தக் காலத்தில்தான் கொப்பனாபட்டியில், பெண்களுக்கென்று தனிக் கல்லூரியொன்று தம் சொந்தப் பொறுப்பில் நிறுவ வேண்டுமென்ற எண்ணம், அ.மெ.மெ.வின் உள்ளத்தில் வித்துக் கொண்டது. இந்த வித்துக்கு ஊக்கமென்னும் நீர் பாய்ச்சி, ஒரு ஸ்தாபனமாக உருக்கொள்ள அ.மெ.மெ.வுக்கு உறுதுணைவர்களாயிருந்தவர்களுள் தலையாயவர் அன்பர் கணேசனார். இவரைப் போல் மற்றொரு துணைவராயிருந்தவர், செக்காலை மெய்யப்ப செட்டியார் அவர்கள். அ.மெ.மெ.வுக்கு ஊக்கம் அளித்தவர்களுள் சிறியேனும் ஒருவன் என்று இங்குச் சொல்லிக்கொண்டால், அது சுய விளம்பரமாகக் கருதப்படமாட்டாது என்று நினைக்கிறேன்.

கொப்பனாபட்டியில் 'கலைமகள் கல்லூரி' என்ற பெயரால் பெண்கள் கல்லூரி நிறுவப்பட்ட பிறகு, அன்பர் கணேசனார் அங்கு அடிக்கடி சென்று, அநேக திட்டங்களை வகுத்துக் கொடுத்து உதவி செய்திருக்கிறார். இவர் செய்த உதவிகளைப்பற்றி அ.மெ.மெ. அவர்கள், என்னிடம் பல தடவை புகழ்ந்து பேசியிருக்கிறார்.

இரங்கூனில் ''தன வணிகர் இளைஞர் சங்கம்'' தோன்றுவதற்கும், ''தன வணிகன்'' என்ற வார இதழ் தொடங்குவதற்கும் அடிகோலிய

வர்களில் முக்கியமானவர் அன்பர். கணேசனார். 'தன வணிகன்' பத்திரிகையின் முகப்பில் பொறிக்கப்பட வேண்டிய பெயர் எந்த வரி வடிவம் கொண்டிருக்க வேண்டுமென்று சைத்ரிகருக்குச் சொல்லிக் காட்டி, அநேக மாதிரிகளை வரைந்து கொடுத்தார் அன்பர். எதற்காக இதை இங்குக் குறிப்பிடுகிறேனென்றால், எந்த ஒரு சிறிய விஷய மாயிருந்தாலுஞ்சரி, அது அழகாக, ஒழுங்காக, நல்ல கருத்தை உட்கொண்டதாக அமைய வேண்டுமென்பதில் அன்பருக்கிருந்த சிரத்தையைச் சுட்டிக் காட்டுவதற்குத்தான். தனவணிகன் பத்திரிகையில் நான் சிறிது காலம் தொண்டாற்றியதை இங்கு நினைவு கொள்கிறேன்.

ஆண்டுதோறும் கம்பன் விழாவை நடத்தி வைக்கும் முக்கியப் பொறுப்பை ஏற்று, விமரிசையாக நடத்தி வருவதைக்கொண்டு, அன்பருக்குக் கம்பனிடத்திலுள்ள ஆழ்ந்த பக்தி நன்கு புலனாகும்.

1942-ஆம் ஆண்டு மே மாதம் நான் பர்மாவிலிருந்து வந்த சிறிது காலத்திற்குப் பிறகு, சென்னைத் தியாகராயநகர் உஸ்மான் ரோட்டில் இருந்த எனது சிறு குடிலில், அன்பர் கணேசனாரும் பி.ஸ்ரீ.யும் சந்தித்தனர். எதேச்சையான சந்திப்புத்தான். இருவரும் அருமையாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். என்ன பேச்சு? கம்பனைப் பற்றித்தான். வேறு என்ன இருக்க முடியும்? அயோத்தியா காண்டம் கங்கைப் படலத்தில் முதலில் அமைந்திருக்கும் ''வெய்யோன் ஒளி தன் மேனியின்'' என்று தொடங்கும் செய்யுளின் நயத்தையும், கடைசி அடியின் முதலில் வரும் ''ஐயோ'' என்ற சொற்பிரயோகத்தின் அழகையும், அன்பர் இருவரும் அற்புதமாக விமரிசனம் செய்தார்கள்.

கணேசனார் கம்பனுடைய சொல்லாட்சியில் ஈடுபட்டுப் பேசினார். சொல்லுக்கு அடிப்படையில் பொதிந்து கிடக்கும் கருத்தை விளக்கினார் பி.ஸ்ரீ. இருவரும் சம்பாஷணைக்கிடையிடையே கலகலத்துச் சிரித்தார்கள். இந்தச் சிரிப்பில் கணேசனாருடைய குரல் உயர்ந்திருந்தது. இந்தச் சம்பாஷணையில் நான் என் மனத்தைப் பறிகொடுத்து ரசித்துக் கொண்டிருந்தேன். அன்பர்களுக்கு இந்த நிகழ்ச்சி நினைவிருக்கிறதோ என்னவோ? எனக்கு நன்றாக நினைவிருக்கிறது.

''சென்னை மர்ரே அண்ட் கம்பெனி''யைச் சேர்ந்த எஸ். ராஜம் அவர்கள் வெளியிட்டுள்ள கம்பராமாயண மலிவுப்பதிப்பு முயற்சிக்கு அன்பர் கணேசனார், பதிப்பாசிரியக் குழுவினருள் ஒருவராயிருந்து,

தமது பூரண ஒத்துழைப்பையும் கொடுத்தார். பாலகாண்டப் பதிப்புரையில், ''திரு. சா. கணேசன் அவர்கள், சில வித்துவான்களின் உதவியுடன் பாடங்களை நிர்ணயம் செய்யும் பணியில் ஒத்துழைத் தனர்'' என்று பாராட்டப்பட்டிருப்பதை இங்குச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

அன்பரின் சமயப்பற்று, அவர் பரம்பரையோடு ஒட்டி வந்த செல்வம். 1962-ஆம் ஆண்டில் இளையாத்தங்குடியில், காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் முயற்சியாலும் முன்னிலையிலும் நடை பெற்ற வித்வத் ஸதஸ் மிகச் சிறப்பாக நடைபெற, அன்பர் கணேசனார் அயராமல் உழைத்ததை ஆஸ்திகப் பெருமக்கள் எப்பொழுதும் நினைவு கொண்டிருப்பார்கள்.

மகான் அப்பைய்ய தீட்சிதர் பரம்பரையில் வந்தவரும், சென்னைக்கடுத்த வில்லிவாக்கம் உயர்நிலைப்பள்ளியில் சமஸ்கிருத பண்டிதராகப் பணிபுரிந்து வருகிறவருமான திரு. இராமகிருஷ்ண தீட்சிதர் என்பவர், இந்த ஸதஸில் பங்கு கொண்டுவிட்டுத் திரும்பி வந்த பிறகு என்னைச் சந்தித்து, ஸதஸ் நடைபெற்ற வைபவத்தைப்பற்றி உற்சாகமாகப் பேசிக்கொண்டிருந்தார். அந்தப் பேச்சின் பெரும்பகுதி அன்பர் கணேசனாரைப்பற்றியதாகவே இருந்தது. **"அன்பர் கணேசன் ஒருவர் இல்லாமற்போனால், இந்த ஸதஸ் இவ்வளவு நன்றாக நடந்திருக்க முடியாது. பம்பரம்போல் சுற்றி, எங்கும் உள்ளவராய், யாரும் கண்டு பேசக்கூடிய மாதிரி எளியவராய், தம் சொல்லாலும் செயலாலும் எல்லோர் மனத்தையும் குளிரச்செய்கிறவராய் உழைத்தார். ஆசாரியாரிடத்தில் அவருக்குள்ள பக்தியையும், ஆசாரியார் அவரிடத்தில் செலுத்திய அன்பையும் வார்த்தைகளால் சொல்லிக் காட்ட முடியாது."** இராமகிருஷ்ண தீட்சிதருடைய இந்த வார்த்தைகளைக் கேட்டு நான் பூரிப்படைந்து போனேன்.

1968-ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் சென்னையில், உலகத் தமிழ் மாநாட்டையொட்டி நடைபெற்ற கலைக் கண்காட்சியைக் கலைக் கண்ணோட்டத்தில் அமைத்து, அதன் வாயிலாகத் தமிழ்நாட்டின் தொன்றுதொட்டு வரும் நாகரிகத்தையும் கலாசாரத்தையும் யாவரும் அறிந்து போற்றும்படி செய்த பெருமை அன்பர் கணேசனாருடை யதன்றோ? நான் ஒரு நாள் மேற்படி கலைக்கண்காட்சியைச் சென்று

பார்த்த பொழுது, அதன் ஒவ்வொரு பகுதியிலும் கணேசனாருடைய கைவண்ணத்தைக் கண்டு மகிழ்ந்தேன்; பலர் மெச்சிப் பேசிக் கொண்டிருந்ததைக் காதாரக் கேட்டேன்.

தமிழ்நாட்டில் சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் (கி.பி. 980-1016) செங்கோலோச்சிய ராஜராஜ சோழனுக்கு, வரலாற்று அறிஞர் பலருடைய ஒத்துழைப்பைப் பெற்றுப் பெருவிழா ஒன்றை வெற்றிகரமாக நடத்தி, அவனுடைய கலைப்பண்பையும் சமயத் தொண்டையும், தமிழராயினார் அதிசயிக்கும் வண்ணம் அறிமுகப்படுத்தியது, அன்பர் கணேசனாருடைய ஆக்கப் பணிகளில் சிறந்த ஒன்றாகும். இதன் மூலம் தமிழ்நாட்டின் வரலாற்றுக்குப் புதியதோர் அத்தியாயத்தைச் சேர்த்துவிட்டார் என்று சொல்வது மிகையாகாது.

★★★

**க**ணேசனாரைப் பொறுத்த மட்டில், அவர் எப்பொழுதும் தம்மை ஒரு தலைவராகக் கருதிக் கொண்டதுமில்லை, சொல்லிக் கொண்டதுமில்லை. தலைமைப் பதவிக்கு எப்பொழுதும் ஏதாவதொரு தலைவலி இருந்து கொண்டிருக்கும். அந்தப் பதவியிலிருப்பது, சறுக்கு மரத்தின்மீது நடனம் செய்கிற மாதிரி. ஒரு சாண் ஏற்றத்திற்கு முன், ஒரு முழம் இறக்கத்திற்குத் தயாராக இருக்க வேண்டும். தொண்டரா யிருப்பவர்களுக்கு இந்தத் தொல்லைகள் ஏதுமில்லை. என்றென்றும் தொண்டராயிருந்து கொண்டிருக்கலாம். இந்தச் சூட்சுமத்தை நன்கு அறிந்து கொண்டிருக்கிறவர் அன்பர் கணேசனார். அவர் வீட்டு முகப்பில், சிரித்த முகத்தோடும், கூப்பிய கரத்தோடும் கூடிய அவருடைய உருவப்படம் இருப்பது, அவர் ஒரு தொண்டர் என்பதற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறதல்லவா?



# அரசியல்வாதி கணேசன்

- டி.ஆர். அருணாசலம்

**1937**–இல் நான் கல்லூரியை விட்டு வெளியேறிய சமயம் - காரைக்குடியில் நடந்த தமிழ் மாகாண அரசியல் மாநாட்டில் கலந்து கொண்டேன். அதில் அன்பர் கணேசனாரை அம்மாநாட்டின் பொதுச்செயலாளராக - அரசியல்வாதியாக முதன் முதலில் சந்தித்தேன். அவர்களின் துடியான பேச்சு, அயராத உழைப்பு, எதையும் பக்குவமாக, நாசூக்காகப் பணிபுரியும் தன்மை-இவ்வரிய குணங்கள் என்னைக் கவர்ந்தன. அன்று முதல் அரசியலில் தீவிரமாக ஈடுபட நேர்ந்ததனால், அவர்களை அடிக்கடி சந்திக்கவும் சேர்ந்து பணிபுரியவும் வாய்ப்புப் பெற்றேன். 1941-ஆம் ஆண்டுத் தனிநபர் போராட்டத்தில், செட்டிமார் நாட்டுக்கே, முதலாவது சத்தியாக்கிரகியாக, மகாத்மாஜியினால் தேர்ந்தெடுக்கப்பெறும் பேறுபெற்றேன். திரு. கணேசன் தளபதியாக முன்னின்று, சிறந்த முறையிலே இப்போராட்டத்தைத் தேவகோட்டை யிலே தொடங்கி வைத்தார்கள். அன்றைய பிரிட்டிஷ் சர்க்காருக்கு அனுசரணையாக இருந்த சில கனவான்களின் ஆலோசனையின் பேரில், நகரத்தார் யாரையும் சிறைப்படுத்தித் தண்டிக்காத ஒரு விசித்திரமான போக்கை மாவட்டக் கலெக்டர் கடைப்பிடித்தார். இதனால் என்னைக் கைது செய்து பதினைந்து நாள் ரிமாண்ட்டுடன் விட்டு விட்டனர். ஆனால், பின்னர் ஏனோ ஓரிரு மாதம் கடந்ததும், என்னைத் தண்டித்து, அலிப்புரம் சிறைக்கு அனுப்பிவிட்டனர். ஆனால், கணேசனாரைக் கைது செய்யவே இல்லை. எனவே, அவர்கள் மகாத்மாஜியின் கட்டளைப்படி ''சலோ டெல்ஹி'' எனக் கூவிக் கொண்டே, காரைக்குடியிலிருந்து தன்னந்தனியாகவே யுத்த எதிர்ப்புக் கோஷங்களை முழங்கிக்கொண்டு, பாத யாத்திரையாகப் பல கிராமம், குக்கிராமங்களைக் கடந்து, பல நூறு மைல்களைத் தாண்டிச் சென்னை மாநகரை அடைந்து, கோஷமிட்டுக் கைது செய்யப் பெற்று, நாலு மாதத் தண்டனை பெற்று, அலிப்புரம் சிறைக்கு வந்து சேர்ந்தார்கள். பாதயாத்திரையின்போது, வழியில் அடர்ந்த காடுகள், கரடுமுரடான பாதை, மிருகபயம், சோறு உறக்கமின்றி ஏற்பட்ட இடர்கள் -

இப்படியாகச் சொல்லொணாப் பலவித இன்னல்கள் அடைந்தார்கள். அவர்களின் பிடிவாத குணம், ஏற்ற பணியில் ஓர் உறுதிப்பாடு - இவை நன்கு பிரதிபலிக்கின்றன அல்லவா இதன் மூலம்?

சிறையில் அவர்களின் தமிழார்வம், இலக்கியச் சிந்தனை பலருக்குப் பெருவிருந்தாக அமைந்தன. குறள் வகுப்பு, கம்பராமாயண வகுப்பு மற்றும் பல இலக்கிய வகுப்புகளை நயமுடன் நடத்திப் பல அரசியல்வாதிகளுக்குத் தமிழில் பற்றும் ஆர்வமும் ஊட்டிய பெருமை இவர்களுக்கு நிறைய உண்டு. அவர்களின் தமிழ்ப்பற்று, நேர்மை, காலத்தைப் போற்றும் தன்மை, சுறுசுறுப்பு, விடாமுயற்சி, உறுதிப்பாடு ஆகிய நற்குணங்கள் - சிறையில் இருபத்து நான்கு மணி நேரமும் நெருங்கிப் பழகும் அரிய சந்தர்ப்பம் காரணமாகப் பல நூற்றுக்கணக்கான சிறைத் தோழர்களைக் கவர்ந்ததில் வியப்பில்லையே! அப்போதிருந்தே அவர்கள் இராஜாஜி அவர்களின் பரமானந்த சிஷ்யர்தான். அவர் வாக்கு, வேத வாக்குத்தான். ஆனால், 1942-போராட்டத்தில் மட்டும் குருவுக்கு எதிராகத் தீவிரப் போராட்டவாதியாக இறங்கிவிட்டார்கள். தேசபக்தி, காந்திபக்தி, சுதந்திர வேட்கை - இவைகளே இவர்களைப் போராட்டத்தில் தீவிரப் பங்குபெறச் செய்தன எனலாம்.

''வெள்ளையனே வெளியேறு'' எனக் கூறும் 1942-இல் நடந்த இறுதிப் போராட்டத்தில் இவர்கள் பங்கு சாலச் சிறந்ததாகும். இதில் இவர்கள் அடைந்த சிரமம், பெற்ற துன்பங்கள் கூறுவதற்கே அச்சப்படத் தக்கனவாகும். இற்றையத் தலைமுறைக்கு இவை தெரியாத விஷயங்களாகும். மாறுவேடம் பூண்டு பல மாதங்கள், பல மாவட்டங்களைச் சுற்றிப் போராட்டத் தீ அணையாமல் உத்வேகமாக ஊக்குவித்த பெருமை இவர்களுக்கு உண்டு. போலீஸார் வலை போட்டுத்தான் அரித்தனர். ஆனால், பிடிபடவில்லை. அக்காலங்களில், பல முறை பல இடங்களில் சந்தித்த எனக்கு, ஊக்கமும் உற்சாகமும் அளித்தார்கள். அக்காலங்களில் இவர்கள் உண்மையில் ஊண் உறக்கமின்றி அடைந்த இன்னல்கள் எழுத்தில் அடங்கா; விவரித்து எழுதும் திறனும் எனக்கு இல்லை. தேடியலைந்தும், பற்பல முயற்சிகள் செய்தும், இவர்களைச் சிறைப்படுத்த இயலாத நிலை காரணமாகப் போலீஸாருக்கு-அதிலும் அன்றையக் கொடுங்கோலாட்சியின் போலீஸாருக்கு-ஆத்திரம் ஏற்படத்தானே செய்யும். எனவே, இவர்களின் வீட்டில் அத்துமீறி நுழைந்து, அட்டகாசம் புரிய ஆரம்பித்தனர். பல அரிய விலை உயர்ந்த

பொருள்கள், மேஜை, நாற்காலி, கட்டில்கள், சுவர்க் கண்ணாடிகள் முதலியன துவம்சம் ஆக்கப்பட்டன. பல ஆயிரம் மதிப்புள்ள சாமான்கள் குண்டர்களால் சூறையாடப்பட்டன. இவர்களுக்கு ஏற்பட்ட நஷ்டம் எழுதுவதற்கே இயலாததொன்றாகும். இம்மாதிரி அட்டூழியங்கள் இப்பகுதியிலே எங்குமே யாருக்குமே ஏற்படவில்லை. இருப்பினும், தொடர்ந்து மறைமுகமாகவே இருந்து போராட்டத்தை மேலும் ஊக்குவித்தார்கள். இறுதியாகப் பல மாதங்களுக்குப் பிறகு, உற்ற தோழர்கள் சிறைப்படுத்தப்பட்ட பின்னர்ச் சென்னையில் போலீஸ் கமிஷனரிடம் சரணடைந்தார்கள். அப்போதும் அதிகார வர்க்கம் இவர்களுக்குத் துன்பம் இழைக்கத் தவறவில்லை. பலவிதச் சிரமங்களை இழைத்த பின்னரே, தண்டனை கொடுத்து, அலிப்புரம் சிறைக்கு மீண்டும் அனுப்பினர். சுதந்தரத்துக்காக இவர்கள் அடைந்த சிரமங்கள் கணக்கில் அடங்கா. இப்பகுதிவாழ் மக்களிலே தியாகத்தில் மிக்கார் இவர்களைக் காட்டிலும் பிறிதொருவரைக் குறிப்பிட இயலாது.

எந்த விஷயத்தையும் சர்வ சாதாரணமாகவே நோக்கும் பண்புடையவர்கள் கணேசனார். நன்மை வரின் பரபரப்படைதலோ தீமை வரின் துக்கமடைதலோ, தேவையற்ற விஷயத்தை அறிவதில் ஆவலுறுவதோ கிஞ்சிற்றும் இல்லாத குணம் பெற்றவர்கள். தீது நேர்ந்திடில் நம்மில் பலர் செய்வதே போலத் தலையில் கையை வைத்துக்கொண்டு, முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு, ஒரு மூலையில் சோர்ந்து விழுந்து கிடக்கின்ற குணம் அற்றவர்கள். கப்பலே கவிழ்ந்தாலும் கலங்காத உள்ளம் படைத்தவர்கள். உதாரணம், 1957 தேர்தல்.

அகில இந்தியாவிலேயே மிகப் பரபரப்பான தேர்தல்கள் பன்னிரண்டில் இது ஒன்று என அறிஞர்கள் கூறினர். பாரத மக்கள் ஆவலுடனும் ஆர்வத்துடனும் கவனித்த தேர்தலாகும். சுமார் ஆயிரத்து எண்ணூறு வாக்குகள் வித்தியாசத்தில் கணேசனார் தோல்வியுற்றார்கள். ஈடுபட்ட ஊழியர்களுக்குப் பேரிடி. பலர் சோர்ந்தனர். சிலர் தேம்பி யழுதனர். சிலர் படுக்கையில் நோயுடன் விழுந்தனர். ஆனால், கணேசனார், தேர்தல் சமயம் இருந்ததைவிட, அதிக உற்சாகமுடன் ஊழியர்களுக்குத் தைரியம் அளித்து உரையாற்றிய செய்கை ஒன்றே போதும். அவர் தைரியத்துக்கு. எதையும் தாங்கும் இதயம் கொண்ட பண்பான அரசியல்வாதி கணேசனார் என்பதை அந்தத் தேர்தல் முடிவு தெரிந்த பின்னர்த் தமிழகம் அறிய முடிந்தது.



# நினைவில் நிற்கும் சா. கணேசனார்....

**- கல்லல் சோம. சண்முகம் செட்டியார்**

**சா.**க.வுடன் பல ஆண்டுகள் எனக்கு நெருங்கிய தொடர்பு இருந்தது. வேகம், சுறுசுறுப்பு, நேரந் தவறாமை, எடுத்த காரியத்தை நல்ல திட்டம் தீட்டி திறம்பட நிறைவு செய்தல், ஆளுமை திறன் முதலிய ஒப்பற்ற குணங்கள் உடையவர்கள். இதற்கு எடுத்துக்காட்டு கம்பன் விழா காரைக்குடியில் நடத்தியது. நாம் எல்லோரும் கண்டு வியந்தது. ஒரு நிமிடம் கூட முன் பின் இல்லாமல் நிகழ்ச்சிகளை நடத்தும் திறன், பல தமிழ் விற்பன்னர்களை அழைத்து தமிழ் இலக்கிய மேம்பாட்டிற்கு உழைத்த பெருமை, அர்ப்பணிப்பு. நம் இனமும் மற்றவர்களும் மெச்சும்படி வாழ்ந்தவர்கள். இதே மாதிரி நம்மினத்தில் பல அன்பர்கள் வரவேண்டும், எடுத்துக்காட்டாக நாம் இருக்க வேண்டும்.

கல்லலில் என் சின்னையா பேரன் ராஜாராம் அவர்கள் சா.க.வுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர்கள். இருவருக்கும் தகப்பன் - மகன் மாதிரி உறவும், பிணைப்பும். இட்ட காரியத்தை செவ்வனே செய்து முடிப்பவர்கள். சா.க.வுக்கு இவர்கள் மேல் அலாதி பிரியம். நாட்டரசன் கோட்டைக்கு கம்பன் விழா கடைசி நிகழ்ச்சிக்குச் செல்லும் பொழுது கல்லல் வந்து ஓய்வெடுக்கும் சமயம் ராஜாராம் அவர்கள் வந்தவர்களுக்கெல்லாம் ஒரு சிறு விருந்து கொடுப்பார்கள். இதை ஒவ்வோராண்டும் செய்து வந்தார்க்ள. சா.க.வும் கலந்து கொண்டு பெருமைப்படுத்துவார்கள்.

ராஜாராமுக்கும் பாகனேரி முன்னாள் அமைச்சர் ஆர்.வி. சுவாமிநாதனுக்கும் காங்கிரஸ் அமைப்பு சம்பந்தமாக விவகாரம் வந்தபோது சா.க. அவர்கள் ராஜாஜி அவர்களிடம் அதை எடுத்துச்

சென்று பிரச்னையை தீர்த்து வைத்தார்கள். தமிழ்நாடு காங்கிரஸ் தேர்தலில் சா.க.வும், காமராசரும் போட்டியிட்டதில் சில ஓட்டுகள் வித்தியாசத்தில் வாய்ப்பு கிடைக்கவில்லை. இதில் வெற்றி பெற்றிருப்பின் சா.க. அவர்கள் தமிழ்நாடு முதல்வராகக் கூட வந்து ஆட்சி செய்திருப்பார்கள். முன்னாள் முதல்வர் ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் போல் நம் சா.கவும் நேர்மையான அரசியல்வாதி. இதேமாதிரி அப்பழுக்கற்ற, நேர்மையான, கொள்கைப் பிடிப்புள்ள, சுயநலமற்ற, பந்தாபடாடோபமில்லாத அரசியல்வாதிகளை இப்பொழுது அரசியல் வானில் காண்பது, சந்திப்பது, மிகமிக அரிது.

டாக்டர் அழகப்ப செட்டியார் கல்லூரிக்காக ஆரம்ப காலத்தில் சா.க. செய்த உதவிகளை மறக்க முடியாது. டாக்டர். செட்டியாரின் வலது கரம் போல் உண்மையாக கல்லூரி வளர்ச்சிக்கு உழைத்தவர்கள். நான் படித்தது இந்தக் கல்லூரியில்தான். சா.க.வைப் போல ஒரு உயர்ந்த மனிதர் டாக்டர் செட்டியாருக்குக் கிடைத்தது, ஒரு பெரும் பாக்கியம்.

சா.க.வைப் போல் மறுபடி ஒரு உன்னத மனிதரை வருங்காலத்தில் பார்ப்பது அரிது. தொண்டுள்ளம், உதவிகள் செய்வது, நேர்மை, தியாகம், எளிமை எல்லாம் ஒரு சேர பெற்ற ஒப்பற்ற மனிதர். நினைந்து போற்றுவோமாக.

*(**பின்குறிப்பு :** கம்பன் திருநாள் சரித்திரத்தில் கல்லல் ராஜாராம் அவர்கள் மறக்க முடியாத ஒரு மாமனிதர் ஆவார். நாட்டரசன் கோட்டை கம்பன் திருநாளுக்குச் செல்லும் அன்பர்கள் அத்துணை பேருடைய தாகத்தையும் தீர்த்து மகிழ்ந்து, மகிழ்வித்த மாபெரும் தொண்டர். அவரையும், அவர் தொண்டையும் நினைவு கூர்வதே கம்பன் அடிப்பொடிக்குச் செலுத்தும் அஞ்சலியாகுமன்றோ?)*



# கணேசன்
# ஒரு பல்கலைக் கழகம்

– சு. குழந்தைநாதன்

## வித்தியாசமான மனிதர்:

*"கம்பன் வாழ்க! கம்பன் புகழ் வாழ்க!!*
*கன்னித் தமிழ் வாழ்க!!!"*

எனக் கணீரெனக் குரல் கொடுத்து, அரை நூற்றாண்டளவாகக் கம்பனோடு கன்னித் தமிழை வாழ்வித்துத் தொண்டாற்றிய அமரர் திரு. சா. கணேசன், பதவி மோகமும் சுயநலநாட்டமும் உச்சம் பெற்றுள்ள தொரு காலகட்டத்தில், அன்னவர் தொண்டுக்கே ஆட்பட்டவராய்த் தொண்டருக்கும் தொண்டராய்ப் பணிபுரிந்து, "வித்தியாசமானதொரு மனிதராய்" விளங்கினார்.

*"நினக்கென வரைந்த ஆண்டுகள் எல்லாம்*
*மனக்கினி தாக வாழிய"*

என்ற கம்பன் வாக்கிற்குச் சிறந்ததொரு இலக்கியமாய் வாழ்ந்த அண்ணல் கணேசனின் வாழ்க்கை ஏடு, எழுபத்தைந்து ஆண்டுகளால் ஆனதொரு சகாப்தமாகி, 28-7-1982-இல் அமரத்துவம் பெற்றுவிட்டது. தம் புகழைவிடத் தாம் மதித்துப் போற்றும் அன்பர்களின் புகழைப் பரப்பும் ஒரு கருவியாகவே காலமெல்லாம் வாழ்ந்த சா. கணேசனின் உயரிய பண்புகளையும் அரிய தொண்டுகளையும் கொண்டமைந்த அவ்வாழ்க்கைப் பொன்னேடு கம்பன் உள்ளவரை, கன்னித்தமிழ் உள்ளவரை பல்லாயிரவர் வாழ்வுக்கு வழிகாட்டி நிற்கும்.

## மூன்று காதல்

மகாகவி பாரதிக்கு ''மூன்று காதல்'' மூண்டெழுந்ததுபோலத் தம் வாழ்விலும் மூவர்மீது ஆறாக்காதல் ஏற்பட்டதென்பார், சா. க. ''அதனை வெறும்மோகம் என்பதைவிட ஒருவகை வெறியால் எழுந்த இலட்சிய வேகம்'' என்று மனநிறைவுடன் சொல்லிக் கொள்வார். மகான் காந்தியடிகளின் ஊழியனாகித் தேசபக்தர் காதலுற்றார்; தென்னாட்டுக் காந்தி இராஜாஜியின் மானசீகத் தொண்டனாகிச் சத்தியவேட்கை கொண்டார்; கம்பனோடு அவருக்கு ஏற்பட்ட அறிமுகம் இலக்கியக் காதலாய் அரும்பி, என்றும் வாழும் தெய்விக உறவாய் மலர்ந்து, கம்பன் அடிப்பொடியாக அவரைக் கனிய வைத்தது! கம்பன் கொடுத்து வைத்தவன். 9-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அவனைப் பெற்ற தந்தையினும் பேணிக்காத்தார், வெண்ணெய்நல்லூர்ச் சடையப்ப வள்ளல். 10 நூற்றாண்டுகட்குப் பின்னர், மறுபடியும் அவன் புகழைப் பரப்பவும், ''கம்பன் அடிப்பொடி' எனத் தம் பெயரையே மாற்றி வைத்துக்கொள்ளவும் ஒருவர் வந்தமைந்தது கம்பனுடைய **பேறுதான்!**

## ''நானொரு இந்தியன்''

1908-இல் காரைக்குடி சாமிநாதன் செட்டியாரின் மகனாய்ப் பிறந்து, தமிழ்க்கல்வி பயின்று, தனவணிகத் தொழில் பழகிவந்த கணேசனைக் காந்தி சகம் கவர்ந்திழுத்தது. 1928-இல் சுதந்திரப் போரில் ஈடுபட்டார்; 1941 சத்தியாக்கிரகத்திலும் 1942 ஆகஸ்டுப் புரட்சியிலும் கலந்துகொண்டு சிறைக்கோட்டம் புகுந்தார். அவரைக் கைது செய்த போது, அவருடைய பெரிய வீட்டில் இருந்த பொருள்களையெல்லாம் அரசாங்கத்தார் அள்ளிச் சென்றார்கள்; அதற்கெல்லாம் அஞ்சாமல், ஏகாதிபத்திய அடக்குமுறை நீட்டிய துப்பாக்கி முனைக்கு எதிராக நெஞ்சை நிமிர்த்திச் சட்டையைத் திறந்து காட்டிச் 'சுடு' எனத் துணிந்து நின்ற தீரர் அவர். போலீசார் அவருடைய சட்டையைக் கிழித்தெறிந்து வெறும் மேனியாக நிற்க வைத்தனர்; அதையெல்லாம் சட்டை செய்யாமல் அன்று முதல் சட்டை அணியமாட்டேன் எனும் சங்கற் பத்தைக் கொண்டார். அரையாடை பூண்ட அண்ணல் மகாத்மாவின் உண்மைத் தொண்டரான அவர், கடைசிவரை சட்டை போடாக் கணேசனாகவே வாழ்ந்தார். ஆகஸ்டுப் புரட்சிக்குப் பின்னர், குற்ற விசாரணை நடந்தபோது, வழக்கு மன்றத்தில் ''உம் சாதி என்ன?'' என்று

கேட்டபோது, சாதிப் பெயரைச் சொல்ல மறுத்து ''இந்தியன்'' என்று ஆணித்தரமாகச் சொன்னார்!

## இராஜாஜி பக்தர் :

இராஜாஜியை அரசியல் தலைவராய் மட்டுமன்றித் தம் ஆசானாகவே ஏற்று அவரிடம் அளவற்ற பக்தி பூண்டொழுகினார். 1946-இல் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் தேர்தலில் காமராஜருக்கு எதிராக சா. கணேசன் நிறுத்தி வைக்கப்பட்டார். காமராஜரே வெற்றி பெற்றார். தேர்தல் முடிந்த பிறகு, காமராஜர் இராஜாஜியிடம் பேசிக்கொண்டிருந்தபோது, ''கணேசன் வெற்றி பெற முடியாது எனத் தெரிந்திருந்தும் அவரை ஏன் நிறுத்தினீர்கள்?'' எனக் கேட்டார். அதற்கு இராஜாஜி, ''அதனால் என்ன? வேறு தக்க நபர் கிடைக்கவில்லை. கணேசனுக்கு இதிலென்ன நஷ்டம்? வெற்றி பெற்றால் லாபம், தோல்வியுற்றால் நஷ்டப்பட என்ன இருக்கிறது? கணேசன் எதையும் பொருட்படுத்தமாட்டார்!'' என்றாராம். அந்த அளவுக்கு இராஜாஜியின் வழிபற்றி வாழ்ந்தார் சா. கணேசன். 1930-1940 வரை காங்கிரஸ் இயக்க வரலாற்றிலும், அதன் பின்னர் நாடு விடுதலை பெற்ற அண்மையிலும் இராஜாஜி பெற்றிருந்த அரசியல் செல்வாக்கை எண்ணி எண்ணி வியப்பார். காங்கிரஸ் வெகுஜன இயக்கம் ஆன பின்னர் அதன் தலைவராகத் தமிழ் நாட்டவரோ தென்னாட்டவரோ வருவது அவ்வளவு எளிதில்லை என்றும், இராஜாஜிபோலச் சிலர் மட்டும் இதற்கு விதிவிலக்காயிருந்தனர் என்றும் சொல்லி மகிழ்வார்.

## ஒப்பற்ற இலக்கிய விழா!

காரைக்குடிக் கம்பன் திருநாள் எல்லாவகையிலும் தனிச் சிறப்புடையது. ஒவ்வோர் ஆண்டிற்கும் உரிய பேச்சுத் தலைப்புகளைக் கணேசன் முன்கூட்டியே தீர்மானம் செய்து கொள்வார்; ஒரு முறை வந்த தலைப்பு மறுபடியும் வராவண்ணம், சுவையும் பயனும் நல்கும் வண்ணம் நிகழ்ச்சி நிரலைத் தொகுப்பார்; விழாவில் பங்கேற்போரைப் பல மாதங்கட்கு முன்னரே தெரிவு செய்து, 'உங்கட்கு இதுதான் தலைப்பு' என எழுதிவிடுவார். தமக்குப் பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும் அதை ஒரு கட்டளையாகவே ஏற்று, அன்பர்கள் வந்து சேர்ந்து விடுவர்; அப்படி

ஒருவர் வரவியலாது போனாலும் நிகழ்ச்சிக்குத் தடையேற்படா வண்ணம் மற்றொருவரை ஒரு நொடியில் தயாரித்து மேடையேற்றி விடுவார். கம்பன் விழாக் கவியரங்கமும் பட்டிமன்றமும் தனிச் சிறப்புடையவை; நாடெங்கும் வளர்ந்து வரும் பல்வேறு இலக்கியப் பணிகட்கு வரம்பாகவும் வழிகாட்டியாகவும் இலங்குபவை. கம்பனை எதிர்க்கவேண்டும் என ஒரு காலத்தில் வாதிட்டோரையெல்லாம் அவன் புகழ் பாடச் செய்த பெருமை காரைக்குடிக்கும் கணேசனுக்குமே சொந்தம்!

## காலம் தவறாத விழா:

''கம்பன் விழா என்றால் கடிகாரங்கூடச் சரியாக ஓடும்!'' என்பார்கள். அதிலும் கணேசன் கட்டியிருக்கும் கடிகார முள்ளோடு இசைந்து பிறருடைய கடிகாரங்களும் சுழலும் அதிசயத்தை அங்கேதான் காணலாம். யார் வந்தாலும் வராவிட்டாலும் உரிய நேரத்தில், விநாடி பிசகாமல் நிகழ்ச்சியைத் தொடங்கிவிட்டே கணேசன் அமர்வார். முதலமைச்சராயிருந்த கலைஞர் மு. கருணாநிதி, விழாத் தலைமையேற்க இசைந்திருந்தார்; அவர் சரியான நேரத்துக்கு வந்துவிட முயன்றும், ரயில் தாமதத்தால் உரியவாறு வரவியலவில்லை. அதற்காக ரசிகர்களைக் காக்க வைக்காமல், நிகழ்ச்சியைக் குறிப்பிட்ட நேரப்படி தொடங்கிவிட்டார் கணேசன். நிகழ்ச்சிக்குத் தாமதமாகச் செல்வதைக் கிட்டத்தட்ட வழக்கமாக்கிக்கொண்ட கவியரசு கண்ணதாசன்கூடக் கவியங்கத் தலைமை ஏற்க உரிய நேரத்தில் விரைந்தோடி வந்துவிட்டார்! காலம் போற்றுவதில் கணேசன் அவ்வளவு கண்டிப்பாயிருந்தார்!

## மணிவிழா மாண்பு:

அந்த மணிவிழா சா. கணேசனின் புகழுக்குப் பொன்முலாம் பூசியது. அன்பர்கள் ஒரு லட்ச ரூபாய்க்கு மேல் நிதி தொகுத்து வழங்கியபோது, ''என் மேல் உள்ள அன்பினைக் கம்பன்மீதும் காட்டுங்கள்; அவன் புகழும் தமிழ்ச் செல்வமும் பரவ ஆக்கம் தாருங்கள்!'' என நயந்து கேட்டு, தமக்களித்த நிதியைக் கொண்டு ''கம்பன் அறநிலை''யினைத் தொடங்குவதாக அறிவித்தார். அன்று தந்நலமற்ற தொண்டுலகில் ஒரு புதிய வரலாறு பிறந்தது; அது கம்பன்

மணி மண்டபமாக, தமிழ்த்தாயின் கோயிலாகக் காரைக்குடியில் வளரத் தொடங்கிற்று; கணேசனைப் பொறுத்தவரை அது ஒரு தெய்வ வேள்வியாகவே உருப்பெற்று வந்தது!

சுமார் 20 லட்ச ரூபாய் மதிப்பீடுடைய கட்டடப் பணிக்கு ஈராண்டிற்குள் 5 லட்ச ரூபாய் வரை நிதி திரட்டி, அதன் மனை மங்கல வாழ்வை 1972இல் சிறப்புற நடத்திவிட்டார் கணேசன்! அந்தப் பணிக்கு ஆட்பட்ட நாள் முதல், தம் பெயரையும் 'கம்பன் அடிப்பொடி'யாக்கிக் கொண்டார்; கம்பனுக்கு உதவிட விழையும் அன்பர்களின் திருவடி களையெல்லாம் தம் சிரத்தால் தாங்கிச் சேவை செய்யக் காத்திருந்தார்!

## மணி மண்டபம்:

140 அடி நீளமும் 100 அடி அகலமும் கொண்ட, நடுவில் தூண்களேதுமற்ற, மாபெரும் மணி மண்டபமாக அது எழுந்தது; பழைய கலை மரபும் புதிய பொறியியல் மெருகும் கலந்தமையச் சடையன் பெருவாயிலும், சேர சோழ பாண்டியத் திருவாயில்களும், தமிழ்ச்சான்றோர் பெயரமைந்த 18 கலை வாயில்களும் கொண்ட பெரியதொரு கலை மாளிகையாக அது வளர்ந்தது. அதனருகில் தமிழ்த்தாய்க்கென அமைந்ததொரு அழகிய கோயிலும் கலைப் படைப்பாய் உருவாகத் தொடங்கியது. கம்பன் மணி மண்டபத்தில் கம்பராமாயணத்தையும் தமிழ்க் கலைகளையும் ஆய்வு செய்யும் தனிப் பல்கலைக்கழகம் ஒன்றைக் காலப்போக்கில் நிறுவுவதற்கான திட்டங்களையும் கணேசன் உருவாக்கி வந்தார்.

## பல்கலைக் கழகம்

கணேசனையும் ''ஒரு பல்கலைக்கழகம்'' என்றே அவரிடம் நெருங்கிப் பழகிய அன்பர்கள் மதித்துப் போற்றுவார்கள். தமிழ் இலக்கியத்திலும் பாவியல் வகைகளிலும் அவருக்குத் தெரியாத நுணுக்கமில்லை; கம்பன் கவியரங்கிற்கு எழுதி அனுப்பப்பெறும் கவிதைகளை ஆங்காங்குத் திருத்திக் கவிஞரின் மனம் கோணாமல் மெருகூட்டித் தருவது அவருக்கே உரிய தனிக்கலை; கம்பனை எழுத்தெண்ணிக் கற்று, இராம காதைக்கு மக்கள் பதிப்பொன்றினைக் கொணர அவர் மேற்கொண்ட அயரா உழைப்பு ஒரு தனி இலக்கிய

வரலாறு. அவர் ஆண்டுதோறும் வெளியிட்டு வரும் ''கம்பன் மணி மலர்'' வரிசை, தமிழ் இலக்கிய வளத்திற்குச் செய்யப்பெறும் ஒப்பரிய திருப்பணி!

## அறிவுக் களஞ்சியம் :

கல்வெட்டுக் கலையில் அவர் ஒரு 'அத்தாரிட்டி'யாகவே மதிக்கப் பட்டார். சிற்ப, படிமக் கலைகளிலும், ஆலய, ஆகம முறைகளிலும் அவருக்கிருந்த ஈடுபாட்டிற்கு ஈடு சொல்லவே முடியாது. சென்னை உலகத் தமிழ் மாநாட்டில் அவர் உருவாக்கிய காட்சிக் கூடம், அவருடைய பரந்துபட்ட பல்துறை அறிவுக்கெல்லாம் சான்றாக விளங்கியது. கம்பன் பணியொடு கல்விப் பணியிலும் நாட்டம் கொண்டார். அழகப்பரின் கல்விப் பணிகளுக்கெல்லாம் தோன்றாத் துணை புரிந்தார்; அவர் நடத்தும் ''கற்பகம்'' தமிழ்நாட்டுக் கல்விமுறைக்கமைந்ததொரு பரிசோதனை முயற்சி எனத் துணிந்து சொல்லலாம். பிறமொழி வெறுப்பில் பொழுதை வீணாக்காமல், தாய்மொழியை ஊக்கியும் ஊட்டியும் வளர்க்க வேண்டும் என்பார். தமிழில் அறிவியல் கலைச்சொற்களை உருவாக்க, அமரர் ராஜாஜி கொணர்ந்ததொரு திட்டத்திற்குத் துணை நின்றார். நீதிபதி மகராஜன் ஒருமுறை பாராட்டியதுபோல, கணேசன் பலருக்கு அறிவுக் களஞ்சியமாகவும் தமிழ் மரபுக் காவலராகவும் இலங்கினார்.

## நட்புச் செல்வம் :

''குகனொடும் ஐவரானோம்: நின்னொடும் அறுவரானோம்!'' எனக் காண்டந்தொறும் வளர்ந்த இராமகாதை நட்புப் போல, கணேசன் ஆண்டுதோறும் நட்புச் செல்வத்தைப் பெருக்கிக் கொண்டார்; பழைய நண்பர்களை மறவாமலே புதிய நண்பர்களை உறவுப் பாலங்களாக்கிக் கொண்டார். இவ்வாறு பாங்கறிந்து பழகும் அவருடைய பண்பால் கவரப்பட்ட அறிஞர் பெருமக்கள் எண்ணற்றோர் ஆவர். டி.கே.சி.யை இந்த நூற்றாண்டுக் கம்பனாகக் கொண்டார்; பன்மொழிப்புலவர் தெ.பொ.மீ.யைக் குருநாதராக மதித்தார். அழகப்பரின் கொடை நெஞ்சத்திற்குத் தலை வணங்கினார். 'அசீரா'வின் ஆங்கில இலக்கியப் பார்வையிலும் வாரியாரின் ஆன்ம இலக்கிய உரையிலும் தம்மை

மறப்பார். இத்தகைய ஆழமான நட்பினை அரசியல் உலகில் அவரால் பேண முடியவில்லை. அவருடைய கண்டிப்பும் கடமை நாட்டமும் பலருக்குப் பிடிக்காமையால், அரசியல் நட்புகள் பாதரசம் போலவே ஏறி இறங்கின. ஆனால், சுதந்திராக் கட்சி அறிமுகத்தால் நெருக்கமான தொழிலதிபர் திரு. ஜி.கே. சுந்தரம் போன்றோருடன் கொண்ட நட்பு, கணேசனைப் பொறுத்தவரை "சுந்தரகாண்ட நட்பாகவே" கடைசிவரை நீடித்தது. அவருக்கு இறுதிவரை ராஜவைத்தியம் செய்து, ஈமக்கிரியை களில் கண்ணீர் மல்க உடன் நின்று, நட்புக்கெல்லாம் உயரியதோர் உதாரணமாகவே அமைந்தார், திரு. ஜி.கே. எஸ்.

கம்பன் மணி மண்டபமும் தமிழ்த்தாய்க் கோயிலும் பூரணம் பெற்று, கம்பன் பல்கலைக் கழகம் அங்கு நிலை பெறும்போதே கணேசனின் ஆன்மாவும் சாந்தி பெறும்!

## கணேசன் வாழ்க!

'கம்பன் என்றொரு மானிடன்' வாழும் காலம் வரை, "கணேசன்" எனும் தொண்டனின் புகழும் நிலை பெற்று நிற்கும். "கம்பன் வாழ்க, கம்பன் புகழ் வாழ்க! கன்னித்தமிழ் வாழ்க" என அரைநூற்றாண்டுக் காலமாகக் கணேசன் பரப்பிய மந்திரச் சொற்களொடு, "கணேசத் தொண்டு வாழ்க!" என்பதும் இனி வரிசை சேர்ந்து கொள்ளும். வாழ்க கம்பன் அடிப்பொடி!



# புதிய பாற்கடல்

– பேராசிரியை ஆ.ரா. இந்திரா

**ம**காகவி ஒருவன், பல நூற்றாண்டுகளுக்கு முன்னால், நம் தெய்வத் தமிழ்நாட்டில், கவிதாதேவியை உபாசிக்கும் தவத்தில் ஒன்றிநின்று, நிஷ்டையில் அமர்ந்துவிட்டான்.

இரவு எது, பகல் எது, மருள் எது, பொருள் எது, தாழ்வு எது, வாழ்வு எது, குறைவு எது, நிறைவு எது என்று இவ்வாறாகப் பல நிலைகளைக் குறித்து வினவி, ''இரட்டைச் சலன'' இயக்கத்தில் இருந்து, ஒதுங்கி நின்று, ''எல்லை ஒன்று இன்மை'' என்னும் பொருளினைக் கண்டு, தரிசித்து, மற்றவர்களுக்குக் காட்டவும் முயற்சி செய்யும் முனைப்பில் (தவம் என்பது தளரா முயற்சிதானே?) அவன் ''த்யான ஸ்வரூபி''யாய்ப் பொலிந்து தோன்றினான்.

அப்பொழுது, எங்கிருந்தோ ஓர் 'ஓசை' காற்றில், மிதந்து வந்தது. அவன் அகச்செவிகளில் பாய்ந்தது.

அந்த நாதத்தால் ஈர்க்கப்பட்டு, அவன் நிஷ்டை ஓரளவு கலைந்தது. ''கண்களை முழுவதும் திறவாமல், ''இந்த நாதம் எங்கிருந்து வருகின்றது?'' என்று பட்டும், படாமலும், தன் சிந்தனையைச் சற்றே அசைத்தான். அவன் உள் உணர்வு, மிகுந்த இங்கிதத்துடன், ''எங்கிருந்தும் வரவில்லை அந்த நாதம், எங்கும் நிறைந்துள்ள அது, உன் உள்ளத்தில் இருந்து எழும்பி, வெளியே சென்று, ஓர் இருப்பிடத்தைக் கண்டு, அங்கே கலந்து, மீண்டும் உன்னிடமே திரும்பி வருகின்றது'' என்று ரகசியம் பேசியது.

மீண்டும் கண்களை மூடிய மகாகவி, தன்னுடைய மானசீக உலகத்தில், தன்னை நோக்கித் தவழ்ந்து வரும் ஓசையில் லயித்தான்; ஓசை வரும் திசையில், தன் கால்கள் திரும்புவதையும், உருவெளித் தோற்றத்தில் தான், மெல்ல, மெல்ல அந்த திசையை நோக்கி, நடந்து செல்வதையும் உணர்ந்தான். நடந்து, நடந்து, செல்லச் செல்ல அற்புதமான காட்சி ஒன்று படிப்படியாய், மனக்கண் முன் விரிந்து கொண்டே வந்தது.

அந்தக் காட்சி!...
எதிரே, அலைகள் விம்மும் கடல்.
என்ன கடல்?
உப்புநீர்க் கடல் அன்று;
தேன்கடல் அன்று;
நெய்க்கடல் அன்று;
தயிர்க்கடல் அன்று;
சுத்தஜலக்கடல் அன்று;... பிறகு?...
அது... அது...
பாற்கடல்... பாற்கடல்

பாற்கடல்தான். ஆனால், அதில் பாம்பணையோ, அதில் பள்ளி கொள்ளும் பரந்தாமனையோ, அவனிடமிருந்து ஒரு வினாடியும் பிரியாத திருமாமகளையோ, நாபிக்கமலத்தையோ, பிரம்ம தேவனையோ காணோமே! இப்படித் திகைத்து, அலை ஓசையின் ஒலியை நிர்ணயிக்கும் முயற்சியில் ஈடுபட்டு, 'ஓம்', 'ஓம்', 'ஓம்' என்று ஜபிக்கத் தொடங்கினான்.

ஆனால், மகாகவியின் 'இதய வீணை'யை மீட்டிக்காட்டுவது போல், கடல் ஓசை.

''ராம்'' ''ராம்'' ''ராம்'' என்று எதிரொலி செய்தது.

''ஓம் ஓம் ஓம்'' ''ராம் ராம் ராம்'' அவ்வளவுதான். மகாகவியின் உள்உணர்வு பூரித்துப் பொங்கியது.

''ஆஹா! இது பாற்கடல்தான்.

ஆனால், க்ஷீராப்திநாதன், பள்ளி கொள்ளும் அந்தப் பாற்கடல் அன்று;

**இது ஓர் புதிய பாற்கடல்.**

ஆம்; ''இராமகாதை'' என்னும் புதிய பாற்கடல்!

தன் ஓசையால், என்னை அழைத்து, எனக்குத் தரிசனம் அளித்த பாற்கடல்!

கரையில் வந்து நிற்கின்றேன்!

பாற்கடலைப் பார்த்துப் பார்த்து பரவசம் அடைகின்றேன்.

பாற்கடல் முழுவதையும், ஒரு 'சொட்டு'ப்பால் கூட மீதமில்லாமல், பருகிவிட முடியுமா? அதுவே என் ஆசை.

நான் என்ன, ஒரு சின்னஞ்சிறு பூனைக்குட்டியைப் போன்றவன். பாலின் சுவை பூனைக்குத் தெரிந்திருக்கலாம். ஆனால், ஒரு பாற்கடல் முழுவதையும், அது எப்படிப் பருக முடியும்? அதற்கு, நக்கி, நக்கித் தானே பருக முடியும்? இது ஈடேறும் ஆசையா?

ஆனால், என் தாகத்தையும் ஆசையையும் அடக்க முடியவில்லையே!

''இராமகாதை'' என்னும் புதிய பாற்கடலை, முழுவதும் அனுபவித்து விடவேண்டும்.

அதை அப்படியே, மீண்டும், சுவை கலையாமல் ''காவிய வடிவில்'' ''நடையில் நின்றுயர் நாயகன்'' திருவடியில் சமர்ப்பித்து விட வேண்டும்.

இது முடியுமா?... இது முடியுமா?... எப்போது முடியும்?...

முடியும். எப்படி?... எப்போது?

மாசு, மறு இல்லாத, தலைமை வெற்றியைப் பெற்ற இராமன் தன்னைப் பற்றிய காதை, வெற்றியடைய வழிகாட்டாமலா போவான்? துணை நிற்காமலா போவான்? எனவே, வெற்றியோ, தோல்வியோ, எதுவானாலும், என் ஆசையை அடக்க முடியவில்லை; இதோ, இராமகாதையைக் கூறத் தொடங்கிவிட்டேன்.''

இங்ஙனம், பாற்கடல் அலையோசைக்கு இணை ஓசையாய், மகாகவியின், ''சித்த சாகரத்தில்'' சிந்தனை அலைகள், லட்சியவீச்சுக்கள் விம்மி எழுந்தன; கவிதை உருவம் தாங்கின; இராமகாதையை உருவாக்கத் தொடங்கின.

**''ஓசை பெற்று உயர் பாற்கடல் உற்று ஒரு**
**பூசை முற்றவும் நக்குபு புக்கென**
**ஆசைபற்றி அறையலுற்றேன்அக்**
**காசில் கொற்றத்து இராமன் கதைஅரோ''**

**(கம்ப. இராமா - அவை அடக்கம்-1)**

(பூசை : பூனை)

''கற்பார் இராமபிரானை அல்லால் மற்றும் கற்பரோ''... இது குலபதியின் அருள்வாக்கு. இந்த வாக்கினுடைய அனுபவ வடிவாகவே

திகழ்ந்தது மகாகவி கம்பனின் - கவிச்சக்ரவர்த்தி கம்பனின் - லட்சியப் பெருவாழ்வு. இந்தப் பெருவாழ்வின் ஆதார சுருதியான ''இராம பக்தி'' சொற்கோயிலாக நிமிர்ந்து நிற்கும் சாதனையே ''இராமகாதை''; ''இராமாவதாரப்பேர்த்தோமறு மாக்கதை''

இந்த அற்புதத்தத் திருப்பணியைத் தரிசித்து, அதில் இரண்டறக் கலந்து ஒன்றிவிட்ட இலக்கியமேதைகள் தான் எத்தனைபேர்! எத்தனைபேர்!

''யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'' என்னும் உவமைக் கொள்கையுடன், கலசம் கலசமாகப் ''புதிய பாற்கடலி''ல் இருந்து, பாலை மொண்டு கொண்டு வந்து, அதை அறிந்து கொள்ளாதவர்களுக்கு ஊட்டியவர் எத்தனைபேர்! அதன் விளைவாக, ''இராமகாதை'' என்னும் மந்திரச் சொல்லுடன் இணைந்து, ''கம்பன் கவிதை'' என்னும் மாமாயச் சொல்லும் அமரத்துவம் பெற்றுவிட்டதே! ''கற்பார் இராம பிரானை அல்லால் மற்றும் கற்பரோ'' என்னும் மகா வாக்கியத்துடன், ''கம்பநாடன் கவிதையைப்போல், கற்றோர்க்கு இதயம் களியாதே'' என்னும் இலக்கிய ரசனையின் ''ராஜமுத்திரையும்'' இரண்டறக் கலந்து, வீணையும், விரலுமாய் வாழ்கின்றனவே!...

இப்படி எல்லாம் எண்ணி, எண்ணி, நாம் பெருமிதம் அடையும் படி, தமிழ் இலக்கிய உலகில், ஒரு ''மாபெரும் சகாப்தத்தை'' உருவாக்கியவன் கம்பன்.

''அது சரி, கம்பன் அடிப்பொடி அவர்களின் பிறந்தநாள் ''நூற்றாண்டு விழா'' தொடர்பாக, அவரைப்பற்றி நேரடியாகச் சொல்லாமல்...'' என்று, வாசகர்கள் தயங்குகிறீர்களோ, என்னவோ!

மகாகவி-கவிச்சக்ரவர்த்தி - கம்பனின் பெருமையில் ஈடுபட்டு, கரைந்து நிற்பதும், ''கம்பன் அடிப்பொடி'' அவர்களுக்குச் செய்யும் வழிபாடுதானே? அவருக்கு மகிழ்ச்சி அளிக்கும் செயல்தானே?

கம்பன் பெருமையைத் தாம் உணர்ந்து, கம்பன் பெருமையை உணராதவர்கள், அதை உணரும்படி செய்ய வேண்டும் என்னும் உயர்ந்த நோக்கத்துடன் தான் அவர் காரைக்குடியில் 'கம்பன் கழகம்' நிறுவினார்.

யாவரும் போற்றத்தக்க முறையில், பின்பற்றக் கூடிய வகையில், ''கம்பன் திருநாள்'' மரபினை உருவாக்கினார்.

காரைக்குடி கம்பன் கழகம் நிறுவப்படுவதற்கு முன்னாலேயே, இன்னும் இரண்டொரு இடங்களில், தமிழகத்தில் 'கம்பன் விழாக்கள்

தொடங்கப்பட்டன என்று ஆன்றோர்கள் கூறக் கேட்டிருக்கிறேன். 1924-ம் ஆண்டில், திருநெல்வேலியில், பெரியவர் ரசிகமணி டி.கே.சி. அவர்கள் இலக்கியக் கழகம் தொடங்கினார்கள்; 'கம்பன் விழா' நடத்தினார்கள். அது மட்டுமா? திருநெல்வேலியில், ''கம்பராமாயண ரசனைக்''காகவே டி.கே.சி. அவர்கள், தம் வீட்டிலேயே நடத்திய ''வட்டத்தொட்டி'' நிகழ்ச்சிகள், தமிழ் இலக்கிய உலகில் பிரசித்தி பெற்றவை. தனி நபர்களாகவே, கம்பராமாயணத்தில் ஈடுபட்டு, கம்பன் பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டவர்கள் பலர். போற்றுதலுக்கும், பூஜிப்பதற்கும் உரிய, பெரியவர் வெள்ளக்கால் சுப்பிரமணிய முதலியார் (வெ.ப.சு) அவர்கள் வெளியிட்ட ''கம்பராமாயணசாரம்'', அவர் புலமையை உணர்வதற்கு உரிய சாளரம்; ''கம்பராமாயணம்'' கற்பதற்கு உதவும் மிகச் சிறந்த கைவிளக்கு.

நடமாடும் கம்பராமாயணமாகவே, கருதப்பட்ட, பெரியவர் கா.ரா.கோ. (கா ரா. கோவிந்தராஜர்), 'தமிழுக்குக் கதியே கதி' என்று சட்டமிட்டுக் காட்டிய திருமணம். செல்வ கேசவராய முதலியார், (க: கம்பன்; தி : திருவள்ளுவர்); இவர்கள் இருவரையும் ஆசானாகப் போற்றி, கம்பனிடம் உள்ளத்தைப் பறிகொடுத்த சொல்லின் செல்வர் டாக்டர் ரா.பி. சேதுப்பிள்ளை, இரண்டு கண்களும் தெரியாத நிலையிலும், 10000 கம்பரபமாயணப் பாடலும் மனப்பாடம் ஆனதால், சென்னை புரசைவாக்கத்தில், தன் வீட்டுத் திண்ணையிலேயே, 15 வயதிற்கு உட்பட்ட இளைஞர்களுக்கு நாள்தோறும், இலவசமாகக் கம்பராமாயண வகுப்பு நடத்திய பெரியவர் ''வசிஷ்ட பாரதி'', 'கலா நிலையம்' இதழ்மூலம், பொதுவாக இலக்கியத்திற்கும், சிறப்பாகக் கம்பனுக்கும் பணிசெய்த பெரியவர் T.N. சேஷாசலம், கம்பராமாயண ஆய்வில் கரைகண்ட பெரியவர் ரா. ராகவ அய்யங்கார், படுத்த படுக்கையில் இருந்தபோதும், கம்பராமாயணம் பாடம் சொல்லும்போது, ஒரு பாடலில் ஊன்றி நின்று, கண்ணீர் பெருக்கிய திரிசிரபுரம் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை, உலக மகாகாவியங்களைக் கற்று, ''உலக மகாகவிகளில், கம்பனுக்கு இணையாரும் இல்லை'' என்று ஆதாரத்துடன் தான் ஆங்கிலத்தில் எழுதிய நூலில் நிலைநாட்டிய மகரிஷி. வ.வெ.சு. அய்யர், இப்படி இன்னும் பலர்... எத்தனை மேதைகள் கம்பன் பெருமையை உணர்ந்து, மற்றவர்களுக்கும் உணர்த்தினார்கள்!

இப்படி ஆக்கபூர்வமான முறையில், தனி மனிதர்களாகப் பலர் கம்பனை வியந்து நின்றலும், கம்பனுக்கு விரோதமாக இருந்தவர்களும் அந்தக் காலகட்டத்தில் உண்டு.

''கம்பன் என்று ஒரு மானுடன் வாழ்ந்ததும்'' என்று பாராட்டப் பெற்ற மானுடனை கம்பன்,

**''வேறுள குழுவை எல்லாம்**
**மானுடம் வென்றதம்மா''**

என்று, மானுடத்திற்கு வெற்றிமாலை சூட்டுகின்றான். ஆனால், மானுடத்தில் ஒரு பிரிவைச் சார்ந்தவர்களே, ''அவன் காவியப் பிரதி களை எரிக்க வேண்டும்'' என்று 'கம்பன் விரோதிகளாக'க் கிளர்ந்து எழுந்து, செயல்படவும் முற்பட்ட காலம். ''கம்பரசம்'', ''தீ பரவட்டும்'' முதலான நூல்கள், வெளிவந்த காலம். அப்படிப்பட்ட காலத்தில்தான், ''கம்பன் அடிப்பொடி'' அவர்கள், காரைக்குடி கம்பன் கழகத்தை முழுமூச்சுடன் வளர்த்தார்கள்.

கம்பனிடம் விரோதம் பாராட்டியவர்களையே, கம்பனிடம் ஈடுபடும்படி செய்வதற்கு, தகுந்த உத்திகளைக் கையாண்டார்கள்; அந்த முயற்சியில் வெற்றியும் கண்டார்கள்.

வெளிப்படையாகத் தூற்றுகின்றவர்களை, இனம் கண்டு கொள்வது சுலபம்; ஆனால், போற்றுவதுபோல் கம்பன் அரங்கில் நுழைந்து, தூற்றுதலை மறைமுகமாக அமைத்து, ''உட்பகைவர்''களாக இயங்கியவர்களும் உண்டு. அதைக் கண்டு பொருமிய பெரியவர்கள், ''... காரைக்குடி சபைக்கு வந்திருந்த ஆயிரக்கணக்கான ஆடவரும், பெண்டிரும் அந்த வேனிலிலும், வெக்கையிலும், மணிக்கணக்காக மகாநாட்டுப் பந்தலில் உட்கார்ந்து, கசங்கிக் கொண்டு இருந்தார்கள் என்றால், அவர்களுக்குக் கம்பரிடத்திலும் தமிழிடத்திலும் எவ்வளவு மதிப்பு, மரியாதை என்றுதான் பொருள்! அப்படிப்பட்ட சபையில், கம்பரை மறைமுகமாக இழுக்கிப் பேசுகின்றது என்றால், பிரசாரம் செய்கின்றது என்றால், அது வந்திருந்த கூட்டத்தைக் கேவலம் பண்ணுகின்ற காரியம் தானே?'' என்று ஆதங்கத்துடன் வருந்தினார்கள். அத்தகையவர்களிடம், கம்பன் அடிப்பொடி அவர்கள் கையாண்ட ''அணுகுமுறை'' 'பொறுமைக்கு' இலக்கணம் வகுப்பது; 'பெருமை'க்குச் சான்று பகர்வது. ஒரு சில ஆண்டுகளுக்குப் பிறகு, ''நடையில் நின்றுயர் நாயகனான கமலக்கண்ணைப் பற்றி, நான் எப்போது பேசுவது?'' என்று, கம்பன் அடிப்பொடி அவர்களிடம், ''இழுக்கிப் பேசியவர்களே'' வேண்டுகோள் விடுக்கும்படி செய்தது கம்பன் அடிப்பொடி அவர்களின் பண்பு.

களரை ஒதுக்கி, பயிரை வளர்ப்பதுபோல், பொருந்தாதவற்றை எல்லாம் மாற்றி, ஒதுக்கி, ''கம்பன் விழா''வினை, 'இராஜகோபுரம்' போல், கம்பீரமாய் நிமிரும்படி செய்தவர் கம்பன் அடிப்பொடி அவர்கள்; ''கம்பனைக் கற்பதை'' தம் வாழ்நாள் லட்சியமாக பல தமிழர்களும், மேற்கொள்ளும்படி செய்த பெருந்தலைவர். விழா நிகழ்ச்சிகள் எல்லாம், 'வானொலி'மூலம் ஒலி பரப்பப்படுவதற்கு, முதல் முதலில் ஏற்பாடு செய்த பெருமை, காரைக்குடி கம்பன் கழகத்தைச் சாரும். அதன் பயனாக, நிகழ்ச்சிக்கு நேரடியாக வர இயலாத பல்லாயிரக்கணக்கான மக்கள், தாம் இருந்த இடத்திலேயே, கம்பன் பெருமையைக் கேட்டு, உணர முடிந்தது; ''தாமும் கம்பனைப் பயில வேண்டும்'' என்னும் தீராத காதலைப் பல தமிழர்கள் பெற்றனர்; அத்துடன், காரைக்குடி கம்பன் கழகத்தைத் தாய்க் கழகமாகக் கொண்டு, தமிழகத்தின் பல பகுதிகளிலும், கம்பன் கழகங்கள் தோன்றியுள்ளன; கம்பன் அடிப்பொடி அவர்களின் அடிச்சுவட்டினைப் பின்பற்றி, ''கம்பன் திருப்பணி''யில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டுள்ளன.

'கம்பன் திருநாள்' நிகழ்ச்சிகளுக்கு அவர் அமைத்துக்கொண்ட வரிச்சட்டம், அவருடைய 'ஆய்வு உணர்ச்சிக்கும்', ''முடிவு எடுக்கும் திறனுக்கும்'' சான்று பகர்கின்றன.

(i) கம்பர் காலம் கி.பி. 9-ம் நூற்றாண்டு
(ii) கம்பர் தம் வாழ்நாளின் இறுதிக்கட்டம், நாட்டரசன் கோட்டையில், ஒரு சிற்றரசன் ஆதரவில் அமைந்தது.
(iii) கம்பர் தம் ''இராமவதாரத்தோமறு மாக்கதையை'', பங்குனி மாதம் (ஹஸ்தம்) அத்தத் திருநாளில் (கம்பன் திருநாள் அழைப்பிதழில் குறிப்பிட்ட ஆண்டில்) அரங்கேற்றினார்.
(iv) அரங்கேற்றம் நடைபெற்று, பல ஆண்டுகளுக்குப் பிறகு, ஒரு குறிப்பிட்ட ஆண்டில், பங்குனி மாதம் - (ஹஸ்தம்) அத்தத் திருநாளில், கம்பர் தம் பூதஉடலை நீத்து, புகழ் உடம்பு எய்தினார்.

காலம், காலமாக கூறப்பட்டு வரும் இந்த ஐதீகக் கருத்துக்களை ஏற்று, அதற்கேற்ப ''கம்பன் திருநாள்'' நிகழ்ச்சிகளை அமைத்த பெருமை கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்களுக்கு உரியது. கம்ப ராமாயணம் அரங்கேற்றப்பட்ட பங்குனி அஸ்த நாளினை, விழாவின் நிறைவு நாளாக அமைத்து, கம்பன் விழாவினை மகநட்சத்திரத்தில்

இருந்து தொடங்கி, மகம், பூரம், உத்திரம் ஆகிய மூன்று நாட்கள் காரைக்குடியிலும், நான்காவதான நிறைவு நாளில், அத்தத் திருநாளில் கம்பன் சமாதி அடைந்த நாட்டரசன் கோட்டையில் நடத்தி, முழுமையடையச் செய்வதை, ஒவ்வொரு ஆண்டும் விழாவின் மரபாக நிலைநாட்டினார் கம்பன் அடிப்பொடி அவர்கள்.

கம்பனின் இராமாவதாரம் அரங்கேற்றப்பட்ட திருநாளினை, ஒவ்வொரு ஆண்டும், விழா அழைப்பிதழில் குறிப்பிட்டு, அதன்மூலம் கம்பன் காலம் பற்றி, காரைக்குடி கம்பன் கழகம் கொண்டுள்ள கருத்தையும் அறுதியிட்டுக் காட்டுவது கம்பன் அடிப்பொடி அவர்கள் மேற்கொண்ட வழக்கம்.

பெரியவர் அரியக்குடி இராமானுஜ ஐயங்கார் அவர்கள், சங்கீத உலகில், கச்சேரிகள் செய்யப்பட வேண்டிய பாணியை - பத்ததியை - நிர்ணயம் செய்து உதவியது போல், 'கம்பன் திருநாள்' நடைபெற வேண்டிய வடிவமைப்பினை (சொற்பொழிவு, கவியரங்கம், பட்டி மண்டபம், தொடக்கம், நிறைவு முதலான நிகழ்ச்சிகள்) உருவாக்கியவர் கம்பன் அடிப்பொடி அவர்கள். நாளடைவில், எந்த இடத்திலும், தமிழ்நாட்டில் எந்தத் தமிழ் இலக்கியம் பற்றிய விழாவானாலும், இதே வடிவமைப்பு பின்பற்றப்படுவது மரபாகிவிட்டது.

கம்பன்விழா நடைபெறும்போது, ஒவ்வொரு நிகழ்ச்சியிலும், ஒவ்வொரு பேச்சாளரும், பேசும் நேரம் பற்றிய உறுதியான கண் காணிப்பும், பேசும் பொருள் பற்றிய தெளிவான பார்வையும் பெற்ற வராக இருக்க வேண்டும் என்பதில், அவர் கண்டிப்புடன் இருந்தார். இந்த உயரிய பண்பு, பேச்சாளர்களுக்கு ஓர் நெறிகாட்டியாக அமைந்தது.

சுருங்கச் சொன்னால், ''புதிய பாற்கடலில்'' இருந்து, 'கலசம் கலச'மாகப் பாலை மொண்டு, அவர் ஒருவரே சுமந்து வந்து, 'இராமாவதாரப்பேர் கம்பன் காவியத்தை' அவர் தமிழகம் எங்கும் ஊட்டிய திருப்பணி, அவர் மகாகவி கம்பனிடம் கொண்ட ''கரைகாணாக் காதலின்'' வெளிப்பாடு; இந்தத் திருப்பணியை ஈடேற்றுவதில் அவர் கையாண்ட வழிமுறைகள், ஒரு சேனைத் தளபதியின் கம்பீர வியூகங்களாகவே நிமிர்ந்து நின்றன.

''எவ்வளவுக்கு எவ்வளவு, கம்பனை நன்றாகக் கற்று, அவனுள் ஆழ்கின்றோமோ, அவ்வளவுக்கு அவ்வளவு தமிழ் வாழும்'' என்னும்

அவருடைய அசையாத நம்பிக்கையும், பக்தியும், 'காரைக்குடி கம்பன் திருநாளின்' 'ஜெயகோஷங்களாக' நிலைபெற்றுவிட்டன.

கம்பன் திருநாளின்போது, கணீரென்று ஒலிக்கும் அவர் குரல்,

**''கம்பன் வாழ்க: வாழ்க, வாழ்க!**
**கம்பன் புகழ் வாழ்க: வாழ்க வாழ்க!**
**கன்னித் தமிழ் வாழ்க : வாழ்க வாழ்க!''**

என்று 'ஜெயபேரிகை' கொட்டியதை யார்தான் மறக்க முடியும்?

தமிழ்த்தாயின் திருவருளால், கி.பி. 9-ம் நூற்றாண்டில், மகாகவி கம்பன், தெய்வத் தமிழ்நாட்டில் தோன்றினான்; அதே, தமிழ்த்தாயின் திருவருளால், கி.பி. 20-ம் நூற்றாண்டில், கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்கள், ''கம்பனின் இராமாவதாரத் தூதுவராகத்'' தோன்றினார்; கி.பி. இருபதாம் நூற்றாண்டினைத், ''கம்பன் திருநாள்'' நூற்றாண்டாகப் பொலியச் செய்தார். அவர் பெருமைக்கு எல்லை ஏது?

## II

**ப**ல இதழ்களை அடுக்கடுக்காகப் பெற்று, தாமரை மலர் ஒன்று பொலிந்து தோன்றுவதுபோல், பன்முகத் திறமைகளையும், பண்பு களையும் பெற்று, சிறந்து விளங்கியவர் கம்பன் அடிப்பொடி அவர்க்ள. தேசபக்தர், விடுதலைப் போராட்ட வீரர், அரசியல்வாதி, தாய் மொழிப்பற்றில் தலைசிறந்தவர், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், சிற்பக்கலை ஆய்வாளர், சிறந்த பேச்சாளர், போற்றுதலுக்குரிய எழுத்தாளர், வழிகாட்டும் நெறி அறிந்த தலைவர், கம்பன் காதலர்... என்று பல நிலைகளில் அவர் மேம்பட்டவராக; வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்திருந்தாலும், ஒரு குறிப்பிட்ட காலகட்டத்திற்குப் பிறகு, அவர் முழுக்க, முழுக்க, ''கம்பன் திருப்பணிக்கே'' தம்மை அர்ப்பணித்துக் கொண்டது, ''தமிழ்ச்சாதி'' செய்த தவப்பயனாகும். இத்தகைய பெரியவரை நேரடியாகத் தெரிந்துகொள்ளும் பாக்கியத்தை எனக்கு அருளியதற்கு, ஆண்டவனுக்கு எப்போதும் நன்றி சொல்லி, நமஸ்காரம் செய்யக் கடமைப்பட்டிருக்கின்றேன்.

இரண்டொரு நிகழ்ச்சிகளை கம்பன் அடியார்களுடன் பங்கிட்டுக் கொள்கின்றேன்.

அந்தக் காலத்தில், சென்னை கம்பன் கழகமும் நன்கு செயல்பட்டு வந்தது. பெரியவர் மாண்புமிகு அமைச்சர் பக்தவத்சலம் அவர்கள்

கம்பன் கழகத்தலைவர். கல்கி. ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் துணைத் தலைவர். பெரியவர் பி.ஸ்ரீ. ஆசார்யா, பேராசிரியர் அ. சீனிவாச ராகவன், வாகீச கலாநிதி. கி.வா. ஜகந்நாதன் ஆகிய மூவரும் செயலாளர்கள். எழும்பூர் க. சோமசுந்தரம் அவர்கள் பொருளாளர்.

இந்த அமைப்புடன், சென்னை கம்பன் கழகம் நன்கு செயல்பட்டு வந்தது. ஒரு கம்பன் விழாவின்போது, மக்கள் திரளாகத் திரண்டுவர, யானையின்மீது கம்பராமாயணச் சுவடிகளைப் பீடத்தில் ஏற்றி, சுமார் இரண்டுமைல் நீளத்திற்கு ஊர்வலம் நடைபெற்ற சிறப்பினை, பல ஆண்டுகள் மக்கள் பாராட்டிப் பேசினர்; 1948-ம் ஆண்டு விழாவின் போது, பிரதமர் பண்டிட் ஜவஹர்லால் நேரு அவர்கள், விழாத்தலைவர். அவருடைய தலைமை உரை, ஒப்பற்ற ''கம்பராமாயண ஆய்வு உரையாக'', ''கம்பீரமாய் ஒலித்து, பல புதுப்புதுக் கருத்துக்களை, வெள்ளப்பெருக்கைப்போல் தங்கு தடையின்றிப் பாய்ச்சியது. வியப்பில் மூழ்கிய அவையோரில் பலர், ஒரு நல்ல சொற்பொழிவைக் கேட்ட மகிழ்ச்சிப் பெருக்குடன், ''அடுத்து வருபவர் பேசுவதற்கு. மிச்சம் எதையுமே பண்டிட்ஜி வைக்கவில்லையே!'' என்று பேசிக் கொண்டனர்!

இன்னொரு முறை, அன்றைய சென்னைக் கம்பன் கழகத்தின் ''அபிமான திட்டமாக'' உருவாகியது, கம்பராமாயணம் முழுவதையும், ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிடுவது என்னும் திட்டமாகும். ஒரு கம்பன் விழாவில் (ஆண்டு சரியாக நினைவில்லை), 'மொழி பெயர்ப்பு திட்டத்தை'த் துவக்கி வைத்தவர், அன்றைய குடியரசுத் தலைவர் பாபு ராஜேந்திர பிரசாத் அவர்கள். ராஜன்பாபு அவர்கள் ஆற்றியபேருரை, அனுபவம் முதிர்ந்த ஒரு கல்லூரிப் பேராசிரியர் அல்லது ஒரு பல்கலைக்கழகத்தின் ஆய்வுகூடத் தலைவர் ஒருவரின் பேருரைபோல் செறிவும், நுட்பமும், ஆழமும் ஒருங்கே அமையப் பெற்றதாய், செம்மாந்து ஒளிர்ந்தது.

இந்தக் கழகம், ஒருமுறை (ஆண்டு நினைவு இல்லை) கம்பன் பிறந்த புண்ணியத்தலமான தேரெழுந்தூரில் நடத்திய ''கம்பன் விழா'', பலவகைகளில் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் அனுபவங்களைத் தந்தது. அதில் ஒன்று. அக்கம் பக்கங்களில் உள்ள கிராமங்களில் இருந்து, கூட்டம் கூட்டமாக ''வில்'' வண்டிகளில், சாரி, சாரியாக மக்கள் திரண்டு வந்தனர். ஏதோ, யாத்திரை அல்லது உல்லாசப் பயணம் செல்வதுபோல், கட்டுச்சோறு, பட்சண பலகாரங்கள் இவற்றுடன், ''கலகலவென்ற

பேச்சும், மகிழ்ச்சி பொங்கும் சிரிப்புமாய் வந்து கூடினர். மேடைக்கு எதிரே, மக்கட் கடல். அன்று நேரம் இரவு 11 மணியை நெருங்கியது; இன்னும் நிகழ்ச்சி, நிறைவினை நோக்கித் திரும்பவில்லை. பேசுபவர், கேட்பவர், இருசாராருமே, உற்சாகத்தின் எல்லையைத் தொட்டு நின்றனர். விழாத்தலைவர் ''கல்கி'' மட்டும், சற்று கவலையுடன், கைக் கடிகாரத்தைப் பார்க்கத் தொடங்கினார். சில நிமிடங்களில், அவையின் மத்தியில் இருந்து, ''ஐயா, எசமானே'' என்று ஒரு குரல் கேட்டது; பேச்சாளர் சற்றே பேச்சை நிறுத்தினார்; 'கல்கி' அவர்கள், குரல் வந்த திசையைத் திரும்பிப் பார்த்தார்; ஒரு முதியவர், எழுந்து, கரம்கூப்பி நின்றபடி, ''ஐயா, உங்களுக்கு சிரமம் இல்லேன்னா, 'மீடிங்'கை அவசரமா, முடிக்க வேணாமுங்க; எங்களுக்கு எல்லாம், கருக்கல்லே (விடியற்காலம்) 'வில்' வண்டி பூட்டினா போதுமுங்க; சௌகர்யமா ஊர்போய்ச் சேந்திடுவோம்; நம்ம ஊர்க்கார பெரியவர் பாட்டைப் பத்தி, கேட்க கொடுத்து வைக்கணுமே'' என்றாரே, பார்க்கலாம். உடனே, அவையில் இருந்து பலர் ''ஆமாங்க, ஆமாங்க'' என்று முழங்கினர். ''அப்படியே செய்வோம்'' என்று மகிழ்ச்சியுடன் கூறினார். ''கல்கி'' கூட்டம் தொடர்ந்து நடந்தது. கம்பன் பிறந்த மண்ணின் மணம், எல்லோருடைய மனத்திலும் நிறைந்தது.

இப்படி, சிறப்பான வகைகளில் முத்திரை பதித்த, சென்னை கம்பன் கழகத்தின் செயல்பாடுகள், என்ன காரணங்களாலோ, சில ஆண்டுகளில் படிப்படியாய்க் குறைந்து நின்றுவிட்டன.

## III

**அ**ந்த நாளைய, சென்னை கம்பன் கழகம், சிறப்பாகச் செயல் ஆற்றிய பருவத்தில், சென்னை கம்பன் கழகம் நடத்திய கம்பன் விழாவில் (1949-ம் ஆண்டு என்று நினைவு) 'கம்பனைப் பற்றி'ப் பேசும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அதை, இறைவன் திருவருள் என்றே நம்புகின்றேன். கல்லூரிப் பணியில் நான் சேர்ந்து, இரண்டொரு ஆண்டுகள்தான் அப்போது ஆகி இருந்தன. ''வகுப்பு போதனை'' தவிர, இரண்டொரு இடங்களில், அவ்வப்போது சொற்பொழிவு நிகழ்த்தி இருந்தாலும், ஒரு பிரம்மாண்டமான மகாநாட்டில் பங்கேற்ற அனுபவமே இல்லை; (கம்பன் விழாவில், ராஜாஜிஹால் முழுவதும் நிரம்பி வழிந்து, வெளியில் புல்வெளி முழுவதும் மக்கட்கூட்டம் நிறைந்திருக்கும்). அந்தக் காலகட்டத்தில், கம்பனின் இராமாவதாரம்

முழுவதையும், நான் நன்கு படித்ததும் இல்லை; தேர்வுக்கு ஹானர்ஸ் வகுப்பு பாடப்பகுதியில், ''சுந்தர காண்டம்'' மட்டுமே இடம் பெற்று இருந்தது. அதனால், எனக்கு ''ஒரு பெரிய கம்பன் மகாநாட்டில் நான் பேசுவதற்குத் தகுதி உண்டா'' என்ற பயம். அனுபவம் நிறைந்த பேராசிரியையான, பெண்கள் கிருத்துவக் கல்லூரி தமிழ்ப் பேராசிரியையான மாசிலாமணி அம்மையாரைத்தான், ஏற்பாடு செய்திருந்தார்கள். எதிர்பாராதவகையில், அவருக்கு அன்றைய தினம் தவிர்க்க முடியாத இன்னொரு கடமை அமைந்துவிட்டது. எனவே, 'குறுகிய காலகட்டத்தில், ''ஸ்டெப்னி''யாகத்தான், என்னைப் பேசச் சொன்னார்கள். விரிவு அஞ்சி, மற்ற விவரங்களை இங்கே சொல்லவில்லை. எப்படியோ, ஒரு மாபெரும் கம்பன் மகாநாட்டில், முதன் முதலாகப் பேசும் தெய்வீக வாய்ப்பு, சென்னை கம்பன் கழகத்தின்மூலம் கிடைத்தது.

அன்றைய தினம், பன்மொழிப் புலவர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்கள் தலைமை ஏற்றிருந்தார்கள். ஒவ்வொருவராக, அரங்கமேடைக்கு வந்த பெருமக்களைப் பார்த்தேன். அப்படியே திகைத்துப் போனேன்! அனைவரின் மதிப்பிற்குரிய ராஜாஜி, ரஸிகமணி டி.கே.சி, ''கல்கி'', கம்பன் அடிப்பொடி சா. கணேசன், பேராசிரியர் அ.சீ.ரா., பேராசிரியர் அ. முத்துசிவம், வாகீச கலாநிதி, கி.வா.ஜ., பேராசிரியர் அ.ச.ஞா இவர்கள் அனைவரையும், ஒரே சமயத்தில், ஒரே இடத்தில் கண்டவுடன், ''இந்தப் பெருமக்கள் இடையே, இவர்கள் மகிழ்ந்து, மெச்சும்படி பேசமுடியுமா?'' என்னும் தயக்கம் உள்ளம் முழுவதும் நிறைந்தது... எப்படியோ, விழாவின் முதல் நாள் மாலை நிகழ்ச்சி முடிவடைந்தது.

மறுநாள் மாலை; அப்பொழுதுதான் நானும், என் தங்கையும் கல்லூரியில் இருந்து, வீடு திரும்பி இருந்தோம். ஏதோ, வெளியில் பேச்சரவம் கேட்டது. நான் உடனே தாழ்வாரத்திற்கு வந்தேன். எதிரில் என் தம்பியுடன், கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்களும், பேராசிரியர் அ.சீ.ரா. அவர்களும் வந்தார்கள். வியப்பு உணர்ச்சியுடன், ''வணக்கம்'' என்றேன். கம்பன் அடிப்பொடி அவர்கள்தான் பேசத் தொடங்கினார்கள். ''நேற்று மாலை, மிகவும் நன்றாகப் பேசினீர்கள். எங்களுக்கு எல்லாம் மிகவும் சந்தோஷம், மிகவும் திருப்தி. இந்த ஆண்டு, காரைக்குடியில் நடைபெறும் கம்பன் திருநாளுக்கு வந்து, கலந்துகொண்டு, சொற்பொழிவு ஆற்ற வேண்டும். உங்கள் பேச்சு,

என்றைக்கும் நன்றாகவே அமையும் என்பது எங்கள் கணிப்பு. அதனால், ஒவ்வொரு ஆண்டும், காரைக்குடி திருநாளில் கலந்து கொண்டு, சொற்பொழிவு ஆற்ற வேண்டும்!'' என்று கூறினார். அந்த அழைப்பின் பெருமை, காரைக்குடிக்கு முதல் முறையாக நான் வந்தவுடன், எனக்கு நன்றாகப் புரிந்தது.

புகழுதற்குரிய மீனாட்சி மகளிர் உயர்நிலைப் பள்ளி வளாகத்தில்தான் அன்று கம்பன் திருநாள் அரங்கம் அமைந்திருந்தது. பந்தலின் விசாலமும், கம்பீரமும், அலங்காரமும், விழாவின் மாட்சியைப் பறைசாற்றின. விழாவில் பங்கேற்க வந்திருந்த கம்ப ராமாயண நிபுணர்களுடைய புலமையும், கம்பன் அடிப்பொடி அவர்களுடைய ''ஆளுமையும்'' விழாவின் ஏற்றத்திற்குக் கட்டியம் கூறின. சுமார் 10000 (பத்தாயிரம்) பேராவது கூடியிருப்பார்கள் என்பது என் தோராயக் கணக்கு; அவர்களில் குறைந்தபட்சம் 1500 பேராவது பெண்கள். எல்லோருடைய முகத்திலும், சொல்லத் தெரியாத பக்தி உணர்ச்சி!... இப்படிப்பட்ட, ''காப்பிய வேள்விக்கு'', என்னைப் போன்ற, இளைய தலைமுறையினரைச் சேர்ந்த ஒருவரை 'கம்பன் அடிப்பொடி' அவர்கள் அழைக்கிறார் என்றால், அவருடைய உள்ளம் எவ்வளவு பரந்த உள்ளம்! இளைய தலைமுறையினரை, ஊக்கு விப்பதிலும், கம்பன் கவிதையில் ஈடுபடுத்துவதிலும், அவருக்கு எத்தகைய நாட்டம்! இன்றும், அவருடைய இந்தப் பெருமையை நினைத்து, வணங்குகின்றேன்.

அவர் கூறியபடியே, ஒவ்வொரு ஆண்டும், கம்பன் விழாவிற்கு, வரும்படி அழைப்பு வரும். ஒவ்வொரு ஆண்டும், தொடர்ந்தாற்போல், பதினான்கு ஆண்டுகள், காரைக்குடி கம்பன் விழாவில் பங்கேற்கும் பாக்கியம் கிடைத்தது. அந்த அனுபவமே கம்பனைப் பயில்வதற்கும், புரிந்து கொள்வதற்கும் உதவும் குருகுலவாசமாக அமைந்தது.

நான் மட்டும் அன்று, விழாவிற்கு வரும் எல்லா பேச்சாளர்களும் - முதியவர், இளையவர் எல்லோரும் தாம் பேசும் நேரம் மட்டும் அல்லாமல், எல்லா நாட்களிலும் அங்கு தங்கி, கம்பனில் மூழ்குவார்கள்.

பங்குனி மாதம், மகம், பூரம், உத்திரம் என்னும் மூன்று நாட்கள் காரைக்குடியிலும், பங்குனி அஸ்தம், நாட்டரசன் கோட்டையிலும் நடைபெறும் விழாவில், பக்தி சிரத்தையுடன், 'கம்பன் சிந்தனை' யிலேயே தோய்ந்து நிற்கும் தவஉணர்வுடன் அனைவரும் கலந்து

கொள்வார்கள். அந்தச் சூழ்நிலையே, ''கம்பன் என்னும் தொடு வானத்தை, எப்படியாவது நம் சின்னஞ்சிறு கைகளால் தொட்டுவிட மாட்டோமா?'' என்னும் தணியாத வேட்கையை, நம் உள்ளத்தில் பயிராக்கும்.

அந்த நாளில், எல்லா பேச்சாளர்களும், ''கம்பன் அடிப்பொடி'' அவர்களின் வீட்டில்தான் தங்குவது வழக்கம். கம்பனில் ஆழங்கால் பட்ட எத்தனை அறிவு ஜீவிகளின் சங்கமம் அங்கு நிகழ்ந்துள்ளது!

பட்டிமண்டபம் அல்லது கவியரங்கம், பின்னர் மாலைப்பேச்சுக்கள் இவையெல்லாம் நிறைவுபெற, ஒவ்வொரு நாளும் இரவு 8.30 அல்லது 9 மணி ஆகும். கம்பன் கவிமாண்புடன், சடையப்ப வள்ளலின் கொடைத்தன்மையையும் நினைவுறுத்தும் வகையில், விழாவில் ''விருந்தோம்பல்'' இடம் பெற்றிருக்கும். இரவு உணவுக்குப் பின், எல்லோரும் கம்பன் அடிப்பொடி அவர்கள் வீட்டிற்குத் திரும்புவார்கள்.

வீட்டின் நுழைவாயிலை அடுத்து அமைந்திருக்கும், முன்பக்க கூடத்தில் பெரியவர்கள் (ஆண்மக்கள்) விச்ராந்தியாக அமர்வார்கள். வீட்டின் முற்பகுதியையும், பிற்பகுதியையும், பக்கவாட்டில் இணைக்கும் ஒரு தாழ்வாரப் பகுதியில் நான், திருமதி ராஜேஸ்வரி நடராஜன், டாக்டர் சிவகாம சுந்தரி, சில சமயங்களில் மணி குமாரி போன்ற இளைய தலைமுறையினர் (பெண்கள்) அமர்வோம்.

முன்பக்க கூடத்தில் உள்ள பெரியவர்கள், கம்பனைப்பற்றிய, கலந்துரையாடலில் ஈடுபடுவார்கள். அந்தப் பெரியவர்கள்தான் எத்தகைய பெருமையுடையவர்கள்! மகரிஷி வ.வெ.சு. அய்யரின் வழிநின்று, கம்பனை உலக மகாகவிகளில் தலைசிறந்தவனாகப் போற்றும், அட்வகேட் A.C. பால்நாடார், தமிழ்க்கடல், பெரியவர் ராய.சொ., பேராசிரியர் அ.சீ.ரா., வாகீசகலாநிதி கி.வா.ஜ., புலமையின் திருவுருவான ப. ஜீவானந்தம், பேராசிரியர் கு. அருணாசலக்கவுண்டர், பேராசிரியர் அ. முத்துசிவம், பேராசிரியர் அ.ச.ஞா., பேராசிரியர் இராமகிருஷ்ணன், கலைமணி பாஸ்கரத் தொண்டைமான், 'கம்பன் அடிப்பொடி' அவர்கள் போன்ற 'கம்பராமாயண ஜாம்பவான்'கள், பங்குகொள்ளும் உரையாடல், மேடையில் கேட்கும் பேச்சுக்களைவிட, அதிகமான கருத்துக் குவியல்களைக் கொட்டும். உரையாடல், பல சமயங்களில் இரவு 12 அல்லது 1 மணி வரையில் கூட நடைபெறும்.

அந்த உரையாடலைக் கேட்பதுதான், இளைய தலைமுறையினர் பெற்ற ''கம்பன் பயிற்சி''; ''விருப்பு வெறுப்புக்கு'' இடமில்லாமல், உண்மைப் பொருளைக் காணும் ஒரே நோக்கத்துடன் அவர்கள் ஒவ்வொருவரும் கலந்துரையாடலில் கலந்து கொண்டதால், அதைச் செவியுற்று, பெற்ற 'அறிவுநிலை அனுபவத்தையே' கம்பன் எனக்கு அருளிய ''குருகுலவாசமாக'' நான் கருதுகின்றேன். கிடைத்தற்கு அரிய இந்த அனுபவத்தின் விளைவாக, காரைக்குடி கம்பன் திருநாளுக்குச் சென்றுவிட்டு, சென்னை திரும்பிய பிறகும் சுமார் 4, 5 மாதங்களுக்கு, பேசும் போதும், எழுதும் போதும், சமையல் செய்யும்போதும், உணவு பரிமாறும்போதும், ஏன், சுவாமி நமஸ்காரம் செய்யும்போதும், கல்லூரி வகுப்பிற்குப் பாடம் தயார் செய்கின்றபோதும், ''பஸ்''ஸில் கல்லூரிக்குச் செல்லும்போதும், நண்பர்களுடன் பேசிக் கொண்டிருக்கும்போதும், குடும்பநிலை பற்றி அப்பா சொல்லும் அறிவுரையைக் கேட்கும் போதும், தங்கை, தம்பியுடன் சிரித்துப் பேசி மகிழும்போதும், எப்போதும், எப்போதும் ''கம்பன் ஸ்மரணை'' ஒன்றுதான், என் நெஞ்சில் நிரம்பி, ''விண்வெளியை அளந்து பார்க்கலாமா? 'எல்லையொன்று இன்மை' என்னும் பொருள் எங்கே? துழாவிப் பார்க்கலாமா?, வா'' என்று என்னை அழைக்கும். நனவிலேயே, கனவு கலந்து நின்ற நிலையை சொல்லத் தெரியவில்லை. ''கம்பன்'', ''அகத்தில்'' புகுந்துவிட்டால், மறுபடியும் வெளியே வரமுடியாது; அவனுக்கும் முடியாது; நமக்கும் முடியாது; ''வந்தாய், என் மனம் புகுந்தாய்; மன்னி நின்றாய்'' என்னும் தெய்வீகத் தொடர்தான், இதய வீணையில் ரீங்காரமிட்டு, ''என்றுமுள தென்தமிழில்'' ''சான்றோர் கவிதை''க்குப் பெட்டகமான கவிச்சக்ரவர்த்தியை - மகாகவி கம்பனைப் போற்றிப் பணிந்து, ஆராதனை புரியும்.

''விண்டு உரைக்கமாட்டாத விந்தையான'' இந்தப் புனித அனுபவம் இறைவன் அருளால் எனக்குக் கிட்டியதற்கு, காரைக்குடி கம்பன்திருநாளில் பல ஆண்டுகள் நான் பங்கேற்பதற்கு வாய்ப்பு அளித்த, கம்பன் அடிப்பொடி அவர்களின் பரிவுதான் - இளைய தலைமுறையினரை ஊக்குவித்த பரிவுதான் - காரணம். காரைக்குடி கம்பன் திருநாளினைப்பற்றி - அந்த நாளைய அனுபவத்தினைப் பற்றி, இன்னும் எத்தனையோ செய்திகளை அடுக்கிக் கொண்டே போகலாம். ஆனால், எல்லாவற்றிற்கும் ஆதாரமானது ''கம்பன் அடிப்பொடி'' அவர்களின், ஊக்குவிக்கும் திறனும், நல்லதைப் பாராட்டத் தயங்காத அவர் பெருந்தன்மையும்தான்.

''கம்பனின் இராமாவதாரம்'' என்னும் அற்புதத்தை, நான் தரிசிப்பதற்கு, முதன் முதலில், ''மந்த்ராக்ஷதை'' அருளி, ஆசீர்வதித்தது அன்றைய சென்னை கம்பன் கழகம்; ஆண்டுதோறும், மீண்டும், மீண்டும் கம்பனைப் பயின்று, அவன் காப்பியத்தின் அழியா அழகில் லயித்து, மெய்மறந்து ஈடுபட, துணைநின்றது, காரைக்குடி கம்பன் கழகம் தொடர்ச்சியாக அளித்த வாய்ப்புக்கள்தான். எனவே, ''கம்பன் அடிப்பொடி அவர்களை'', அவர் பிறந்தநாள் நூற்றாண்டு விழாவில் பணிவுடன், நன்றியுடன், போற்றி வணங்குகின்றேன்.

''கம்பன் அடிப்பொடி'' அவர்களின் பன்முக மாண்பினை எண்ணி வியந்து நிற்கும்போதே, அவருடைய இலக்கிய தெய்வமான ''கம்பன்'' பெருமை, அலை, அலையாய் எழுகின்றது; கம்பன் கண்ட ''இராமா வதாரம்'' என்னும் ''புதிய பாற்கடல்'', மீண்டும் தன் எழில் வடிவைக் காட்டுகின்றது; ''ஓம், ஓம், ஓம்'' என்னும் ஒலியும், ''ராம், ராம், ராம்'' என்னும் ஒலியும், இரட்டை நாதங்களாய், விண்வெளியையும், மண்பரப்பையும் நிரப்புகின்றன. அதைத் தொடர்ந்து, ''கம்பன் திருநாள்'' ''முத்திரை ஒலியும்'' ஜெயகோஷமாய்க் கேட்கின்றது.

**''கம்பன் வாழ்க! வாழ்க, வாழ்க!**
**கம்பன் புகழ் வாழ்க! வாழ்க, வாழ்க!**
**கன்னித் தமிழ் வாழ்க! வாழ்க, வாழ்க!''**

இந்த வாழ்த்தொலியை - நிரந்தரமான வாழ்த்தொலியை நமக்கு உருவாக்கித் தந்த,

**கம்பன் அடிப்பொடி அவர்களின்**
**புகழ் வாழ்க! வாழ்க, வாழ்க!**
**அவர் நிறுவிய காரைக்குடி கம்பன் கழகம்**
**வாழ்க! அதன் புகழ் வளர்க!**

**அதன் ஆக்கப்பணி ஓங்குக!**

**நன்றி. வணக்கம்.**





கம்பன் மணி மண்டபத் திறப்பு விழாவில் தெ.பொ.மீ., க.கு. கோதண்டராமன், சிவகங்கை மன்னர் கார்த்திகேய வெங்கடாசலபதி ராஜா, செட்டிநாட்டரசர் மு.அ. முத்தையா செட்டியார், இராமநாதபுரம் மன்னர் இராமநாத சேதுபதி ராஜா, திருமுருக கிருபானந்த வாரியார் ஆகியோர்; அருகில் நிற்பவர் தமிழிசைப் பள்ளிப் புரவலரும் நெருங்கிய நண்பருமான டி.ஆர். அருணாசலம்.



சா.க. அலிபூர் சிறையிலிருந்து வந்த ... களில் விடுதலை
வேள்வியில் தலைமறைவாக ... லம்



வேலூர் மாவட்டத் திருப்பத்தூர்க் கம்பன் விழாவில் அந்நாள் தலைவர் கா.அ.ஷ. பத்மநாபனார், இந்நாள் தலைவர் வி.ஆர். மாரிமுத்து செட்டியாருடன்



வேலூர் மாவட்டத் திருப்பத்தூர்க் கம்பன் விழாவில் அதன் தலைவர் கா.அ.ஷ. பத்மநாபனார், செயலாளர் சு. சண்முகசுந்தரம், ம.பொ.சி.யுடன்.



மீனாட்சி பெண்கள் பள்ளியில் நடந்த கம்பன் திருநாளொன்றில் பார்வையாளர் பகுதியில் அமர்ந்து ரசிக்கும் டி.கே.எஸ். சகோதரர்கள் சண்முகம், பகவதி, சி.வி.ஆர்.எம். அழகப்பா, இந்நாள் கோவைக் கம்பன் கழகச் செயலாளர் நா. நஞ்சுண்டன், கல்விக்கடல் எஸ்.கே. இராமராசன்




1974இல் நிகழ்ந்த 36ஆம் ஆண்டுக் கம்பன் திருநாள் (3.4.74)
தலைமையேற்ற தமிழக முதலவர் கலைஞர் மு. கருணாநிதி,
தொடங்கி வைத்த செட்டிநாட்டரசர் மு.அ. முத்தையா செட்டியார்,
இராஜாஜி படத்தைத் திறந்து வைத்த ஜி.கே. சுந்தரம்



சடடையைச சடடை செய்யாத சா.க. பாரீஸில் நிகழ்ந்த உலகத் தமிழ் மாநாட்டிற்குச் சென்றபோது அந்நகர்க் குளிரையும், தம உடல் நிலையையும் மருத்துவா ஆலோசனைப்படி கருத்தில் கொண்டு குளோஸ் நெக் கோட் அணிந்த சா.க., கி.வா.ஜ. உள்ளிட்ட மாநாட்டுப் பிரதிநிதிகளுடன்.



புதுச்சேரி கம்பன் விழா முதலாண்டில் அலஙகரிக்கப பெறற
யானை மீது கம்பராமாயணத்தை ஊர்வலமாக எடுத்து வந்து
தொடஙகியபோது புதுவை முதல்வர் வை. வேங்கடசுபபா ரெட்டியார்,
செயலாளா கம்பவாணர் அ. அருணகிரி, நீதிபதி எஸ். மகராஜன

# முதல்வர்

**– கம்பன் அடிசூடி**

ஐந்து கரத்தனை, யானை முகத்தனை, இந்திரன் இளம்பிறை போலும் எயிற்றனை, நந்தி மகன்தனை, ஞானக் கொழுந்தினை நாம் நாளும் புந்தியில் வைத்துப் போற்றியே நாளைத் தொடங்குகிறோம். இல்லையா? எந்த ஒரு காரியத்தையோ, முயற்சியையோ தொடங்கும் போது முன்நின்றருள்பவர் கணேசர். அந்த 'வேழமுகனை'ப் போலவே, காரைக்குடிக் கற்பக நிலையத்துக் கணேசனாரும் எந்தத் துறையிலும் முன் நிற்பவர் மட்டுமல்ல; முன்னோடியாய், (Pioneer) விளங்கிய வருமாவார்.

நாட்டு விடுதலையா? சட்டையையே கழற்றி எறிந்து போராடி, அதையே கடைப்பிடித்தவர். சமுதாய சீர்திருத்தமா? விதவா விவாகத்தை ஆதரித்த நகரத்தார். சமயத்துறையா? இவர் இல்லாமல் பெரும்பாலான தமிழ்நாட்டுக் கடவுளர் கும்பாபிஷேகம் செய்து கொண்டதில்லை. தவ முனிவர் காஞ்சிப் பெரியவர் ஏவ, வித்வத் சதஸை முதலில் நடத்திக் காட்டியவர். தொல்பொருளாய்வுத் துறையா? தமிழகத்தில் முதன்முதலில் தொல்பொருள் ஆய்வுக்கெனத் தனித் துறையை ஏற்படுத்தக் காரணமாயிருந்தவர். தமிழ்மாநாடா? கண்டோரெல்லாம் வியக்கும் வண்ணம் கலைக் காட்சியை முதலில் நடத்தி, 'கையேட்'டை வெளிக் கொணர்ந்தவர். படிமக்கலையா? கண்ணகிக்கு முதலில் வடிவம் அமைத்த பெருமைக்குரியவர். சிற்பக் கலையா? இன்றைக்கும் கம்பீரமாய் நிற்கும் காந்தி மண்டபம். பொறியியல் நிபுணத்துறையா? பொறியியல் வல்லுநர்களே வியக்கும் போர் நினைவுச்சின்னத் தம்பம். இலக்கியத் துறையா? கம்பனுக்கு (இராமனுக்கு அல்ல!) முதலில் விழா எடுத்து, அதையே ஜீவ

வேள்வியாய் நாற்பதாண்டுகட்கு மேலாய்த் தொடர்ந்து நடத்தியவர். இப்படி எந்தத் துறையிலும் முன் நிற்பவர் மட்டுமல்ல; அந்தத் துறையில் தம் செயலால் தம் தனி முத்திரையைப் பதித்த சாதனையாளருங்கூட. ''தோயாத் துறையிலான்'' என்று தம் தெய்வமாம் கம்பனை அவர் போற்றினாரே, அதையேதான் நாமும் பெய்து அவருக்குப் போற்றி சொல்ல வேண்டும்.

★★★

**த**னி முத்திரையாய் அவர் பதிக்கக் காரணம்? தாம் கொண்ட கொள்கையிலே அவருக்கு இருந்த பிடிப்புத்தான்!

கம்பன் சொன்னானே,

**''இறப்பினும், திருஎலாம் இழப்ப எய்தினும்**
**துறப்பிலர் அறம்எனில் சூரர் ஆவதே''**

என்று, அப்படி எந்தக் காலத்திலும் அறம் துறவாத சூரர் அவர். இல்லாவிட்டால், அன்றைய முதலமைச்சராயிருந்த கலைஞர் அவர்கள் தொடக்கவுரை நிகழ்த்தவிருந்த கம்பன் விழா அன்று காலை, குறித்தபடி 9.30 மணிக்கு அவர் விழா மேடைக்கு வர இயலாதபோதும், தம் கொள்கை தவறாது விழாவை ஆரம்பித்திருக்க முடியுமா? இல்லா விட்டால் கலைஞரே, ''ஆள்களுக்காக நிகழ்ச்சிகள் என்றில்லாமல், நிகழ்ச்சிகளுக்காகவே ஆள்கள் என்று காலந்தவறாது கணேசனார் நடத்துவதை நான் போற்றிப் பாராட்டுகிறேன்!'' என்றிருப்பாரா? வேறு எத்துணைப் பெரிய மனிதரும் நினைத்துக்கூடப் பார்க்க முடியாத தீரச் செயல் இது. இதன் மூல காரணம் 'காலந்தவறாமை' என்ற அவர்தம் கொள்கைப் பிடிப்பே!

★★★

**பி**றிதொரு முறை, முதல்வர், எம்.ஜி.ஆர். அவர்கள், செட்டி நாட்டிற்கு ஒரு திருமணத்திற்காக வந்தவர்கள், இலக்கிய ஆர்வம் காரணமாய், முன்னறிவிப்பு ஏதுமின்றிக் கம்பன் விழாப் பட்டி மண்டப நிகழ்ச்சியின்போது வந்தார்கள். அவர் மிகவும் ஜாக்கிரதையாய், சாதாரண ரசிகர் ஒருவரைப் போல், எந்த ஒரு கெடுபிடியும் விளம்பரமு மின்றி, ஓசைப்படாது, கணேசனாருக்கே தெரியாது, வந்தமர்ந்தார்கள்.

சிறிது நேரத்தில் விஷயம் காட்டுத்தீ போல் பரவிக் கூட்டம் சேர ஆரம்பித்தது. விழா முடிந்து அவர்கள் வெளியில் வரும்போது, அவரைப் பார்ப்பதற்காகத் தாள முடியாத அளவு, காரை நகரே திரண்டு வந்துவிட்டது. அப்போது சிலர், 'விழா முடிந்ததும் அவர்களை மேடையிலேற்றி இரண்டொரு வார்த்தைகள் பேசும்படி செய்தால் கூட்டம் கலைந்துவிடும்' என்று மிகவும் எடுத்துரைத்தார்கள். ஆனால், கணேசனாரோ, நிகழ்ச்சி நிரலில் இல்லாமல், அவர்களை மேடையில் ஏற்றுவதோ, விழாவுக்குத் தொடர்பில்லாது அவர்களைப் பேசச் செய்வதோ தோன்றச் செய்வதோ கம்பன் மேடைக்கு உகந்ததல்ல என்ற காரணத்தாலும், எம்.ஜி.ஆர். அவர்களும் அதற்கு இசையாததாலும், எப்படியும் கூட்டத்தைக் கலைத்து மற்ற அன்பர்கள் செல்ல வேணும் என்ற கடமை உணர்வால், எம்.ஜி.ஆர். அவர்களை மேடைக்கு வெளியே பந்தலில் ஒரு நாற்காலி இட்டு, அதில் ஏறிக் காட்சியளிக்க ஏற்பாடு செய்தார்கள். முறைமையை மீறுவது எக்காலத்தும் எக்காரணத்துக்காகவும் இல்லை என்ற உறைப்புடையவர் அவர் என்பதைத் தெள்ளத் தெளிவாக்கினார்கள்.

★★★

**செ**யலாளன், பட்டி மண்டபம், மேல் முறையீட்டுப் பட்டி மண்டபம், நற்றமிழ் முற்றம் முதலிய சொற்களை முதலில் உபயோகப் படுத்தியதும், நிகழ்த்திக் காட்டியவர்களும் அவர்களே. அவர்கள் நிகழ்ச்சி நிரல் அமைக்கின்ற பாங்கு, ஆள்களைத் தேர்வு செய்கின்ற பான்மை - இவையெல்லாம் தனிக் கலைகள். அவர்களிடம் எத்தனையோ ஆண்டுகள் படித்தாலும் நமக்கு எளிதில் வாராச் சித்துகள் அவை! பஞ்சிங் மிஷினில் ஒரு தாளையோ கடிதத்தையோ துளையிடுவதற்குக்கூட நறுவிசாகச் செய்யத் தனிமுறைகள் சொல்லித் தருவார்கள். அவர்கள் ஒரு நடமாடும் பல்கலைக் கழகம் மட்டுமல்ல! நடைமுறை என்சைக்ளோபீடியாவுங்கூட! அருட்கவி ஐந்திற்குப் பண்ணமைப்பதிலிருந்து, சாந்தி விகார் நானையும், க்ரீம் சூப்பையும் தயாரிப்பது எப்படி என்பது வரை எல்லாமே கைவந்த கலை; அத்துபடியான விஷயங்கள். தாஜ் கொரமண்டலில் நூடுல்ஸை ஸ்டிக்கினால் ஒன்றுகூடக் கீழே விழாமல் சாப்பிடுகிற லாகவமும், மெரீனாவில் கண்ணீல் நீர் பீற்றியெடுக்கச் செய்யும் மிளகாய்

பஜ்ஜியையும் சிரித்துக்கொண்டே சாப்பிடுகிற பதவிசாகட்டும், இரண்டுமே எளிவந்த கலை அவருக்கு.

★★★

இளையவர்களை, புதியவர்களை ஆர்வத்தோடு வாய்ப்பளித்து ஊக்குவிப்பதில் அவருக்கு நிகர் அவரே! அவர்களுக்கு ஆசானாய் இருந்து ஒவ்வொரு பிடியிலும் கைகொடுத்து அழைத்துச் செல்வதில் அவர் ஒரு மேதை.

''தந்ததுன்தனை கொண்டது என் தன்னை'' என்றாரே, அப்படித் தம்மைக் கொடுத்துப் பிறரைப் பெறக் கற்றுக்கொண்டவர். அப்படி யானால் யார் சதுரர்? நாம்தானோ? இல்லை, இல்லை; அடிப்பொடியார் அப்படியொன்றும் சளைத்தவரல்ல! தம் ஒருவரைத் தந்து, நம்மைப் போல் எத்துணைப் பேரையோ கொண்டவர்கள். நாம் பெற்றது அந்த மொன்றிலா ஆனந்தந்தான் என்றாலும், அவர் பெற்றது அளவில்லாத பேரானந்தம். நம் 'உள்ளம் கவர் கள்வன்' அல்லவா அவர்?



# கம்பன் அடிப்பொடியின் கை வண்ணம் கலை வண்ணம்

 கல் வண்ணம்

 கலை வண்ணம்

 கவி வண்ணம்

 தமிழ் வண்ணம்

 கம்பன் தமிழ் வண்ணம்

 பணி வண்ணம்

 வரலாற்று வண்ணம்



கல் வண்ணம்

# காலச்சுவடாகும் கல்வெட்டுக்கள்

தமிழகத்திலே கல்வெட்டுக் கருத்தரங்கு நடைபெறுவது இதுதான் முதன் முறை. இதில் கலந்துகொள்ள வந்திருப்பவர்கள் இத்துறையில் பேரும் புகழும் ஈட்டிய பெரும்பணிச் செல்வர்கள். இவ்வளவு பெயரும் இதில் கலந்துகொள்ள முன் வந்திருப்பதே இதன் வெற்றிக்கு நல்லதோர் எடுத்துக்காட்டாகும். இக்கருத்தரங்கில் பேரார்வமும் பேரக்கறையும் காட்டி வந்திருக்கும் அறிஞர் பெருமக்களையும் பொதுமக்களையும் மனமார வாய்மணக்க நல்வரவு கூறி வரவேற்கிறேன்.

எல்லா வகையாலும் மிகவும் பொருத்தமான குருதேவர் தெ.பொ.மீ. அவர்கள் தலைமை தாங்க இசைந்ததன் மூலம் இக்கருத்தரங்கிற்குப் பொலிவையும், புகழையும் தந்திருக்கிறார்கள். இத்தகைய கருத்தரங்கு ஏற்பாட்டின் பயனை நன்குணர்ந்து பேராதரவு தருகின்ற நமது முதலமைச்சர் கனம் திரு. பக்தவத்சலம் அவர்கள் தொடங்கி வைக்க இசைந்துள்ளார்கள். அவர்களுக்கு என் பாராட்டுடன் கூடிய நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகிறேன்.

இத்தறைக்குத் தனி அலுவலராக இருக்கும் திரு. நாகசாமி அவர்கள் தம் துணைவர்கள் பலருடனும் கூடி அல்லும் பகலும் அயராதுழைத்த ஆர்வத்தையும் நான் போற்றாமலிருக்க முடியாது.

நம் வரலாறு தெற்கிலிருந்து தொடங்கவேண்டும். பல்வேறு காரணங்களால் இந்திய வரலாறு வடக்கிலிருந்தே தொடங்கிவிட்டது. தென்னகத்தில் உள்ள வரலாற்றுச் செய்திகளும், செய்தித் துணுக்குகளும் ஏராளமானவை. எல்லாம் கல்லிலும், பாறையிலும், செம்பிலும், ஓட்டிலும் நெறிப்படி பதிவானவை. கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து

இன்று வரை, சங்கிலி வளையம்போல், தொடர்ந்து வருபவை. தமிழகத்தில் மட்டும் ஒரு லட்சத்திற்கு மேற்பட்ட கல்வெட்டுக்கள் உள்ளன.

அவற்றுள் சுமார் இருபத்தையாயிரம் மட்டுமே இத்துறையாளர் கவனத்திற்கு வந்திருக்கின்றன. அவையும் முழுதும் படிஎடுத்து ஆய்ந்து தெளிந்து அச்சாகி முடியவில்லை. சுமார் 5000 கல்வெட்டுக்களே அச்சானவை. அவற்றிலும் மிகப் பெரும்பாலானவை இன்று கிடைப்பதில்லை.

மேலும், எண்ணற்ற கோயில்களும், மண்டபங்களும் இடிந்தும், இடிக்கப்பட்டும் போயின. அவற்றில் இருந்த கல்வெட்டுக்கள் யாவும் மறைந்தொழிந்தன. அக்கல்வெட்டுக்களில் என்னென்ன அருமைச் செய்திகள் இருந்தனவோ, அவை முற்றும் நாமறியுமாறில்லை. போனது போனதே! இனி இருப்பனவற்றையாவது காத்துப் படி எடுத்துக் கணிக்க வேண்டுமன்றோ!

உள்ளனவற்றில் பல பேணுவாரற்றுப் பெரிதும் சிதிலமாகிக் கொண்டு வருகின்றன. உதாரணத்திற்கு ஒன்றிரண்டைப் பார்ப்போம்.

செங்கற்பட்டு மாவட்டத்தில் வாயலூர் என்ற ஒரு சிற்றூர்; அதில் ஓர் அருமையான கோயில்; பல்லவர் காலத்தில் கட்டப்பட்டது. பெரும்பாலும் இடிபாடுகளாகவே இன்று காணப்படுகிறது. பூசைமட்டும் என்னவோ நடந்து கொண்டிருக்கிறது. அங்கு நுழைவாயிலில் கோபுரமில்லா மண்டபம்தான் இருக்கிறது. அதில் ஒரு கற்றூணில் பல்லவர் குடிவழி வரிசையாக பொளியப்பட்டுள்ளது. அத்தூண் விலை மதிப்பற்ற ஒரு வரலாற்றுச் செல்வம். அது மழையாலும் வெயிலாலும் பெரும்பாலும் பழுதுபட்டு விட்டது. அதை ஒருவர் 5000 ரூபாய் வரை பேரம் செய்திருக்கிறார். கிராமத்தார் விற்க மறுத்து விட்டனர். இப்பொழுது அதை மியூசியத்தில் வைத்துப் பரிபாலிக்க அவர்கள் அன்புடன் இசைகிறார்கள்.

இங்கே திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயிலில் பல கல்வெட்டுக்கள் மதிப்பாரற்று மிதிக்கப்படுகின்றன. ராமன் சந்நிதிக்கு முன் தரையில் பாவப்பட்டுள்ள ஒரு சிறு கல்தகடு, ''குலோத்துங்கன் திருமாளிகை'' என்ற எழுத்துக்களுடன் காணப்படுகின்றது.

அதற்குப் பக்கத்தில் ஒரு பெரிய பட்டிகைக் கல் (சுமார் 20 சதுர அடியுள்ளது.) நந்திவர்மன் கல்வெட்டுடன் கூடியது. இன்று அது புளியோதரை, தயிர்ச்சாதம் பிசையும் தகட்டுக்கல்லாகப் பயன்பட்டு வருகிறது.

திருவதிகைக் கோயிலில் ராஜகோபுரத்தில் உட்படியாக ஒரு அருமையான கல் (சுமார் 25 சதுர அடியுள்ளது) கிடத்தப்பட்டிருக்கிறது. அதில் பரமேச்வரவர்மன் கல்வெட்டுள்ளது. அது ஒரு அருமையான கல்லெழுத்துச் சான்று.

இங்ஙனமே சிதம்பரம், திருவண்ணாமலை, திருவொற்றியூர் போன்ற பெருங்கோயில்களில் எண்ணற்ற கல்வெட்டுக்கள் சுற்றுப் பிரகாரங்களில் பாவுகல்லாகக் கிடந்து பரிசழிகின்றன. இவற்றை எல்லாம் கவனத்தில் கொண்டு எல்லாவற்றிற்கும் படி எடுத்து விரைவில் ஆராய்ச்சியுலகத்திற்குக் கிடைக்கச் செய்யவேண்டும். கல்வெட்டுப் போன்றவையே வரலாற்றை எழுத அடிப்படையான ஒப்பற்ற சான்றுகள்.

இத்தகைய சான்றுகள் உலகத்திலேயே தமிழர்க்குத்தான் வளமாக விளங்குகின்றன. தொடர்ந்து, மறுக்க முடியாத, பிடிபாட்டுச் சான்று களுடன் கூடிய வரலாற்றுச் செய்திகள் இரண்டாயிரம் ஆண்டுகட்கும் மேலான காலத்திற்குக் கிடைக்கின்றன.

**ஆகவேதான் தமிழ் நாட்டிற்கென்றே தனியாக தொல்பொருள் துறை இருக்க வேண்டுமென்று பல்காலும் சட்டசபையிலும், தனி யாகவும் வற்புறுத்திக் கொண்டே வந்தேன்.** முதலமைச்சர் அவர்களையும் நீலகிரியில் கல்வெட்டிலாகாவுக்குக் கூட்டிச் சென்று அங்குள்ள வற்றையும் அதன் அருமையையும், நாம் மேற்கொள்ள வேண்டிய பணியையும் பற்றி அவர்கட்குப் புலப்படுத்திக் கொண்டேன். அவர் களும் பேரார்வங் கொண்டு இத்துறையின் இன்றியமையாமையை மதித்து எல்லா ஏற்பாடுகளும் செய்வதாக வாக்களித்தனர்.

**அதன்பின், இந்தத் துறை அமையச்செய்து ஊக்கமும் அளித்தார்கள்.** அவசர அவசரமாகப் பணியாற்றி மலேசியாவில் நடைபெற்ற அனைத்துலகத் தமிழ் மாநாட்டிற்குப் பல புகைப்படங்கள்

கொண்டு செல்லப் பெற்றுக் காட்சிக்கூடமும் அமைக்கப்பட்டது. ஏராளமான அறிஞர்கள், பல்வேறு நாட்டைச் சேர்ந்தவர்கள், கண்டு மகிழ்ந்து களிபேருவகை கொண்டு வாயாரப் பாராட்டினர். அவற்றை யெல்லாம் நேரில் அறிந்த நமது முதலமைச்சர் இத்துறைக்கு மேலும் ஆதரவு நல்கினார்கள். அந்த ஆக்கமே இந்தக் கருத்தரங்கைத் தொடங்க எங்கட்கு ஊக்கம் அளித்தது.

நமது வரலாற்றுச் சான்றுகள் தரும் கல்வெட்டுக்களில் மிகமிகப் பெரும்பான்மையானவை திருக்கோயில்களிலேயே உள்ளன. எனவே, கோயில் அறங்காவலர்களின் உதவியும் ஒத்துழைப்பும் இத்துறைக்குப் பெரிதும் தேவையான ஒன்று.

இந்தக் கருத்தரங்கிலே ஒரு தனிச்சிறப்பு. இந்தியாவிலேயே முதன் முதலாக நமது துறைதான் கல்வெட்டுப் படி எடுப்பதில் ஒரு முன்னேற்றப் பாதையை வகுத்திருக்கிறது. கண்பிரதி, காகித அழுத்தப் பிரதி, புகைப்படப் பிரதி ஆகிய மூன்று முறையைத்தான் கல்வெட்டுத் துறை இதுவரைப் பின்பற்றி வந்தது.

நமது மாநிலத் துறைதான் முதன் முதலாக ‘சீபா’ கம்பெனியாரின் ரசாயனப் பொருள்களையும், கண்ணாடி இழையையும் கொண்டு படி எடுப்பதில் ஒரு செம்மையான வழியை மேற்கொண்டு நற்பயன் தந்திருக்கிறது. இந்த முறையில் கட்புலனாகாத, காமராக் கண்ணுக்கும் அகப்படாத, புள்ளிகள் கூடச் செம்மையாக, தெளிவாகப் படிமாறி யிருப்பதைப் பார்க்கும்போது எல்லையில்லாத மகிழ்ச்சியுண்டாகிறது. இந்தப் புது முயற்சிக்குக் காரணஸ்தர்களாக இருந்தவர்கள் இருவர். ஒருவர் நமது பழம்பொருள் துறைத் தனியலுவலர் திரு. நாகசாமி, மற்றவர், அவருக்கு இம்முறையை எடுத்துக்காட்டி உடனிருந்து உதவிய ‘சீபா’ கம்பெனியைச் சேர்ந்த திரு. ஜெவந்தீச்வரன்.

முதற்படி எடுக்கும்போது உடனிருந்து காணவும், துணையா யிருந்து பணியாற்றவும் எனக்கும் வாய்ப்புக் கிட்டியது என்று கூறிக்கொள்வதில் நான் பெருமையடைவது தவறில்லை தானே?

***(தமிழகத்தில் முதன் முதலில் 1966ல் கூட்டப் பெற்ற கல்வெட்டுக் கருத்தரங்கில் சா. கணேசன் ஆற்றிய சிறப்புரையின் சாரம்)***



# ஏழகப் படை

## கல் சொல்லும் கதை - 1

***கல் வெட்டுகளால் நம் நாட்டு வரலாறு தெரிய வருகிறது. அவை சொல்லும் கதைகள் கட்டுக் கதைகள் அல்ல; உண்மைக் கதைகள்.***

"கல்லில் முட்டிக்கொண்டால் பல்லுத்தான் உடையும்'' என்பது ஒரு பழமொழி. ''அது சரியா?'' என்று என்னைக் கேட்டால், இல்லை என்று சொல்வதோடு மட்டும் அமைய மாட்டேன். ஆனால், அப்படி முட்டிக்கொண்டால்தான் எத்தனையோ வரலாற்று நிகழ்ச்சிகளை மூடிக்கொண்டிருக்கும் இருள் ஓடு உடைபட்டு ஒளி வெளிப்படும் என்றும் அழுத்தமாகச் சொல்வேன்.

ஆம்; இது மெய்; முற்றும் மெய்யே; வெறும் புகழ்ச்சி இல்லை. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, ஆயிரம் பல்லாயிரம் கற்கள் எத்தனை எத்தனையோ கதைகளைத் தம்முள் அடக்கிக்கொண்டு தமிழகம் எங்கும் யார் கேட்பார்கள் என்று கதை சொல்லக் காத்துக் கிடக்கின்றன. கேட்பாரில்லையே என்று ஏங்கித் தவித்து உடல் நைந்து நலிந்து உருக்குலைந்து போன கற்கள் கணக்கில் அடங்கா. எஞ்சிய உறுதியுள்ள கற்களைக் கண்டவர்கள் ஏராளம். கிட்ட நெருங்கியோர் பலர். நோக்கியவர்கள் சிலர். அவர்களிலும் சொற்பம் கற்களைக் கேட்க முயன்றவர்கள். ஆனால், ஓர் அற்பத் தொகையினரே கல்லைக் காதலித்து அதன் காலடியிலே நின்று பல காலும் முட்டி மோதிக்கொண்டவர்.

சில காலமாகக் கல்வெட்டுத் துறை ஆராய்ச்சியாளர்கள், கனவிலுங்கூடக் கல்லில் முட்டிக் கொள்வதையே தவிர்க்கவொண்ணாக்

கடமையாகக் கொண்டொழுகியதன் பயனாக மறைந்து கிடந்த கதைகள் பலவற்றை அந்தக் கற்கள் சொல்லத் தொடங்கின. அதுவும் அரை குறையாக ஏதோ கடனுக்கு முட்டிக்கொண்டவர்களிடம் அந்தக் கற்களுக்கு என்னவோ ஓரளவு இரக்கம் ஏற்பட்டாலும் தக்கபடி பரிவு உண்டாகவே இல்லை. ஆனால், செம்மையாக, அதாவது பக்தி சிரத்தையான வைராக்கியத்தோடு முட்டிக்கொண்டவர்களிடந்தான் கல்லும் கனிந்து கதை சொல்லத் தொடங்கியிருக்கிறது. அவர்களும் தங்கள் காது குளிரக் கேட்டவற்றையெல்லாம் நமது மனமும் மகிழ அப்படியப்படியே எழுதி வெளியிட்டிருக்கிறார்கள்.

என்றாலும், சரியாக முட்டிக்கொள்ளாத, ஏன், எட்டியேகூடப் பார்க்காத - கதை சொல்லும் கற்கள் பல, தமிழ்நாட்டிலே இன்னும் நிரம்பக் கிடக்கின்றன. அவற்றையெல்லாம் அணுகி, முட்டி மோதி முயன்று, அவற்றினுள்ளே மறைந்து கிடப்பனவற்றை வெளிப்படுத்த வேண்டும். அப்பொழுதுதான் தென்னிந்திய வரலாற்றை ஓர் அளவிலாவது செம்மையாகப் புலப்படுத்தக் கூடும். இன்றுள்ள புதிர்களும் ஐயப்பாடுகளும் குழப்பங்களும் பேரளவு விடுபட்டு ஓரளவு கிட்டவும் கூடும். சரி; இனி, கல் சொல்லும் கதையைக் கேட்கலாம்.

காரைக்குடியை ஒட்டி ஒரு சிற்றூர். ‘கழனி வாயில்’ என்பது அதன் பெயர். ஒரு நாள் அந்தக் கிராமத்தைச் சுற்றிப் பார்க்கலாம் என்று போனேன். மிகப் பழுதுபட்டுக் கிடக்கும் ஒரு பெருமாள் கோவில் என் கண்ணிற்பட்டது. வந்ததுதான் வந்தோம். பெருமாளையாவது சேவிக்கலாம் என்று உள்ளே நுழைந்தேன். வாயிற் படிக்குப் பக்கத்தில் கிடந்த கல் ஒன்று என் காலைத் தடுக்கிற்று. ‘என்னடா, உள்ளே நுழையும்பொழுது அபசகுனம் போலத் தடுக்கிறதே!’ என்று சிறிது தயங்கினேன். நான் தயங்கிச் சிறிது நின்றதும், அந்தக் கல் என்னைப் பார்த்துப் பேசத் தொடங்கிவிட்டது. கல் பேசும் என்பதைக் கனவிலும் கண்டறியாத நான் வியப்படைந்து திகைத்து நிலை பெயராமல் நின்றே விட்டேன்.

“இத்தனை நாளாக நீ ஏன் இந்தப் பக்கத்தை எட்டிக் கூடப் பார்க்கவில்லை? ‘இது ஒரு பட்டிக்காடு, இந்தக் கோவில் ஒரு பாடாவதிக் கோவில்!’ என்ற எண்ணந்தானே? நான் சொல்லப் போகும் கதையைக் கேட்டால் அந்த எண்ணமெல்லாம் ஆடிக்காற்றில் அகப்பட்ட பஞ்சாய்ப்

பறந்து போகாதா என்ன?'' என்று சொல்லி நிறுத்திற்று. 'என்ன ஆச்சரியம்! கல் பேசுகிறது; கதையும் சொல்லப் போகிறதாமே? நான் ஒருகால் கனவு காண்கிறேனா? அல்லது கற்பனை உலகில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறேனா?' என்று ஒரு விநாடி மயக்கமுற்றேன். ஆனால், மறுவிநாடியே, 'அப்படி ஒன்றும் இல்லை; தன்னியல்பிலேயே இருக் கின்றேன்' என்று தெளிவடைந்தேன். கல் கதையைத் தொடங்கிவிட்டது. சரி; கல் சொல்லும் கதையைத்தான் கேட்போமே என்று காதுகளைத் தீட்டிக் கொண்டு விழித்த கண் விழித்தபடி நின்றேன். அந்தக் கதையை அப்படியே நீங்களுந்தாம் கேளுங்களேன்.

''அப்பா கணேசா, நீ எண்ணிக்கொண்டிருப்பதுபோல் இது ஒரு சாதாரணப் பட்டிக்காடு அல்ல; சரித்திரச் சிறப்பு வாய்ந்த பழம் பெருநகரம் இது. உன் முன்னோர்கள் பன்னூறு ஆண்டுகளுக்குமுன் இங்கே குடியேறி வாழ்ந்திருக்கிறார்கள். பக்கத்தில் இருக்கிறதே உன் ஊர் - ஆம், காரைக்குடி நகரம் - அது இன்று பெரிய நகரமாக இருந்தாலும் இருநூறு ஆண்டுகள்தாம் ஆகின்றன, அது உண்டாகி. ஆனால், இந்த நகரமோ மிகப் பழமையானது. பல 'பெருந்தெருக்' களைக் கொண்டு விளங்கியது இந்த நகரம். 'பெருந் தெரு' என்றால் நீ நினைக்கிறபடி பெரிய வீதி என்று பொருள் அல்ல. ஓர் ஊர்ப் பகுதியைப் 'பெருந் தெரு' என்று வழங்குவார்கள் அக்கால மக்கள். பல தெருக்களையும் சந்துகளையும் கொண்டு விளங்கும் 'பெருந்தெரு'. தெரிந்ததா? இந்த ஊர், கோட்டையும் கொத்தளமும் அங்காடியுமாக அந்தக் காலத்தில் கண்குளிரக் காட்சியளித்துக் கொண்டிருக்கும். இங்கு ஒரு பெரும் படை இருந்தது. பாண்டி நாட்டிற்கே பெரும் புகழ் ஈட்டிக் கொடுத்துக் கொண்டிருந்த படைக்கு இவ்வூர்தான் இருப்பிடம். இந்தப் படையின் பெயரைக் கேட்டாலே எதிரிகள் திடுக்கிடுவார்கள். அந்தப் பெயர் என்ன என்று தெரிந்து கொள்ள நீ மிக்க ஆவல் உள்ளவனா யிருக்கிறாய் அல்லவா? பாவம்! உன்னைக் காக்கவைக்கவில்லை. சொல்லி விடுகிறேன். கேள்; **'ஏழகப் படை'** என்பதுதான் அப்படைக்கு உரிய பெயர். இந்த ஊர் இன்னும் தமிழ்நாட்டுச் சரித்திரப் புத்தகத்தில் இடம் பெறாவிட்டாலும் இந்த 'ஏழகப் படை'யின் பெயர் இடம் பெற்றுவிட்டது. மரம் உறங்கும்; மண் உறங்கும்; பூ உறங்கும்; புள் உறங்கும்; மக்களும் உறங்குவர் என்றாலும், இந்த வளநகர் உறங்கியறியாது. கடைகளும் வீடுகளும் கதவு மூடக் கண்டறியேன்.

இரவு பகலும் எந்நேரமும் இந்த நகரம் ஜே ஜே என்று இருக்கும். இந்நகரத்தைக் கண்டுதானே ஒரு புலவர் 'அடையாத வாயில் அகம்' என்று பாராட்டிப் பாடியிருக்கிறார்? என்ன, உனக்கு எல்லாம் வியப்பாக இருக்கிறது அல்லவா? நீ நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி தான்; வகையாக வந்து மாட்டிக் கொண்ட உன்னிடம் என் கதையைச் சொல்லாமல் மட்டும் விடமாட்டேன்.

''இந்த நகரின் பெயர்தான் 'ஏழகம்' என்பது. அதனால்தான் இங்கிருந்த அந்தப் புகழ் பெற்ற படை 'ஏழகப் பெரும் படை' அல்லது 'ஏழகப் படை' என்று வழங்கியது. 12-ஆம் நூற்றாண்டுக்கு முன்வரையில் இந்தப் படை ஈடும் இணையுமற்றுத் தனிப் புகழ் கொண்டு விளங்கியது. வணிகர் வாழ்ந்த பகுதிக்கு 'ஏழகப் பெருந்தெரு' என்பது பெயராகும். அதை 'ஏழகச் சக்கரவர்த்திப் பெருந்தெரு' என்றும் கூறுவார்கள். இந்தப் பெருமாள் கோவிலுக்கு 'ஏழகப் பெருமாள் விண்ணகரம்' என்பதே திருநாமம். வீரபாண்டியன் காலத்தில் இதற்கு 'வீரபாண்டியபுரம்' என்று மற்றொரு பெயரும் ஏற்பட்டது. அதனால் இதை 'ஏழகப் பெருந்தெருவான வீர பாண்டியபுரம்' என்றோ 'ஏழகச் சக்கரவர்த்திப் பெருந் தெருவான வீரபாண்டியபுரம்' என்றோ இணைத்துக் குறிப்பிடுவதே சாசன வழக்காகிவிட்டது. மேலும் சிறுகுளம், கழனிவாயில், மருதேந்திரபுரம் முதலான பெயர்களால் இதன் நகரப் பகுதிகள் வழங்கி வந்திருக்கின்றன.

''இங்கே வசித்த நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் தொகை நிலையால் 'ஐஞ்ஞூற்றுவர்' என்றும், வகை நிலையால் எழுவகையார் அல்லது ஏழகத்தார் என்றும் குறிப்பிடப் பெற்றார்கள். அவர்களுக் குள்ளே ஒரு பிரிவினரான, அதாவது எழுவகை நகரத்தார்களுக்குள் ஒரு வகையினரான வயிரவன் கோவிலாருக்கு 'ஏழகப் பெருந் தெருவான வீர பாண்டியபுரமுடையார்' என்றே கோத்திரப் பெயர் வழங்கி வருகிறது. அதுவன்றியும் அவர்களின் உட்பிரிவு மூன்றுக்கும் சிறுகுளத்தூருடையார், கழனிவாயிலுடையார், மருதேந்திரபுர முடையார் என்றே பெயர்கள் வழங்கியும் வருகின்றன என்பது உனக்குத் தெரியுமே.

''பாண்டிய நாட்டுப் படை இருவகையாக அமைக்கப்பட்டிருந்தது. ஒன்று மறப்படை; அதாவது (Offensive Force) வெளிப் போந்து

தாக்குகின்றவர்கள். மற்றொன்று அகப் படை; அதாவது (Defensive Force) உள் நின்று வெளியார் தாக்குதலைத் தடுத்து நாட்டைக் காப்பவர்கள். அவ்விருவகையினரின் சந்ததியார்களே இன்று மறவர் என்றும், அகம்படையர் அல்லது அகம்படியர் என்றும் முறையே குறிக்கப் பெறும் குலத்தினராக வேண்டும். அந்த அகப்படையில் மிக்க ஆற்றல்கொண்ட பகுதி இங்கே வைக்கப்பட்டிருந்தது. ஏழகத்தில் இருந்த காரணத்தால் அந்தப் படைக்கு ஏழகப் படை என்று பெயர் வழங்கி வந்திருக்கிறது.

''இங்கிருந்த பல கல்வெட்டுகளும் இன்று மாய்ந்து மடிந்து மட்கிவிட்டன. என் மீதில் இருந்த எழுத்துக்களும் உன்னைப் போன்ற வர்களின் கால் பட்டும் கை பட்டும் அழிந்தொழிந்தன. ஆனாலும் பக்கத்தில் உள்ள புதுக்கோட்டைச் சீமையில் அந்தச் சம்ஸ்தான அரசாங்கம் காட்டிய அக்கறையினால் அந்தச் சம்ஸ்தான எல்லைக்கு உட்பட்ட கல்வெட்டுக்களை எல்லாம் கல்வெட்டுப் பகுதியினர் பேணிப் பாதுகாத்து வருவதுடன் படி எடுத்து வெளியிட்டும் இருக்கிறார்கள். அவற்றுள் ஆலங்குடித் தாலுகா கோவிலூரில் பாலபுரீசர் கோவில் தெற்குச் சுவரில் உள்ள சாசனம், யார் செய்த பூஜா பலனாலோ, இன்றும் இறவாது நின்று கதை சொல்லிக் கொண்டிருக்கிறது.

''இந்த விவரங்கள் எல்லாம் வெளியுலகுக்குப் புலப்பட்டிருந்தால் மதுரைத் தாலுகாவில் இன்று திருவேடகம் என வழங்கும் ஏடகந்தான் ஏழகமாயிருக்க வேண்டும் என்றும், 'ஏழகப் படை' என்பது அந்த ஏடகத்தில் இருந்த படையே ஆக வேண்டும் என்றும், 'ஏழகத்தார்' எனக் காணப்படும் சொல்லும் அந்த ஏழகப் படையைக் குறிப்பதாகவே கொள்ள வேண்டும் என்றும் திரு. கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியாரைப் போன்ற புகழோங்கிய சரித்திரப் பேராசிரியர்களுங்கூட மயங்க வேண்டிய நிலை ஏற்பட்டிருக்காது அல்லவா?

''அன்று பரகேசரி மூன்றாவது குலோத்துங்கசோழன் குலசேகர பாண்டியன்மீது கடுஞ்சினங்கொண்டு பெரும் படை நடத்திப் போர் செய்ய வந்தான். அப்படி வந்து கொண்டிருந்தவனை இந்த ஏழகப்படை மட்டியூரில் எதிர்த்துப் பொருதது. அந்நாளில் இவர்கள் காட்டிய வீர தீர பராக்கிரமங்களை எதிரிகளுங்கூட மனமாரப் பாராட்டினார்கள். அதை நினைக்கும்பொழுதெல்லாம் உடல் சிலிர்க்கிறது; உள்ளம் இறும்பூது எய்துகிறது.

''இவற்றையெல்லாம் யார் உலகிற்கு எடுத்து விளக்கப் போகிறார் களோ? மேலும் ஒன்று மட்டும் சொல்ல வேண்டும். என்னைப் போல இன்னும் எத்தனையோ கற்கள் தங்களிடம் உள்ள கதைகளையெல்லாம் சொல்ல வேண்டும் எனறு தவியாய்த் தவித்துக்கொண்டிருக்கின்றன. அவற்றையெல்லாம் கண்டு காது கொடுத்துக் கேட்பார் யாரோ? ஏதோ என் ஏக்கம், பெருமாளைச் சேவிக்கச் சென்ற உன்னைத் தடுத்து நிறுத்திக் காலத்தைப் போக்கிவிட்டேன். என்மீது கோபங் கொள்ளமாட்டாயே?''

★★★

**ஏ**தோ பெருந் தவறு செய்துவிட்டு மன்னிப்புக் கேட்டுக் கொள்ளும் பாவனையில் அந்தக் கல் தன் பேச்சை முடித்தது.

''கோபமா? ஆம்; கோபந்தான்! அதுவும் ஆறாத கோபம். ஆனால், உன்மீது அல்ல; எங்கள் முன்னோர்களின்மீதுதான் கோபமும் ஆத்திரமுமாக வருகிறது. வந்து என்ன செய்வது? அவர்கள் யாவருமே தப்பித்துச் சென்று விட்டார்களே! இனிக் கோபமும் ஆத்திரமும் கொள்வதால் என்ன பயன்? போகட்டும்; உலகறியாது மறைந்து கிடக்கும் இந்த உண்மைகளையெல்லாம் எனக்கும் புலப்படும் வண்ணம் எடுத்துரைத்த உனக்கு என்ன கைம்மாறு செய்வதென்பதுதான் புலப்பட வில்லை. ஆனால், நீ தெரிவித்தபடி செல்லும் இடங்களில் காணும் கற்களை எல்லாம் கதை சொல்லக் கேட்டு அவற்றின் ஏக்கத்தை ஏதோ என்னால் முடிந்தவரை போக்க முயல்கிறேன்'' என்று சொல்லி நன்றியறிவோடு பெருமாளுக்குப் போடவேண்டிய கும்பிடை அந்த அருமையான கல்லுக்கே போட்டுவிட்டு வீட்டுக்குத் திரும்பினேன். நான் செய்தது சரிதானே?



# வந்ததை யெல்லாம் வழங்கிய கவிஞன்

## கல் சொல்லும் கதை - 2

**புலவனும் வண்மையுடையவனாக இருப்பதற்கு இலக்கியத்தில் பல உதாரணங்கள் உண்டு. கல் சொல்லும் கதையிலும் உண்டு.**

புதுக்கோட்டை சம்ஸ்தானம் என்பது தமிழ்நாட்டில் இருந்த ஒரே ஒரு சுதேச மன்னர் ஆட்சிப் பிரதேசமாகும். திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர், இராமநாதபுரம் ஜில்லாக்களைத் தனது எல்லையாகக் கொண்டது அது. சுமார் 1175 சதுர மைல் நிலப்பரப்பை உடையது. குளத்தூர், ஆலங்குடி, திருமெய்யம் ஆகிய மூன்று தாலுகாக்களாக அது பிரிக்கப்பட்டிருந்தது. இப்பொழுது இந்தப் பிரதேசம் திருச்சி ஜில்லா வுடன் ஒரு ரெவின்யூ டிவிஷனாக இணைந்து அகண்ட இந்தியாவில் கலந்துவிட்டது. இந்த விவரங்கள் நமக்குத் தெரிந்தவைதாம்.

ஒரு நாள் குளத்தூர்த் தாலுகாவில் நாங்குப்பட்டி என்ற ஒரு சிற்றூரில் ஓர் அன்பரைப் பார்ப்பதற்காகச் சென்றிருந்தேன். அவரைக் கண்டு பேசும்போது, எங்கள் பேச்சுக்கு இடையில் பக்கத்திலே மடத்துக் கோவில் என்று ஒரு கோவில் இருக்கிறதென்றும், அகத்தியர் முதலான முனிவர்கள் அங்குள்ள பெருமானைப் பூசித்தார்கள் என்றும் சொல்லி வைத்தார். அப்படியானால் சாப்பாட்டிற்கு முன்னதாகவே சென்று அதைப் பார்த்துவிட்டு வரலாம் என்றேன் நான். நண்பரும் சரி என்றார். உச்சிக் காலத்திற்குள் சென்றால் பொங்கல் புளியோதரை ஏதாவது கிடைக்க மாட்டாதா என்ற எண்ணம் உள்ளூற எனக்கு. நண்பர்

முன்செல்ல அவரைப் பின்தொடர்ந்தேன். பிரசாத ஆசை பின்னிருந்து தள்ளச் சில நிமிஷங்களில் கோயில் வாயில் வந்தடைந்தோம்.

இரண்டு நீல நிற எனாமல் போர்டு, வலைக் கம்பிகளுக்குள் இருந்துகொண்டு ஒற்றைக் காலில் நின்று எங்களை வரவேற்றன. கிட்ட நெருங்கியவுடன்தான் அவை அங்கே நிற்பது எங்களை வரவேற்ப தற்காக அல்ல. ஆனால், எச்சரிக்கவே என்பதைத் தெரிந்துகொண்டேன். ''இந்தக் கோயில் பழஞ்சின்னச் சட்டத்தினால் பாதுகாக்கப்பட்டிருக்கிறது. யாரும் எதற்கும் ஊறு செய்யக் கூடாது. மீறி நடப்பவர்கள் தக்கபடி தண்டிக்கப்படுவார்கள்,'' என்று கடுமையாக எச்சரித்துக் கொண்டிருக் கின்றன அவை.

'அட பாவமே! இந்தப் போர்டைப் பார்த்தால் பூசை-கீசை ஒன்றும் இங்கு இல்லை என்று அல்லவா தெரிகிறது? பொங்கல் புளியோதரை எதிர்பார்த்து வந்த நமது எண்ணத்தில் மண்தான்!' என்று நன்றாகப் புரிந்துகொண்டேன். என்றாலும் ஏமாற்றத்தை வெளியில் காட்டிக் கொள்வேனா என்ன? இந்த லட்சணத்தில் நண்பர் என் தயக்கத்தைப் பார்த்து, ''என்ன யோசிக்கிறீர்கள்? காவல் ஏதாவது இருக்குமோ என்று நினைக்கிறீர்களா? அப்படி ஒன்றும் இல்லை; தாராளமாகச் செல்லலாம் உள்ளே; வாருங்கள்,'' என்று முன் நடக்கத் தொடங்கினார். பிரசாதம் இல்லை என்பதற்காகத் திரும்பிச் சென்றுவிட்டால் நண்பர் நம்மைப்பற்றி 'ஒரு மாதிரி'யாக அல்லவா எண்ணிவிடுவார்? எனவே, தன்மான உணர்ச்சி பிடர் பிடித்து உந்தப் பின்சென்றேன் நான்.

அருமையான கோயில். மிகப் பழமையாயினும் வனப்பு மங்கவில்லை. அழகொழுகும் அந்த மூலத் திருப்பள்ளி, ஆயிரம் ஆண்டுகட்கு முற்பட்டதென்பதைச் சிற்பத் துறையில் சொற்பப் பயிற்சியுடையாரும் கண்டு கொள்ளலாம். உள்ளே சென்றேன். நல்ல ஆகிருதியுடன் கூடிய சிவலிங்கம் பூசையில்லையே என்று சிறிதும் வாட்டமுறாமல் அமைதியாக இருப்பதைக் கண்டேன். பெருமானுக்கு எதிரில் பூசை அல்லது தியானம் செய்கின்ற அமைதியில் ஐந்து முனிவர்கள் வரிசையாக விளங்குகின்றார்கள். அவர்கள் யாவர் என்று நண்பரைக் கேட்டேன். அவர் சொன்னார்; ''அவர்கள்தாம் இப்பெருமானைப் பூசித்த ரிஷிபுங்கவர்களாம்; அகத்தியர், புலத்தியர், விசுவாமித்திரர், பராசரர், ஜமதக்கினி என்பதாகச் சொல்லுவார்கள்'' என்றார்.

'பேஷ்! பஞ்சரிஷி பூசை செய்ததால் தான் இப்பொழுது பூசைக்கே பஞ்சம் வந்துவிட்டதாக்கும்' என்று கேட்கத் தோன்றிற்று. அப்படிக் கேட்பது நாகரிகம் அல்ல என்று கருதி, எண்ணத்தில் தோன்றியதை வெளிவிடாமல் அடுத்த பக்கம் திரும்பினேன். நான்கு பேர் காணப்பட்டனர். தோற்றத்திலிருந்து வனசரர் என்று கொள்ளலாம். இதைப் பார்த்துவிட்டு நண்பரின் பக்கமாகத் திரும்பினேன். நான் என்ன கேட்கப் போகிறேன் என்பதை ஊகித்துக்கொண்ட அவர், "இவர்கள் நால்வரும் வேடர்கள். வேடர்களுக்கு இங்கு என்ன வேலை என்று தானே நினைக்கிறீர்கள்? இந்தக் கோயில் நந்தி வழக்கம்போலக் காட்டிற்குள் சென்று மேய்ந்ததாம்; அதைக் கண்ட இந்த வேடர்கள் நால்வரும் இதை அடித்துத் துரத்தினார்களாம். அதனால் கோபமுற்ற நந்தி அவர்களைச் சபிக்க, நால்வரும் இப்படிக் கல்லாய்ச் சமைந்து விட்டார்களாம்!" என்று எனக்கு எடுத்துரைத்தார். "இதற்கு என்ன ஐயா ஆதாரம்?" என்று கேட்டால், "என் பாட்டனார், இப்படித்தான் சொன்னார்!" என்று பதில் சொன்னார். அதற்குமேல் அப்பீல் ஏது? எனவே, நான் எதிர்வாதம் செய்யவில்லை.

இந்த இரண்டு பகுதியும் குறிப்பிடத்தக்க சிற்பங்களாகும். இனி வேறு விசேஷமாக ஒன்றும் இல்லையாததால், கோயிலை வலம்வந்து சிவபெருமானுக்கு ஒரு கும்பிடு போட்டுவிட்டுப் பக்கத்தில் நின்ற நண்பரிடம் சுவாமிக்கு என்ன பெயர் என்று கேட்டேன். "சுவாமியின் பெயரா? பார்த்தாலே தெரியவில்லை சிவலிங்கம் என்று?" என்று ஒரு போடு போட்டாரே பார்க்கலாம்! சரி; நண்பர் நல்லவரே தவிர விஷயம் தெரிந்தவர் அல்ல என்று நன்கு புரிந்துவிட்டதால் இனி இவரை ஒன்றும் கேட்பதில்லை என்று முடிவு கட்டிக்கொண்டு வீட்டை நோக்கித் திரும்பலானேன். மணி ஒன்று; பசி வயிற்றைக் கிள்ளியது. நண்பருக்கோ எல்லாம் ஆறுமுன்னதாகவே சாப்பாடு போட்டு வராத விருந்தாக வந்திருக்கும் என்னை உபசரிக்க வேண்டும் என்ற கவலை. எனவே, வெகுவேகமாக வாயிலைக் கடந்து தெருவைச் சென்று அடைந்து விட்டார். எனக்கோ அன்று கழனிவாயில் ஏழகப்பெருமாள் விண்ணகரத்து வாயிற் கல் சொன்ன செய்தியைக் கேட்டதிலிருந்து எங்கே சென்றாலும் இங்கே கதை சொல்லும் கல் இருக்கிறதா என்று தேடுவதே தொழிலாகப் போய்விட்டது. எனவே, சுற்றிலும் கண்ணோட்டமிடத் தொடங்கினேன்.

யாரோ என்னை, ''இங்கே வா'' என்று அழைப்பது போலக் கேட்டது. யாரையும் கண்ணில் காணவில்லை; நண்பரோ நான் பின்னால் வருகிறேனா என்றுகூடத் திரும்பிப் பாராமல் வேகமாகச் சென்று கொண்டிருந்தார் வீதிவழியே. அப்படி இருக்க நம்மை யார் கூப்பிடு கிறார்கள்? பஞ்ச முனிவர்களா அல்லது அந்த நால்வேடர்களா? அல்லது அந்த வேடர்களைக் கல்லாய்ச் சபித்த சாக்ஷாத் நந்திதானா? ஒன்றும் புலப்படவில்லை! ஒருவேளை மனப்பிராந்தியாக இருக் கலாமோ என்று ஒரு கணம் தயங்கினேன். ஏதோ ஒன்று காந்தம்போல அல்லவா என்னை ஈர்க்கிறது? என்னை அறியாமலே நான் ஈர்ப்பு நெறியில் செல்லத் தொடங்கினேன். உவடரித்த வெள்ளைக் கல் சுவர்; அதன் அடிப்பாகமோ பொரிந்து சிதள் பெயர்ந்து காணப்பட்டது. மேல் நோக்கினேன். கண்ணொளி மங்கிவிட்டது. நானும் என்னை மறந்தேன். உவடு அரித்த அந்தப் பழஞ்சுவர் உரை நிகழ்த்தத் தொடங்கிவிட்டது. அந்த உரையை நீங்களும் தாராளமாய் அப்படியே கேட்கலாம் இனி:

★★★

அப்பா! நான் சொல்லப்போகிற காலத்தில் புதுக்கோட்டை என்ற ஊரே இல்லை; சம்ஸ்தானம், தர்பார் என்ற சொற்களை யாருமே காதாலும் கேட்டதில்லை; சோழர் ஆட்சி சிறந்திருந்தது; அப்பொழுது இவ்வூர் உறத்தூர் என்ற பெயருடன் விளங்கியது. இந்தக் கூற்றத்திற்கே அதாவது தாலுகாவிற்கே இவ்வூர்தான் தலைமை. இந்த நாட்டின் அதாவது டிவிஷனின் பெயர் வடகோனாடு ஆகும். இந்த வளநாட்டின் அதாவது ஜில்லாவின் பெயர் இரட்டபாடி கொண்ட சோழவளநாடு என்பது. எனவே, இதை 'இரட்டபாடி கொண்ட சோழவளநாட்டு, வடகோனாட்டு உறத்தூர்க் கூற்றத்து உறத்தூர்' என்றே விளக்குவார்கள்.

சுமார் ஆயிரம் ஆண்டுகட்குமுன் சோழ மன்னன் ஒருவனால் இக்கருவறையும், விமானமும் கட்டிக் 'கடவுண் மங்கலம்' செய்யப் பட்டது. இப்பெருமானை 'ஆண்டான்' என்றே அக்கால மக்கள் கூறுவார்கள். ஆனால், இந்தக் கோயில் உறத்தூர்க் கூற்றம் முழுவதற்கும் பொதுவாக விளங்கி வந்தமையால் 'உறத்தூர்க் கூற்றத்து உடையார் திருப்பெருமானாண்டார்' என்று விளக்கமாகச் சாசனங்கள் கூறும். பின்னர் இக்கோயிலின் நிர்வாகம் வடகோனாட்டுப் பொதுவில் வந்துவிட்டமையால் பிற்காலச் சாசனங்கள் 'வடகோனாட்டு உடையார்

திருப்பெருமானாண்டார்' என்று துலக்கும். அம்மன் பெயர் 'பெரிய நாச்சியார்' என்பதாகும்.

கி.பி. 1163-இல் சாரரையன் தன்னன் எதிரிலாப் பெருமாளான குலோத்துங்க சோழக் கடம்பராயன் என்பான் இக்கோயில் பிராகாரம் மதில் முதலியவற்றை அமைத்ததுடன் நடன மகளிர் ஆடரங்கையும் நிருமாணித்தான். அந்த ஆடரங்கில் கைவழி நயனம் செல்லக் கண்வழி மனமும் செல்ல ஐயநுண்ணிடையார் ஆடிய நடனங்கள்தாம் எத்தனையோ! இந்தக் கோயில் தேவரடியாரில் கரியார் மகள் அழகிய வரதி அன்றொரு நாள் ஆடிய நடனத்திற்கு மகிழ்ந்து இவ்வூர்ச் சபையார் அவளுக்குப் பரிசாக ஒரு நிலத்தைக் கொடுத்தார்கள் என்றால் அவள் நடனத் திறமையையும், இக்கூற்றத்துக் கோயிலுக்கு இருந்த நிலப் பெருக்கத்தையும் பற்றிச் சொல்லவா வேண்டும்? இந்தக் கோயிலுக்கு அவ்வளவு நிலம் எப்படி ஏற்பட்டிருந்தது என்ற ஐயம் உன் மனத்தில் அரும்புகின்றதல்லவா? இப்பொழுது உள்ளதுபோல மரணத் தீர்வை (Death Duty) எல்லாம் அப்பொழுது கிடையாது. பெரும்பொருள் படைத்தோர்கள் எல்லாம் தாங்கள் இறக்கு முன்னதாகவே தங்கள் உடைமைகளில் ஒரு பகுதியைக் கோயிலுக்கு எழுதிவைத்து விடுவார்கள். வாரிசு இல்லாதவர்கள் தங்கள் உடைமை முழுவதையுமே கோயிலுக்குக் கொடுத்துவிடுவார்கள். ஏன் அப்படி என்ற ஐயம் உண்டாகிறதல்லவா? கோயில்தான் அக்காலத்தில், கல்வி, கலை, சுகாதாரம், பாதுகாப்பு முதலியவற்றில் அக்கறையுடைய பொது அமைப்பாக விளங்கியது. மக்களிடையில் ஏற்படும் வழக்குகளையும் விசாரித்துத் தீர்த்து வைக்கும். கோயில் வாசல் தீர்ப்பு என்றால் அதற்கு எத்துணை மதிப்பு அந்தக் காலத்தில் தெரியுமா? கோயில்கள்தாம் அக்காலத்தில் குடியாட்சிப் பீடமாக நிலவி வந்தன என்றால் தவறே இல்லை. எனவே, இந்தக் கூற்றத்துக் கோயிலுக்கு ஏராளமான நிலபுலங்களும், தோட்டம் துரவுகளும் இருந்ததில் வியப்பு என்ன இருக்க முடியும்? அத்துடன் நந்தா விளக்குக்காக விடப்பட்ட கன்று காலிகள் கணக்கில்தான் அடங்குமா என்ன? அப்படி வாழ்ந்த கோயில்தான் இது. இதை உனக்கு மெய்ப்பிப்பதற்காக 810 ஆண்டுகட்கு முன் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியைச் சொல்லுகிறேன். கவனமாகக் கேள்.

கி.பி. 1145-ஆம் ௵ செப்டம்பர் ௴ 23௳-க்குச் சரியான குரோதன௵ புரட்டாசி௴ 7௳ உத்தரட்டாதி நாளன்று நடந்தது இது.

கார்காலத்துப் பூரணசந்திரன் நீலநெடுவானில் நின்று தன் அமுத கிரணங்களால் உலகை வெள்ளி மயமாக ஆக்கிக்கொண்டிருக்கிறான். கோயிலில் சாயரட்சை நடந்து முடிந்தது. நாகஸ்வரம், மணி முதலிய நாதமுழக்கம் ஓய்ந்தது.

கோயிலுக்கு எதிரே உயர்ந்த மேடை; கூந்தல், மாவிலை, பாளை முதலிய தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கிறது; நாற்புறமும் நான்கு பித்தளைக் குத்துவிளக்கு; அவை அழகாய்ச் சுடர்விட்டு எரிகின்றன; மேடை நடுவில் இரத்தினக் கம்பளத்தின் மீது திருச்சிற்றம் பலக் கவிராயர் சிவப்பழமாக வீற்றிருக்கிறார்; மேடைக்கும் கோயிலுக்கும் இடையில் விரிக்கப்பட்டிருக்கும் பாய்களின்மீது அந்தணரும் அறவோரும் பெருமக்களும் பொதுமக்களுமாய் நிறைந்திருக்கிறார்கள்.

இந்த உறத்தூர்க் கூற்றத்துள் அடங்கிய பையூர்ப் பெருமகன் வேதவனம் உடையான்மீது தாம் பாடிய நூறு பாடல்களையும் பண்ணோடு பாடினார் கவிராயர். இன்பத் தேன் மாந்தி ஒரே ஆனந்த வெள்ளத்தில் யாவரும் அமிழ்ந்திருந்தார்கள். பாடல் முடிந்ததும் கவிராயர் பேசத் தொடங்கிவிட்டார். அவர் பேச்சில்தான் என்ன அன்பு! என்ன அடக்கம்! என்ன பக்தி! அதை அவர் வாய்மொழியாகவே சொல்லுகிறேன்.

''அன்பர்களே! எனக்கோ வயசாகிவிட்டது; ஆண்டவன் அருளாலும் அன்பர்களின் நல்லெண்ணத்தாலும் எல்லாருடைய அபிமானத்தையும் பெற்று ஒரு குறைவும் இன்றி வாழ்ந்து வருகிறேன்; தமிழ்த் தொண்டாற்றி என் காலத்தை ஏதோ ஓரளவு பயன் உள்ளதாகக் கழித்துவிட்டேன்; இனி எனக்கு வேண்டியது அவனடி நிழலே. ஆண்டவன் அருளால் அகங்காரம் தேய்ந்துவிட்டது; அங்ஙனமே மமகாரமும் அற்று ஒழிந்தாலன்றோ எனக்கு ஆத்ம விடுதலை கிட்டும்? ஆகவே, என் உடைமைகளை எல்லாம், எவன் அருளால் அவை எனக்குக் கிடைத்தனவோ, அவனடியார்களுக்கே அர்ப்பணிக்க முடிவு செய்திருக்கிறேன். அதற்காக நான் எழுதிக் கையொப்பம் இட்டிருக்கும் பிடிபாட்டைப் படிக்கிறேன். அருளோடு செவி சாய்த்துக் கேட்க வேண்டும்:

'ஸ்வஸ்திஸ்ரீ கோவிராசகேசரி பந்மரான திரிபுவனச் சக்கர வர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு 13-ஆவது இரட்ட பாடி கொண்ட சோழவளநாட்டு வடகோனாட்டு உறத்தூருக் கூற்றத்து உடையார் திருப்பெருமானாண்டார்க்கு ஜயங்கொண்ட சோழ மண்டலத்து (அதாவது தொண்டை மண்டலத்து)க் களத்தூர்க்கோட்டத்து மருதத்தூருடையான் குன்றன் திருச்சிற்றம்பலமுடையானேன் கன்னி ஞாயிற்று ஏழாம் தியதியும் திங்கட்கிழமையும் பெற்ற உத்தரட்டாதி நாள் இத்திருப் பெருமானாண்டார் திருக்கைம்மலரிலே நான் நீர்வார்த்த பிடிபாடு:- இரட்டபாடி கொண்ட சோழவளநாட்டு வடகோனாட்டு உரத்தூர்க் கூற்றத்துப் பையூருடையான் வேதவனமுடையானை நான் கவிபாடி, பாடின கவிக்கு எனக்குப் பரிசில் தந்த தன் காணியான குடிக்காடு இரும்பூதிக்கு வடபாற்கெல்லை... மேல்பாற்கெல்லை... தென்பாற்கெல்லை... கீழ்பாற்கெல்லை... ஆக இசைந்த பெருநான் கெல்லைக்குட்பட்ட நீர் நிலம்... எப்பேர்ப்பட்டதும் தேவதானமாக நீர் வார்த்துக் கல் வெட்டிக் கொடுத்தேன். இது பன்மாகேச்வர ரக்ஷை.'

''இதை ஊராரும் கூற்றத்தாரும் மாகேச்வரக் கண்காணிக்கும் மாடாதிபத்தியம், ஸ்ரீகாரியம் செய்பவர்களும், தேவகன்மிகளும் ஏற்றுக்கொண்டு எளியேன் உலக பாசங்களிலிருந்து விடுதலை யடையக் கருணைபுரிய வேண்டும்'' என்று சொல்லிப் பேச்சை முடித்துவிட்டு அந்த ஓலைமுறியைத் தலையிலே தாங்கி எல்லாருடைய இசைவுடனும் ஆண்டவன் திருமுன்னர்ச் சென்று அவன் திருக்கரத்து ஏற்றித் தம் கைகைளத் தண்ணீரால் கழுவி அந்நீரை அவ்வோலை முறியிலிட்டு அந்நிலத்திற்கும் தமக்கும் உள்ள பந்தத்தை அறுத்துக் கொண்டுவிட்டார்.

திருச்சிற்றம்பலக் கவிராயர் தொண்டை மண்டலத்து மருதத்தூரில் பிறந்தவர்; ஆனால், யாதும் ஊரே யாவரும் கேளிர் என வாழ்ந்தவர். அதனாலேதான் சோழ மண்டலத்திலும், பாண்டி மண்டலத்திலும் சேர மண்டலத்திலும் ஏராளமான நண்பர்களைப் படைத்திருந்தார்; தம் பாடல்களுக்கு மகிழ்ந்து பரிசில்களாகக் கொடுக்கப்பட்ட ஏராளமான நிலங்களையும் அங்கங்கே உடையவராகவும் இருந்தார். அவற்றை எல்லாம் ஆங்காங்குள்ள கோயில்களுக்கே வழங்கி, 'எனது' அற முயன்று வெற்றியும் பெற்றார். அது போகட்டும்.

அப்படி அன்று கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொடுத்தாரே, அந்த நிலங்கள் என்னவாயின என்பதைக் கடவுள்தாம் அறிவார். அது மட்டுமா? இன்னும் எத்தனையோ மெய்யன்பர்கள் கொடுத்த பொன்னும் பொருளும், தோட்டமும் துரவும், நிலமும் புலமும், கன்றுகாலிகளும் எல்லாம் எப்படி எப்படியோ கைமாறிப் பறிபோயின. அதற்காக நான் பெரிதும் வருந்தவில்லை. ஆனால், அவர் அன்று பாடினாரே அந்த நூறு பாடல்கள், அவை போய்விட்டனவே என்பதை எண்ணி எண்ணி நான் வடித்த கண்ணீர் அளக்கவொண்ணாதது. அதே கவலையில்தான் நானும் மெலிந்து நலிந்து போய்விட்டேன் என்று சொன்னால் அது முற்றும் மெய்யே. கவி என்றால் அவையன்றோ கவிகள்? என்ன சொன்னேன், அவற்றைக் கவிகள் என்றா சொன்னேன்? இல்லை; அவை வெறுங்கவிகள் அல்ல. அவை அனைத்தும் செந்தமிழ்த் தேனில் ஊறிய செவிநுகர் கனிகளன்றோ? அவற்றை நுகர்ந்து இன்பமுற இக்காலப் பிற்காலத்தமிழர்கள் கொடுத்து வைக்கவில்லையே என்பதை நினைத்தால் நெஞ்சு வெடித்துவிடும் போல் இருக்கிறது.

இப்படி எல்லாரும் கண்டு வருந்த வேண்டும் என்பதற்காகத் தானோ என்னவோ, பாவி அந்தக் கவிராயர் மாதிரிக்காக ஒன்றை மட்டும். ஆம், முதற்கவியை மட்டும் என்னிடம் ஒப்படைத்துவிட்டுச் சென்றார். இந்தப் பாழாய்ப் போன நிலங்களின் விவரங்களை எல்லாம் என்மீது பொள்ளாமல், அந்தப் பாடல்களை எல்லாம் என்மீது சுமத்தியிருந்தால் உடலார அவற்றை எல்லாம் அணியாய்ப் பூண்டு கொண்டு எத்துணை ஆனந்தமாக இருப்பேன் தெரியுமா? ப்ஸு; இனி அதைப்பற்றியெல்லாம் பேசிப் பயன் என்ன? அந்த நூற்றில் ஒன்றான கவியை மட்டும் என் தலையில் தாங்கிக் காத்துக் கொண்டிருக்கிறேன். அதையாவது சொல்லித் திருப்தி அடைகிறேன்.

**''வாளை வயிறு நிறைய மடற்கமுகம்**
**பாளைபசும் தேன்ஒழுகும் பையூரே''**

வயல் வரப்புகளிடையே வாய்க்காலைப் பார்த்தால் இது ஒரு சிற்றாறோ என மயங்க நேரிடும்; அதன் இருமருங்கும் கமுக மரங்கள் - பாக்கு மரம் என்று சொல்லுகிறீர்கள் அல்லவா அவை - படைவரிசை போல நீண்டு உயர்ந்து நிமிர்ந்து நிற்கும். அந்த வாய்க்கால்களில் வாளை

மீன்கள் நிறைந்திருக்கும். உனக்குத்தான் தெரியுமே, புதுநீரில்தான் வாளை வசிக்குமென்று. கட்டுக்கடைத் தண்ணீரானால் வாளை மீன் மூச்சு முட்டிச் செத்துப் போய்விடும். அந்தச் சாத்துவிக மீன்களின் ஆகாரம் என்ன தெரியுமா? பக்கத்திலே வானுற வளர்ந்து நிற்கும் கமுக மரங்களின் பாளைகள் முத்துச்சரம் போல மொட்டவிழத் தங்கமணிகள் போலத் தேனூட்டுகின்றன; அவற்றை அந்த வாளைமீன்கள் பசிதீர உண்ணுகின்றன; இல்லை, இல்லை; வயிறு முட்ட மண்டுகின்றன.

இத்துணை வளம் மலிந்த ஊர் எது என்று கேட்கிறாயா? அதோ தெரிகிறதே தூரத்தில், அந்தப் பையூர்தான். இத்துணை வளம் நிறைந்த அந்த ஊர் யாருடையது என்றா கேட்கிறாய்? கேள்.

**"-நாளை என்று**
**செப்பாத வாய்மையான் வேதன் திரு-மனு-நூல்**
**ஒப்பான்எம் கோமான்தன் ஊர்."**

நாவலரும், பாவலரும், பாடுநரும் ஆடுநரும், இரவலரும் நாளோயாமல் வந்த மணியமாகவே இருப்பார்கள்; இங்ஙனம் திரண்டு வருவோர்க்கெல்லாம் இல்லை என்றே சொல்லாதவன்; ஏன், நாளைக்கு ஆகட்டும் என்று அலுப்பால் தவணைகூடப் போடாத வள்ளல் அவன். வேதன் வேதன் என்று சொல்லுவார்கள் அவனை. செல்வத்தால் அவன் சீதேவி போல்பவன்; சீலத்தால், நிர்வாகத் திறமையால் படைப்புத் தொடக்க நாளில் பூமி பரிபாலனம் செய்ய என்று தெய்வ ஆக்ஞையால் பிறந்தானே, அந்த மனுவை நிகர்ப்பவன்; அறிவாலோ அவனுக்கு இணையாக நமது நூல்களைத்தான் சொல்ல வேண்டும். அவன்தான் எங்கட்கெல்லாம் தலைவன். அத்தகைய பெரும் திருவினான வேதவனமுடையான் ஊர்தான் இப்பையூர்.

இப்படிச் சொல்லுகிறது அந்த முதற் கவி. முதற்கவியே இப்படி இருந்தால் மற்றக் கவிகள் எத்துணை வளமாக இருந்திருக்க வேண்டும்! இனி அந்த அருமையான ஒரு தனிக் கவியை முழு உருவத்தோடும் மொழிகிறேன் கேட்பாயாக!

**"வாளை வயிறு நிறைய மடற்கமுகம்**
**பாளைபசும் தேன்ஒழுகும் பையூரே-நாளைஎன்று**
**செப்பாத வாய்மையான், வேதன், திருமனுநூல்**
**ஒப்பான்எம் கோமான்தன் ஊர்."**

எப்படி இருக்கிறது கவி. பார்த்தாயா? பாவமைதி (Form), இழுமை (Rhythm), செப்பலோசை எல்லாம் எத்துணை அருமை! முத்தொள்ளா யிரந்தானோ என்றுகூட எண்ணத் தோன்றுகிறது. இல்லையா?

★★★

இப்படிச் சொல்லித் தன் உரைக்கு முற்றுப்புள்ளி* வைத்தது. தன்னுணர்வு பெற்ற நானும் கட்டுரைக்கு முற்றுப் புள்ளி வைத்துவிட்டு நண்பர் வீட்டுக்குப் போகிறேன். சாப்பாட்டை ஒரு கை பார்க்க!



---

* ஆதாரம்: P.S.I. 129, 138, 140, 286, 358, 471

# வாணகுல ராயன்

## கல் சொல்லும் கதை - 3

தஞ்சைக் கலைக்கூடத்தைத் திறந்து வைப்பதற்காக ராஜாஜி வந்திருந்தார். நண்பர்களின் அழைப்பை ஏற்று ஒரு வாரத்திற்கு முன்னதாகவே தஞ்சாவூர் சென்று கலைக்கூட அமைப்பு வேலையில் ஒத்தாசை செய்து கொண்டிருந்தேன். திறப்பு விழா அன்று ராஜாஜிக்குச் சிற்ப அமைப்புப்பற்றி விளக்கம் கூற வேண்டிய பணியை ஒருவர் ஏற்றுக்கொள்ள வேண்டும் அல்லவா? கலைக்கூடப் பிரம்மாக்களான கலெக்டர் ஸ்ரீ டி.கே. பழநியப்பனும், டெபுடி கலெக்டர் ஸ்ரீ தொ.மு. பாஸ்கரத் தொண்டைமானும் அந்தப் பணியை எனக்குத் தந்தார்கள்.

ராஜாஜியுடன் அமரர் கல்கியும் வந்தார். அவர்களை அழைத்துக் கொண்டு கற்சிலைப் பகுதி, செப்புப் படிமப் பகுதி, ஓவியப் பகுதி, புகைப்படப் பகுதிகளை எல்லாம் காட்டி விளக்கம் கூறிக்கொண்டும், வினாக்களுக்கு விடை அளித்துக் கொண்டும் வந்தேன். புகைப்படப் பகுதிக்கு வந்ததும், மாமல்லை (மகாபலிபுரம்) கோயில்களுக்கு அடுத்து மாட்டியிருந்த கொடும்பாளூர் மூவர் கோவில் படத்தைப் பார்த்தார். உடனே, ''இது எங்குள்ள கோயில்? படங்களை எந்த அடிப்படையில் வரிசைப்படுத்தியிருக்கிறாய்?'' என்று கேட்டார்கள்.

''இது கொடும்பாளூரில் இருப்பது; கட்டுமானப்படி வளர்ச்சி (Evolution of Architecture) புலப்படுமாறு கால அடிப்படையில் வரிசைப்படுத்தியிருக்கிறேன். இந்தக் கற்றளியை எடுப்பித்தவன் பூதி விக்கிரம கேசரி என்னும் இருக்கு வேளிர் தலைவனாவான். இவன் காலம் 9-10ஆம் நூற்றாண்டாகலாம்'' என விடையளித்தேன்.

''இந்தக் கட்டுமானம் எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது; இதிற் காணும் விமானம் எனக்கு ரொம்ப ரொம்பப் பிடித்துவிட்டது; இதைப் போன்ற விமானங்களை அமைத்துக் காந்தி மண்டபம் கட்டுவதற்கு வரைபடம் (Plan) தயார் செய்ய வேண்டும். அந்தப் பொறுப்பை நீ ஏற்றுக்கொள்'' என்று சொன்னார்கள். அந்தக் கட்டளையை மிக்க உவகையுடன் ஏற்றுக்கொண்டேன்.

அந்தப் பணியை நிறைவேற்றுவதற்கு முன் கொடும்பாளூர் சென்று அனைத்தையும் நன்கு ஆய்ந்து தெரிந்து கொள்ளுவது இன்றியமை யாததாகும் என்று கருதினேன். நான் மட்டும் போனால் காரியம் நடக்குமா? ஆகவே, தென்னிந்தியச் சிற்பாசாரிய பரம்பரையில் வந்தவரும், ஆகம சிற்ப நூல்களில் கற்றுத் துறைபோயவரும், பல பெருந்திருக்கோயில்களை நிர்மாணித்தவரும் எனது மதிப்புக்குரிய வருமான காரைக்குடி ஸ்ரீ ம. வைத்தியநாத ஸ்தபதியாரையும், அவர் புதல்வர் ஆசிரியர் ஸ்ரீ வை. கணபதியையும் உடனழைத்துக் கொண்டு சென்றேன்.

காலையில் ஆறு மணிக்குக் காரைக்குடியைவிட்டுப் புறப்பட்ட வர்கள் புதுக்கோட்டைக்கு 7.30 மணிக்குப் போய்ச் சேர்ந்தோம். அங்கே போய் வழி கேட்டுத் தெரிந்துகொண்டு மணப்பாறைச் சாலையில் காரைச் செலுத்தி 25-ஆவது மைலில் கொடும்பாளூரை அடைந்தோம், 8.30க்கு. அதன் மேல் மூவர் கோவிலை அடைந்து பழஞ்சின்னப் பாதுகாப்பிலாகாக் காவற்காரர் அநுமதியுடன் உள்ளே செல்ல மணி 9 ஆகிவிட்டது. வெயில் வீணாகாமல் காடு மேடெல்லாம் கல்லிலும் முள்ளிலும் அலைந்து திரிந்து அனைத்தையும் ஒருவாறாய்க் கணக்கெடுத்து முடிக்க மணி 11.30 ஆகிவிட்டது.

கொடும்பாளூரில் பூதி விக்கிரம கேசரி கட்டிய கோயில்களுள் ஒன்று, மேற்படை எல்லாம் தகர்ந்து இன்று அடிப்படைதான் இருக்கிறது. மற்றிரண்டும் பழஞ்சின்னப் பாதுகாப்பிலாகாவின் பரிபாலனத்தில் இருக்கின்றன. சிலாசாசனங்களில் சொல்லப்பட்ட மடமோ இருந்த இடமே தெரியவில்லை. தெரிந்துதான் என்ன பயன்? அங்கே தினப்படி 50 பேருக்கு உணவளிக்க வழிவகை செய்திருப்பினும் காளாமுகர் களாக இருந்தாலன்றோ உணவு கிடைக்கும்? கோயில்களில் பூசையே இல்லை. மடம் இருந்த சுவடே காண முடியவில்லை. என்றாலும் வயிறு

நிலைமையை உணருகிறதா என்ன? காலையில் 5.30க்குச் சிற்றுண்டி அருந்தியதால் சிறுகுடலைப் பெருங்குடல் மேயத் தொடங்கிவிட்டது. வரும் வழியில் குறுக்கிட்டதே, அந்தக் குடுமியா மலைக்குச் சென்றால் ஏதாவது பட்டைச் சாதம் கிடைக்கும் என்று அறிவு சொல்லியது.

எனவே, காரைத் திருப்பினோம். எங்கள் வயிற்றுப் பசியைப் புரிந்துகொண்டு விட்டதைப் போல மோட்டார் காற்றாய்ப் பறந்தது. நாங்கள் கோயில் வாயிலை அடையவும், உச்சிக்காலம் முடிந்து கதவு திருக்காப்பிடவும் கணக்காக இருந்தது. ஆண்டவன் புண்ணியத்தில் ஆளுக்கு ஒரு புளியோரைக்கட்டி கிடைத்தது. அதை வாங்கிக் கோயில் தாம்பாளத்திலேயே வைத்துக் கொண்டு உண்டு முடித்தோம். சாப்பிட்டு முடிந்ததும் தண்ணீருக்காகச் சுற்று முற்றும் பார்த்தோம். ஊருணியே தென்படவில்லை. ஆனால், அங்கே தாம்பாளத்தைத் திரும்ப வாங்கிக்கொண்டு போவதற்காகக் காத்திருந்த கோயில் 'மெய்காவல்' எங்கள் மறுக்கடியைப் பார்த்துத் தேவையை ஊகித்துணர்ந்தவனாய், "தண்ணீருக்குத்தானே யோசிக்கிறீர்கள்? அதோ அந்த வழியாய்ப் போனால் 'தம்பிக் கிணறு' இருக்கிறது; நல்ல தண்ணீர்; இளநீர் மாதிரி இருக்கும்!" என்று சொன்னான்.

அவனிடம் தாம்பாளத்துடன் சாதக்காசையும் செலுத்திவிட்டுத் 'தம்பிக் கிண'ற்றைச் சென்றடைந்தோம். நடை கிணறு ஆனதால் தோண்டி கயிறு உதவி தேவைப்படவில்லை. இருகையாலும் நீரை மொண்டு மொண்டு குடித்தோம். மலைப்பாறையானதால் தண்ணீர் சேறு, சகதி இன்றி முத்துப் போல இருந்தது. 'மெய்காவல்' சொன்னது போல அது இளநீர் அல்ல; அதைத் தேவாமிர்தம் என்றுதான் சொல்ல வேண்டும். "உங்கள் தாகவிடாய் - அதுவும் புளியோரை உண்டபின் ஏற்பட்ட பெருந்தாகந்தான் - அப்படித் தோன்றச் செய்திருக்கிறது" என்று நீங்கள் சொன்னால் சொல்லிவிட்டுப் போங்கள்.

எங்கள் தாகம் தீர நீர் பருகியபின் படிக்கட்டுகளின் வழியே மேலேறினோம். தரைமட்டப் படிக்கு வந்தபின் அங்கே ஒரு கல்வெட்டு என் கண்களிற்பட்டது. எழுத்துச் சிதைந்து போகவில்லை; தற்கால எழுத்தை ஒட்டிய வரிவடிவம்; மூன்று கிரந்த துவந்து வாட்சரம்; அதைப் புரிந்து கொண்டுவிட்டால் யாரும் சிரமமின்றிப் படித்துவிடலாம்.

1. ''ரௌத்திரி ஷு சித்திரை மீ" அ உ
குடுமிநாத சுவாமி சன்னதியி[ல்]
2. மல்லப்ப நாயக்கப் பல்லவறாயரும்
சிவநெ$_2$ழுந$_2$ பல்லவறாயரு[ம்]
3. சோழநீதியாக தன்மப் பிறபுவாய்
றாச்சியபாரம் பண்ணுகையி[ல்]
4. திருச்சிறாப்பள்ளி சிவனாண்டை செட்டியார்
செவ்வ நி$_2$நாத செட்டி
5. வெள்ளையப்பன் உபையமாகத்
தம்பிக் கிண[று]
6. கல்ப்படை பதினெட்டும்
படியும் கட்டுவித்தது. உ'' [P.S.I-968]

குடுமிநாதப் பெருமான் கோயிலிலே வீற்றிருந்து, சோழ நீதிப்படி, அறமுறை பிறழாமல், நாடாண்டு வரும் மல்லப்ப நாயக்கப் பல்லவராயனார், சிவந்தெழுந்த பல்லவராயர் ஆகிய இவர்கள் காலத்தில், திருச்சிராப்பள்ளி சிவனாண்டை செட்டியாரும், செவ்வந்தி நாதச் செட்டிமகன் வெள்ளையப்பனும் 'தம்பிக்கிணறு' என்ற இக் கிணற்றைச் சுற்றிலும் பதினெட்டுக் கல்முறை வரியும், மேல்மட்டத் திலிருந்து நீர்நிலை மட்டம் வரை படிக்கட்டும் பிரதிப்பிரயோஜனம் நோக்காது (உபயமாக) அமைக்கச் செய்த நாள் ரௌத்திரிஷு சித்திரைமீ" 8உ ஆகும். இதுதான் கல்வெட்டின் வாசகப் பொருள் என்பது நமக்கெல்லாம் நன்கு விளங்குவதுதான்.

இது கி.பி. 1620-ஏப்ரல் 4-ஆம் தேதி செவ்வாய்க்கிழமை என்று முடிவுகட்ட வேண்டும். இந்த இடத்தில் ஒரு விளக்கம் அவசியம். ''சித்திரை 8-உக்கு ஏப்ரல் 4-உ என்று கணக்கிடுவது சரியாகாதே; அப்படியானால் தமிழ் வருடப் பிறப்பு மார்ச்சு மாதத்திலா?'' என்று நிகழ்காலப் பஞ்சாங்கத்தைப் பார்த்துச் சிலர் சந்தேகம் கொள்ளலாம். பலர் இந்தக் கணக்குப் பிழை என்று கூறியும் விடலாம். சமீபகாலப் பஞ்சாங்கங்களை எடுத்துப் பார்த்தால் சித்திரை வருடப்பிறப்பு ஏப்ரல் 12, அல்லது 13, அல்லது 14-ஆம் தேதியில் ஏற்படுவதைக் காண்போம். அந்த அடிப்படையில் உத்தேசமாகக் கணக்கிட்டால் சித்திரை மீ" 8 உக்கு ஏப்ரல் 20 அல்லது 21, அல்லது 22-ஆம் தேதிகளுள் ஒன்றைக் குறிப்பிடுவதுதான் பொருத்தம் என்று தோன்றும். எனவே, ஆங்கில

வருடம் மாதம் தேதி வரலாற்றையும் சிறிது பார்த்து அதை நினைவில் வைத்துக் கொண்டுதான் தேதி நிர்ணயத்தில் நுழைய வேண்டும். ஆனதால் அந்த வரலாற்றில் ஒரு முக்கிய நிகழ்ச்சியை இப்பொழுது பார்ப்போம்.

1752-ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் பார்லிமென்ட் ஒரு புதுத் திட்டத்தை நிறைவேற்றியது. அது காரணமாக ஆங்கிலத் தேதிப் படத்தில் ஒரு புரட்சி விளைந்தது. சூரியன் உதித்து அஸ்தமிக்காமலே 11 நாட்கள் நிமிஷ நேரத்தில் கழிந்துவிட்டன. அதாவது 1752-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் இரண்டாம் தேதி புதன்கிழமைக்கு அடுத்த நாள் 1752-ஆகஸ்டு-14, வியாழக்கிழமையாகிவிட்டது. சட்டபூர்வமாக, எனவே 1752-க்கு முன் மார்ச் 29 உயை ஒட்டிப் பிறந்த தமிழ் வருடப்பிறப்பு 1753இல் ஏப்ரல் 9உ பிறக்கலாயிற்று. எனவே, முந்நூறு ஆண்டுகட்குமுன் ரௌத்திரி ஞூ சித்திரை மீ 8 உக்கு 1620 ஏப்ரல் 4-ஆம் தேதி என்று சொன்னால் கணக்கில் பிழையில்லைதானே?

இந்தக் கல்வெட்டில் நேரம் போக்கியது வீண்கால விரயந்தான் என்று எண்ணிக்கொண்டிருந்த ஆசிரியர் கணபதி, ''இந்தக் கல்வெட்டில் நேரம் போக்கியதால்தான், 200 ஆண்டுகட்கு முன் உலக சரித்திரத்தில் முக்கியத்துவம் பெற்ற ஆங்கிலக் காலண்டரில் தேதி மாற்றம் செய்த ஒரு செய்தியை இன்று தெரிந்து கொள்ளலானேன்'' என்று சொன்னார் மிக்க மகிழ்ச்சியுடன்.

''உங்கள் பாராட்டுக்கு உரியவன் நான் அல்ல; காலஞ் சென்ற மேதை எல்.டி. சாமிக் கண்ணுபிள்ளை அவர்கள் எழுதி வைத்துவிட்டுப் போன புத்தகங்களின் உதவியால்தான் நானே இந்த விஷயத்தைப்பற்றி அறியலானேன். ஆகையால் நாம் எல்லாரும் அப்பெரியாருக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்'' என்று சொல்லிவிட்டுக் கோயிலை நோக்கி நடந்தோம், சற்று இளைப்பாற.

**இ**ந்த உலகில் எதுதான் நாம் நினைத்தபடி நிறைவேறுகிறது? ஓடி ஆடித் திரிந்துவிட்டு உண்ட களைப்புத் தீரச் சிறிது இளைப்பாறலாம் என்று வந்து கொண்டிருக்கும்போது நடு வழியில், ''நில்லப்பா!'' என்ற குரல் கேட்டது. 'யார் குரல் அது? எங்கிருந்து வருகிறது?' என்று திரும்பிப் பார்த்தேன். ''இங்கே வா!'' என்று மீண்டும் அதே குரல் மலைப்

பாறையிலிருந்து புறப்பட்டது. அப்புறம் கேட்கவா வேண்டும்? 'சரிதான், இங்கும் கதை சொல்லும் கல் இருக்கிறது போலும்! ஏழகப் பெருமாள் விண்ணகரத்துக் கல் தந்த வரப்பிரசாதத்தால் நமக்குக் கல் சொல்லும் கதைகளை எல்லாம் கேட்கக் கொடுத்து வைத்திருக்கிறது' என்று உள்ள நிறைவோடு கிட்ட நெருங்கினேன். அடிப்பாகமெல்லாம் தேய்ந்து அழிந்தும் மேலே உள்ள ஐந்து வரிகள் மட்டும் வெட்டியது வெட்டிய படியே விளங்கும் கல்வெட்டு என் கண்ணிற் பட்டது. இங்கிருந்து என்ன அருமை வெளிப்படுமோ என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தபொழுது அந்தப் பாறைக் கல் பேசத் தொடங்கிவிட்டது. இனி அதைக் கேட்கலாம்:

''வா, அப்பா, வா. உன்னைக் கண்டதில் எனக்கு எவ்வளவோ ஆறுதல். என்னிடம் ஓர் அருமையான கதை இருக்கிறது; ஏன், சிறந்த ஒரு கவியே இருக்கிறது. அந்த நாளிலெல்லாம் மனிதர்கள் வந்து என் காலடியில் நின்று என்னையே ஏடாகக் கொண்டு படித்துப் படித்து மகிழ்ந்து செல்வார்கள். விதி யாரை விட்டது? நாளடைவில் மனிதர் களுக்கு நான் என்னவோ புரியாத புதிராகி விட்டேன். மக்கள் என்னை அணுகுவது என்பது அறவே நின்றுவிட்டது. ஐயோ! ஒன்றுக்கும் உதவாத பாவியாகப் போய்விட்டேனே என்று எண்ணி ஏங்கியதுண்டு. என் ஏக்கத்தை மனிதர்கள் புரிந்து கொள்ளவில்லை; என்றாலும் மாடுகள் புரிந்து கொண்டுவிட்டன. அவை காலையும் மாலையும் மேயப் போகும்போதும் திரும்ப வீடு திரும்பும்போதும் என் பக்கத்திலே வந்து நின்று என் உதவியை நாடும். என் உடலில் அம்மைத் தழும்புபோல் பொளிந்திருப்பதால் மாடுகளுக்கு ஏற்பட்ட அரிப்பைச் சொறிந்து கொடுப்பவனாய் மாறிவிட்டேன். இப்பொழுதெல்லாம் நான் ஒரு சாசனக் கல் அல்ல; ஆவுரிஞ்சிக் கல்தான். அதனால் என் அடிப்பாகம் முழுவதும் - அதாவது மாட்டு முதுகு உயரம்வரை - முற்றும் தேய்ந்து எழுத்தெல்லாம் மாய்ந்துவிட்டன. ஆனாலும் சுமார் நாலடிக்கு மேற்பட்ட சில வரிகள் அப்படியே இருக்கின்றன. இதுதான் என் நிலை. இனி ஏதோ எனக்கு நினைப்புள்ளவரைக்கும் கதையைச் சொல்லுகிறேன் கேட்பாயாக'' என்ற பூர்வ பீடிகையுடன் தொடங்கிற்று.

''வாணன் என்ற பெயரை நீங்கள் பல காலும் பயின்றும் கேட்டும் இருப்பீர்கள். வாணன் என்பவன் ஒருவனல்லன்; அது ஒருவன் பெயரும் அல்ல. அதைக் குலப் பெயர் என்று கொள்வதே சரியாகும். ஏகம்ப வாணன், காளத்திக் கிருஷ்ணப்ப வாணன், காளத்தி வாணன்,

சந்திரசேகர வாணன், சந்திர வாணன், தஞ்சை வாணன், தாண்டவ வாணன் என்பன போன்ற பல பெயர்களை நீங்கள் இலக்கிய உலகில் சந்தித்திருப்பீர்கள். இவர்கள் பல இடங்களில் பல காலங்களில் வாழ்ந்தவர்களாவார்கள். நான் இப்பொழுது சொல்லப் போவது தஞ்சை வாணனைப் பற்றியே. இவன் தஞ்சாவூரில் வாழ்ந்தவன் அல்ல. தற்காலத்தில் தஞ்சை என்றால் தஞ்சாவூர்தான் என்று நீங்கள் எண்ணுவீர்கள். ஆனால், இவனது நகரம் தஞ்சாக்கூர் என்பதாகும். அந்நகரம் பாண்டி நாட்டில் உள்ளது. இவனை வாணகோவரையன் என்று வழங்குவார்கள். இவன்தான் கலிங்கப் போரில் கருணாகரத் தொண்டைமானுடன் சென்ற சேனைநாயகர் மூவருள் ஒருவன். இவன்மீதுதான் தஞ்சைவாணன் கோவை பாடப்பட்டது. இவன் தன்னோடு அந்தப் போருக்குத் தன் பட்டத்து மைந்தனான வாணகுல ராயனையும் அழைத்துச் சென்றிருக்கிறான். இந்த இளங்கோவான வாணகுலராயனது வேல்வலியும் தோள்வலியும் வடபுலத்தவரைக் கதிகலங்க அடித்திருக்கின்றன. இவனைப் பற்றிய செய்திகள் மிகுதியாக இருந்திருக்க வேண்டும். என்றாலும் இப்பொழுது கிடைப்பது அருமை. ஆனால், அவனைப் பற்றிய அருமையான கவி ஒன்றைச் செந்தமிழின் சுவை உணரா மாடுகளும் அழிக்க முடியாதபடி உச்சியில் வைத்துக் காத்துக் கொண்டிருக்கிறேன். அதற்குக் கீழே அவனைப்பற்றிக் கூறியிருந்த பிற செய்திகள் எல்லாம் மாடுகளின் அரிப்பைச் சொறிந்து சொறிந்து ம(றை)றக்கப்பட்டுவிட்டன. இந்தக் கவியும் அழியாமல் காத்து வருகின்றேனே, அதுவே எனக்கு எவ்வளவோ ஆறுதலைத் தருகிறது. அந்தக் கவியைத்தான் இப்பொழுது சொல்லப் போகிறேன். கவனமாகக் கேள். இந்த மொட்டைப் பாறையில் வெட்டுருவாய் விளங்கும் இந்தக் கவி உனக்கு நெட்டுருவாய் விடும் இல்லையா? சரி; மிக்க சந்தோஷம். இனிக் கவியைக் கேள்!

மன்நாடு பூங்கழலான்;
வாணற்கு இளங்கோமான்.

எத்தனையோ மன்னாதி மன்னர்கள் எல்லாம், ஆசார வாசலிலே வந்து, தங்கள் தங்கள் மாற்றலர்களைப் போரில் வெற்றிகாண உதவ வேண்டும் என்று காலடியிலே நிற்பார்களாம். யார் காலடியில்? வாணகோவரையனுக்கு இளவரசனாய் வந்துதித்த அருமந்த மைந்தன்

இருக்கின்றானே, ஆம்; அந்த வாணகுலராயன் காலடியில்தான்! அப்படிப்பட்ட வீராதி வீரன் அவன்.

**அந்நாள் வடுகுளறிந்த ஆர்வத்தால்–**

கலிங்கப் பெரும் போரிலே கருணாகரனுக்குத் துணைநின்ற அந்த நாளில், தெலுங்கர் படைகளை எல்லாம் நின்றும் சுழன்றும் ஓடியும் சாடியும் உயிர்குடித்த அந்தப் போர் வேட்கையைக் கண்டு,

**– இன்னம்**

எப்படி விழுகிறது பார்த்தாயா தனிச்சீர்? தமிழ்நாட்டிலே அவனுக்கு மாற்றார் என்று யாருமே இல்லை. ஈழமோ அவனுக்கு அடங்கிக் கப்பம் செலுத்தி வருகிறது. ஆனதால் தெற்கே அவனுக்கு வேலை இல்லை. எனவே மீண்டும்,

**மறம்கால்வேல் அண்ணல்**
**வரும்வரும்என்று ஏங்கி**

''சினத்தீயைக் கக்கிக்கொண்டிருக்கும் அந்த வெற்றிவேலைத் தன் கையிலே உடைய மாவீரனாகிய அந்தப் பெருமைமிக்க மன்னன் நமது நாட்டின்மீதுதான் தண்டெடுத்து வருவான்; ஆம்; நிச்சயம் வரத்தான் போகின்றான். நமது நாட்டு மன்னனோ தன் நிலையும், மாற்றான் வலியும் உணராத அசடாக இருக்கிறான். பணியாதவர்களை விட்டுவிட்டுச் சும்மா பார்த்துக் கொண்டிருப்பவனா வாணன்?'' என்று உள்ளம் நைந்து அச்சமுற்று, என்ன நடக்கிறது?

**உறங்கா வடவேந்தர் ஊர்.**

இரவும் பகலும் கண்ணயராது, கவனம் சிதையாது 'பாடி காவல்' செய்து கொண்டிருப்பதே தொழிலாகப் போய்விட்டதாம் வடபுல மன்னர்களின் ஊராருக்கெல்லாம். ஆமாம்! நியாயந்தானே? இனிக் கவியை முழு உருவத்தோடும் கேள்.

**மன்நாடு பூங்கழலான்;**
**வாணற்கு இளங்கோமான்**
**அந்நாள் வடுகுளறிந்த**
**ஆர்வத்தால் – இன்னம்**

மறம்கால்வேல் அண்ணல்
வரும்வரும்என்று ஏங்கி
உறங்கா வடவேந்தர்
**ஊர்.**

''எப்படி இருக்கிறது பார்த்தாயா கவி? நானும் இதை இன்னும் எத்தனை நாளைக்கு ம(றை)றக்காமல் காக்கப் போகிறேன்? விடுதலை பெற்ற சுதந்தர நாடு. நமது இன்றைய அரசாங்கம் கால்நடைச் செல்வத்தை எல்லாம் வளர்க்கப் போகின்றதாம். அப்புறம் மாடுகள் எல்லாம் எட்டடி பத்தடி என்று வளர்ந்துவிடவும் கூடும். பின்னர் என்னைப் பாதுகாக்க ஈசனால்கூட முடியாது.

''இவ்வளவு நேரம் என்னுரையை இவ்வளவு ஆர்வத்துடன் கேட்டதற்கு மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். ஆனால், இது போதாது. அதோ பக்கத்தில் இருக்கிறதே அந்தக் கோயில், அதற்குள் நீ செல்ல வேண்டும். அங்குள்ள குடைவரைச் சுவர்களும், சுற்றளிச் சுவர்களும், தூண்களும் எத்தனை எத்தனையோ கதைகளையும் கலைகளையும் கவிகளையும் உள்ளடக்கிக் கொண்டு விளங்குகின்றன. அவற்றை எல்லாம் நீ ஆர அமர இருந்து கேட்க வேண்டும். இதுதான் என் வேண்டுகோள்.''

இவ்வாறு தன்னுரைக்கு முற்றுப்புள்ளி வைத்தது அந்தப் பாறை.

''அப்படியே செய்வேன்'' என்ற வாக்கை நன்றியறிதலுடன் அளித்துவிட்டு வந்த நானும் இந்தக் கட்டுரைக்கு முற்றுப்புள்ளியை வைத்துவிட்டுச் சிறிது ஓய்வெடுத்துக் கொள்ளக் கோயில் கோபுர வாயிலுக்குப் போகிறேன்.



# குடுமியார் மலை

## கல் சொல்லும் கதை - 4

**குடுமியாமலை என்று இன்று வழங்கும் மலையையும் அதில் உள்ள ஆலயத்தையும் பற்றிய வரலாறு இது.**

குடுமியார் மலைக்கோயில் வாசலைச் சென்றடைந்த யான் அந்த நிலைப் படியில் அமர்ந்ததுதான் தாமதம்; நித்திராதேவி என்னை ஆட்கொண்டுவிட்டாள். நல்ல வெயிலில் அலைந்து திரிந்துவிட்டு வந்த அலுப்புடன் கோயில் வாசலில் அடிக்கும் குளிர்காற்றும் சேர்ந்து கொண்டால் ஆளை அயர்த்துவதற்குக் கேட்கவா வேண்டும்?

நன்றாகக் குறட்டைவிட்டு உறங்கிக் கொண்டிருக்கும் என்னை, ''என்ன உறக்கமடா தமிழா!'' என்று யாரோ பாடித் தட்டி எழுப்பினார்கள். எழுந்து பார்த்தால், உடைந்து விழுந்த தூணொன்று என்முன் வந்து நின்று என்னைப் பார்த்து உரக்கச் சிரித்தது. எனக்கோ கோபம் கோபமாக வந்தது. என்ன வந்தும் என்ன பயன்? கல்லை என்ன செய்ய முடியும்? எனவே, ''ஏன் இப்படிச் சிரிக்கிறாய்?'' என்று அதட்டிக் கேட்டேன்.

''ஆம், சிரிப்பது தவறுதான். உன் உறக்கத்தைப் பார்த்தால் அழவேண்டுமேயன்றிச் சிரிப்பது கூடாதுதான்!'' என்று குத்தலாகப் பதில் கூறியது அந்த உடைந்த தூண்.

''ஏன் இப்படி வழியில் போகிறவனை வம்புக்கு இழுக்கிறாய்? உறங்குவது என்ன, அப்படி ஒரு பொல்லாத குற்றமா?'' என்றேன்.

''உடல் அசதி தீரவும் இழந்த ஆற்றலை மீட்டுக்கொள்ளவும் உறக்கம் இன்றியமையாத ஒன்றே. அதை யாராவது குற்றமென்று சொல்லத் துணிவார்களா?''

''அப்படியானால் உன் கிண்டல் நிறைந்த பேச்சுக்குப் பொருள்தான் என்ன?''

''நன்றாகச் சொன்னாய்! நான் செய்வது கிண்டல்தான். கிண்டல் செய்வதன் மூலம் மனித சமுதாயத்தைச் சீர்திருத்த வேண்டும் என்பதே அதன் அடிப்படை நோக்கம் என்பதை நவீன இலக்கியத் திறனாய்வுத் துறையில் பயிற்சியுள்ள உனக்குச் சொல்லவா வேண்டும்?''

''ஓஹோ! அப்படியா சங்கதி? நடப்பனவும் நிற்பனவுங்கூட அல்லாமல் கிடப்பனவற்றுள் ஒன்றான - ஓரறிவுகூட இல்லாத - நீயா ஆறறிவு படைத்த மக்கட் சமுதாயத்தைச் சீர்திருத்தப் போகிறாய்?''

''அபசாரம்; அபசாரம்; அப்படி நீ எண்ணக் கூடாது. அத்தகைய ஆணவத் திமிர் எங்களுக்கு என்றுமே ஏற்பட்டதில்லை; இனியும் ஏற்படப்போவதில்லை. இருந்தாலும் நீங்கள் ஒன்றை மறக்காமல் நினைவில் பதித்துக் கொள்ள வேண்டும். நாங்களெல்லாம் உங்களைப் போன்ற ஆறறிவு படைத்தவர்கள் அல்ல; நடப்பனவும் அல்ல; கேவலம் ஓரறிவு படைத்த புல், பூண்டு வகையிலும் சேர்க்கப்படாதவர்கள்; அதனிலும் கீழ்ப்பட்ட மலையாகக்கூட நாங்கள் இல்லை; அம்மலையிலிருந்து உடைத்தெடுக்கப்பட்டு வளர்ச்சிக்கே வழியற்றுப் போனவர்கள் என்பதெல்லாம் மெய்யே. என்றாலும் ஆறறிவு படைத்தவர்களின் அறிவு வளர்ச்சிக்கு இன்றியமையாத வரலாறுகளை இன்றும் நின்று எடுத்து விளக்கிக் கொண்டிருப்பவர்கள் நாங்களே. அன்றியும் உங்கள் அறிவும் பெருமையும் வளர நாங்களே உறுதுணையாகவும் இருந்து வருகிறோம்.''

''அது எப்படி?''

''எப்படி என்றா கேட்கிறாய்? சொல்லுகிறேன். கேள்: உங்கள் முற்கால வீரதீரச் செயல்களையும் அறப்பணிகளையும் என்னனைய கற்களும் எங்கள் இனத்தவரான உலோகத் தகடுகளுமே ஆயிரம் ஆண்டுகளாக அழியாமற் பேணிப் பாதுகாப்பதுடன் எடுத்து விளக்கிக் கொண்டும் இருக்கின்றன. மேலும் நீங்கள் தலைநிமிர்ந்து நிற்பதற்குப்

பெருங்காரணமாக விளங்கும் கம்பன், வள்ளுவன், இளங்கோ, நாயன்மார்கள், ஆழ்வார்கள் போன்ற அறவோர்களின் அருளிச் செயல்களான அற்புதமான எண்ணற்ற இலக்கியச் செல்வங்களை மட்டுமன்றித் தத்துவம் உட்படச் சகல கலைகளையும் எங்களைப்போன்ற ஜடமான ஓலை, பட்டை முதலியவைகளே பேணிப் பாதுகாத்து வரும் பெட்டகங்களாக விளங்குகின்றன. ஏன், இன்று நீங்கள் கற்கும் நூல்களெல்லாம், காகிதம், மை, எழுத்து, அச்சியந்திரம் உட்பட அனைத்தும் எங்கள் இனமே. அதாவது உன்னுடைய மொழியில் சொன்னால் உயிரோ அன்றி உணர்ச்சியோ இல்லாதவை (Inanimates); என்றும் கிடப்பனவே. என்ன, நான் சொல்வது சரிதானா?''

''போதும், போதும்; எங்கள் அறியாமையால் ஏற்பட்ட அறிவுச் செருக்கிற்கு நன்றாகச் சூடு கொடுத்துவிட்டாய். 'உருவு கண்டு எள்ளாமை வேண்டும்' என்ற எங்கள் வள்ளுவன் சொன்ன பாடத்தை இன்று நன்கு பட்டறிந்துகொண்டேன். தயை செய்து என்னுடைய சுடு சொற்களைப் பொறுத்துக் கொண்டு நீ சொல்ல வந்ததைச் சொல்ல மாட்டாயா?''

''ஏனப்பா உனக்கு இத்துணை ஐயம்? நானும் இந்த மண்ணில் தோன்றியவன்தான். எனக்குப் பன்னூறு ஆண்டுகட்குப் பின் இந்த மண்ணில் தோன்றிய இளம்பிள்ளையான உன் சொல் என் மனத்தைப் புண்படுத்தப் போவதில்லை. நானும் சொல்ல வந்ததைச் சொல்லாமல் உன்னைவிடப் போவது இல்லை.''

''மிகவும் நன்றி!'' என்று சுருக்கமாக என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொண்டு அந்தத் தூண் சொல்லப் போவதை ஆவலுடன் கேட்கத் தயாரானேன். அதை நீங்களும் தாராளமாய்க் கேட்கலாம்.

★★★

**அ**ப்பா, நீ அலுத்துப்போய் அயர்வால் உறங்கியதைக் கலைக்க நான் விரும்பவில்லை. களைத்து உறங்குவோரை எழுப்புவது பாவம் என்று கருதும் பழம் பசலியை நான் சேர்ந்தவன். ஆனால், எந்த உறக்கத்திலிருந்து உங்களை மீட்க விரும்புகிறேன், தெரியுமா? உங்கள் முன்னை நிலைகளையும் பெருமைகளையும் உணராமல், அவற்றைக் கண்டறிய வேண்டும் என்னும் ஆர்வம் சிறிதும் இல்லாமல், குப்புற

விழுந்து கிடந்து உறங்குகிறீர்களே, அந்த உறக்கத்திலிருந்து உங்களை மீட்க வேண்டும் என்பதுதான் என்னனையார் நோக்கம். மீண்டும் கிண்டல் செய்யத் தொடங்கிவிட்டேனோ என்று எண்ண வேண்டாம். கிண்டல் செய்ததன் நோக்கம் பலித்துப் பயனும் கிட்டிவிட்ட பின் கிண்டல் செய்வேனா? நீயும் ஆர்வத்தனாகிவிட்டாய். இனி, மேலே விஷயத்திற்குச் செல்லுகிறேன்.

நானோ நாயக்கர் காலத்தில் இங்கு வந்து சேர்ந்தவன். ஆனதால் சிலவற்றைத் தவிர மற்றைய எல்லாம் கேள்விப்பட்டதிலிருந்தும் ஊகத்திலிருந்தும் சொல்வனவாகவே நீ எடுத்துக் கொள்ள வேண்டும்.

இந்த ஊருக்குக் குடுமியார் மலை என்பதே ஆதிப் பெயராக வேண்டும். 'ஆயிரம் வேள்விகள் ஆக்கியோன்' எனச் சின்னமனூர்ச் செப்பேட்டாலும், 'கொல்யானை பல ஓட்டிக் கூடா மன்னர் குழாம் தவிர்த்த பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி எனும் பாண்டியதிராசன்' என வேள்விக்குடிச் செப்பேட்டாலும் பாராட்டப் பெறும் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டியர் குலப்பெருமகனை நீ நன்கு அறிவாய். அவனுடைய இயற்பெயர் குடுமி என்பதையும் உனக்குச் சொல்ல வேண்டுவதில்லை. இம்மலைக்கும், இத்திருக் கோயிலுக்கும், இங்கு எழுந்தருளியுள்ள பெருமானுக்கும் அப்பெரு மகன் காரணமாகவே பெயர் ஏற்பட்டிருக்கின்றன. குடுமியார் மலை என்ற மலைப்பெயரே ஊர்ப்பெயராகவும் ஆகிவிட்டது. பெருமானுக்குக் குடுமிநாயனார், குடுமிலிங்கம், குடுமிநாத சாமி என்றெல்லாம் திருநாமம் ஏற்பட்டிருக்கிறது. பின்னர், சம்ஸ்கிருத மோகம் காரணமாய், சுவாமி பெயர் சிகாநாதஸ்வாமி என்றும், ஊர்பெயர் சிகாநல்லூர் என்றும் வழங்கலாயின. அந்த உண்மை மறக்கப்பட்டு மறைந்து போயிருக்கிறது. பிற்காலத்தில் அசம்பாவிதமான கதை ஒன்று பெயர்க் காரணத்தைக் காட்டும்பொருட்டு எழுந்திருக்கிறது. அந்தக் கதைக்கு ஏற்றபடியே இப்பெயர்கள் தோன்றின என்று மக்களும் நம்பத் தொடங்கி விட்டார்கள். அந்தக் கதையை நீ கூடக் கேள்விப்பட்டிருக்கலாம். இருந்தாலும் சொல்லுகிறேன், கேள்.

**ஒ**வ்வொரு மாதமும் ஒரு குறிப்பிட்ட நாளில் இத்திருக் கோயிலுக்கு வந்து வழிபாடு செய்வதென்ற நியதியைக் கொண்டிருந்தான் ஒரு பாண்டிய மன்னன். ஒரு திங்களில் குறிப்பிட்ட

அத்தினத்தில் மன்னன் வருகைக்காக நெடுநேரம் காத்திருந்தும் மன்னன் வந்தபாடில்லை. எனவே, கோயில் நிர்வாகிகள் அர்த்த சாமத்தைச் செய்யச் சொல்லிக் கோயிலைத் திருக்காப்பிட்டுச் சென்றுவிட்டார்கள். அப்படிச் செல்லும்போது குருக்கள் மன்னன் வருகையை முன்னிட்டுப் பெருமானுக்கு ஏராளமாகச் சாத்தியிருந்த நறுமண மாலைகளை எல்லாம் பிரித்தெடுத்துத் தம் காதற் கிழத்தியாகிய கணிகை ஒருத்தியிடம் கொண்டுபோய்க் கொடுத்து அவளுடன் சல்லாபித்திருந்தனர். இப்படி இருக்கும் வேளையில் மன்னன் வந்துவிட்டான். கோயில் திருக்காப்பிட்டிருக்கும் நிலையறிந்தும், ஸ்ரீ உருத்திரர், தேவகன்மிகள், ஸ்ரீகாரியம் முதலான சிவப்பிராமணர்களையும், மாஹேச்வரக் கண்காணி, கோயில் கணக்கர், மெய்காவல், வயிராவி முதலியவர்களையும் அழைத்துக் கோயிலைத் திறக்கச் செய்தானாம். மன்னன் வருகையையும் கட்டளையையும் உணர்ந்த குருக்கள் பதற்றமுற்றுப் பெருமான்மீது மாலை ஏதும் இல்லாத நிலையறிந்தால் மன்னன் கடுஞ்சினம் கொள்வானே என்று அஞ்சித் தம் ஆசைக் கிழத்தி சூடியிருந்த மலர் மாலைகளை எல்லாம் திரும்ப எடுத்துச் சென்று மீட்டும் இறைவனுக்குச் சாத்திவிட்டாராம்.

மன்னன் வழிபாடுகளை முடித்துக்கொண்டதும் பெருமானுக்குத் தீபம் முதலிய உபசாரங்களை முற்றி மன்னனுக்குத் திருநீறு கொடுத்துப் பின் காளாஞ்சி கொடுத்தாராம். காளாஞ்சியில் உள்ள தேங்காய், பழம், வெற்றிலை பாக்குடன் இறைவனுக்கு அணிவித்திருந்த மலர்மாலையும் மரபை ஒட்டி வைத்திருந்ததை மன்னன் வழக்கம் போலவே கண்ணில் ஒத்திக்கொள்ளுவதற்காக எடுத்தானாம். அப்பொழுது மாலையில் பின்னிக் கிடந்த ஒன்றிரண்டு மயிர் தேங்காயில் மாட்டிக்கொண்டதால் மாலையைத் தனியே எடுக்கச் சிறிது சிரமம் ஏற்பட்டதாம். இதைக் கண்ட மன்னன் வியப்பும் கோபமும் உற்று, ''மாலையில் மயிர் வரக் காரணம் என்ன?'' என்று கேட்கக், குருக்கள், ''இறைவர் சிகாநாதரல்லவா!'' எனச் சாதுரியமாக விடையளித்தாராம்.

குருக்களின் சமயோசிதமான பதிலைக் கேட்டும் ஐயம் தீராததால், ''பெயருக்கேற்ப இறைவன் திருவுருவான லிங்கத்திற்குக் குடுமி உண்டா?'' எனக் கேட்கக் குருக்கள், ''ஆம்'' என்று விடையளித்து ஆண்டவனை மானசிகமாக வேண்டிக் கொண்டாராம். குருக்களின் பிரார்த்தனைக்கு இரங்கிய பெருமான் அங்ஙனமே தமது முடிமிசையே

குடுமி விளங்கக் காட்சியளித்தாராம். அதனாலேதான் சுவாமிக்குச் சிகாநாதர் என்ற பெயர் ஏற்பட்டதாம்.

இப்படித்தான் எத்தனையோ கட்டுக்கதைகள் தோன்றி மக்கள் அறிவை மழுங்கச் செய்துவிட்டன. திருப்பழனம் திருப்பயணமாகத் திரிந்து ஸ்ரீ பிரஸ்தான புரியாக மொழிமாற்றம் பெறத் திருப்பழன நாதர் ஸ்ரீ பிரஸ்தான புரீசரானது இத்தகையதே.

இந்தப் பகுதி குன்றுசூழ் நாடு என்றும், குன்றியூர் நாடு என்றும் வழங்கப் பெற்று வந்திருக்கிறது. இவ்வூருக்குக் குடுமியார் மலை, திருநலக்குன்றம், திருவிக்கிரம சோளீச்சுரம், சிகாநல்லூர் என்று பெயர்கள் மாறி மாறி வழங்கி வந்திருக்கின்றன. எந்தப் புண்ணியவான் அருளோ தெரியவில்லை, 18-ஆம் நூற்றாண்டு முதல் குடுமியா(ர்) மலை என்ற ஆதிப் பெயரே வழக்கிற்கு வந்துவிட்டது.

குடுமி நாயனார், குடுமியார் நாயனார், குடுமி லிங்கம், குடுமிநாத சுவாமி, திருநலக் குன்றமுடைய நாயனார் என்று பெருமான் திருநாமங்களும், அருளுடை மலை மங்கை, ஆளுடை நாச்சியார் என்று தேவி திருநாமங்களும் வழங்கி வந்திருக்கின்றன. அவை இன்று முறையே சிகாநாத ஸ்வாமி, அகிலாண்டேச்வரி என்று கூறப்பட்டு வருகின்றன.

இந்தக் கோயில் அருமையானதாகும். பல்லவ, பாண்டிய, சோழ, நாயக்கப் பாணிகளை எல்லாம் இந்த ஒரு கோயிலிலேயே காணலாம். குடைவரை (Rockcut), கற்றளி, சுதை வேலைகள் அனைத்தையும் கொண்டு விளங்குவது இது. அர்த்த சித்திர (Bas-relief) அமைதியில் மலையிலேயே பொளியப் பெற்ற அறுபத்து மூவர் படிவங்களை எல்லாம் நீ வேறு எங்கே சென்று காணப் போகிறாய்?

இங்கே 7-ஆவது நூற்றாண்டுத் தொடக்கம் முதல் பல வேறு காலத்தையும், கோன்மை (Monarchy)யையும் சேர்ந்த பல கல்வெட்டுக்களைக் காணலாம். மாய்ந்தவை போக இன்னும் மாயாப் புகழ்கொடு நிற்பவை 107 ஆகும். அவற்றுள் தலையாயது 1300 ஆண்டுகட்கு முற்பட்ட இசை விளக்கமாகும். அதை ஒரு பாடப் புத்தகம் என்று துணிந்து உரைக்கலாம். அதை மகேந்திர வர்மன் (கி.பி. 615-636) என்னும் பல்லவர் கோன்காலத்தது என்பர் ஆராய்ச்சியாளர்களுள் ஒரு

சாரார். மற்றொரு சாரார் அதற்கும் முந்தியது என்பர். இது அல்லாமல் 14 பாடல்களும் கல்வெட்டுக்களுள் காணப்பெறுகின்றன.

இந்தக் கல்வெட்டுக்களைப் படித்துப் பார்த்தால் உங்கள் முன்னோரின் அருமைகளையும் பெருமைகளையும் நீ ஓரளவு உணர்ந்து கொள்ளலாம். தமிழ் மொழிதான் எவ்வளவு வளம் படைத் திருந்திருக்கிறது, இவர்களின் அறவொழுக்கமும் நீதி நெறியும் நிர்வாகத் திறனும் எவ்வளவு வளமாக இருந்திருக்கின்றன என்பவற்றை யெல்லாம் கண்டு மகிழலாம். இருக்கிற சொற்களை அறியாமல் புதுச் சொற்களைச் சமைத்துக் கற்போரைத் திணற அடிக்கிறார்களே சில தனித் தமிழ் அன்பர்கள், அவர்களும் ஒரு சொல்லைக் கொண்டே உலகையே அளந்துவிட முயலும் அன்பர்களும் இவற்றில் சிறிது கவனம் செலுத்தினால் நாட்டுக்கு, ஏன், அவர்களுக்கேதான் எவ்வளவு நன்மை விளையும்!

முடிவாக ஒன்று: சிற்பக்கலைக்கும், கல்வெட்டுத் துறைக்கும் ஒரு கல்லூரி அமைக்க வேண்டுமானால் இந்தக் குடுமியார் மலைதான் ஏற்ற இடம். குடைவரைக் கோயில்களும் கற்றளிகளும் இதைச் சுற்றி நூற்றுக் கணக்காக உள்ளன. குகைகளும் கற்படுக்கைகளும் உள்ளன. கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த எழுத்துக்களும், கி.பி. 7 முதல் இன்று வரை உள்ள எழுத்துக்களும் கொண்ட கல்வெட்டுக்கள் பன்னூறு இங்கே காணப்படுகின்றன. சிற்ப அமைதியிலும் நிர்மாண அமைதி யிலும் எத்தனை எத்தனையோ வகைகளை இங்கே காணலாம். செப்புப் படிமங்களுக்கும் சுதை உருக்களுக்குந்தான் குறையா என்ன? அன்றியும் செம்பாறாங்கல்லாலாய திருப்பணிகளையும் இங்கே காண முடியும்.

★★★

இவ்வாறு சொல்லி முடித்ததும் அந்தத் தூண் தடாலென்று கீழே சாய்ந்தது. விழுந்த ஒலி கேட்டுத் திடுக்கிட்டுக் கண்ணைத் துடைத்துக்கொண்டு எழுந்தேன். சாயரட்சைப் பூஜையை முன்னிட்டுக் கோவில் மணி டணார் டணார் என்று முழங்கியது.



# இசை விளக்கம்

## கல் சொல்லும் கதை - 5

**இசையில் வல்லவனான மகேந்திரவர்மன் கல்வெட்டிலே இசை நுணுக்கங்களைப் பொறித்து வைத்தான். தமிழ்நாட்டின் சாஸ்திரீய சங்கீத வரலாற்றின் ஆராய்ச்சிக்கு இந்தக் கல்வெட்டு மிகவும் பயன்படக் கூடியது.**

குடுமியார்மலையில் இசை விளக்கம் (Musical treatise) ஒன்று இருப்பதையும், அதை 1300 ஆண்டுகட்கு முன் மகேந்திரவர்மன் என்னும் பல்லவர்கோன் பொறித்தான் என்பதையும் கல் சொல்லும் கதை 4-இலிருந்து தெரிந்துகொண்டோம். அந்த இசை விளக்கத்தை நேரில் கண்டுபிடித்து அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவல் எனக்கு ஏற்பட்டது. அது காரணமாக நேரே குடுமிநாயனார் வீற்றிருந்தருளும் குடைவரைக் கோயிலின் தென்பால் உள்ள பாறையடிக்கே வந்து சேர்ந்தேன். அங்கு வந்ததும் கல்வெட்டின் அமைதியையும் அளவையும் கொண்டு இதுதான் இசைவிளக்கமாக இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன். ஆனால், கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டவன் கதிதான் ஏற்பட்டது எனக்கு. எழுத்து ஒன்றும் புரியவில்லை.

அட பாவமே! இவ்வளவு தூரம் வந்து இடத்தைக் கண்டுபிடித்தும் பொருள் கிட்டாமல் வெறுங் கையோடுதான் திரும்ப வேண்டும்போல் இருக்கிறது என்று மனஞ்சோர்ந்து உட்கார்ந்துவிட்டேன். ''சித்தம் நம: சிவாய'' என்ற ஒலி யாழிசையாக வந்து என் காதிற்பட்டது. இந்த வேளையில் இங்கே யாழொலி எப்படி வந்தது என்று சுற்று முற்றும் தேடினேன். யாரையும் காணவில்லை. ஆச்சரியத்தால் திகைத்து நிற்கின்ற வேளையில் அந்தப் பாறை பேசத் தொடங்கிற்று.

''இங்கு யார் யாரோ வருகிறார்கள். குடுமி நாயனாரையும், ஆளுடை நாச்சியாரையும் வணங்கி விபூதிப் பிரசாதம் எல்லாம் பெற்று மிக்க மனநிறைவு கொண்டவர்களாகச் செல்லுகிறார்கள். ஏதோ ஆடிக்கு ஒருகால் வருபவர்கள் எங்கள் பக்கத்தில் வந்து எங்களை எல்லாம் பார்த்து 'ஆஹா, ஓஹோ' என்று ஆரவாரிப்பார்கள். ஆனால், நீயோ ஆண்டவனைக் கும்பிட்டுப் போக வந்தவனாய்த் தோன்றவில்லை. வந்ததும் வராததுமாய் என்னைப் பார்த்தாய்; எதையோ பறி கொடுத்தவனைப் போல அயர்ந்து அமர்ந்துவிட்டாய். ஏனோ இப்படிச் சோர்ந்து காணப்படுகிறாய்?''

''எதிர்பார்த்ததை அடைய முடியாவிட்டால் ஏமாற்றமும், ஏமாற்றத்தால் சோர்வும் ஏற்படுவது இயல்புதானே?''

''அப்படி நீ யாரிடம் எதை எதிர்பார்த்து ஏமாற்றமடைந்தாய்? அதை எனக்குச் சொல்லலாமா?''

''பேஷாக! உன்னிடந்தான்.''

''என்னப்பா சரடு திரிக்கிறாய்? முன்பின் தெரியாத என்னிடமா எதிர்பார்த்தாய்? வேடிக்கையாக இருக்கிறதே நீ சொல்வது?''

''வேடிக்கையும் இல்லை; விளையாட்டும் இல்லை. உற்றதே சொல்லுகிறேன் ஆம், உன்னை முன்னமே நான் தெரிந்து கொண்டிருந்தால் உன்னோடு உறவுள்ள ஒருவரை உடனழைத்து வந்திருக்க மாட்டேனா என்ன?''

''அட மனுஷா, எனக்கு உறவென்றும் பகை என்றும் இவ்வுலகில் யாரும் இல்லை. எல்லோரும் எனக்கு மட்டும் அல்ல, எங்கள் இனத்திற்கே சமந்தான்.''

''அப்படியானால் எனக்கு மட்டும் நீ ஏன் புதிராகக் காணப் படுகிறாய்?''

''அப்படியா சங்கதி? என்னைப் படித்துக் கொண்டு போக வந்தவனா நீ? ஆனானப்பட்டவர்களெல்லாம் இங்கு வந்து முழங்கால் தேயப் பலகாலும் முட்டி மோதிக் கொண்டிருக்கிறார்கள். அப்படியும் ஐயம் தீர்ந்தபாடில்லை. ஆனால், நீயோ வந்த சுவடு தெரியாமல் அனைத்தையும் அள்ளிக்கொண்டு போய்விடலாம் என எண்ணுகிறாய்.

தம்பி, கால் மணி நேரத்தில் காரியத்தை முடித்துக் கொண்டு போக இது காய்கறிக் கடை அல்ல. இது ஒரு தோட்டம். உழுது, உரமிட்டு, வித்திக் களை எடுத்து, நீர் பாய்ச்சிக் காத்திருக்க வேண்டும் பலன் பறிக்க. என்ன, நான் சொல்வது சரிதானே?''

''ரொம்பச் சரி; ஆனால், என்னைப் போன்றவர்கள் ஏமாற்றமுற்றுத் திரும்ப வேண்டுவதுதானா?''

''ஏன் ஏமாற்றமடைய வேண்டும்? தெரியாதவர்கள் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டியதுதான்.''

''யாரைக் கேட்பது?''

''தெரிந்தவர்களைக் கேட்கலாம்; அதைவிட உடையவர்களையே கேட்டுத் தெரிந்துகொள்வது நல்லது.''

''அப்படியானால், பருத்தி புடைவையாகக் காய்த்த மாதிரிதான். இந்த இசை விளக்கத்திற்கு உடையவனான நீயே இதை எனக்குப் புரியச் செய்ய மாட்டாயா?''

''நான்தான் நீ கேளாமலே சொல்லத் தொடங்கிவிட்டேனே!''

''என்ன! நீ சொல்லத் தொடங்கிவிட்டாயா? எப்பொழுது? என்ன சொன்னாய்?''

''சித்தம் நம: சிவாய என்று யான் இசைத்தது உன் காதில் படவில்லையா?''

''ஆம், ஆம்; ஏதோ யாழொலி அல்லது வீணாகானம் என்றல்லவா கருதினேன்?''

''அப்படி நீ எண்ணியது பிழை அன்று. யாழில் அல்லது வீணையில் மீட்டுவதற்கென்றே ஸ்வரமாக அமைக்கப்பெற்றதல்லவா இது?''

''தயை செய்து இதன் பொருளையும் வரலாற்றையும் எனக்கு எடுத்துச் சொல்லமாட்டாயா?''

''அப்பனே, அதுதானே என் பணி? அதற்காகத்தானே இங்கே காத்துக்கிடக்கிறேன்? கேட்டால் மாட்டேன் என்பது எங்கள் நெறியன்று. சொல்லுகிறேன், கேள்'' என்று சொல்லத் தொடங்கிற்று.

★★★

மகேந்திரவர்மன் என்ற பல்லவர்கோனை நீ அறிந்திருப்பாய். கி.பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவன்; சமணம்புக்குப் பின் அப்பர் பெருமான் அருளால் சைவத்திற்கு மீண்டவன்; சிவனடி மறவாச் சிந்தையன்; மலைகளைக் குடைந்து இறைவனுக்குக் கோயில் சமைத்த ஆதிகர்த்தாவும் அவனே. பல கலை விநோதன். ஓவியம், சிற்பம், இசை முதலிய கலைகளில் அவனுக்கு நிகர் அவனே என்னும்படி வாழ்ந்த மகாமேதை. சிறந்த நாடகாசிரியனுங்கூட. மத்தவிலாசப் பிரகசனம் என்ற அருமையான நாடகம் அவன் இலக்கியப் படைப்பு மேன்மைக்கு ஒரு சான்றாய்த் திகழ்கிறது. சமய, தத்துவ ஆராய்ச்சியிலும் தேர்ந்த புலவன் அவன். ''அநித்யராகன், அலுப்தகாமன், அவனிபாஜனன், உதாரசித்தன், குணதரன், குணபரன், சங்கீரண ஜாதி, சத்யசந்தன், சத்ருமல்லன், சேத்தகாரி, நயபரன், நரவாகனன், நரேந்திரன், நிரபேக்ஷன், பிரகிருதிப் பிரியன், புருஷோத்தமன், போத்தரையன், மஹாப் பிடுகு, லளிதாங்குசன், விக்ரமன், விசித்ர சித்தன் என்பன போன்ற பல விருதுப் பெயர்களைப் பெற்றுப் பிறங்கியவன்.

''அவன் நெஞ்சில் நிறைந்த பக்தி காரணமாகக் கோயில்கள் பலவற்றைச் சமைத்தான். அங்கெல்லாம் நமது கலைகள் செழித்து வளரப் பல மொழியாலும் பணி செய்தான். தன் கலையார்வம் புலப்படச் சிற்பங்களைப் பொளிந்து தள்ளினான். நடனம், இசை நாளும் துலங்க வழிவகை செய்தான். அவற்றுடன் நடனங்களும், இயற்கைச் செல்வங் களும், தத்துவ உண்மைகளும் சிற்பங்களாகவும், ஓவியங்களாகவும் உருப்பெறலாயின. தத்துவாதீதமான கடவுளையுங்கூடக் கல்லில் இருத்திக் காட்டிவிட்டான்.

இப்படியாக, எல்லாம் கல்லில் வீற்றிருந்து தத்தம் கதைகளை உலகுக்கு உரைக்க வழிகோலிவிட்டான் மகேந்திரவர்மன். ஆனால், இசைக் கலை? இசைக் கலைக்கு மட்டுந்தானா இந்தக் கல் இசைய மாட்டாது? எண்ணினான், எண்ணினான், பலகாலும் எண்ணினான். மலைகளைக் குடைந்து சுவர்களையும் தூண்களையும் அமைத்துக் கிடைத்த இடங்களிலெல்லாம் சிற்பங்களை வடித்துக்கொண்டே வந்தவனுக்கு இங்கு வந்ததுந்தான் இசைக் கலைக்குப் பணியாற்ற வேண்டுமென்று தன் நெடுநாள் விருப்பம் நிறைவேற வாய்ப்புக் கிடைத்திருக்கிறது.

என் நெஞ்சைப் பார்த்தாயா? ஒரு காலத்தில் பேரரசர் தேவிமார் பெற்ற மதலையர் தம் மார்பகலம் கண்டு மகிழ்வார்களாம். ஏன் தெரியுமா? போர்புரிய வல்லான் அகளங்கன் வாணன் திருநாமம் எல்லாம் எழுதலாம் என்று. அப்படித்தான் இந்த மகேந்திரவர்மனும் தான் குடைந்து அமைத்த இந்தக் குடைவரைக் கோயிலில் சுமார் 180 சதுர அடி கொண்ட என் மார்பகலத்தைக் கண்டதும் மகிழ்ச்சி பொங்கி நின்றான். நீண்டு பரந்து உயர்ந்த என் நெஞ்சிலே தான் ஆக்கிய இசை விளக்கம் முழுவதையும் எழுதலாம் என்று கருதினான். ஸ்தபதியை அழைத்தான். கட்டளை பிறப்பித்தான். சூத்ரக்கிராஹி வந்தான்; நூல் கொண்டு வரையிட்டான். தச்சகரில் சிறந்த ஒருவன் கூருளி கொண்டு பொளியத் தொடங்கிவிட்டான். மகேந்திரவர்மனின் ஆஸ்தானப் புலவன் ஒருவன் முடியும்வரை அருகிருந்து எழுத்தெழுத்தாய் ஆராய்ந்து சரி பார்த்துக்கொண்டிருந்தான்.

உனக்கு இந்த எழுத்து விளங்காவிட்டாலும் பொளிந்திருக்கிற அமைதியின் சிறப்பு நன்கு புலப்படுகிறதல்லவா? பகுதியும் பிரிவும் எவ்வளவு துலக்கமாகக் காணப்படுகின்றன? இடப்புறம் ஒவ்வொரு பகுதிக்கும் உரிய தலைப்பு எடுப்பாகக் கொடுக்கப்பட்டிருப்பதையும் காண முடிகின்றதல்லவா?

இந்த இசை விளக்கம் ஏழு பகுதிகளாக உள்ளன. ஒவ்வொரு பகுதியும் பல பல பிரிவுகளைக் கொண்டு விளங்குகின்றன. பிரிவு ஒவ் வொன்றும் நான்கு ஸ்வரங்களைக் கொண்ட பதினாறு செட்டுக்களை உடையனவாய்த் திகழுகின்றன. மொத்தம் 38 விருத்தத்தால் ஆனவைபோல் இந்த இசை விளக்கம் காட்சி கொடுக்கிறது என்று சொல்லலாம்.

முதற் பகுதிக்கு **'மத்யம க்ராமே சதுஷ்பிரஹார ஸ்வராகமா:'** எனத் தலைப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இரண்டாம் பகுதிக்கு **'ஷட்ஜ க்ராமே சதுஷ் பிரஹார ஸ்வராகமா:'** என்றும், மூன்றாம் பகுதிக்கு **'ஷாதவே சதுஷ் பிரஹார ஸ்வராகமா:'** என்றும், நான்காம் பகுதிக்கு **'ஸாதாரிதே சதுஷ் பிரஹார ஸ்வராகமா:'** என்றும், ஐந்தாம் பகுதிக்கு, **'பஞ்சமே சதுஷ் பிரஹார ஸ்வராகமா:'** என்றும், ஆறாம் பகுதிக்கு, **'கைசிகமத்யமே சதுஷ் பிரஹார ஸ்வராகமா:'** என்றும், ஏழாம் பகுதிக்கு, **'கைசிகே சதுஷ் பிரஹார ஸ்வராகமா:'** என்றும் தலைப்புக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

ஒவ்வொரு பகுதியின் முடிவிலும் **'ஸமாப்த ஸ்வராகமா:'** என்ற வாக்கியத்தால் பகுதி முற்றுப் பெற்றமை குறிக்கப்பட்டிருக்கிறது.

இந்த இசை விளக்கம் தொடங்கப் பெறுவதற்குமுன் 'சித்தம் நம: சிவாய' என்ற சொற்றொடர் பொறிக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது 'உ. சிவமயம்' என்று எழுதிய பின்னரே பிறவற்றை எழுதுவது என்ற மரபு நமது நாட்டில் காணப்படுகிறதல்லவா? அதைப்போலவே இதையும் கொள்ள வேண்டும். 'சித்தம்' என்ற சொல் மங்களகரமான தொடக்கச் சொல்லாகக் கொள்ளப்படலாம் என்று சில ஆராய்ச்சி யாளர்கள் கருதுகிறார்கள். ஆனால், நான் கருதுகிறேன்: 'எல்லாம் இறை திருவுளம்' எனக் கொள்வதுதான் சரியாகும் என்று. நம: சிவாய என்றால் சிவனுக்கு வணக்கம் என்பது பொருளாம் எனச் சொல்லவா வேண்டும்?

இந்த இசை விளக்கத்திற்கு அடியில் காணப்படுவதைச் சிறப்புப் பாயிரம் என்று சொல்லலாம்.

> **"ருத்ராசார்ய சிஷ்யேண, பரம**
> **மாஹேச்வ-ரே-ண, ராஜ்னா, சிஷ்ய**
> **ஹிதார்த்தம் க்ருதா: ஸ்வராகமா:"**

ருத்ராசாரியரின் மாணாக்கனும், நிறைந்த சிவபக்தியாளனுமான மன்னனால் மாணாக்கர் நன்மையின் பொருட்டு ஸ்வர ஆகமம் செய்யப் பெற்றது என்பது இதன் பொருள்.

"எட்டிற்கும் ஏழிற்கும் இவை உரிய" என்னும் சொற்றொடர் பிற் குறிப்பாய் விளங்குகின்றது. இது மட்டும் மொழியும் வரிவடிவும் தமிழாய் இருக்கிறது. அதனால் இது பிற்பட்ட காலத்தது எனறு சொல்லி விடக்கூடாது. இதுவரை யாரும் அப்படிச் சொல்லவும் இல்லை.

இந்த இசை விளக்கம் ஏழு பகுதியாக இருக்கிறது. ஒவ்வொரு பகுதியிலும் நான்கு ஸ்வரம் கொண்ட நான்கு செட்டுக்களாலான நான்கு வரியைக் கொண்ட விருத்தம் போன்ற பிரிவுகள் பல காணப்படுகின்றன. அப்படிக் காணப்படுகின்ற பிரிவுகள் 38 ஆகும். ஒரு பிரிவுக்கு 64 ஸ்வரங்கள் காணப்படுகின்றன. ஆக இந்த இசை விளக்கத்தில் 2432 ஸ்வரங்கள் உள்ளன. ஸ்வரங்க்ள் ஏழு என்பதும், முறையே அவற்றின் பெயர் ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம்,

நிஷாதம் ஆம் என்பதும், அவற்றின் ஸ்வர எழுத்து ச. ரி. க. ம. ப. த. நி. என்பதும் அனைவரும் அறிந்தவையே. இங்கே அவற்றை ச். ர். க். ம். ப். த். ந். என்று கொண்டு ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்ற தமிழ் நெட்டுயிர் எழுத்துக்கள் ஏழையும் கூட்டி, சூ, ரே, கீ, மூ, பீ, தே, நூ என்பனபோலக் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. ஆறு, ஏழாம் பகுதிகளில் அபூர்வமாக இரண்டோர் இடங்களில் ஆ என்ற குறிப்பெழுத்தாலேயே ஸ்வரம் குறிக்கப்பட்டிருக்கிறது.

ஆதிகாலத்தில் ஏழிசை என்பது முறையே குரல், துத்தம், கைக்கிளை, உழை, கிளி, விளரி, தாரம் எனப்படும். அவை ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்ற நெட்டுயிர் எழுத்தாலே உணர்த்தப்பட்டு வந்திருக்கின்றன. இவற்றை ஏழிசை எழுத்தென்பது பண்டைத் தமிழ் மரபு. இந்த 38 பிரிவினுள் ஒரு பிரிவை மாதிரிக்காகப் பார்ப்போம்.

'தே-சும்-பும்-தே பும்-கே-சா-தே
சா-பும்-சா-தே ரி-ச-பும்-தே
சம்-ரம்-சா-தே ரி-கே-சா-தே
மி-ரா-சே-தூ கே-சா-பும்-தே
ரா-பும்-சே-து கே-ரி-ப-தே
மும்-சா-பும்-தே தி-ரே-பம்-தி
சே-ரா-பும்-தே ரும்-தே-பும்-தே
ச-தே-பும்-தே மி-ரா-பும்-தே. (19th Set in Sec. IV)

இந்த மாதிரி சம்ஸ்கிருத ஸ்வர எழுத்துக்களையும், தமிழ் இசை எழுத்துக்களையும் பிணைத்துக் கையாண்டதன் நோக்கம் என்ன வாயிருக்கக் கூடும்? 'உயிரெழுத்து முடிவானது இசைக்கருவியில், நரம்பு மீட்டலையோ அன்றிச் சஞ்சாரம் செய்வதையோ உணர்த்துவ தாயிருக்க வேண்டும்' என்று டாக்டர் பண்டார்கர் கருதுகிறார். மேலும், நான்கு ஸ்வரங்கள் அமைந்த பதினாறு செட்டுக்களாலான பல பிரிவுகளைக் கொண்ட அந்த ஏழு பகுதிகளும் அக்காலத்திய ஏழு ராகங்களைத் தோற்றுவிக்கும் ஸ்வர அமைப்புகளே என்றும் அவர் கருதினார். மற்றும் பல அறிஞர்கள் வேறு கருத்துக்களையும் புலப் படுத்தினார்கள்.

ஆனால், டாக்டர் ஸி. மீனாட்சியோ, ராகங்கள் தோன்றுவதற்கு அடிப்படையாக இருக்கும் 'கிராமங்கள், ஜாதி'களை இவை பிரதி பலிக்கின்றன என்று கொள்ள வேண்டுமேயன்றி ராகங்களைத்

தோற்றுவிக்கும் ஸ்வர அமைப்பாக இவற்றைக் கருதக் கூடாதென்று கருதினார். மேலும் இந்த ஏழு பகுதிகளுள் முதலிரண்டு பகுதிகள் ஷட்ஜக்கிராமம், மத்யமக்கிராமம், காந்தாரக் கிராமம் என்று பிரசித்தி பெற்ற கிராமங்கள் மூன்றனுள் முதலிரண்டு கிராமங்களைத் தங்கள் தலைப்பிலே உணர்த்திக் கொண்டிருக்கின்றன என்பதைத் தம் கருத்துக்கு ஆதரவாக எடுத்தும் காட்டினார். அன்றியும் ஸ்வர முடிவாகக் காணப் பெறும் உயிர் எழுத்துக்கள் ஸ்வர பேதத்தை உணர்த்துவதற்காகக் கையாளப் பெற்றவையே என்பதையும் நுனித்தறிந்துணர்த்தினார். 'சதுஷ் பிரஹார ஸ்வராகமா:' என்று ஒவ்வொரு பகுதியிலும் காணப் படும் தலைப்பு ''நரம்புக்கருவியில் இசைப்பதற்குரிய பாடம்'' என்பதைப் பொருளாகக் கொண்டிருக்கிறது என்று விளக்கமும் தந்தார்.

வஸிவாஷிநிஷா (பரிவாதிநி தா) என்று கீழ்ப்புறச் சுவரில் காணப் படுவது இந்த இசை விளக்கத்தை ஆக்கியோர், இந்த ஸ்வர பாடத்தை ஏழு தந்தி வாத்தியமான பரிவாதினியாழில் இசைத்துப் பார்த்தார் என்பதை உணர்த்துகிறது என்பர் ஆராய்ச்சியாளர். இதனால் முன்னே எட்டுத் தந்தி வாத்தியத்திலே பயின்று வந்ததை ஏழு தந்தி வாத்தியத்திற்கும் ஒப்பதாய் இருப்பது சோதித்து அறிந்ததாகும் என்று கருதலாம் அல்லவா? அதனால்தான் பிற்குறிப்பில் 'எட்டிற்கும் ஏழிற்கும் இவை உரிய' என்று காணப்படும் சொற்றொடர் ஆக்கப்பட்டது என்றும் கொள்ளலாம். ஆகவே, எட்டு அல்லது ஏழு தந்திகளுள்ள நரம்புக் கருவியில் இசைக்கத்தக்கவை இந்த ஸ்வர பாடம் என்பதைச் சொல்ல வேண்டாமா? சொல்லுகிறேன், கேள்:

இந்த ஏழு பகுதிகளிலும் முதலிரண்டு பகுதிகளுக்குத்தான் 'கிராம' என்ற தலைப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது. 'கிராமம்' என்றால் பண்பட்ட இசைக்குரிய ஸ்வரத் தொகுப்பே என்பதைச் சொல்லவா வேண்டும்? ஆகவே, இந்த ஏழில் முதலிரண்டு பகுதிகளும் 'கிராம'த்தை உணர்த் துபவை என்று கொள்ள வேண்டும். மற்ற ஐந்தையும் ராகங்களை உணர்த்துபவை எனக் கொள்ளுவதே பொருத்தமாகும். ஏழு பகுதித் தலைப்புகளிலும் 'சதுஷ் பிரஹார' என்று காணப்படும் சொற்றொடர் நான்கு ஸ்வர முறை தொடர்ந்து அமைந்திருப்பதை உணர்த்துவதாகவே கொள்ளவேண்டும். இவ்விடத்தில் மகேந்திரவர்மனுக்கு, 'சங்கீர்ண ஜாதி' என்னும் பட்டம் இருப்பதையும் மனத்துட் கொண்டு சிந்திக்க வேண்டும். 'சங்கீர்ண ஜாதி' என்றால் ஒன்பது அட்சர காலங் கொண்ட

தாளவகை என்பர் இசை நூலோர். இனி, 'எட்டிற்கும் ஏழிற்கும் இவை உரிய' என்பதற்கு எட்டு நரம்பு அல்லது ஏழு நரம்பு கொண்ட இசைக் கருவியில் பயில்வதற்குரியதாகும் என்று கொள்ளுவது அத்துணைப் பொருத்தமென்று எனக்குத் தோன்றவில்லை. ஆனால், இசை உணர்வற்ற மொட்டைப் பாறையான எனக்குப் பல ஆராய்ச்சியறிஞர் களையும் மறுத்துரைக்கும் ஆற்றல் ஏது? ஆனால், குறிப்பிட்ட ஒரு தாளத்திற்கு மட்டுமன்றி, வேறொரு தாளத்திற்கும் ஒத்து வரும் என்பதைப் புலப்படுத்துகிறார் பாடமுறை ஆசிரியர் என்று கொள்ளலாமா என்று கருதுகிறேன். இசைக் கலை வல்லவர்கள் இதில் நுழைந்து ஆய்ந்து உண்மையைப் புலப்படுத்தினால் தமிழ்நாட்டின் சாஸ்திரீய சங்கீத வரலாறு ஓரளவு வெளிப்படலாம்.

இனிச் சிறப்புப் பாயிரத்திற்கு வருவோம். ருத்ராசாரியர் என்பவர் யார்? ருத்ரர், ருத்ரடர், ருத்ரபடர், பட்டருத்ரர் என்றெல்லாம் வழங்கப்படுபவரும், 'காவ்யாலங்காரம்', 'ச்ருங்கார திலகம்' என்னும் புகழ் பெற்ற நூல்களை ஆக்கியவருமான அவரே மகேந்திரவர்மனின் இசையாசானாய் விளங்கியவர். டாக்டர் பாண்டார்கரும், ஸ்ரீ டி.என். ராமசந்திரனும் இப்படியே கருதுகிறார்கள்.

இன்னுமொரு செய்தி: இதைப்போன்ற கல்வெட்டுக்கள் இரண்டு திருமெய்யம் குடைவரைக் கோயிலிலும், மலையக் கோயில் குடை வரையிலும் இருந்தன. அவற்றின் அருமையறியாத பிற்காலத்தவர் அவற்றை அழித்துவிட்டனர். அவை இருக்குமானால் மேலும் அதிக விவரம் கிடைப்பதுடன் இதற்கும் தக்க விளக்கம் கிடைத்திருக்கும். அவை அழிக்கப்பட்டிருந்தாலும் சில சொற்றொடர்கள் மட்டும் இரண்டு இடங்களிலும் காணப்படுகின்றன.

இதைப்பற்றி நான் சொல்லக் கூடியது இவ்வளவுதான். இந்தக் கோயிலில் இன்னும் பல கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவை பல வரலாறுகளையும் கவிதைகளையும் தம்முள் பொதிந்து வைத்துக் கொண்டிருக்கின்றன. அவை உன் போன்றவர்கட்கு மிக்க சுவை யளிப்பனவாகும். அவற்றை எல்லாம் கேட்டு மகிழ்வாயாக!

இவ்வாறு சொல்லித் தன் உரையை முடித்தது. நானும் அங்கிருந்து அடுத்த பகுதிக்குச் சென்றேன்.

ஆதாரம்: P.S.I.[2]; P.S.IO.[3]; P.S.I.[4]; P.S.I.[5]; Annual Reports on Epigraphy- S. Circle - 1905; Epi. Ind. Vol. XII; "Royal Mahendravarman" By Sri. T.N.R.: Administration & Social Life under Pallavas, By Dr. C. Meenakshi, etc., etc.



# கல்வெட்டுப் பழமாற்று

## கல் சொல்லும் கதை - 6

கல் சொல்லும் கதை ஐந்தில் குடுமியார் மலையில் காணப்பெறும் இசை விளக்கத்தைப்பற்றி ஓரளவு தெரிந்துகொண்டோம். இனி அங்குள்ள கல்வெட்டுக்களில் சிலவற்றையாவது பார்க்கலாம் என்று ஒரு நாள் காலை ஐந்து மணிக்கே எழுந்து குளித்து முழுகிக் காலைப் பலகாரத்தை முடித்துக்கொண்டு புறப்பட்டேன். காலை சுமார் ஏழு மணிக்குக் குடுமியார் மலைக் கோவில் குடைவரை வாசலில் வந்து நின்றது கார். காரிலிருந்து இறங்கி உள்ளே நுழைந்தேன். என் காதுகளும் கருத்தும் இன்று என்ன என்ன செய்திகளை எல்லாம் கேட்டு உணரப்போகிறோமோ என்று ஒரே ஆர்வத்தனவாய் விளங்கின. ஆனால், வயிறு இருக்கிறதே, பொல்லாத ஒன்று இது. இது சொல்லிற்று. "அப்பா, உன் காதுக்கும், கருத்துக்கும், ஏன், கண்களுக்குங்கூட இங்கே உணவு நிரம்பக் கிடைக்கும். அதை யாரும் கவர்ந்து சென்றுவிட மாட்டார்கள். ஆனால், என் விஷயம் அப்படிப்பட்டதல்ல. இப்பொழுதே நீ சென்று மடைப்பள்ளியில் சுயம்பாகியிடம் அச்சாரம் கொடுக்காவிட்டால் உண்டைப் பருக்கைக்கும் திண்டாட்டந்தான்."

ஆம், வயிறு சொல்வது நியாயந்தானே? உடனே மடைப் பள்ளிக்கு அச்சாரம் கொடுப்பதற்காகச் சென்றேன். வாயிற்படியைக் கிட்டுமுன் யாரோ, "இங்கு வா அப்பா!" என்று கூப்பிட்டது கேட்டு ஒலிவந்த கிழக்குச் சுவர்ப் பக்கம் திரும்பி நடந்தேன். யாரும் கண்ணில் தென்படவில்லை. "யார் ஐயா கூப்பிட்டது?" என்று வினவிக்கொண்டே சுற்றுமுற்றும் நோக்கினேன். "நான்தான் அப்பா கூப்பிட்டேன்" என்றது மடைப்பள்ளியின் கிழக்குச் சுவர். அப்புறம் சொல்ல வேண்டுமா, என்ன? மடைப்பள்ளியின் கீழ்ப்பாற் கற்சுவர் பேசத் தொடங்கிவிட்டது.

''என்னப்பா! கல் வெட்டுக்களைப் பார்ப்பதற்காக என்று காரைக்குடியிலிருந்து முப்பத்தெட்டு மைல்களைக் கடந்து வந்தவன், வந்ததும் வராததுமாய் மடைப்பள்ளிக்குப் போகிறாயே! இது ஒரு சிவன் கோயில் என்பதும் உச்சிக் காலத்திற்கு முன் பிரசாதம் எதுவும் கொடுப்பதில்லை என்பதும் உனக்குத் தெரியாதா?'' என்று கேட்டது.

''நன்றாகத் தெரியும். ஆனால், நான் அங்குப் போவது எனக்கும் காரோட்டிக்கும் பகல் உணவுக்காகப் பட்டைச் சாதத்துக்கு ஏற்பாடு செய்வதற்காகத்தான்'' என்று விடை பகர்ந்தேன்.

''நல்லது, அந்தக் காலத்திலென்றால் வகை வகையான சித்திரான் னங்களும் குழித்தளிகை (குழம்பு, கறி, கூட்டு, பச்சடி, வடை, பாயசம், தயிர் முதலியவற்றுடன் வெண்சோற்றுப் படையல்)களும் இங்கே கிடைக்கும். இப்பொழுது எல்லாம் ஒரே பட்டைச் சாதமாக மாறிக் கடவுள் ஒன்றே என்பதைப் புலப்படுத்திக்கொண்டிருக்கக் காண்கிறோம். ஏதோ இதாவது நிலைத்து நடக்கவேண்டும் என்பதுதான் என் பிரார்த்தனை. போக்குவண்டிகளும் பிரயாணிகளும் நிறைய வந்து செல்லும் நடுவூர். எனவே, நீ முந்திக்கொண்டுவிட வேண்டியதுதான்'' என்றது.

''சரி,'' என்று சொல்லிவிட்டு மடைப்பள்ளிக்குப் போய்ப் பட்டைச் சாதத்துக்கு எட்டணாக் கொடுத்துவிட்டு மீண்டும் மடைப்பள்ளிக் கீழ்ப்புறச் சுவரருகில் வந்து நின்றேன்.

''வந்துவிட்டாயா? மிக்க மகிழ்ச்சி; நான் சொல்லப்போகும் செய்தி உனக்கு எவ்வளவோ ஆறுதலை அளிக்கும். முதலில் நான் உனக்குக் கல்வெட்டைச் சொல்லப்போவதில்லை. ஆனால், கல்வெட்டைப் பற்றியே சொல்லப்போகிறேன். கேள்!'' என்று தனது உரையைத் தொடங்கியது. நானும் காதுகளைக் கூர்மையாக்கிக்கொண்டு (அதாவது கவனத்தைச் சிதற விடாமல், ஐந்து பேரறிவும் செவிகளே கொள்ள) மிக்க ஆர்வத்துடன் நின்றேன்.

★★★

**அ**ப்பா! இந்தக் கோயில் ஒரு சிறந்த வரலாற்றுத் துறைப் பண்ணை. இங்கு அழிந்தவை போக 107 கல் வெட்டுக்கள் இருக்கின்றன. அவற்றில் 13 கல்வெட்டுக்கள் சுவைமிக்க பாடல்களாகும். 30 கல்வெட்டுக்கள்

இந்தக் கோயிலில் பல காலங்களில் பலரால் வைக்கப்பெற்ற திரு விளக்குகளையும், அவற்றிற்காகச் சர்வமான்யமாக விடப்பட்ட உடல் (முதல்)களையும் பற்றியவையாகும். அவற்றில் சில அரிய செய்தி களும், கொடும்பாளூர் இருக்கு வேளிர்களும் முத்தரையர்களும் தங்களுக்குள் கொள்வினை கொடுப்பினையாகிய கலப்பு மணம் செய்துகொண்டமை போன்ற வரலாற்றுத் துணுக்குகளும் கிடைக்கின்றன என்றாலும் அவற்றின்பாற் சென்றால் இன்றைப் பொழுது போய்விடும்.

வீர ராஜேந்திரன், முடிவழங்கு சோழன், சோழ கேரளன், திரிபுவன வீரதேவன், கோனேரின்மை கொண்டான், உலகுடைய நாயனார், இராசாக்கள் தம்பிரான், இராசாக்கள் நாயகன், முடித்தலை கொண்ட பெருமான், தியாக விநோதன், தனி நாயகன் என்றெல்லாம் சிறப்புப் பெயர் பெற்ற பரகேசரி மூன்றாம் குலோத்துங்க சோழ மன்னனின் வரலாறுபற்றி வேறு எங்கும் காணப்படாத அளவு அதிகமான செய்திகளைக் கூறும் மெய்க்கீர்த்தியைக் கொண்ட கல்வெட்டு (PSI. 166) இங்கேதான் இருக்கிறது. இதில் சிறிது வழுவும் பிழையும் தோன்றுவதுடன் சில இடங்களில் சிதிலமடைந்தும் உள்ளது என்றாலும் திருமெய்யம் தாலுகா சேரனூர்க் குலோத்துங்க சோளீசர் கோயிலில் காணப்பெறும் இதே மெய்க்கீர்த்தியை (PSI. 163) - அது பெரிதும் சிதிலமுற்றிருப்பினும் - அதையும் ஒன்றாக வைத்துக்கொண்டு ஒப்பு நோக்கிப் பிரதி செய்தால் பேரளவு திருத்தம் பெற்றுச் செம்மையாதல் கூடும்.

இனி என் கதைக்கு வருகிறேன். கல்வெட்டுக்களைப் பற்றிய விவரம் உனக்கு ஓரளவு தெரிந்திருக்கும். எத்தனையோ அறவோர்கள், அன்பர்கள் இறைவனுக்கும் மக்களுக்கும், ஏன், மற்றப் பிராணி களுக்குங் கூடப் பயன்பட வேண்டி எத்தனை எத்தனையோ அறக் கட்டளைகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள். அப்படி ஏற்படுத்தும்போது அவை 'சந்திராதித்தர் வரை செல்வதாக' அமைய வேண்டுமென்பது அவர்களின் உள்ளக் கிடக்கை. அப்படியே கல்லிலும் செம்பிலும் வெட்டியும் இருக்கிறார்கள். அவ்வகைத் தர்மசாசனங்களின் கீழ் அவர்கள் பொறித்திருக்கிற சொற்களே எவ்வளவு ஈடுபாட்டுடனும் நம்பிக்கையுடனும் அவற்றைத் தோற்றியிருக்கிறார்கள் என்பதை நமக்கெல்லாம் நன்கு தெரிவித்துக்கொண்டிருக்கின்றன. மாதிரிக்காகச் சிலவற்றைச் சொல்லுகிறேன்.

**'இதுக் கழிவு செய்வான் வர்க்க மறுவான்'**
**'இது இறக்குவான் வழிவழி எச்ச மறுவான்.'**
**'இது இறக்குவான் எழுவழி எச்ச மறுவான்.'**

(இறக்குதல் - தாழ்வு செய்தல், கேடு புரிதல்.) இத்தகைய சாபத்துடன் சில கல்வெட்டுக்கள் முற்றுப்பெறும். பிறிதொரு வகைக் கல்வெட்டுக்களின் இறுதிச் சொற்றொடர்களையும் காண்போம்.

**'ரட்சித்தானடி என் தலை மேலன.'**
**'ரட்சிப்பார் பாத தூளி என் தலை மேலன.'**
**'நந்தமற எப்பேற் பட்டாரும் பாற்படுத்திக் காக்க!'**

(என் குலத்தினர், என் வழியினர், என் குடியினர் என்று கருதாது எவர்கள் பராமரிப்பிலும் வைத்து இவ்வறம் அழியாமற் காக்க.)

**'அறம் செய்தான் செய்தான் அறம்காப்பான்**
**பாதம், திறம்பாமல் சென்னிமேல் வைத்து' "**

என்பன போன்ற பணிவு வணக்கத்துடன் சில கல்வெட்டுக்கள் முற்றுப் பெறுகின்றன. இவற்றிலிருந்து சொற்றொடர்களின் அருமைப்பாட்டை மட்டுமன்றி, அவ்வக் காலங்களில் சொற்கள் எப்பொருள் கொண்டு பயிலப்பட்டிருக்கின்றன என்பதையும் நாம் தெள்ளிதில் உணர முடிகின்றது; இல்லையா?

**அறம்செய்தான் செய்தான் அறம்காப்பான் பாதம்,**
**திறம்பாமல் சென்னிமேல் வைத்து**

என்னும் குறள் வெண்பாவை என்னவென்று சொல்லட்டும்! எத்துணை விழுமிய கருத்தை உள்ளடக்கிக் கொண்டிருக்கின்றது, பார்த்தாயா? அறம் புரிந்தவன் - தர்மகர்த்தா - எந்த நம்பிக்கையில் தருமத்தைச் செய்கி றானாம்? அறம்காப்பான் - தர்ம பரிபாலகன் - ஆக வருபவர்களின் திருவடியைத் தவறாமல் - மாறுபடா உள்ளத்துடன், தலைமீது என்றும் இருத்திக்கொண்டுதான் அத்தருமத்தையே தொடங்கினானாம். என்ன அருமை! அவர்களுடைய அடக்கமும் பக்தியும் தர்மசிந்தையுடன் பின்னிப் பிணைந்தல்லவா நம்மை ஈர்க்கின்றன? அன்றியும் வருங்கால மக்களின்பால் எவ்வளவு நம்பிக்கை கொண்டிருந்திருக்கிறார்கள்!

இந்த மாதிரியான கல்வெட்டுக்கள் அழியாமல் அழிக்கப்படாமல் பாதுகாத்து வரினன்றோ அறக்கட்டளைகளும் அழியாமல் நடைபெறும்? ஆகவே, முற்காலத்தில் கல்வெட்டுக்களை எல்லாம் கோயில் மூர்த்திகளைப்போலவே பேணிப் பாதுகாத்து வந்திருக்கிறார்கள். மூர்த்தி பின்னப்பட்டுவிட்டால் புதுமூர்த்தி செய்து கடவுண்மங்கலம் (பிரதிஷ்டை) செய்வதைப் போல அழிந்துபோன அல்லது அழிக்கப்பட வேண்டிய கல்வெட்டுக்களை மீண்டும் எடுத்தெழுதுதல் வழக்கம். பழையவையும் பழுதுபட்டவையுமான கோயில்களை இடித்துப் பெருங்கோயிலாகவோ முன் இருந்த அளவிலேயோ புதுக் கோயிலைக் கட்டுவார்கள். இப்படிச் செய்யத் துணியும்போது பழங்கோயிலை இடிப்பதற்குமுன் பக்கத்தில் ஒரு சிறிய கோயிலை அமைப்பார்கள். பின்னர்ப் பழங்கோயிலுள் இருக்கும் மூர்த்திகளை எல்லாம் விதிப்படி பக்கத்தில் அமைக்கப் பெற்றுள்ள தாற்காலிகக் கோயிலுள் எழுந்தருளச் செய்து நித்திய நைமித்திக வழிபாடுகள் யாவும் நெறிப்படியும் வழக்கப்படியும் நிகழச் செய்வார்கள். அந்தத் தாற்காலிகக் கோயிலுக்கு 'இளங்கோவில்' என்று பெயர். அதையே பாலாலயம், பாலஸ்தாபனம் என்று வடமொழியில் கூறுவர்.

இங்ஙனம் மூர்த்திகள் யாவும் இளங்கோயிலில் எழுந்தருளியான பின்னர்ப் பழங்கோயிலை இடிப்பதற்கு முன் அங்கே கருவறை (கர்ப்பக் கிருகம்) முதல் அனைத்திடங்களிலும் காணப்பெறும் எல்லாக் கல்வெட்டுக்களையும் ஓலைகளில் எடுத்தெழுதிக் கொள்வார்கள். அப்படி எடுத்து முடிந்த 'படி' (பிரதி)களை எல்லாம் மீண்டும் ஒரு முறை ஒப்புநோக்கிச் செம்மை செய்துகொள்வார்கள். பின்னர் அந்தப் படிகள் (Copies) கோயில் கருவூலத்தில் (Treasury) போற்றி வைக்கப்பெறும். இதற்குக் 'கல்வெட்டுப் படி' என்பது பெயராகும்.

பழையகோயில் இடிக்கப்பட்டுச் சிற்ப ஆகமநூல் முறைப்படி திருப்பணி செய்து முடிந்ததும் பழங்கோயிலில் இருந்த கல்வெட்டுக் களை எல்லாம் 'கல்வெட்டுப்படி'யில் காணப்படுவது போல் புதுக் கோயில் சுவர்களில் பொளிந்து விடுவார்கள். இப்படிச் செய்வதற்குக் 'கல்வெட்டுப் படிமாற்று' என்பது பெயராகும். இப்படிக் கல்வெட்டுப் படிமாற்றம் செய்யும் பொழுது வழக்காறொழிந்த பண்டைத் தமிழ் லிபியில் இருந்த கல்வெட்டுக்களை அக்காலத்து வழக்கில் இருந்த லிபிகளில் பெயர்த்து எழுதுவது முறையாக இருந்து வந்திருக்கிறது.

அப்படியே பெயர்த்து எழுதிய கல்வெட்டுக்கள் இந்தக் கோயிலில் மட்டும் நான்கு இருக்கின்றன. அந்த நான்கையும் செய்ய ஆணை யிட்டவர் யார் தெரியுமா? சொல்லுகிறேன். 'ஆற்றூருடையான் பொன்னன் காங்கேயராயன்' என்பவர்தாம். சோழநாடு கொண் டருளிய (பின்னர்ச் சோழநாடு வழங்கியருளிய) மாற வர்மன் சுந்தர பாண்டிய தேவரின் பிரதிநிதியாயிருந்து இப்பகுதியைப் பரிபாலித்தவர் இந்தக் காங்கேயராயர். சிவனடி மறவாச் சிந்தையும் அறநெறி பிறழாச் செய்கையும் உடையவராதலாலே அவர் இட்டது சட்டம் என மக்கள் ஏற்று நடப்பாராயினர். அவர் இட்ட கட்டளைப்படியே நானும் மற்ற மூவரும் பழைய கல்வெட்டுக்கள் நான்கின் பிரதிநிதிகளாக விளங்கி வருகிறோம். மற்ற என் சகோதரர்கள் மூவரில் இருவர் என் பக்கத்தில் இதே சுவரில் காணப்படுகின்றனர். மற்றவர் இரண்டாம் திருச்சுற்றில் இருக்கிறார். நாங்கள் நால்வரும் தோன்றிய காலம் கி.பி. 1220-ஆம் ஆண்டை ஒட்டியதாகும். இனி, என்னையே உனக்குச் சொல்லுகிறேன். கேட்பாயாக:

(1) ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவன சக்கரவர்த்திகள் சோழநாடு கொண்ட சுந்தரபாண்டிய தேவற்கு யாண்டு சவது

(2) இத்திருக்கோயிலில் இரண்டாம் பிராகாரத்து திருவாயில் இடஞ்சலாயிருக்கையாலே ஆற்றூருடையா

(3) ன் பொன்னன் காங்கேயராயர் இது வாங்கி திருமாளிகையும் திருவாயிலும் பெருக்கச் செய்ய இதில் கல்வெட்டு

(4) படி எடுத்து படி எடுத்தபடியே வெட்டுகவென்று உடையார் காங்கேயராயர் அருளிச்செய்ய வெட்டினபடியாவது-கோ

(5) ப்பரகேசரி பன்மர்க்கு யாண்டு ஙயஙது திருநலக்குன்றத்து பரமேசுவரர்க்கு பராந்தகன் குஞ்சரமல்லனான வீரசோழ இளங்கோ.

(6) வேளானேன், ஈழமெறியப் போகின்றேன், கீழ்மணநல்லூரில் கொடுத்த நிலம் வேலிச் செய்யும் *திருவின்திினை செபமனாே

* 'திருவின்தினைசெபமனா' படிமாற்றத்தின்போது ஏற்பட்ட பிழை போலும். மூலம் என்ன வாயிருக்கலாம் என்பது ஊகிக்க முடியாததாயிருக்கிறது.

(7) யாகியார்க்கும் திருவமுதுக்குமாக இந்நிலஞ் செய்து கொடுத்தேன் பராந்தகன் குஞ்சரமல்லனான வீரசோழ இளங்கோவேளா

(8) னேன் இது பன்மாஹேஶ்வர ரக்ஷை॥

இதிலிருந்து நீ தமிழ்நாட்டு வரலாற்றுப் பகுதியில் ஒரு முக்கிய நிகழ்ச்சியையும் சிறந்த மரபையும் தெரிந்துகொள்ளலாம். கோப்பரகேசரி பன்மருக்கு யாண்டு 33 என்று இருக்கின்றது. இவன்தான் கி.பி. 907 முதல் 953 வரை ஆட்சிபுரிந்த பரகேசரி முதலாம் பராந்தக சோழ மன்னனாவான். மூன்றாம் ராஜசிம்ம பாண்டியனுடன் பல முறை பொருது வென்றவன் இவனே. இறுதிப்போரில் ராஜசிம்மன் தோற்றுப் போய்விட ஈழநாட்டிற்கு ஓடி அப்பொழுது அங்கு அரசு வீற்றிருந்த நான்காம் தப்புலன் (கி.பி. 923-934) உதவியை நாடி நின்றான். அவனோ உதவி செய்வதாக வாக்களித்து மிக்க உபசாரங்களுடன் ராஜசிம்மனைத் தன் நாட்டில் வைத்திருந்தான். ராஜசிம்மன் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தான். உபசாரத்தை அன்றி உதவுகின்ற பாடாயில்லை. எனவே, மிகவும் மனம் நைந்து தனது பரம்பரையாக வந்த மணிமுடியையும் பிற அரசச் சின்னங்களையும் அவன்பால் அடைக்கலப் பொருளாய் வைத்துவிட்டுத் தன் தாய் வானவன் மாதேவி பிறந்த சேரநாட்டில் சென்று கரந்து உறைவானாயினான்.

பராந்தக சோழன் பாண்டிநாடு முழுவதையும் தன் அடிப்படுத்திய பின், மதுரையம்பதியில் முடிசூட்டுவிழாக் கொள்ள ஏற்பாடுகள் செய்யக் கட்டளையிட்டான். மன்னன் கட்டளைக்கு ஏற்ப மதுரை நகரில் முடிசூட்டு விழாவுக்கு ஏற்பாடு செய்யச் சென்ற மந்திரத் தலைவர்கள் பாண்டியரின் சுந்தர முடியும் ஏனைய அரசச் சின்னங்களும் தோற் றோடிய ராஜசிம்மனால் சிங்கள வேந்தன்பால் அடைக்கலப் பொருளாய் வைக்கப்பட்டிருப்பதை அறிந்தார்கள். அச்செய்தி கேட்ட பராந்தகன் தக்க சில தூதுவர்களைச் சிங்களத்திற்கு அனுப்பினன். தூதுவர்கள் ஈழத்திற்குச் சென்ற காலத்தில் தப்புலன் ஆட்சி முடிந்து நான்காம் உதயன் ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. அந்த உதயன் பாண்டியன் முடி முதலியவற்றைச் சோழனிடம் கொடுக்க மறுத்து விட்டான். அதைக் கேட்ட பராந்தகன் சினம்மிக்குச் சிங்களத்தின் மீது பெரும்படை ஒன்றை ஏவி அவற்றைக் கைப்பற்றி வரப் பணித்தான். அப்படைக்குத் தளபதியாகச் சென்றவன்தான் பராந்தகன் குஞ்சரமல்லன்

என்ற வீரசோழ இளங்கோ வேளான் ஆவான். இவனது இயற்பெயர் மகிமாலய இருக்கு வேள் என்பதாகும். கொடும்பாளூரை ஆண்ட குறுநில மன்னனாவான் இவன்.

பாண்டிநாட்டுப் போரில் இவன் ஒரு பெரும் படைக்குச் சேனை நாயகனாய்ச் சென்றவன். அவ்வெற்றி கிட்டச் செய்த முக்கியமான வர்களில் இவன் தலையானவன். எனவே, பாண்டிப் போரின் தொடர்பாக அமைந்த ஈழத்துப் படையெழுச்சிக்கு இவனையே படைத் தலைவனாக நியமித்ததும் பொருத்தந்தானே? அந்தப் படையெடுப்பின் பலன் என்ன என்று மட்டும் என்னைக் கேட்காதே. படையெழுச்சியின் நோக்கம் கைகூடவில்லை. ஆயினும் ஈழத்தை வென்று நான்காம் உதயனைச் சுரம் போக அடித்து வெற்றி வீரனாகவே திரும்பினன் மகிமாலய இருக்கு வேளான். ஈழத்தைப் பராந்தகன் வெற்றி கொண்டு விட்டாலும், அவன் கொண்ட நோக்கமான பாண்டியர் மணிமுடி முதலியவற்றை ஈழத்திலிருந்து மீட்டவன் முதலாம் இராஜேந்திர சோழனே (கி.பி. 1012-1044) ஆவான். இவனுடைய ஐந்தாம் ஆட்சி யாண்டிலே (கி.பி. 1017) அதாவது சுமார் எழுபது ஆண்டுகட்குப் பிறகுதான் பராந்தகனின் எண்ணம் நிறைவேறியது.

இனி யாத்திரா தானம் பற்றிச் சொல்லட்டுமா? சரி, யாத்திராதானம் என்றால் க்ஷேத்திர யாத்திரை, அல்லது உற்சவத் தொடக்கம், அல்லது இறப்பதற்குச் சற்றுமுன் பரலோக யாத்திரை ஆகியவை முட்டின்றி நிறைவேறும் பொருட்டாகக் கொடுக்கப்பெறும் தானம் என்றுதான் இக்காலத்தவர் பொருள் கொள்ளுவார்கள். ஆனால், முற்காலத்தில் படையெழுச்சி (Military Expedition)க்கு முன் அறவோர், தெய்வம் முதலியவர்கட்குத் தானம் கொடுத்த பின்புதான் படை புறப்படும். யாத்திரை என்ற சொல்லுக்கே படையெழுச்சி என்ற பொருளும் உண்டு என்பது உனக்குத் தெரிந்ததுதானே? 'தகடூர் யாத்திரை', 'சோழநாட்டு இடவை யாத்திரை' என்பன அந்த அந்த இடத்தின்மீது தண்டெடுத்துச் சென்றதையே குறிப்பன என்பதும் உனக்குத் தெரியாதா என்ன?

இந்தக் கல்வெட்டு அங்ஙனம் ஒரு படையெடுப்பிற்குமுன் தமிழ்நாட்டு மரபுக்கு ஏற்பச் செய்த தானத்தைப்பற்றியே காரணத்துடன் புலப்படுத்துகிறது. 'ஈழம் எறியப் போகின்ற பராந்தகன் குஞ்சரமல்லன் என்ற வீர சோழ இளங்கோ வேளான் ஆகிய நான் யாத்திராதானமாகத்

திருநலக்குன்றத்துச் சிவபெருமானுக்கு நித்தியப் படித்தரத்திற்காகக் கீழ்மணநல்லூரில் நிலம் விட்டிருக்கின்றேன்' என்ற செய்தியைக் கல்லிலும் வெட்டியிருக்கிறான்.

''இந்த ஒரு கல்வெட்டிலிருந்தே 'கல்வெட்டுப் படிமாற்று', 'யாத்திராதானம்' முதலிய நடைமுறை வழக்கங்களையும், ஈழம் கொண்ட பராந்தக சோழனைப் பற்றிய வரலாற்றுத் துணுக்கையும் தெரிந்துகொள்ள முடிகின்றது. மேலும் பரகேசரி பன்மர்க்கு யாண்டு 33 என்று காணப்படுவதால் சிங்களப் படையெடுப்பு கி.பி. 941-இல் என்பதும் விளக்கம் பெறக்கூடியதாக இருக்கிறது. இவனது ஆட்சியின் 37-ஆவது ஆண்டுக் கல்வெட்டு (Ins. 553 of 1920) 'மதுரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரிவன்மர்' என்று குறிப்பிடுவதால் கி.பி. 944-க்கு முன் ஈழப் போரில் பராந்தகன் வெற்றி பெற்றுவிட்டான் என்பது தெளிவு. உச்சிக் கால மணியும் அடித்துவிட்டார்கள். குடுமி நாயனாரை வணங்கிவிட்டு உன் வயிற்றுப் பாட்டைப் பார்த்துக்கொள்.''

கற்சுவர் தன் கதையை முடித்தது.



# பிரத்தியம் செய்தலும் – இறங்கற மீட்டலும்

## கல் சொல்லும் கதை - 7

**கோயிலிலே திருட்டு நடந்து விட்டது. அதை விசாரித்துத் தண்டனை வழங்கினார்கள். கல் இந்த உண்மைக் கதையைச் சொல்கிறது.**

**உ**ச்சிக் கால மணியுடன் நாகஸ்வர முழக்கமும் சேர்ந்து கொண்டது. கால் முகம் கழுவிக் கோயிலுக்குள் நுழைந்தேன். பிள்ளையார், குடுமி நாயனார், ஆளுடை நாச்சியார் முதலான திருச்சந்நிதிகளில் எல்லாம் வழிபாடு செய்து விபூதி குங்குமப் பிரசாதமும் பெற்று அணிந்துகொண்டதன் பின் நேரே மடைப்பள்ளியை நோக்கி நடந்தேன். ஆம், வயிற்றுப்பாட்டைப் பார்க்கத்தான். ஏற்கெனவே முன்பணம் கொடுத்திருந்தமையால் எனக்குக் கிடைக்க வேண்டிய பட்டைச் சாதத்தை ஒரு தாம்பாளத்தில் எடுத்து வைத்திருந்தார் சுயம்பாகி. அதை வாங்கிக்கொண்டு கோபுர வாயிலுக்கு வந்து சேர்ந்தேன்.

புளியோரையைப் பிட்டு வாய்க்குள் செலுத்தினேன். ஆம், உண்மையாகவே செலுத்தினேன். வாய்க்கு ருசியிலை என்றாலும் வயிற்றை உதாசீனப்படுத்தலாமா? எப்படியோ பகல் உண்டி என்பதை ஒருவாறாக முடித்துக்கொண்டேன். மனப் பறவை கடந்த காலப் பெரு வெளியிலே சிறகடித்துப் பறக்கத் தொடங்கிவிட்டது.

''நல்வேள்வித் துறைபோகிய தொல்லாணை நல்லாசிரியர் புணர்கூட்டு உண்ட புகழ்சால் சிறப்பின் பல்சாலை முதுகுடுமி'' என்று மாங்குடி மருதனாரால் மதுரைக் காஞ்சியில் பாராட்டப் பெறும் பாண்டியன் பல் யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி காரணமாய்

எழுந்தது இப்பெருந் திருக்கோயில். பாண்டியரும் பல்லவரும் சோழரும் பக்திப் பெருக்கால் ஆற்றிய பல பெரும் பணிகளால் வளர்ந்து ஓங்கியது. நாயக்கர் காலம் வரை கண்ட நலன்களை எல்லாம் கொண்டு உயர்ந்தது இக்கோயில் திருப்பணி. ஆனால், இன்று இடிபாடுகள் புடைசூழ எழில் தேய்ந்து விளங்குகிறது. வகை வகையான சித்திரான்னங்களும் பரமான்ன பட்சணங்களுமாகப் படைக்கப் பெற்ற இக்கோயிலில் இன்று புளியோரைக்கட்டி எண்ணெயைக் கண்டதாகவே தெரியவில்லை. என்னே காலத்தின் கோலம்! ஆங்காலமும், போங்காலமும் அனைத்திற்கும் அப்பாற்பட்ட ஆண்டவனையுங்கூட ஆட்டித்தான் தீரும் போலிருக்கிறது.

'இந்தக் கோயிலுக்கு நிலங்களும், தோட்டந்துரவுகளும், துளைப் பொன் (கலப்பற்ற சொக்கத் தங்கம்) முதலியவைகளும் ஏராளமாக மன்னர்களும் மக்களும் வழங்கியிருக்கிறார்கள். சாவா மூவாப் பேராடு களும், பசுக்களுமாகக் கிடைத்தவற்றை எண்ணத்தான் முடியுமா? அவை என்னாயின? ஆண்டவனை அநாதி என்று பெரியவர்கள் சொல்லுவார்களே. அது எல்லாப் படியாலும் உண்மைதான் போலிருக்கிறது. ஏன் என்று கேட்க ஒரு நாதி இருந்தால் அவை எல்லாம் போன சுவடாவது புலப்பட்டிருக்கும் அல்லவா? கோயில் சொத்துக் களைக் கவர்ந்து கொள்வோரைக் கண்டிப்பதோ தண்டிப்பதோ கிடையாது போலும். அதனால்தான் இந்தக் கோயில்களும் இப்படிச் சீரழிந்து போகின்றன' என்றெல்லாம் என் மனம் சிந்தனை செய்து கொண்டிருந்த பொழுது, யாரோ உரக்கச் சிரிக்கும் ஒலி கேட்டது. சிரிப்பொலி என் சிந்தனையைத் தடை செய்யவே, யார் சிரித்தது, ஏன் சிரித்தார் என்று சிரிப்பு வந்த திசையான கோபுர வாயிலுக்கு வலப் புறமாக நோக்கி நின்றேன். யாரும் கண்ணிற் படவில்லை. சுற்றுமுற்றும் நாற்புறமும் துழாவினேன். உச்சிக் காலம் முடிந்து அரை மணி நேரம் ஆகிவிட்டதால் ஈங்குருவிகூட அங்குத் தென்படவில்லை.

''யாரைத் தேடுகிறாய்?'' என்ற வினா என் காதிற் பட்டது.

''யார் கேட்டது?'' என்று வலப்புறம் நோக்கி நடந்தேன்.

''நான்தான்'' என்றது வலப்புறச் சுவர்.

''சிரித்தது யார்?''

''நானேதான்.''

''ஏன் சிரித்தாய்?''

''கோயில் சொத்துக்களைக் கவர்ந்துகொள்வோரைக் கண்டிப்பதோ தண்டிப்பதோ கிடையாது போலும் என்று கருதினாய் அல்லவா? அதை நினைந்தே சிரித்தேன்.''

''அதற்காகச் சிரிப்பானேன்?''

''அந்தக் காலங்களின் கோயில் நிர்வாக முறையையும், நீதி பரிபாலனத் துறையையும் தெரிந்து கொண்டிருந்தால் நீ அப்படிக் கருதியிருக்கமாட்டாய்; நானும் இப்படிச் சிரித்திருக்க மாட்டேன்.''

''அவற்றை நான் யாரைக் கேட்டு எப்படித் தெரிந்துகொள்வது?''

''நான் இருக்கிறேன்; எனனைப் போல இன்னும் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். யாரையும் கேட்காமல் எதையும் தெரிந்து கொள்ளாமல் நீயாகவே ஊகம் செய்யத் தொடங்கிவிட்டாயே! உங்கள் பிழைப்பே இப்படித்தான்.''

எனக்கோ கோபம் கோபமாக வந்தது. ஏற்கெனவே ஒரு நொண்டிக் கல்லிடம் வாயைக் கொடுத்து மூக்கறுபட்டது நினைவுக்கு வரவே, கோபத்தை வெளிக்காட்டாமல், ''அன்பார்ந்த கல்லே, - இல்லை - கற்சுவரே, எங்கள் பிழைப்பை (எந்தப் பொருளானாலும் சரி) ஏன் நையாண்டி செய்கிறாய்? அதனால் உனக்கு என்ன லாபம்?'' என்றேன்.

''அப்பா, உங்களை நான் நையாண்டி செய்யவில்லை; ஏதோ என் மனத்தில் பட்டதைத் தான் சொல்லுகிறேன். நான் சொல்வதை முழுவதும் கேட்டுவிட்டு அப்புறம் தவறு இருந்தால் என்னைக் கண்டிப்பாயாக!'' என்று சொல்லித் தன் உரையைத் தொடங்கிற்று அந்தச் சுவர்.

''நீங்கள் பத்துப் பதினைந்து ஆண்டுகளையும், பெரும் பொருளையும் செலவிட்டு ஆங்கிலம் கற்றுப் பட்டமும் பெறுவீர்கள். அம்மொழியின் வளங்களை ஏதோ ஓரளவில் தெரிந்துகொள்ளுவீர்கள். அம்மொழியில் காணப்படும் சொற்களையும், அவற்றின் பொருட்கூறு (Shades of meaning)களையும் பிற நலன்களையும் கண்டு வியப் படைவீர்கள். அதே நேரத்தில் நந்தமிழ் மொழியில் ஒன்றும் இல்லை என்பீர்கள். ஆங்கிலக் கல்விக்குச் செலவிட்டதில் பத்தில் ஒரு பங்கு

நேரமும் பொருளுங்கூடச் செலவு செய்யாமல், 'தமிழில் என்ன ஸார் இருக்கிறது?' என்று சொல்லச் சிறிதும் தயங்க மாட்டீர்கள். என்ன, நான் சொல்வது மெய்யா, அல்லவா?''

''நீ சொல்வது உண்மைதான்; ஏதோ ஆண்டவன் அருளாலும் உன்னனையார் பணியாலும் நாங்கள் இப்பொழுது எவ்வளவோ திருந்திவிட்டோம். நாட்டுப்பற்று, மொழிப் பற்று முதலியன வளரவும் தொடங்கிவிட்டன. இருந்தாலும் தெரிந்துகொள்ள வேண்டியவை இன்னும் எவ்வளவோ இருக்கின்றன. அவற்றையெல்லாம் உன்னைப் போன்றவர்கள் சொன்னாலன்றோ தெரிந்து கொள்ள முடியும்? தயை செய்து நீ சொல்லக் கூடியதைச் சொல்வாயா?''

''அதற்காகத்தானே காத்துக் கிடக்கிறேன்?'' என்று சொல்லத் தொடங்கிற்று. இனி அவற்றை அதன் வாய்மொழியாகவே கேட்கலாம்:

★★★

அப்பா, நான் பிறந்து அறுநூற்று ஐம்பத்தெட்டு ஆண்டுகள் ஆகின்றன. மூன்றாவது வீரபாண்டியன் (கி.பி. 1296-1342) காலத்தில் தோன்றியவன் நான். அப்பொழுதெல்லாம் இந்தக் கோயிலில் நாளெல்லாம் திருநாள்தான். இந்த வட்டத்து ஆட்சி நிர்வாகம் அனைத்தும் இக்கோயிலிலிருந்தே நிகழும். தனிப்பட்டவர் களுக்கிடையிலும் சரி, ஊர்கள், நகரங்களுக்கு இடையிலாயினும் சரி, வழக்குகள் ஏற்பட்டால் அனைத்தும் இங்கிருந்துதான் தீர்க்கப்படும். கோயில் வாசல் தீர்ப்பு என்றாலே அதற்குத் தனித்த ஒரு மதிப்பு உண்டு மக்களிடையில். வழக்கின் தன்மைக்கேற்பப் பெருமக்கள் (மக்கட் சமுதாயத்தின் பிரதிநிதிகள்) அளவு குறைந்தும் கூடியும் இருக்கும்.

நிலம்பற்றியும், எல்லைபற்றியும், கடன் முதலியவை பற்றியும் மட்டுந்தான் வழக்குகள் இங்குக் கொண்டு வரப்படும் என்று எண்ண வேண்டாம். கொலை, களவு போன்ற கையோங்கிய செயல்கள்பற்றியும் வழக்குகள் வரும். அனைத்தும் ஆண்டவன் கோயிலில் கூடியிருந்தே பெருமக்களால் தீர்ப்பளிக்கப் பெறும். அவையன்றியும் நாட்டுச் சிறுபாடிகாவல் (Police Service), பெரும்பாடி காவல் (Military Service), திருநாட்கள், வேளாண்மை முதலான பல வேறு விஷயங்கள் பற்றியும் ஆராய்ந்து செயலாற்றத் திட்டம் வகுப்பதும், நிறைவேற்றலும் எல்லாம்

திருக்கோயிலில் கூடியே நடைபெறும். அதனாலேதான் இத்தகைய கோயில்களில் நூற்றுக்கால் மண்டபம், ஆயிரக்கால் மண்டபங்கள் எல்லாம் கட்டப்பட்டிருக்கின்றன.

இனி நீதித் துறைக்கு வருவோம். ஒருவர்மீது குற்றஞ் சாட்டப் பட்டால் அதற்கென இங்குள்ள ஏட்டில் குற்றம் சாட்டுவோர் குற்றத்தின் தன்மையையும், குற்றம் சாட்டப்படுபவரின் பெயரையும் கண்டு தன் கையொப்பத்துடன் தன் கையெழுத்தாலே எழுதி வைக்க வேண்டும். எழுதத் தெரியாதவர் தற்குறி இட்டால் அதை மாட்டறிந்தார் (பக்கத் திலிருந்து கண்டறிந்தவர்) இன்னாருடைய தற்குறியை மாட்டறிந்தேன் என்று எழுதிக் கையொப்பமிட வேண்டும். அதன் பிறகு குற்றம் சாட்டப்பட்டவர்க்குச் 'சம்மன் சார்வு' செய்யப்படும்.

அந்த முறையையும் கேள். கோயில் வயிராவி ஒருவன் குற்றம் சாட்டப்பட்டவரிடம் நேரில் சென்று, 'உம்மீது இன்ன குற்றம் இன்னாரால் சாட்டப்பட்டுக் குற்றப் பதிவேட்டில் பதிவாகியிருக்கிறது. ஆனதால் கோயில் வாசல் பேரால் உம்மை மறித்திருக்கிறது' என்று சொல்வான். அப்படி மறிக்கப்பட்டவர் அப்புறம் வேறு எப்பணியிலும் ஈடுபடாமல் நேரே வயிராவியுடன் கோயிலுக்கு வந்து புறத்துறை மணியத்தினிடம் உள்ள குற்றச்சாட்டைப் படித்துப் பார்த்துப் பெருமக்கள் கூட்டத்திற்கு வருவதாக உடன்பாட்டு முறி எழுதிக் கொடுத்துவிட்டுச் செல்ல வேண்டும். வயிராவி மறித்த செய்தியைக் கேட்டும் வராமல் இருந்தால் அந்தக் குற்றம் சாட்டப்பட்டவர் வீட்டிற்கு மறுபடியும் வயிராவி சென்று அவருக்கு உரிய பாத்திரம் பண்டங்களில் ஒன்றை எடுத்துவந்து புறத்துறை மணியத்திடம் கொடுத்து மறித்தும் வர மறுத்தமையை மெய்ப்பிக்க வேண்டும். அப்படி எடுத்து வரப் பெறும் பொருளுக்கு 'அடைவெடுத்த பொருள்' என்பது பெயராகும். வயிராவி என்ற சொல் இன்றும் எங்கும் பெருவழக்காக இருக்கிறது. பொருள்தான் பெரும்பாலோர்க்குப் புலப்படுவதில்லை. வயிராவி என்றால் உயிரைக் கொடுத்தேனும் கோயிலுக்குச் சிறு நஷ்டமும் வாராமல் காப்பவன் என்பது பொருளாகும். வீரபத்திரர், வீரமுஷ்டி என்றும் இவர்களைச் சொல்வார்கள்.

இப்படி வருகின்ற வழக்குகளில் இருபாலாரையும் தீரக் கேட்டுத் தக்க தீர்ப்பளிக்கப் பெறும். பெரும்பாலும் புனைவழக்குகள் கோயில்

வாசலுக்கு வருவதே இல்லை. கொலை, திருட்டு, கொள்ளை போன்ற வழக்குகளில் நேரடியாய்க் கண்டவர்கள் (சாட்சிகள்) இருப்பதென்பது அரிது ஆனதால் சத்தியம் செய்தல், பிரத்தியம் செய்தல் என்ற இரு முறைகளை மேற்கொண்டு குற்றம் சாட்டப்பட்டவர்கள் தங்கள் குற்றமற்ற தன்மையை நிரூபிக்க வேண்டும். இப்பொழுது உங்களுக்குச் சத்தியம் செய்தல் என்றால் விளங்கிவிடும். ஆனால், பிரத்தியம் செய்தல் என்றால் என்ன என்பது மறந்தே போய்விட்டது. ஆனாலும் பிரத்தியம் என்ற சொல் மட்டும் முதியோர் வாக்கில் ஓரொருகால் வெளிப்படக் கேட்டிருப் பீர்கள். ''எடுத்ததற்கெல்லாம் சத்தியம் பிரத்தியம் என்று சொல்ல லாமா?'' என்று உங்கள் முதியவர்கள் கூறக் கேட்டிருக்கலாம் நீயும்.''

''ஆம், பல முறை என் ஆயாய் (தாயை ஈன்றவள்), அப்பாத்தாள் (தந்தையை ஈன்றவள்) முதலிய முதுமகளிர் சொல்லக் கேட்டிருக்கிறேன். அப்பொழுதெல்லாம் 'சட்டை - கிட்டை', 'வண்டி - கிண்டி' என்பதைப் போல, சத்தியம் - பிரத்தியம் என்று சொல்லுகிறார்கள் போலும் என்றே எண்ணிக்கொண்டிருந்தேன். ஆனால், இப்பொழுது நீ சொல்வதைப் பார்த்தால் பிரத்தியம் என்ற சொல் ஏதோ ஒரு குறிப்பிட்ட பொருளை உணர்த்துவதாக அல்லவா தோன்றுகிறது?'' என்று இடைமறித்துக் கேட்டேன். கற்சுவர் மீட்டும் தனது உரையைத் தொடர்ந்தது.

''சந்தேகம் என்ன? பிரத்தியம் என்ற சொல் குறிப்பிட்ட ஒரு பொருளை உணர்த்திக்கொண்டிருப்பதுவே. சத்தியம் செய்தல் என்றால், 'நான் உரைப்பது மெய்யேயன்றிப் பொய் இல்லை' என்று பல்லோர் முன்னிலையில் ஆகாசவாணி பூமாதேவி சாட்சியாகச் சத்தியப் பொருளான ஆண்டவனை மனத்துட்கொண்டு உறுதியிட்டு வாயால் உரைப்பது ஆகும். பிரத்தியம் செய்தல் என்றால் கொதிக்கின்ற எண்ணெயில் கையை முழுக்கி, அல்லது பழுக்கக் காய்ந்த இரும்பு முதலிய உலோகக் கொழுவைக் கையால் எடுத்து உருவி, அல்லது தீக்குழியில் இறங்கி நின்று, அல்லது இதுபோன்ற இயற்கைக்கு மாறுபட்ட ஒரு முறையை மேற்கொண்டு, அதனால் தனக்கு ஏதும் ஊறு விளையவில்லை என்பதைப் புலப்படுத்தித் தன் குற்றமற்ற தன்மையை நிரூபித்தலாகும்.

மனம், மொழி, மெய் என்ற முக்கரணத்தில் மொழியாலும் மெய்யாலுமே மெய்யைப் பிறர்க்குப் புலப்படுத்தல் கூடும். செய்கையும்

உரையும் சிந்தை வழியாதலால் .பிற இரு கரணங்களால் தன் தூய்மையைப் புலப்படுத்திவிட்டால் மனத்தூய்மை தானே புலப்படக் கூடியது தானே? எனவே, வாயால் செய்யப்படுவது சத்தியம் என்றும், கை முதலிய மெய்யுறுப்பால் செய்யப்படுவது பிரத்தியம் என்றும் பொருள்படும்.''

''அருமை, அருமை! பிரத்தியம் என்ற வழக்கொழிந்த - பொருள் மறந்த - சொல்லை நான் உணர்ந்துகொள்ளும்படி இவ்வளவு தெளிவாக உணர்த்திய ஒன்றுக்கே உன்னை விழுந்து விழுந்து கும்பிட வேண்டும் என்று என் உள்ளம் கருதுகிறது. வேறு 'என்னைகொல் கைம்மாறு இனி' என்றுதான் ஏங்குகின்றேன்.''

''வேண்டாமப்பா, வேண்டாம்! என்ன கைம்மாறு செய்ய வேண்டுமோ என்று ஏங்க வேண்டாம். ஆனால், இனியும் நீங்கள் தூங்கிக் கிடவாமல் என்னனைய ஆயிரம் ஆயிரம் கற்களையும் கண்டு அவை சொல்வனவற்றையும் திரட்டி வகுத்துத் தொகுத்து வைத்தீர்களானால் உங்கள் முன்னோர்களையும், அவர்களின் மொழி, கலை பணி பற்றிய அருமைப்பாடுகளையும் அறிந்துகொண்டு நீங்கள் பெரும் பயன் அடைவீர்கள். அதுதான் நீங்கள் எங்கட்குச் செய்யும் கைம்மாறும் ஆம். இனி விஷயத்திற்கு வருகிறேன்.

நான் சடையவர்மன் வீரபாண்டியன் காலத்தவன் என்று முன்னமே சொல்லிவிட்டேன். அவனுடைய இரண்டாம் ஆட்சி யாண்டில் தோன்றியவன் நான். நான் தோன்றக் காரணமாய் இருந்த செய்தியை இனிக் கூறுகிறேன்.

ஒரு நாள் பெருமானுக்கு அலங்காரம் செய்வதற்காகத் திருவா பரணங்களை எடுத்து வரச் சென்ற ஸ்ரீகாரியம், மாகேச்வரக் கண்காணி, வயிராவி மூவரும் கருவூலத்தைத் திறந்ததும் திடுக்கிட்டுப் போனார்கள். காரணம், திருவாபரணம், பொன் நாணயங்கள் முதலியன இருந்த பேழையைக் காணவில்லை. உடனே பதறித் துடித்துக்கொண்டு தானத்தார்க்குச் செய்தியைத் தெரியப்படுத்தினார்கள். தானத்தார் யாவரும் வந்து பார்த்து மறுநாளே கூட்டம் வைத்து இரண்டு கரை வளநாட்டையும் சேர்ந்த எல்லா நாடுகளுக்கும் நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் ஓலை போக்கினார்கள். மறுநாள் ஊரே அல்லோல கல்லோலப்படுமாறு மக்கள் திமுதிமுவென்று திரண்டு வந்துவிட்டார்கள்.

வந்தவர்கள் யாவரும் பெருமானுக்குச் சிறு காலைச் சந்தி வழிபாடு நிறைவேறிய பின்னர்க் காங்கேயராயன் திருமண்டபத்தில் கூடினார்கள். சிறிது நேரம் நாட்டுத் தலைவர்கள் ஒன்றாக இருந்து ஆராய்ந்தார்கள். கோயில் பூசை செய்யும் குருக்கள்மார்மீதுதான் அவர்கள் உள்ளத்தில் ஐயம் அரும்பியது. உடனே சிவப் பிராமணர்களை எல்லாம் அழைத்து வரக் கட்டளையிட்டார்கள். குருக்கள்மார் அனைவரும் அழைத்து வரப்பட்டனர்.

நாட்டுத் தலைவர்களுள் முதியவராக இருந்த புன்னங்குடிக் குன்றன் தேவனான தென்னவதரையன் நாற்புறமும் கண்ணோட்டமிட்டார். பரம்பையூர் நம்புசெய்வான், சிகாநல்லூர் வளவதரையன், காரையூர்ச் செங்கதிர்ச் சோழ மூவேந்த வேளான், அண்ணல் வாயில் வளவன் பல்லவதரையன், திருநலக்குன்றத்து அன்பாண்டான் முதலிய நாட்டுத் தலைவர்கள் தென்னவதரையன் கண்ணோட்டமிட்ட கருத்தை ஊகித்தறிந்தவர்களாய், ''நாம் இப்படிச் சும்மா இருந்தால் போகும் வழிதான் என்ன? நடந்திருக்கிற காரியமோ சொல்லும் தரம் அன்று; நாடு, நகரம் என்று சொல்லிக் கொள்ளவே நமக்கு இனி வாயில்லாமல் செய்யக்கூடிய கொடிய செயலாக இருக்கிறது. நமக்குள்ளே ஆண்டாலும் அறிவாலும் அநுபவத்தாலும் பழுத்த பெருங் கிழவரான புன்னங்குடிக் குன்றன் தேவரான தென்னவதரையர்தாம் விசாரணை செய்ய வேண்டும். நாம் எல்லோரும் அவர்களுக்கு உறுதுணையாக நின்று காரியக் கேடின்றி எல்லாம் எளிதாய் இனிதாய் முற்றுப்பெறச் செய்ய வேண்டும். என்ன இது சரிதானே?'' என்று கேட்டதும், அதுவே எல்லோருடைய எண்ணமும் என்று யாவரும் ஒருமுகமாகக் கூறினார்கள். பின்னர்க் குன்றன் தேவனான தென்னவதரையர் பேசத் தொடங்கினார்.

''பெருமக்களே! இன்று இந்தக் காங்கேயராயன் திருமண்டபத்திலே கோனாடான கடலடையாதிலங்கை கொண்ட சோழவளநாட்டு, இரண்டு கரை நாட்டு நாடுகளும் நகரங்களும் கிராமங்களும் நிறைவுற நிறைந்து (முழுக் கோரத்துடன்) குறைவற (எந்தப் பகுதியைச் சேர்ந்தோரும் வரவில்லை என்ற குறைவின்றி)க் கூடியிருக்கிறோம். தானத்தார்கள் யாவரும் கலந்து கொண்டிருக்கிறார்கள். நாம் எத்தனையோ முறை இங்கே இப்படிக் கூடியிருக்கிறோம். ஆயினும் இன்று கூடியிருப்பதற்குரிய காரணமோ நம் நெஞ்சைப் பிளப்பதாக,

மானத்தைக் குடிப்பதாக இருக்கிறது. இத்திருநலக்குன்றமுடைய நாயனார் திருக்கோயில் கருவூலத்திற்குள் இருந்த திருவாபரணப் பேழை திருவாபரணம், பொன்நாணயங்கள் அனைத்துடனும் களவு செய்யப் பட்டிருக்கிறது. நம்முடைய மதிப்புக்குரிய சிவப் பிராமணர்களையன்றி இக்களவு நிகழவில்லை என்று என் உள்ளம் கருதுகிறது. ஆண்டவன் திருமுன்பில் இருந்துகொண்டு, நிறைந்த சபை நடுவே இருந்து இதைச் சொல்லுகிறேன். என் மனம் மட்டும் என்ன, நம்மில் பலருடைய மனமும் சிவாசாரியர்கள் மீதே ஐயுறவு கொள்ளுகிறது. எனவே, குருக்கள்மார் என்ன விடை இறுக்கிறார்கள் என்பதைக் கேட்டபின்தான் வேறு நடவடிக்கை எல்லாம். சபையோர் கருத்து எப்படியோ?''

எல்லோரும், ''அறமே நினைந்தீர்கள்; அப்படியே செய்யலாம்,'' என்றார்கள்.

''சிவப்பிராமணர்களான தேவகன்மிகளே! நாங்கள் உங்களை எல்லாம் பூசுரர் என்று மதிப்பவர்கள்; பூமியில் நடமாடும் தேவர்களாக உங்களைக் கருதி உங்களிடம் மிகவும் மரியாதை செலுத்துபவர்கள்; ஆதிசைவர்கள் என்றும், சிவாசாரியர்கள் என்றும் உங்களைப் பெருமைப்படுத்தி ஆண்டவன் திருச்சந்நிதியில் விபூதிப் பிரசாதம் பெறுமுன்னதாக உங்கள் சம்புடத்தில் இருக்கும் உங்கள் ஆத்ம பூசைப் பிரசாதமாகிய திருநீற்றைப் பெற்றுப் பூசி மகிழ்பவர்கள். ஆனதால் உங்கள்மீது எங்கட்கு எவ்வகையிலும் மாறுபட்ட கருத்து இல்லை. எவ்வளவுதான் எங்கள் மதிப்புக்கும் வணக்கத்திற்கும் உரியவர்களாக இருப்பினும், நீங்களும் மனிதர்கள்தாமே? ஆசையும் மோகமும் யாரைத்தான் விட்டன? ஏதோ புத்தி பேதலித்துச் செய்திருக்கலாம். தவறுவது மனித இயல்பு; ஆனால், தவறை உணர்ந்து திருத்திக் கொள்வதே அறிவுடைமையாகும். குற்றத்தை ஒப்புக்கொண்டு பாவத்தைக் குறைத்துக் கொள்வதே தங்களைப் போன்றவர்களின் பண்பிற்கு ஏற்றதாகும். கோயில் திருட்டென்றால் கொற்றவர்க்கு மாறு புரிவதிலும் கொடிதென்பது நம்மனோர் கொண்ட கொள்கை. குருக்கள்மார்தாம் எடுத்திருக்க வேண்டும் என்பதே சபையோர் கருத்து. உங்கள் விடை என்னவோ?''

சிவப்பிராமணர்களில் முதிர்ந்தவராகக் காணப்பட்ட குன்றன் செருந்திவனப் பெருமாளான எதிரிலி சோழப் பட்டர் என்பவர் எழுந்து,

''பெருமக்களே, மன்னிக்க வேண்டும்; நானும் இவ்வூர்க் கல்தச்சனுமாகச் சேர்ந்து களவில் வந்தவற்றுள் அறுபது பொன் எடுத்துக் கொண்டோம்,'' என்று சொல்ல, மற்றவர்கள் தாம் ஏதும் அறிய மாட்டே ாம் என்று சொல்லிவிட்டார்கள். உடனே குன்றன் செருந்திவனப் பெருமாள், ''அவர்கள் சொல்வது முழுப் பொய். நான் எடுத்துக்கொண்ட பொன் அறுபது நீக்கி மற்றவற்றை அவர்கள் யாவரும் தமக்குள் பங்கிட்டுக் கொண்டார்கள்'' என்று சொன்னார். அதன் பின்னரும் மற்றச் சிவப் பிராமணர்கள் குற்றச்சாட்டை மறுத்து உரைக்கவே, தென்னவதரையர் சபையோரை நோக்கிப் பேசத் தொடங்கினார்:

''பெருமக்களே, இனி நாம் செய்யக் கிடப்பது ஒன்றுதான். அரசாக்கினைக்கு இவர்களை ஆளாக்குவதொன்றே நமக்குள்ள ஒரே வழி. எனவே, நாம் வார்மனுகுறிச்சிக்குப் போய்க் கோச்சடைய பன்மரான திரிபுவனச்சக்கரவர்த்திகள் வீரபாண்டிய தேவரவர்களின் பிரதிநிதியாக வீற்றிருந்து மாநிலங் காக்கும் சாமந்தனார் திருமுன்பு நடந்தவற்றை எடுத்துரைத்துத் தக்க பரிகாரம் கிடைக்கச் செய்ய வேண்டும். அங்கே இறங்கறமீட்டாரும் (நிலைகுலைந்த தருமத்தை மீட்டும் நிலைபெறச் செய்பவர்கள்) இருக்கிறார்கள். ஆனதால், அறப் பொருள் அழியாது கிட்டுதற்கும் வழி உண்டாகும் என்று எண்ணு கிறேன். பெருமக்களின் கருத்து என்னவோ?'' என்று கேட்டார்.

எல்லோரும், ''தக்கதே நினைந்தீர்கள்; இக்கணமே எழுவோம்'' என்றனர். சிவப்பிராமணர்கள் உட்பட அனைவரும் புறப்பட்டனர். இவர்கள் வருகின்ற செய்தியை முன்னதாகவே சாமந்தனாருக்கு அறிவித்து விட்டனர். சாமந்தனார் (சிற்றரசர்) திருஅகத்தீச்சுரமுடையார் திருக்கோயில் மணி மண்டபத்திலே வீற்றிருந்தார். தம் உயிரையும் பொருட்படுத்தாது மன்னவர் விருப்பத்தை நிறைவேற்றியே தீரும் உறுதிப்பாடு கொண்ட உன்னதக் குறிக்கோளுடைய கூட்டமான 'வேண்வல'த் திருக்கூட்டத்தாருள் இறங்கற மீட்டாரும், வயிராவிகளும் சாமந்தனாரைச் சூழ்ந்து நின்றார்கள்.

நாடுகள், நகரங்கள், கிராமங்கள், தானத்தார்களின் சார்பாகத் தென்னவதரையன் சிவப்பிராமணர்களின்மீது குற்றஞ்சாட்டி நீதி வழங்குமாறு விண்ணப்பித்துக்கொண்டார். சாமந்தனாரும் முறைப்படி சிவப்பிராமணர்களைக் கேட்க, எதிரிலிப்பட்டனையன்றி மற்றையோர்

தாம் ஒன்றும் அறியோம் என்று சாதித்தனர். பின்னர்ச் சாமந்தனார் ஆணையின் வண்ணம் பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கொழுவைக் குறட்டில் இடுக்கிக்கொண்டு வந்தனர், தண்டற் சேவகர்கள். அப்பொழுது சாமந்தனார் சிவப்பிராமணர்களை நோக்கி, "இந்தக் கொழுவினை ஒரு கையால் பிடித்துத் தூக்கி மற்றொரு கையால் உருவிப் பிரத்தியம் செய்து நீங்கள் குற்றமற்றவர்கள் என்பதை நிரூபியுங்கள்" என்று கட்டளையிட்டார். வேறு வழியின்றிக் குன்றன் பங்கன், குன்றன் புற்றிடங்கொண்டான், பெரியான் தேவன், ஒன்றாயிரம் செருந்தி ஆகிய நான்கு சிவாசாரியர்களும் கொழுவுருவினார்கள். அவர்கள் நால்வர் கைகளும் வெந்து கொப்புளம் கண்டு துவண்டு போயின.

அது கண்ட குன்றன் செருந்தி என்ற ஆறாவது பட்டர் அஞ்சி நடுங்கி, "நானும் எடுத்தேன், பங்கன் எடுத்ததையும் கண்டேன்!" என்று உண்மையைக் கக்கிவிட்டார். எனவே, அவர் இனிக் கொழுவுருவ வேண்டியதில்லை என்று உரைத்துக் களவிலே பங்குகொண்ட அனைவரையும் கோயிற் பூசைக்கு அருகதையற்றவர்களாக்கி, அவர்கள் நிலபுலம் அனைத்தையும் பறிமுதல் செய்து சிவத்துரோகிகட்கு விதிக்கப்படும் கடுந்தண்டனையும் கொடுத்தார்கள். களவிலே சேராத சிவப்பிராமணர்கள் இறைவனுக்குரிய பொருளைக் காப்பதிலே சோர்வு கொண்டிருந்தமையால் அவர்களுக்கு மானியமாக விட்டிருந்த நிலபுலங்கள், தோட்டந்துரவுகள், மரஞ்செடிகள் அனைத்தையும் திருநாமத்துக்காணி (சிவன் கோவிலுக்கு உரிய நிலம்) ஆக்கிக் கோவில் உழவு முற்றூட்டாய் (இருவாரப் பண்ணை முழுஉரிமை; அதாவது சர்வமானியம்) சூலக் கல்நட்டுத் திருநலக்குன்றமுடைய நாயனார் கோயிலைச் சேர்ந்தனவாகும் என்றும் தீர்மானிக்கப் பெற்றது.

களவுபோன பொருள்கள் எல்லாம் மீட்கப்பட்டுக் கோயில் பண்டாரத்திலே (Treasury) சேர்க்கப்பட்டன. இவர்களுடைய நிலபுலங்களை யாரேனும் ஒற்றி பெற்றிருந்தால் ஒற்றி உரிமையை இழந்து போவார்கள் என்றும், பறிமுதலான நிலங்கள் அனைத்தும் திருக்கோயிலைச் சேர்ந்துவிட்டமையால் அதில் கிடைக்கும் சகல வருமானங்களும் கோயிலுக்கே கிடைக்க வேண்டுமென்றும், அவற்றிற்கு எவ்வித வரியும் கட்டணமும் ஆயமும் செலுத்த வேண்டு வதில்லை என்றும் தீர்ப்பளித்து, அனைத்து நிலமும் இறையிலி யாக்கப்பட்டன. தீர்ப்பின் அருமையை எண்ணி மக்களனைவரும்

மனமாரப் பாராட்டி வாயார வாழ்த்தினார்கள் சாமந்தனாரை.

முற்காலத்தில் திருக்கோயில்களின் சொத்துக்கள் எப்படிக் காக்கப்பட்டன, அவற்றிற்கு ஊறு செய்வார் யாரேயாயினும் எத்துணைக் கடுமையான தண்டனைக்கு உட்படுத்தப்படுவார்கள் என்பனவற்றையெல்லாம் தெரிந்து கொண்டாய் அல்லவா? அப்படி இருந்த நாடுதான் இப்படி ஆகிவிட்டது இன்று. இனிக் கல்வெட்டைப் பார்க்கலாம்.''

**வரி: 18. ]P.S.I. 601 [காலம்: கி.பி. 1298**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சகவத்துர்கள் வீரபாண்டிய தேவற்கு யாண்டு உ ஆவது கோனாடான கடலடையாதிலங்கை கொண்ட சோழ வளநாட்டு நாடுகள், நகரங்கள் மாமங்களோம், உடையார் திருநலக்கு அறமுடைய நாயனார் கோயிற் காங்கேயராயன் திருமண்-

2. டபத்து, நிறைவுற நிறைந்து, குறைவறக் கூடி, எங்களில் அமைந்து இப்பிடிபாடு இட்டபடியாவது: உடையார் திருநலக்குன்றமுடைய நாயனார் சீபண்டாரம், திருவாபரண மூலபண்டாரத்தை இக்கோயிற் சிவப்பிராம்மணர் களவிலே எடுத்துக்கொள இது நாடாகக் கூடி இருந்து இச் சிவபிராம-

3. ணரை அழைத்து நிகழ்ந்தபடி யென்னென்று கேட்டவிடத்துக் குன்றன் செருந்தி வனப் பெருமாளான எதிரிலி சோழப்பட்டன் சொன்னபடி: இவ்வூர்க் கற்றச்சனும் நானுமாக அறுபது பொன் எடுத்துக் கூறிட்டுக்கொண்டேன் என்று சொல்ல மற்றுள்ள சிவப்பிராமணரை

4. அழைத்துக் கேட்டவிடத்து நாங்கள் இவை ஒன்றும் அறிந்திலோம் என்றார்கள். என்றபின் குன்றன் செருந்தி நான் எடுத்த அறுபது பொன்னும் ஒழிய நீக்கியுள்ள பொன் இவர்கள் எடுத்துக் கொண்டார்கள் என்று சொல்லுகையில்

5. அங்ஙனையாக நாங்கள் போய் வார்மனுகுறிச்சியிலே சாமந்தனார் திரு முன்பே தநிமாஜனத்து பட்டர்கள் பக்கலே கேட்டு அங்கு விதித்தபடி பிரத்தியம் பண்ணுங்கோள் என்று விட்டோம். இப்போ உடையார் திருஅகத்தீசுவரமுடையார் திருக்கோ-

6. விலிலே சாமந்தனார் திருமுன்பாகவும், திருவேண்வல திருக் கூட்டத்த இறங்கற மீட்டாரும் வயிராகிகளு முன்னிலையாகவும் கொழுவுருவினவிடத்து குன்றன் பங்கனும், குன்றன் புற்றிடம் கொண்டானும், பெரியான் தேவனும், ஒன்றாயிரம் செருந்தியும் ஆக இவர்கள் கை வேகையில் குன்றன் செ-
7. ருந்தி நானும் எடுத்தேன் பங்கனும் எடுக்க நானும் அறிவேன் என்ற படியாலேய் செருந்தி சத்தியம் செய்ய வேண்டியதில்லை; இப்படி இக்கோவிற் சிவப்பிராமணரில் கள்ளரானவர்களை மாறகத்துக்கு [க]டவார், சிவத்துரோகிகளைச் செய்யுமுறைமை களிலே செய்யவு நிலையிட்டு, மற்றுள்ள சிவ-
8. ப் பிராமணரும் காவல் சோர்வுக்குடல்ப் படுகையால் இவர்கள் பற்றான இலுப்பைக் குடிக் குள[க்கீழ் இர]ண்டும் வ[யலு]ம் [பெரு] நான்கெல்லை யுள்ளகப்பட்ட மேல்நோக்கின மரமும் கீழ்நோக்கின கிணறு மற்றும் எப்பேற்பட்டனவும் இந்நாயனார் திருநாமத்துக் காணியாய்க் கோயிலுழவு மு-
9. ற்றூட்டாகத் திருச்சூலத் தாபனமும் பண்ணிக் குடுத்து இந்த இலுப்பைக் குடி வய[லி]ல் பிராமணர் பக்கல் விலை கொண்டவர்[கள்] தீய களவுப் பாட்டால் [உள்]ள பொருள் பண்டாரத்தே பற்றி நிலம்விடக் கடவார்கள[ாகவும்]. ஒற்றி கொண்டார் ஒற்றி இழக்கப் போவார்களாகவும். இந்நிலத்தா-
10. ல் வந்த அந்தராயம், அதரவினிஒகம், அச்சு வரி, ஆட்தேவை, சில்வரி, பெருவரி, வெட்டி, முட்டாவாளென்று சொல்லக் கடவதல்லவாகவும். இவ்வயலில் சிவப்பிராமணர் கைய்களால் விலை இன்றித் தன் காணியான நிலங்களுக்கு அச்சு வரி, ஆட்தேவை மற்றும் ஊரி [சை]ந்த விழுக்காட்டுப்படி நாயனாற்கே இறுப்பார்களாக-
11. வும். இட்டு இ[ந்]நிலம் இந்நாயனாற்குச் சந்திராதித்தவல் செல்லக்கடவதாகவும். இதுக்கு ஒரு விலங்கல் சொன்னார் உண்டாகில் நாட்டுக்குப் பின் மூத்தார் பட்டதும் பட்டுச் சிவத்துரோகிகள் பட்டதும் பட்டு அன்றாழ்கோ மற்றவற்குத் தெண்[ட]மும் இறுப்பதாகவும். இப்படி சம்மதித்து
12. சந்திராதித்தவல் செல்லக்கடவதாகக் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் குடுத்தோம். ஆதி தண்டேசுவரதேவற்கு-கோனாடான கடலடை

யாதிலங்கை கொண்ட சோழவளநாட்டு இரண்டு கரை, நாட்டு நாடுகள், நகரங்கள், கிராமங்களோடும், இக்கோயிற்தாநத்

13. தோமும் இப்படிக்குப் [பு]ன்னங்குடிக் குன்றந் தேவனான தென்னவதரையன் எழுத்து
(13-ஆவது வரியிலிருந்து 17-ஆவது வரி முதற்பாதி வரை பெருமக்கள் பலரும் கையொப்பமிட்டிருப்பது புலப்படுத்தப் பட்டிருக்கிறது. பின்னர்)

17. .... நாட்டாரும், தானத்தாரும் அருளிச் செய இப் பிடிபாடு எழுதினேன் இக்கோயிற் கணக்குக் குன்றன் திருநலக்குன்ற

18. முடையான் எழுத்து. இது பன்மாஹெஸ்வர ரக்ஷை.

இவ்வாறு கோபுரவாயில் வலப்புறச்சுவர் தன் உரையை முடித்ததோ இல்லையோ, மாலைச் சந்திக்கு மணியும் முழங்கிற்று. ஆசிரியர்போல் அருமையாய்ப் பொருளுணர்த்திய அந்தச் சுவருக்கு நன்றிப் பெருக்குடன் வணக்கம் செலுத்திவிட்டு, விடைபெற்றுக் கொண்டேன்.



# எங்கே மறைப்பார் இனி?

**கல் சொல்லும் கதை - 8**

**உமாதேவிக்கு இப்போது பெரிய மகிழ்ச்சி!**
**காரணத்தைக் கவி சொல்கிறது.**

குடுமியான் மலையில் பல அருமையான பாடல்கள் கடவுளைப் போலவே கல்லினுள் மறைந்திருப்பதாக அந்த மொட்டைப் பாறையும் (க.சொ. கதை-3), குட்டைத் தூணும் (க.சொ. கதை-4) சொல்லக் கேட்டோம் அல்லவா? அவற்றைத் தெரிந்து கொள்ளலாம் என்றே அன்றொரு நாள் குடுமியான்மலைக்குச் சென்றேன். காரை விட்டு இறங்கியதும், நேரே கோயிலுக்குத்தான் போனேன். கால் கை கழுவிக்கொண்டு பிள்ளையாரப்பனை வணங்கிவிட்டு (ஆம்; வந்த காரியம் முட்டின்றி முடிய வேண்டும் அல்லவா?) குடுமி நாயனார் வீற்றிருந்தருளும் திருவுண்ணாழிகை (கர்ப்பக்கிருகம்) நோக்கி நடந்தேன்.

அப்படி நடந்து போய்க் கொண்டிருக்கும் பொழுது, ''வந்து விட்டாயா?'' என்ற வினா என் காதில் பட்டது. ''ஆம்; வந்துவிட்டேன்; கேட்டது யார்?'' என்று சுற்றுப்புறத்தில் கண்ணை ஓட்டினேன்.

''வேறு யார்? இத்துணை ஆர்வத்துடன் வரும் உன்னை வரவேற்க அத்துணைப் பரிவுடன் காத்துக் கிடக்கும் நான்தான்!'' என்றது அணித்தே இருந்த கற்சுவர்.

''வணக்கம்; இன்று நீ எனக்கு அளிக்க இருப்பது என்னவோ?''

''என்ன நீ 'என்னவோ' என்கிறாய்? எதை எதிர்பார்த்து இங்கு நீ இன்று வந்திருக்கிறாயோ, அதைத்தான் அளிக்கப் போகிறேன்; மகிழ்ச்சிதானே?''

''அப்படியானால் மகிழ்ச்சிதான்; ஆனால், அத்துடன் வியப்பும் அடைகிறேன்.''

''ஏனோ?''

''நீ சொல்வதைப் பார்த்தால் என் உள்ளத்துள் உள்ளதையும் உற்றறியும் ஒண்பொருளாம் கடவுள் நீதான் என்பது உன் கருத்தோ என்றுதான் வியப்புற்றேன்.''

''எங்கும் நிறை ஈசன் என்னுள்ளுந்தான் இருக்கிறான்; என்றாலும் உங்களைப்போல் அகம் பிரம்ம (நானே கடவுள்) என்று நாங்கள் எண்ணுவதில்லை; அவன் திருக்கோயிலிலே நின்று அல்லும் பகலும் அனவரதமும் துதித்தால், நான் மட்டும் என்ன, எந்தக் கல்லும் சொல்லாதோ கவி?''

''அருமை, அருமை! கம்பன் கவியை எவ்வளவு நயமாகப் பயன்படுத்திக்கொண்டுவிட்டாய்! திருக்கோயிலில் உள்ள கற்கள் எல்லாம் வரலாற்று ஏடுகள், கதைக் களஞ்சியங்கள், கவிதைப் பகுதிகள் என்பதை மிக அழகாக உணர்த்தியதுடன் என் உள்ளத்தையும் எவ்வளவு நாசூக்காக வெளிப்படுத்திவிட்டாய்! இனி என்ன குறையும் இலேன். நின் அருட்பிரசாதத்தை வழங்கு.''

கற்சுவர் நிகழ்த்திய சொற்பொழிவை அதன் வாய்மொழியாகவே கேட்கலாம்.

★★★

**அ**ப்பா, என்னகத்தே ஒரு பாடல் இருக்கிறது; அதை மட்டும் கூறினால் போதாது; அந்தப் பாடல் வெளிப்படக் காரணமாயிருந்த நிகழ்ச்சியையும் கூறினால்தான் பாடலின் சுவை புலப்படும். இந்த நிகழ்ச்சி நடந்து சுமார் 500 ஆண்டுகள் ஆகிவிட்டன.

இந்தத் திருக்கோயிலில் அந்தக் காலத்தில் திங்கள்தோறும் திருநாள்தான். அவற்றுள் ஆடிப் பூரம் மிக்க கோலாகலமாக நடக்கும். அது மன்னர் மண்டபப்படி. வழக்கப்படி ஓராண்டு ஆடிப்பூரத் திருநாள் சிறப்பாகக் கொண்டாடப்பட்ட பொழுதுதான் நான் சொல்லப் போகின்ற இந்த நிகழ்ச்சி நடந்தது. பெருமானுக்கும் அம்பிகைக்கும் பரிவார தெய்வத் திருவுருவங்களுக்கும் உச்சிச் சந்திக்கு முன் முறைப்படி

அபிஷேகம் நடந்து முடிந்தது. எல்லா மூர்த்திகளுக்கும் அலங்காரமும் முடிந்து அபிஷேகத் தீபாராதனை தொடங்கிற்று. வழக்கப்படியும் முறைப்படியும் பிள்ளையார், குடுமி நாயனார், ஆடவல்லான் (நடராஜன்), ஆலமர் கடவுள் (தட்சிணாமூர்த்தி), ஆறுமுகப் பெருமான், முப்பெருந்தேவியர் (துர்க்கா-லட்சுமி-சரசுவதி) முதலான சந்நிதிகளில் வழிபாட்டை முடித்துக்கொண்டு திருக்காமக் கோட்டத்திற்கு (அம்மன் கோயிலுக்கு) வந்து சேர்ந்தார்கள். விபூதி குங்குமப் பிரசாதம், காளாஞ்சி எல்லாம் அம்மன் சந்நிதியில்தான் கொடுப்பது வழக்கம்.

மன்னர் பிரதிநிதியான சிற்றரசர் சாமந்தனார், நாட்டார், நகரத்தார், தானத்தார், பெருமக்கள் (மக்கள் சபைப் பிரதிநிதிகள்), வாரியப் பெருமக்கள் (மக்கள் சபை நிர்வாகிகள்) எல்லோரும் முகமண்டபத்தில் திரண்டு குழுமி நிற்கிறார்கள். அருளுடை மலைமங்கையின் முன் திரை தொங்கிக் கொண்டிருக்கிறது. உள்ளே தூபம், தீபம், நைவேத்தியம் நடந்து முடிந்தது. குருக்கள் ஏழுமுகக் கர்ப்பூரத்தட்டை அம்மன்முன் கொண்டுவரவும் திரைவிலகவும் கனகச்சிதமாக இருந்தது. எல்லோரும் கன்னத்தில் அடித்துக்கொண்டு, 'அரகர', 'தாயே', 'அம்மையே' என்றெல்லாம் அழைத்து உள்ளம் உருகிப் பக்தி பரவசம் அடைந்த வர்களாய் நிற்கின்றனர். அர்ச்சனை முடிந்து மீண்டும் கர்ப்பூர ஆரத்தி நடந்தது.

மன்னர் மண்டபப்படி என்றால் கேட்கவா வேண்டும்? அலங்காரம் அற்புதமாக வாய்த்திருக்கிறது. சந்தனக் காப்புச் சார்த்தியிருக்கிறார்கள். ஆடையில் காணப்படும் சுருக்கம், மடிப்பு, செருகிய புடைப்புக்கூட நன்கு விளக்கம் பெற்றுள்ளன. பல நிறத் தகடுகளால் புடைவையின் கரையும், முன்றானையும் புலப்படுத்தி உடலில் கொட்டடி, புள்ளி எல்லாம் அமைக்கப்பட்டிருக்கின்றன. வெட்டிவேர் கூந்தலாகக் காட்சி கொடுத்துக்கொண்டிருக்கிறது. கண்ணும் புருவமும் ஜவ்வாது கொண்டு காட்டப்பட்டிருக்கின்றன. வாய் உதடுகளிடையில் குங்குமம் அப்பப் பட்டிருக்கிறது. இப்படியாக அமைந்த கோலம், அது அருளுடை மலைமங்கையின் சிலை என்பதை மறக்கடித்துவிட்டது; ஓவியம் உயிர் பெற்று, அழகு குதி கொள்ள, முறுவல் பூத்த முகத்துடன், முன்வந்து நிற்பதாகப்படுகிறது. பரம ரசிகரான சாமந்தனார் வியப்பும் திகைப்பும் அடைந்து விழித்த கண் விழித்தபடியே சமைந்து போனார். தீபாராதனையை முடித்துவிட்டுக் குருக்கள் விபூதி மடலும் கையுமாக

நேரே வந்து நின்று ஆசீர்வாதம் சொல்லத் தொடங்கிய பின்னர்த்தான் சாமந்தனார் தம் நிலை எய்தினார்.

விபூதியை வாங்கி அணிந்துகொண்டு காளாஞ்சி முதலான மரியாதைகளையும் மரபுப்படி பெற்றுக்கொண்ட சாமந்தனார் மீண்டும் அம்மன் திருக்கோலத்தில் கண்ணும் கருத்தும் பதியப் பேசத் தொடங்கிவிட்டார்:

''ஆகா! அம்மன் இன்று அருளுகின்ற காட்சியின் அழகினைப் பார்த்தீர்கள் அல்லவா? முகத்தில் தவழும் இளநகையின் கவர்ச்சியை என்னென்று சொல்வேன்! இவ்வளவு சிறப்பாக அலங்காரம் செய்த சிவாசாரியார் கைகளுக்குச் சிங்கமுகத் தோடாப் போட வேண்டும்.'' சாமந்தனார்க்குப் பக்கத்திலே நின்றுகொண்டிருந்தார் உள்ளூர்ப் புலவர். அவர் பெயர் ஆதிநாதர் என்பதாகும். முறையாகக் கல்வி கற்றவர்; நல்லறிவும் நல்லொழுக்கமும் நிறை குணமும் உடையவர். 'வால் அறிவன் நல் தாள் தொழார் எனின் கற்றதனால் ஆய பயன் என் கொல்?' என்ற வள்ளுவர் அறம் தலைக்கொண்டு சிவனடி மறவாச் சிந்தையர். தினமும் திருக்கோயில் சென்று வழிபடுவதைப் பெரு நியமமாகக் கொண்டவர். கவி பாடுவதில் சமர்த்தர். அவர்பால் ஊர் மட்டும் என்ன, நாடு முழுவதுமே அன்பும் மரியாதையும் செலுத்தி வந்தன. அவர் சாமந்தனார்க்கு விடை கூறுகிறார்:

''இன்று மட்டுமா? என்றுந்தான் நம் அருளுடை மலைமங்கைத் தாய் சிரித்துக் கொண்டே இருக்கிறாள். காரணத்தைத் தெரிந்து கொண்டால், காவலர் பெருமான் இதைக் குருக்களின் கைவன்மை என்று கருத மாட்டீர்கள்.''

''புலவர் ஐயா ஏதோ புதிர் அல்லவா போடுகிறார்? இதில் என்னவோ விஷயம் இருக்கிறது; அதைத் தெரிந்துகொள்ள வேண்டியதுதான்; காரணம் என்ன என்பதைச் சொல்லுவீர்களா?''

''புதிர்களை எல்லாம் உடைத்து எறியும் புரவலரிடமா இந்தப் புலவன் புதிர் போடப் போகிறான்? உண்மையைப் பச்சையாகத்தான் சொல்லப் போகிறேன். கேட்டருள வேண்டும்.

''நமது அருளுடை மலைமங்கை இத்திருநகரில் எழுந்தருளியது முதலே ஒரே மகிழ்ச்சிப் பெருக்கால், என்றும் சிரித்த இனிய

முகமுடையாளாகவே காட்சி தருகின்றாள். யாரைப் பார்த்து இப்படிச் சிரிக்கிறாள் தெரியுமா? வேறு யாரையும் பார்த்து இல்லை; தன் நாயகரைப் பார்த்துத்தான்!

**"எங்கள் நலக் குன்றரைப் பார்த்து,**
**ஏழுஉலகும் ஈன்ற உமை**
**நங்கை,பல காலும் நகைசெயுமே!"**

இனிக் காரணத்தைச் சொல்ல வேண்டும் அல்லவா? அதையும் சொல்லுகிறேன்:

" 'அப்பாடா! எப்போது பார்த்தாலும், என் நாயகர் தம்முடைய சடைமுடிக்குள்ளே கங்கையை மறைத்து வைத்துக்கொண்டே இருந்தார். எந்த ஊருக்குப் போனாலும் அவள் அவர் சடாமகுடத்திற்குள் மறைந்துகொண்டிருக்க முடிந்தது. நாங்கள் இந்தத் திருநலக்குன்றத்திற்கு வந்தோமோ, நான் பிழைத்தேனோ! நான் செய்த புண்ணியமோ, அன்றி அவள் செய்த பாவந்தானோ என்னவோ, காடாய் மண்டிக் கிடந்த என் நாயகரின் சடை முழுதும் போய் வெறும் குடுமித் தலையராகிவிட்டார், இந்த நகரில். உச்சியில் மட்டுமே உள்ள அந்தச் சிறு குடுமி அவளை வைத்து மூடி மறைக்கப் போதியதாகுமா? பாவம்! இனி அவளை எங்கே வைத்து எப்படி மறைத்துக்கொள்ளப் போகிறார் இவர்?' என்று அடிக்கடி அதையே எண்ணி எண்ணிச் சிரித்துக்கொண்டிருக்கிறாள்.

**- கங்கைஉறை**
**கொங்கே கமழ்,சடிலம்**
**போய்க்குடுமி ஆய்விட்டது;**
**எங்கே இனிமறைப்பார் என்று.**

சரிதானே?"

"பேஷ், பேஷ்! அபாரமான கற்பனை! 'முக்கட் செல்வர் திருக்கோயிலில் அன்றி வணங்காச் சென்னியனாம், தண்டா ஈகைத் தகைமாண் குடுமி' என்றெல்லாம் காரிகிழார் முதலிய புலவர் பெரு மக்களால் பாராட்டப் பெற்ற பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி காரணமாக இத்திருக்கோயில் பெருமானுக்குப் பெயர் ஏற்பட்டது. குடுமி நாயனார் என்ற அந்தப் பெயரின் சொற்பொருளைச் சிலேடையாகக் கொண்டு அருளுடை மலைமங்கையின் புன்

முறுவலுக்கு அருமையான காரணமும் கற்பித்துச் சுவைமிக்க வெண்பா ஒன்றை உபகரித்த உங்களுக்கு என்ன கைம்மாறு செய்யப் போகின்றோம்? இந்த வெண்பா, குடுமி நாயனார் சந்நிதியிலே என்றும் நின்று நிலவி உங்கள் பெயரை விளக்கம் செய்து கொண்டிருக்கும்படி ஏற்பாடு செய்யத் தானத்தார்க்கும் ஊர்க்கும் கட்டளையிடுகிறோம். எங்கே, வெண்பாவை முழு உருவத்தோடும் மீண்டும் அம்மை திருமுன் சொல்லுங்கள்,'' என்று சாமந்தனார் விரும்பியதற்கு ஏற்பத் திருநலக் குன்றமுடையான் ஆதிநாதக் கவிராயர் பண்ணோடு பாடத் தொடங்கினார்:

**''எங்கள்நலக் குன்றரைப்பார்த்து,**
**ஏழுஉலகும் ஈன்றஉமை**
**நங்கைபல காலும் நகைசெயுமே-**
**கங்கைஉறை,**
**கொங்கே கமழ்,சடிலம்**
**போய்க்குடுமி ஆய்விட்டது;**
**எங்கே இனிமறைப்பார் என்று.''**

**(M.E.R. 361 of 1929-30)**

[கங்கை மறைந்து உறைவதற்கு ஏற்றதாய் இருந்த, மணமே பரந்துள்ள, சடை முழுதும் அற்றுவிடத் தலையில் சிறு குடுமியே உள்ளதாகிவிட்டது; இனிமேல் அந்தக் கங்கையை எங்கே வைத்து மறைக்கப் போகிறார் என்று, எங்களுடைய திருநலக்குன்றத்தில் எழுந்தருளியிருக்கும் குடுமிநாயனார் என்னும் பெயர் கொண்டு விளங்கும் சிவபெருமானைப் பார்த்து, சப்த லோகங்களையும் ஈன்றருளிய பெருமாட்டியாகிய உமையம்மை அடிக்கடி கேலி செய்வாள்.]

அப்பா! இதுதான் என்னிடம் உள்ள பாடல். இரண்டாம் கோபுர வாயிலில் வலப்புறம் உள்ள சுவரிடம் சென்றால் மிக அருமையான, மிகப் பழமையான பாடல்களைப் பெறலாம்.''

இவ்வாறு சொல்லித் தன் சொற்பொழிவை முடித்தது .நானும் இரண்டாம் கோபுரவாயிலை நோக்கி நடையைக் கட்டினேன்.



# தரமறியான் பாண்டியன்தான்!

## கல் சொல்லும் கதை - 9

பாண்டியன் தரமறியாதவனாம்! அதற்குக் காரண மென்ன? பழிப்பது போலப் புகழ்கிறது பாட்டு.

**த**ம்பிக் கிணற்றுக்குப் போய்விட்டு வருவதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது. வேகாத வெயில்; வெட்ட வெளிப் பொட்டல்; போதாக்குறைக்கு மொட்டைப் பாறை கக்கும் வெக்கை வேறு. அப்புறம் கேட்க வேண்டுமா என்ன? இருந்தாலும் தம்பிக் கிணற்றுத் தண்ணீரின் சுவையை எண்ணினால் எவ்வளவு கஷ்டமும் அடையலாம் என்றுதான் சொல்லத் தோன்றுகிறது. வயிறு கொண்ட மட்டும் குளிர்ச்சியும் சுவையும் கொண்ட அந்தத் தண்ணீரை மண்டிவிட்டு நேரே இரண்டாம் கோபுர வாயில் வலப்புறச் சுவரிடம் வந்து நின்றேன்.

''உன்னை இவ்வளவு விரைவில் எதிர்பார்க்கவில்லையே!'' என்ற வியப்போடே வரவேற்றது அந்தச் சுவர். ''ஆம், இங்கு வந்தது தம்பிக் கிணற்றுத் தண்ணீரைக் குடித்துத் தாகத்தைத் தீர்த்துக் கொள்ளு வதற்காகவா?'' என்றேன் நான்.

''என்ன, இப்படிச் சொல்லிவிட்டாய்? அந்தத் தண்ணீருக்கு என்ன குறைவாம்? வருவோர் போவோர் எல்லாம் அதைப்பற்றி எப்படி யெல்லாமோ புகழ்கின்றார்கள்; நீ என்னடா என்றால்...''

''அட கடவுளே! நான் அந்தத் தண்ணீரைப் பற்றி ஒன்றும் குறைவாகச் சொல்லவில்லை; அதன் அருமையையும் இனிமையையும் நானும் நன்கு அறிவேன். நான் சொன்னதன் கருத்து என்ன என்றால், தண்ணீர்த் தாகத்தைத் தீர்த்துக்கொள்வதற்காக நான் இங்கே வரவில்லை. ஆனால், உன்னைப்போன்ற கற்கள் சொல்லும் கதையைக் கேட்டுப் பயனடையவே வந்திருக்கிறேன் என்பதுதான்.''

"ஓஹோ! அப்படியானால் நாங்கள் பாக்கியம் செய்தவர்கள்தாம்; இப்பொழுது உனக்கு என்ன வேண்டும்?"

"எங்கள் உள்ளத்துள் உள்ளதையும் உணர்ந்துகொள்ளும் ஒப்பற்ற ஆற்றல் படைத்துள்ள நீயா இப்படிக் கேட்கிறாய்?"

"ஆம்; உங்கள் மன நிலையை அறிந்தவன் ஆதலினாலேதான் இப்படிக் கேட்கிறேன். இப்பொழுது உங்களுக்கு இனிப்பாக உள்ளது அடுத்த கணமே கசக்கத் தொடங்கிவிடும். ஆனதால்தான் நீ வந்த நோக்கத்துடன்தான் இருக்கிறாயா? அல்லது கொம்பு விட்டுக் கொம்பு பாய்ந்துவிட்டாயா என்பதை முதலில் தெரிந்துகொள்ள எண்ணினேன். இப்பொழுது தெரிந்துகொண்டுவிட்டேன், உனக்கு வேண்டியவை பாடல்களே என்று! சரிதானே?"

"முற்றும் சரி; உங்களிடம் இருக்கிற பாடல்களை எல்லாம் கூறி முடித்த பின்னரே பிறவற்றைச் சொல்ல வேண்டும்; சம்மதந்தானே?"

"ஒப்புக் கொள்கிறேன்; ஆனால், ஒன்றை முதலிலேயே சொல்லிவிட வேண்டும். இவ்வூரில் 14 பாடல்கள் இருக்கின்றன. அவற்றுள் சில, வேறு எங்குமே காண முடியாதவை; சில வேறு இடங் களிலோ அல்லது தனிப் பாடல் தொகை நூல்களிலோ காணக்கூடியவை; சில, வேறு வழியாய்க் கிடைக்கிற பாடல்களில் காணப்படுகிற தவறு, பாட மாறுபாடு போன்றவற்றைத் திருத்திக்கொள்ள உதவுபவை; சில, சிதிலமாகியும் பிழைபட்டும் காணப்படும் குறைபாடு உடையவை; இதை நீ மறந்துவிடக் கூடாது."

"என்ன! கல்லில் வெட்டப்பட்ட பாடல்களிலுமா வழுவும் பிழையும்?"

"அதென்ன, அப்படிக் கேட்கிறாய்? ஓலையில் பிழை ஏற்பட்டுவிட்டால் அதைக் கிழித்து எறிந்துவிட்டு வேறு ஏட்டைப் பிழையின்றி எழுதிச் சேர்த்துவிடலாம். கட்டப்பட்ட கோயில் சுவர்களில் பொளியப்பட்ட எழுத்துக்களைத் திருத்துவது என்பது எளிதில் ஆகக் கூடியதா? பாடல்கள் மட்டும் என்ன, சாதாரணமான பிடிபாட்டுச் சாசனங்கள் (Documentary Inscriptions) கூடப் பல பிழைகளுடன் கூடியே விளங்குகின்றன. காரணம் என்ன தெரியுமா? கல்லில் உளிகொண்டு எழுத்துக்களைப் பொளியும் 'கற்றச்சர்களில்

பெரும்பாலார் இலக்கிய இலக்கணப் பயிற்சியே அற்றவர்கள். ஏதோ ஓரளவுக்கு எழுத்தறிவு உள்ளவர்கள். அதாவது தட்டுத் தடுமாறி எழுதவும், எழுதியவற்றை எழுத்துக் கூட்டவும் வல்லவர்கள்; அவ்வளவுதான்.

''கல்வெட்டுக்குக் கொடுக்கப்படும் மூலப்படிகள் (Originals) ஓலையில் எழுதப்பெற்றவை; ஓலை எழுத்துக்கள் சிறுத்துக் காணப்படும். எப்படியோ அதில் உள்ளதை ஒருவாறாய்ப் பொளிந்து தள்ளி விடுவார்கள். சில சந்தர்ப்பங்களில் மூலப்படி எழுதியவரே அரைகுறைக் கல்வி கற்றவராயும் அநுபவத்தைக் கொண்டு எப்படியோ காரியத்தைச் சமாளித்துவிடும் பேர்வழியாகவும் இருப்பார். அதனால் பிழைகள் இரட்டிக்கவும் நேரும். சில சந்தர்ப்பங்களில் மட்டுமே நன்கு கற்றோர் உடன் இருந்துகொண்டு கல்வெட்டைப் பொளியச் செய்வார்கள். ஆனதால்தான் கல்வெட்டுக்களில் பிழைகள் ஏற்படுவதென்பது இயல்பாகப் போய்விட்டது.''

''அப்படியா சங்கதி? அவசியம் தெரிந்து கொள்ள வேண்டிய முக்கியமான விஷயம் இது. இதை நீ நன்கு எடுத்துரைத்தாய். இங்குள்ள பாடல்களை நான்கு வகையாகப் பிரித்து உரைத்தாய் அல்லவா? வகைப் படுத்தியதுடன் விட்டுவிடாமல் போதிய விளக்கமும் தந்தாலன்றோ பயனுள்ளதாக இருக்கும்? என்ன, நான் சொல்வதை ஏற்றுக் கொள்கிறாயா?''

''முற்றும் ஏற்றுக்கொள்ளுகிறேன். நானே சொல்ல வேண்டுமென்று தான் இருந்தேன். அதற்குள் நீ முந்திக் கொண்டு விட்டாய். சொல்லுகிறேன், கேள்; அன்று ஒரு நாள் தம்பிக் கிணற்று வழியில் உள்ள மொட்டைப் பாறை சொல்லக் கேட்டாயே, அதுதான் வாணகுலராயனைப் பற்றிய பாடல் (க.சொ. கதை-3); ஆமப்பா, ஆம்; 'மன் நாடு பூங்கழலான்' என்று தொடங்குகிற வெண்பா. அது வேறு எங்குமே காணக் கிடைக்காத தங்கம். அதைப்போன்ற - வேறு வழியில் கிடைக்க மாட்டாத - முழுப்பாடல்கள் இன்னும் ஐந்து இங்கு இருக்கின்றன. வேறு வழியில் கிடைப்பனவேயானாலும் சரியான பாடங்களுடன், ஏன், உண்மையான உரிய பாடங்களுடன் கூடிய மூன்று பாடல்கள் இங்கு இருக்கின்றன. மற்றப் பாடல்கள் காலதேவனால் அரிப்புண்டும், பிழைகள் ஏற்பட்டும் தடுமாற்றம் விளைவிப்பவை.

என்றாலும் அவற்றுள் ஒன்று இரண்டு பாடல்களைக் கஷ்டப்படாமல் சரி செய்துவிடலாம்.''

''இதற்கு உதாரணம் காட்டுவாயா?''

''காட்டாமல் விடுவேனா? நிச்சயம் காட்டத் தான் போகிறேன். நீ மட்டும் அவசரப்படாமல் கேட்டுக்கொண்டு வா. நீ தம்பிக் கிணற்றுக்குத் தண்ணீர் அருந்தச் செல்லுமுன் கூறினேனே, ஆம்; அந்தக் காராளை விழுப்பரையரின் பாட்டு, அதுவே தக்க ஓர் உதாரணமாகும். அந்தக் கவியின் அருமையைப்பற்றி இனி உனக்குச் சொல்லவா வேண்டும்? அந்த அருமையான வெண்பா நெடுங்காலம் தமிழ் ரசிகர்களின் நாவில் பயின்று வந்திருக்க வேண்டும்; பாட்டின் வடிவம் (Poetical Form) எல்லோருடைய மனத்தையும் கவர்ந்திருக்கிறது. என்றாலும் நாளடைவில் உரிய சில சொற்களை மக்கள் மறந்துவிட்டிருக்க வேண்டும். எப்படியோ பாட்டின் பொருளையும், நினைவில் எஞ்சியிருந்த சொற்களையும் வைத்துக் கொண்டு, மறந்தோ அன்றி மறைந்தோ போன சொற்களுக்குப் பதிலாக வெண்தளை தட்டாமல், வேறு சொற்களைப் பெய்து வெண்பாவைச் சரிப்படுத்தியிருக்கிறார்கள். அதுதான் இன்று திரட்டு நூலுள் காணப்படுவதாகும். முதலில் அதைச் சொல்லுகிறேன்.

**'தென்னவன் தென்னர் பெருமான் றிறன்மதுரை**
**மன்னவன் கோக்களிற்றின் வல்லிக்கும்-பொன்னிநா**
**டாலிக்கும் வேந்தா மபயன் குலமகளிர்**
**தாலிக்கும் ஒன்றே தளை.'** [பெருந்தொகை, 1491.]

இத்துடன் நான் சொன்ன வெண்பாவையும் ஒப்பிட்டுப் பார்; அந்த வெண்பா உனக்குப் பாடம் ஆயிற்றா? அல்லது நானே சொல்லி விடவா?''

''என்ன அப்படிக் கேட்டுவிட்டாய்? எங்கள் ரசிகமணி டி.கே.சி. சொல்லுவதைப்போல அழுத்தம் திருத்தமாய் அநுபவித்துக் கொண்டே, நீட்டி, நிமிர்ந்து விளக்கத்துடன் நீ சொன்ன முறையே வெண்பாவை என் உள்ளத்தில் பதித்துவிட மாட்டாதா? கர்ப்பூரப் புத்தியுடையவன் அல்ல என்றாலும் கதலிப்புத்தி உள்ளவன் அல்ல நான்.''

''எவ்வளவோ ஆர்வமொடு இங்கு வந்திருக்கும் உன்னை நான் அப்படியெல்லாம் பழிப்பேனா? பாடமாயிற்றா என்றுதான் கேட்டேன்.

அதற்கு இவ்வளவு கோபம் கொள்ளலாமா? போகட்டும், அந்த வெண்பாவை நீயே சொல்.''

**''தென்னவன் செய்ய பெருமாள் திருமதுரை**
**மன்னவன்தன் மால்களிற்று வல்லிக்கும்-பொன்னிநாட்டு**
**ஆலிக்கும் தானை அபயன் குலமகளிர்**
**தாலிக்கும் ஒன்றே தளை.**

சரிதானே? பாடலைச் சொல்லிக் கொடுத்த ஆசானாகிய நீயே சோதகனாகவும் இருந்து பரீட்சித்துவிட்டாய். உன்னை மனமாரப் பாராட்டுகிறேன். வணக்கமும் செலுத்துகிறேன்.''

''மிக்க மகிழ்ச்சி; இனி இந்த இரண்டையும் ஒப்பு நோக்கு. வெண்பா இரண்டும் ஒன்றுதான். ஆனால், 2, 3, 4, 5, 6, 8, 10 ஆகிய ஏழு சீர்களில் வேறுபாடு காணப்படுகின்றன. எஞ்சிய 1, 7, 9, 11, 12, 13, 14, 15 ஆகிய எட்டுச் சீர்களும் வேறுபாடின்றி ஒரே படியாய் இருக்கின்றன. மூன்றாவது சீரில் கடை எழுத்து மட்டும் திரிந்திருக்கிறது. 4, 6 சீர்களில் முதல் அசை மட்டுமே மாறியிருக்கின்றது. 5-ஆவது சீரில் 'தன்' என்ற அசை கூடியோ அன்றிக் குறைந்தோ காணப்படுகிறது. 8-ஆவது சீரில் 'ட்' என்னும் ஒற்றுக் கூடியோ அன்றிக் குறைந்தோ காணப்படுகிறது.

''எஞ்சிய 2, 10 சீர்கள்தாம் முற்றும் மாறுபட்டவை. இப்படி எத்தனையோ மாற்றம் அடைந்திருப்பினும் எங்காவது எதுகை மோனை எழுத்துக்கள் மாறியிருக்கின்றனவா? எதுகையும் மோனை யுமே பாடலை 'ஜீவன்' உள்ளதாகச் செய்கின்றன என்று சொல்வது எவ்வளவு சரி என்பது இதிலிருந்தும் புலனாகிறதன்றோ? இந்த இரண்டையும் ஒப்பிட்டுப் பார்த்தால் என்னிடம் உள்ள (அசல்) பாடல் எவ்வளவு நயமாக இருக்கிறது என்பது தெள்ளிதிற் புலனாகிறது அல்லவா?''

''அருமை அருமை! உங்களால் நாங்கள் பெறும் நன்மைகளை எல்லாம் அளவிட்டு உரைக்க முடியுமா? வரலாறு, கவிதை போன்ற வற்றையெல்லாம் இவ்வளவு தெளிவாகப் போதிக்கின்ற உன்னைப் பெரும் பேராசான் என்றே சொல்ல வேண்டும். இனி அந்தக் காராளை விழுப்பரையரின் மற்றொரு பாடலையும் கூற வேண்டுகிறேன்,'' என்று

நான் வேண்டிக்கொண்டதும் கற்சுவர் சொல்லத் தொடங்கியது. இனி அதை அதன் வாய்மொழியாகவே கேட்போம்.

★★★

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1216-1238) சோழ நாட்டின்மீது மறுமுறையும் போர் தொடுத்து வாகை சூடிய செய்தியும், அவ்வெற்றியை முடிகொண்ட சோழபுரத்திலே மிக்க கோலாகலமாகக் கொண்டாடிய செய்தியும், வீரமா முடிசூடி அவன் வீர சிம்மாசனத்திலே வீற்றிருந்தபோது அவன் அவைக்களப் புலவரான காராணை விழுப்பரையர் அவன் வீர தீரத்தையும் வெற்றியையும் பலவாறாய்ப் பாராட்டி அவன்மீது ஒரு பாமாலையே சூட்டினார் என்ற செய்தியும் உனக்குத் தெரிந்தனவே. பாமாலையைப் பன்னிற மணிகள் கொண்ட நவரத்தின மாலைக்கே ஒப்பிட வேண்டும். செவிக்குத் தேனெனத் தித்திக்கும் அவற்றுள் இன்று நமக்குக் கிடைப்பன இரண்டே. ஒன்றைச் சற்று முன் பார்த்தோம். மற்றொன்றை இப்பொழுது பார்க்கலாம். இதுவும் ஒரு வெண்பாவே. 'வஞ்சப் புகழ்ச்சி' என்னும் அணிபெற்று மிளிர்கிறது.

**ஒருகுடை நீழல் இருநிலம் குளிர,**
**மூவகைத் தமிழும் முறைமையின் விளங்க,**
**நால்வகை வேதமும் நவின்றுஉடன் வளர,**
**ஐவகை வேள்வியும் செய்வினை இயற்ற,**
**அறுவகைச் சமயமும் அழகுடன் திகழ,**
**எழுவகைப் பாடலும் இயலுடன் பரவ**
**எண்திசை அளவும் சக்கரம் செல்லச்**

செங்கோல் நடாத்தும் மாமன்னன் சுந்தர பாண்டியனை யாவரும் போற்றித் துதிக்கின்றனர். உலகெலாம் கலக்கி வென்ற போராற்றல் மிக்க அவனைப் பிற கலைகளிலும் பேராற்றல் கொண்டவன் என்று அறிஞர்களெல்லாம் ஒரு முகமாய்ப் பாராட்டி மகிழ்கின்றனர். 'வாளால் வழி திறந்தான்' என்ற அவனது விருதுப் பெயராலே விளங்கும் நிலக்கோல், நாணயம் முதலியவை அவனுடைய கணித ஆற்றலுக்குச் சான்றாகத் திகழ்கின்றவை. எனவே, தராதரம் காண்பதில் அவனுக்கு நிகர் அவனே என்று உண்மை உணராத உலகம் நம்பிக் கொண்டிருக்கிறது. ஆனால், புலவர் சொல்லுகிறார், இந்த உலகத்தில்

தரம் அறியாதவன் ஒருவன் உண்டென்றால் அவன் சுந்தர பாண்டியனே என்று. ''ஏன்?'' என்றா கேட்கிறாய்? சொல்லுகிறேன், கேள்:

பிச்சை கேட்டு ஒரு பிச்சைக்காரன் வந்தால், ஏதோ கால் அரை கொடுப்பது முறை. அல்லது தான் ஒரு சக்கரவர்த்தி என்றால் நூறு ஆயிரம் என்று கொடுத்துவிட்டுப் போகட்டும். இந்தச் சுந்தர பாண்டியன் என்ன செய்தான்? சோழ நாட்டை வென்று, வீராபிஷேகமும் விஜயா பிஷேகமும் செய்துகொண்டு, வீர சிம்மாசனத்து வீற்றிருந்து, வெற்றி விழாக் கொண்டாடியபோது, பாணன் ஒருவன் பாடிக்கொண்டு வந்து வெற்றிபெற்ற மாமன்னனிடம் இரந்து நின்றான். மன்னன் ஈந்தது என்ன தெரியுமா? தமிழ்நாட்டிலேயே பொய்யாக் குலக்கொடியாம் காவிரியால் சிறந்து வளம் கொழிக்கும் 'சோழநாட்டை' அப்பாணனுக்கு வரம்பு கெட்ட முறையில் வழங்கிவிட்டான். இன்னும் கேள். மீன் உருவம் இருக்கிறதே, அது பாண்டியர்களின் இலச்சினை; புனிதச் சின்னம். அது பாண்டியர்க்கே உரியது. அப்படிப்பட்ட அந்த மீன் உருவினைத் தோற்ற சோழன் மார்பில் துலங்கப் பொறித்தான். இதெல்லாம் போகட்டும்; திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளாம் சிவபெருமானே பாண்டியர்களின் குலதெய்வம் என்பதை உலகெலாம் நன்கறியும். தன்னலாது ஒரு பொருள் தனக்கு மேலிலாத் தென்னவனாம் சிவபெருமானை மண்வெட்டிச் சுமந்து ஆற்றுடைப்பை அடைக்கும் கூலிப் பணியாளாக விட்டுவிட்டு இந்த மாநிலத்தை மகா அற்புதமாகக் காத்தான் ஐயா, பாண்டியன்!

இவற்றையெல்லாம் கொஞ்சமாவது சிந்தித்துப் பார்த்தால் இந்தச் சுந்தர பாண்டியனைத் தரமுள்ளவன் என்று, ஏன், தரம் அறிந்தவன் என்றாவது, எவரும் சொல்லத் துணிவரா? உலகம் எல்லாம் தேடினும் தரம் அறியாச் செய்கைக்கு முதல் தாம்பூலம் பெறத் தகுதியுள்ளவன் இந்தச் சுந்தர பாண்டியனே என்றுதான் சொல்ல வேண்டும். இவற்றையெல்லாம் அறியாத உலகம் இவனை 'ஆஹா! ஓஹோ!' என்று ஏத்திக் கூத்தாடுகிறது. இவ்வாறு (உள் ஒன்று வைத்துப்) பாடுகிறார் புலவர். அந்தக் கவி, தனிப் பாடல்களைத் தொகுத்தவர்களையும் ஏமாற்றி விட்டு என்னிடமே தங்கிவிட்டது. இனி அதைச் சொல்லுகிறேன்:

**பொன்னி வளநாடு பாணன் பெறப்புரந்தான்!**
**சென்னிதிரு மார்பில்சேல் தீட்டினான்!-முன்னே,**

புரம்எறிவார் மண்சுமக்கப் பூபாரம் காத்தான்!
தரம்அறியான் மீனவர்கோன் தான்! [PSI. 652]

[காவிரிவளம் சுரக்கும் சோழ மண்டலத்தைப் பாணன் அடையும் படி வரம்பிகந்தவாறு வழங்கினான்; சோழனுடைய அழகிய மார்பிலே பாண்டியர்களின் புனிதச் சின்னமான மீன் உருவைப் பொறித்தான்; முப்புரம், மும்மதில் என்றெல்லாம் சொல்லப்படும் திரிபுரத்தை முன்னர் அழித்த சிவபிரானை மண் சுமக்க வைத்துத் தாரணியைக் காத்தான்; (எனவே) தரம் அறியாத ஒருவன் உண்டு என்றால், அவன் பாண்டியாதிராசன்தான்.]

**"அ**ப்பா! இனி அந்த இடப்புறச் சுவரிடம் செல்; அதனிடம் உள்ள பாடல்களை உனக்குச் சொல்லும். அவற்றைக் கேட்டதற்குப்பின் மீண்டும் என்னிடம் வா. அப்பொழுது மற்ற ஒன்றை உனக்குச் சொல்லுவேன்; சரிதானா?"

"சரி, அப்படியே செய்வேன்," என்று சொல்லி என் நன்றியறி தலையும் புலப்படுத்திக் கொண்டு, எதிர்ப்புறத்துள்ள சுவரிடம் சென்றேன்.





கலை வண்ணம்

# சிற்பச் செந்நூல் - முகவுரை

தமிழர்கள், கலையுணர்வில் எவருக்கும் பின் தங்காதவர்கள். எத்தனையோ கலைகளில் ஈடும் எடுப்பும் இல்லாமல் ஓங்கி நிற்கும் தமிழகம் சிற்பக் கலையிலும் தன்னேர் இல்லாத் தனிப் பெருமை படைத்த விளங்குகிறது. தமிழகத்தில் உள்ள கோவில்களின் பெருக்கமும், அங்கெல்லாம் காணப்பெறும் சிற்ப வளங்களும், தமிழர்களின் கலையுணர்வுக்குக் கட்டியங் கூறிக் கொண்டிருக்கின்றன.

எத்துணைத் தத்துவஞானம் முற்றிய மெய்யுணர்வினரும் உருவ வழிபாட்டை உவந்து பாராட்டி வந்திருப்பது தமிழகத்தில் கண்கூடு. மலரைவிட மலர் ஓவியத்தை மதிப்பதைப் போலவே தமிழர்கள் கடவுளை விடக் கடவுள் உருவத்தை-மூர்த்தியைப் பாடிப் பரவி வழிபட்டு மகிழ்ந்துள்ளனர்.

கடவுளை மட்டுமா? அறத்தை, சத்தியத்தை, கருணையை, அழகை எல்லாம் மூர்த்தியாக்கிக் கண்டு அவற்றிலே மனத்தைப் பறிகொடுத்து மகிழ்பவர்களன்றோ தமிழர்கள். இந்த ஈடுபாட்டின் முதிர்ச்சியே தமிழக வைணவப் பெருமக்களை இறைவனே உருவமாய் எழுந்தருளி யுள்ளான் அர்ச்சாவதாரம் என்னும் அளவுக்கு உயர்த்தியுள்ளது எனலாம்.

இப்படியாகத் தமிழர் உள்ளத்தில் அரும்பிய கலையுணர்வுதான் இறைவனுக்கு எத்தனை எத்தனையோ உருவங்களைப் படைக்க லாயிற்று. அப்படிப் படைக்கப் பெற்ற திருவுருவங்களுக்கு ஆயிரம் ஆயிரம் திருக்கோயில்கள் எழுப்பப் பெற்றன. அங்ஙனம் எழும்பிய கோயில்களின் சுவர்கள், தூண்கள், மாடங்கள், மண்டபங்கள், கோபுரங்கள் முதலிய எல்லா இடங்களிலும் எண்ணற்ற சிற்பங்கள்

கல்லால், மண்ணால், சுதையால், உலோகத்தால், வண்ணத்தால் எல்லாம் மலர்ந்தது.

இங்ஙனம் மலர்ந்த சிற்பங்கள், கட்டுமானங்கள் ஆகியவற்றை யெல்லாம் கணித்து அளந்து அவற்றிற்கெல்லாம் இலக்கணங்கள் வகுத்தனர். அவ் இலக்கணங்களிலே சிறு வேறுபாடுகள் இருப்பினும் மாறுபாடுகள் ஏதுமில்லை. குறைந்தபட்சம் இரண்டாயிரம் ஆண்டுகட்கு மேலாகவே நமது சிற்பக்கலை வளரத் தொடங்கிவிட்டது எனலாம்.

சிற்ப நூல்கள் பெரும்பாலும் சம்ஸ்கிருதத்திலேயே உள்ளன. ஆனால், அவையாவும் கிரந்த லிபியிலேயே எழுதப்பட்டுள்ளமை நோக்கத்தக்கது. தமிழ்மொழிச் சொற்கள் பல கலைச்சொற்களாகப் பயிலப் பட்டிருப்பதும் குறிப்பிடத்தக்கது. இவற்றால் இந்நூல்கள் சம்ஸ்கிருத மொழியில் இருப்பினும் தமிழ்நாட்டுக் கலைதான் இவற்றில் விளக்கப் படுகின்றது என்பது தெள்ளிதிற் புலனாகும்.

சிற்பக்கலை தொன்றுதொட்டுத் தந்தை மகனுக்கும், பின்னவன் தன் மகனுக்குமாக வழியாகக் கற்பிக்கப்பட்டுப் பயின்று வரப்பெற்ற கலை. தந்தையின் தொழிற்கூடமே மகனின் கலைபயில் சாலை. பகலில் தொழிற்பயிற்சியும், இரவில் நூற்பயிற்சியும் நிகழும். பயிற்சியும், படிப்பும் இணைந்தே செல்லும்.

ஓவியம் என்பது வெண்மையும் வண்ணமும் சேர்ந்தமைந்த தோற்றமாகும் எனலாம். அங்ஙனமே சிற்பம் என்பது கல்லிலே செதுக்கி அமைத்த மேடு பள்ளங்களால் ஏற்படும் தோற்றமேயாகும். கருவி களைக் கொண்டு பலவகை அமைதிகளை உருவாக்குவதையே தொழில் என்றும், கைவினை என்றும் சொல்கின்றோம். பொருளின் தன்மை யறிந்து, கருவிகளை முறைப்படி பயன்படுத்தி அப்பொருளில் ஓர் உருவைச் சமைப்பதையே இஃது உணர்த்தும். இது கைப்பழக்கம் பற்றியதாகும்.

எண்ணுவதற்கும், எண்ணத்திற்கு உருவகிப்பதற்கும், தன்னம் பிக்கையுடன் செயல்படுவதற்கும், செய்த பொருளைப் பிறர் புரிந்து கொள்வதற்கும் மனத்திற்குக் கருவியாகப் பயன்படுவது நூலறிவே யாகும்.

ஆனால், தொழிற்திறன், கலைத்திறனாக மலரப் பல்துறை நூலறிவும், பல்கலை ரசனையும், வாழ்க்கை அனுபவமும் மிகுதியாக ஏற்பட வேண்டும். இக்கருத்தின் அடியாகவே கலை நூல்கள், கலைஞனின் தகுதிகளைக் கூறுமிடத்துக் கீழ்க்கண்டவாறு பேசுகின்றன.

''கலைஞன் என்பான் - கைதேர்ந்த கைவினைஞனாகவும், கணித அறிவு பெற்றவனாகவும், அளவிலக்கணம் அறிந்தவனாகவும், கலை வளம் தெரிந்தவனாகவும், ஓவியனாகவும், பல்வேறு கலை மரபுகளை உணர்ந்தவனாகவும், வரலாற்று இலக்கியங்களைக் கற்றவனாகவும், பிரபஞ்ச தத்துவ அறிவு வாய்க்கப் பெற்றவனாகவும் இருத்தல் வேண்டும்.'' மானசாரம் என்ற கட்டடக்கலை நூல் மேலும் ஒருபடி சென்று வேதவித்தகனாகவும் இருத்தல் வேண்டுமென்று கூறும்.

அங்ஙனம் ஒரு கலைஞன் பல்துறை அறிஞனாகத் திகழ வேண்டுமென்பது இலட்சியம் மட்டுமல்ல, அதற்கேற்ற பயிற்சி முறையும் பண்டைக் காலத்தில் இருந்திருக்கிறது என்பதற்குப் பண்டைக் கலைஞர்கள் நமது தமிழகத்தில் படைத்துள்ள கலைக் கட்டடங்களும் சிற்பச் செல்வங்களுமே போதிய சான்று பகர்ந்து கொண்டிருக்கின்றன. இத்தகைய இலக்கணம் பொதுவாக எல்லாக் கலைகளுக்கும், எல்லாக் கலைஞர்களுக்கும் பொருந்தும்.

ஆனால், நம் நாட்டுக் கலை மரபு இதை விடுத்து ஒருபடி மேற் சென்று புதியதொரு தகுதியையும் கலைஞனிடம் எதிர்பார்க்கின்றது. கலைஞனிடம் இருத்தல் வேண்டும் என்று வற்புறுத்துகின்றது. இது கலைஞனால் ஏற்பட வேண்டிய பயன் கருதி விரும்பப்படுவதாகும். கலை, கலைக்காகவன்றி, கலை வாழ்க்கைக்காகவே என்பது நமது கொள்கையன்றோ?

கலைஞன் உணர்ச்சி மயமானவன், குணவடிவினன். எனவே, அவனது குணங்களே அவனது எல்லாச் செயல்களிலும், சிறப்பாக அவனது கலைப்படைப்புகளில், பிரதிபலிக்கும். சுருங்கக்கூறின் உணர்ந்து ரசித்து அவனால் இயற்றப்படும் கலைப்படைப்புகளில் அவனது ஆன்மாவே ஒளிரும். இதனையே ஆன்மாவின் பிரதிபலிப்பு என்பர். இஃது அனைத்துக் கலைகளுக்கும் நுண்கலைகளுக்கும் பொருந்தும் சிறந்த ஆன்மா சிறந்த படைப்புகளுக்கு அடிப்படையாகும்.

எனவே, கலைஞன் தன் ஆன்மாவைத் தூய்மையுடன் வளர்த்தல் வேண்டும்.

உடலை வளர்ப்பது உணவு. அறிவை வளர்ப்பது நூல்கள். ஆன்மாவை வளர்ப்பது ஒழுக்கம். எனவே, ஒழுக்க சீலனாகக் கலைஞன் இருத்தல் இன்றியமையாததாம். ஒழுக்க சீலனின் படைப்பு களில் தெய்வீக அழகு மிளிரும்.

நமது நாட்டுச் சிற்பங்கள் வெறும் கலைப் படைப்புகளோ காட்சிப் பொருள்களோ அல்ல. கண்ணால் காணமுடியாத ஒரு பொருளை அறிவால் உணர்ந்து அவ் உணர்வினைக் கலைவடிவாய் நம் கண் முன் கொணர்வது நம் நாட்டுச் சிற்பக் கலையின் சிறப்பியல்பு. அவை ஆன்மாவையே ஈர்க்கும் ஆற்றல் பெற்ற திருவுருவங்கள். எனவே, அத்தன்மையில் வழிபடு படிமங்களை இயற்ற வேண்டிய கலைஞர்கள் ஒழுக்க சீலர்களாக இருத்தல் வேண்டுமென்பது இன்றியமையாத தன்றோ? எனவே, இதனைப் பெரிதாகக் கருதிச் சிற்பக்கலை நூல்கள் கலைஞனின் தகுதிகள் பற்றி - ஒழுக்க நெறி பற்றி - மிகவும் வற்புறுத்திப் பின்வருமாறு கூறுகின்றன. கலைஞன் என்பான் அறவுணர்வு மிக்கவனாகவும், இரக்கமுள்ளவனாகவும், பொறாமையற்றவனாகவும், சினமில்லாதவனாகவும், கவலை இல்லாதவனாகவும், எப்பொழுதும் மகிழ்ச்சி நிரம்பிய உள்ளமுடையவனாகவும், பேராசையற்றவனாகவும், ஐம்புலன்களை வென்றவனாகவும், உண்மை பேசுபவனாகவும், பொறுப் புணர்ச்சி மிகுந்தவனாகவும், நல்ல பரம்பரையில் தோன்றியவனாகவும், நோயற்றவனாகவும், கூடுதல் குறைவில்லா உடலுறுப்புகளைப் பெற்று நல்ல பெயருடையவனாகவும் இருத்தல் வேண்டும் என்று கூறும்.

ஆன்மத் தூய்மையுடைய ஒரு கலைஞனால் உருவாக்கப்படும் கடவுட் படிமங்களில் இறைத்தன்மை தோன்றி, வழிபடுவோர்க்கு நன்மைகளை நல்கும்.

இத்தகைய கலைஞர்களைத் தோற்றுவிக்கவே பண்டையப் பயிற்சி முறையும், கல்வி முறையும், ஒழுக்கக் கோட்பாடுகளும் உதவின.

அத்தகைய கல்வி முறையில் வளர்ந்தோங்கிய தலைசிறந்த கலைஞர்கள் தங்களுடைய செய்முறை அனுபவங்களையும், உணர்வு களையும் அவ்வப்பொழுது ஏடுகளில் பதிந்து முன்னோர் அளித்த

செய்திகளையும் அவற்றோடு இணைத்து, அவற்றைத் தங்களுடைய மாணாக்கர்களுக்குப் பாடங்களாக எடுத்தோதினர். அவர் தம் புலமை, ஆற்றல், அனுபவம் ஆகியவற்றுக்கு ஏற்றவாறு கொள்கைகளையும் இலக்கணங்களையும் வகுத்து நூல்களையும் எழுதுவாராயினர்.

அதாவது சிற்பக்கலைஞர்கள் தலைமுறை தலைமுறையாகப் பெற்றிட்ட அனுபவங்களையும், பல நூற்றாண்டுகளாகச் செய்து செய்து பண்பட்டு மெருகேறிய செயல்முறைகளையும் ஒன்று திரட்டி இலக்கணம் செய்து சிற்ப நூல்களாக இயற்றினர். ஏராளமான கவிதைகளும், சிறுபெருங்காப்பியங்களும், பிரபந்தங்களும் தோன்றிய பின் எங்ஙனம் மொழி இலக்கண நூல்கள் தோன்றினவோ - இலக்கியம் கண்டே இலக்கணம் இயம்பினார்களோ - அங்ஙனமே பலவகையான கட்டடங் களும், சிற்பங்களும் தோன்றியபின் அவற்றின் அருமைப்பாடுகளைக் கண்டு கணித்து ஆக்கப் பெற்றவையே சிற்பக்கலை நூல்கள்.

இங்ஙனம் சிற்ப நூல்கள் இயற்றிய சிற்பக் கலைத்துறை ஆசிரியர்கள் நமது நாட்டில் எண்ணற்றவர் இருந்தனர். அவர்களில் தலைசிறந்தவனும், தமிழ் இலக்கியங்களில் பாராட்டப் பெற்றவனும் ஆனவன் மயன் ஆவான்.

அ. "மயன் விதித்தன்ன மணிக்கால் அமளிமிசை
நெடுநிலை மாடத்து இடை நிலத்துஇருந்துழி"...
சிலப்பதிகாரம்,- மனையறம் படுத்த காதை

ஆ. பொன்னினும் மணியினும் புனைந்தன ஆயினும்,
"நுன்வினைக் கம்மியர் காணு மரபின
துயர்நீங்கு சிறப்பினவர் தொல்லோர் உதவிக்கு
மயன் விதித்துக் கொடுத்த மரபின இவைதாம்
ஒருங்குடன் புணர்ந்தாங்க உயர்ந்தோர் ஏத்தும்
அரும்பெறன் மரபின் மண்டபம் அன்றியும்"
சிலப்பதிகாரம்,-இந்திர விழவு ஊரெடுத்த காதை

இ. "அயில் முகக் குலிசத்து அமரர்கோன் நகரும்,
அளகையும், என்று இவை,அயனார்
பயிலுறவு உற்றபடி, பெரும்பான்மை
இப் பெருந் திருநகர் படைப்பான்
மயன் முதல் தெய்வத் தச்சரும்..."

கம்பன் - பா.கா. 96

ஈ. பூவரும்அயனொடும் புகுந்து பொன்நகர்
மூவகை உலகினும் அழகு முற்றுற
ஏவின இயற்றினன் கணத்தின் என்பரால்-
தேவரும் மருள்கொளத் தெய்வத் தச்சனே
(தெய்வத் தச்சன்-தெய்வத் தன்மையுள்ள மயன்)
- கம்பன்-யு.கா. 6198

உ. அளவு அறும் அறிஞரோடு அரக்கர் கோமகற்கு
இளவலும் இனிது - உடன் இருக்க, எண்ணியே
விளைவன விதிமுறை முடிக்க வேண்டுவான்
நளன் வருக! என்றனன் - கவிக்கு நாயகன்.
(நளன் - விசுவகர்மாவின் மகனான வானரத் தச்சன்)
- கம்பன் - யு.கா. 6803

தமிழ்மொழிக்கு அகத்தியனைப் போல் சிற்பக் கலைக்கு மயனே முதலாசிரியன் ஆவான். இவன் இயற்றிய நூல் மயமதம் எனப்படும். கட்டடக் கலையிலும், சிற்பக் கலையிலும், இவன் வகுத்தளித்த கொள்கையே மயமதம் எனப்படுகிறது. இன்றளவும், இந்நூல் சிறப்பான நூலாக அறிஞர்களாலும் சிற்பிகளாலும் போற்றிப் பின்பற்றப்படுகிறது. இவன் வழித்தோன்றிய நூலாசிரியர்கள் பலர்.

மானசாரம் என்ற கட்டடக்கலை நூல் ஆசிரியர்களைக் குறிப்பிட்டு அவரவர் பெயரில் எழுந்த சிற்ப சாத்திரங்களையும், நாம் அறியச் செய்கின்றது. அவை சம்ஸ்கிருதத்தில் எழுதப்பட்ட தென்னாட்டுச் சிற்பக் கலை மரபைச் சேர்ந்த கலை நூல்கள் ஆகும். அவை பின்வருமாறு.

1. விசுவகர்மீயம், 2. விஸ்வம், 3. விஸ்வசாரம், 4. பிரபோதம், 5. விருத்தம், 6. மயமதம், 7. துவஷ்டாதந்த்ரம், 8. மனுசாரம், 9. நளம், 10. மானவிதி, 11. மானகல்பம், 12. மானசாரம், 13. பெகுஸ்ருதம், 14. சிருஷ்டம், 15. மானபோதம், 16. விஸ்வபோதம், 17. ஆதிசாரம், 18. விசாலாக்ஷம், 19. விஸ்வகாஸ்யபம், 20. வாஸ்துபோதம், 21. மகாதந்த்ரம், 22. வாஸ்துவித்யாபதி, 23. பாராசரீயகம், 24. காலயூபம், 25. சைத்யம், 26. சித்திரம், 27. ஆவர்யம், 28. சாதகசார சம்ஹிதை, 29. பானுமதம், 30. ஐந்திரமதம், 31. லோகக்ஞம், 32. சௌரம்.

அங்ஙனமே மனுசாரம் என்ற சிற்ப-கட்டடக்கலை நூலில் இருபத்தெட்டுச் சிற்ப நூல்களின் பெயர்களைக் காண்கிறோம். அவற்றுள்

மேற்கண்ட பட்டியலில் இடம் பெறாத கீழ்க்கண்ட நூல்களையும் இதன் மூலம் அறிகின்றோம்.

1. ஈசானம், 2. சித்ரகாஸ்யபம், 3. பிரயோகமஞ்சரி, 4. பெருஹிதம், 5. பௌத்தமதம், 6. கௌதமம், 7. குலாலம், 8. வாசிஷ்டம், 9. மனோகல்பம், 10. பார்க்கவம், 11. மார்க்கண்டம், 12. கோபாலம், 13. நாரதீயம், 14. நாராயணீயம், 15. காஸ்யபம், 16. சித்ரயாமளம், 17. சித்ரபாகுல்யம், 18. தேசிகம்

இவைகளில் பெரும்பாலானவை இன்றில்லை. இன்று நம்மிடையே கீழ்க்கண்ட நூல்களே தங்கியிருக்கின்றன.

1. மயமதம், 2. விஸ்வகர்மீயம், 3. மானசாரம், 4. ஐந்திரமதம், 5. மனுசாரம், 6. காஸ்யபம். இவை சிற்பக்கலை பற்றியும், கட்டடக்கலை பற்றியும், ஒருமித்துப் பேசும் முழு நூல்களாம். இவற்றுக்கு வாஸ்து சாஸ்திரம் என்றும் பெயர்.

மேலும், 1. வாஸ்துவித்யை, 2. மனுஷ்யாலயச் சந்திரிகை என்ற இரண்டு நூல்கள் உள்ளன.

இவை மனை நூல்கள் ஆகும். இவை இரண்டுமே மிகச் சிறந்த நூல்களாம்.

அத்துடன், 1. சாரஸ்வதீயம், 2 பிராம்மீயம், 3. சகளாதிகாரம் என்ற மூன்று நூல்கள் உள.

அவை முற்றிலும் சிற்ப நூல்களாம். மனை, கட்டடக்கலை பற்றிப் பேசும் வாஸ்து நூல்கள் அல்ல அவை.

**சில்பரத்னம்** என்ற நூல் வாஸ்து நூலாகும். இது பிற்காலத்திய தாகும். இது காஸ்யபம் மயமதம் ஆகிய இரண்டு நூல்களின் கொள்கைகளைச் சுருக்கமாகப் பேசும் சிறு நூலாகும். இது கட்டடக் கலை, சிற்பக்கலை இரண்டையும் உள்ளடக்கிய நூல்.

நாராயணீயம் என்ற பெயரில் உள்ள நூலின் ஒரு சில அத்தி யாயங்களே கிடைத்துள்ளன. நூல் முழுதும் கிடைக்கவில்லை. அங்ஙனமே **சித்ரபாகுல்யம்** என்ற நூலிலிருந்து ஒரு சில அத்திய யாயங்களே கைவசமுள்ளன. பிற பகுதிகள் கிடைக்கவில்லை.

**சர்வார்த்த சிற்ப சிந்தாமணி, சிற்பரத்னாகரம்** என்ற இரண்டு நூல்கள் உள. இவ்விரண்டும் தமிழ் நூல்கள் ஆகும். முன்னையது செய்யுளும், உரைநடையும் கொண்ட மனை நூல். பின்னையது முழுவதும் செய்யுளாகவே எழுதப்பட்ட மனை நூல். **சிற்பரத்னாகரம்** என்ற நூலுக்கு மயநூல் என்றும் ஒரு பெயர் இருந்ததாகத் தெரிகிறது. சிற்பரத்னாகரத்தில் கட்டடக் கலை பற்றிய செய்திகளையும், சிற்பக்கலை பற்றிய செய்திகளையும் காணவில்லை. மனைக் கட்டடங்கள் பற்றிய செய்திகளே காணக் கிடக்கின்றன.

முன்பு கூறப்பட்ட ஐம்பது நூல்களில் ஆறு நூல்களைத் தவிர மற்றவை அழிந்து போயின.

அழிந்தொழிந்து போன சிற்ப நூல்களில் என்னென்ன அரிய செய்திகளும், கொள்கைகளும் இருந்தனவோ அவற்றை நாம் இன்று அறியுமாறில்லை.

இருப்பினும் சிற்பக்கலை பற்றியவற்றில் ஒரு சில சைவ, வைணவ ஆகமங்களில் குறுப்பிட்டுக் காட்டப்படுகின்றன. அவ் ஆகமங்கள், தத்தம் குறிப்புரையின் இறுதியில் அவற்றின் விளக்கங்களைச் சிற்ப நூல்களில் கண்டு கொள்ளுமாறும் அறிவுறுத்துகின்றன.

இன்று நமக்குக் கிடைத்த சிற்பக்கலை இலக்கண நூல்கள் குறைவாக இருப்பினும், முற்காலச் சிற்பிகள் இலக்கியங்களாகப் படைத்த கலைச் சின்னங்கள் பல நூற்றுக்கணக்கில் இன்று நின்று நிலவுகின்றன. அவை ஒவ்வொன்றையுமே நமக்குக் கிடைக்கும் கண் மெய்யான இலக்கணமாகக் கொள்ளலாம்.

மாமல்லபுரத்துக் குடைவரைக் கோயில்களும் ஒற்றைக் கற்கோயில்களும், கட்டுமானக் கோயில்களும், எந்தச் சிற்ப நூல்களின் துணைகொண்டு எழுப்பப்பட்டனவோ? அவற்றை உருவாக்கிய கேவாதப் பெருந்தச்சன், தச்சன் குணமல்லன், பையமிழிப்பான், ஆபாஜன் ஆகிய பெருந்தச்சர்கள், ஏதும் சிற்ப நூல்களை இயற்றினார்களா, அப்படியானால் அவையாவை என்பன ஏதும் இன்று அறியுமாறில்லை.

தஞ்சைப் பெருவுடையார் திருக்கோயிலைப் படைத்த குஞ்சர மல்லன் இராசராசப் பெருந்தச்சன் எந்த நூலைப் பயின்றானோ? நாம் அறியோம்.

உத்திரமேரூரில், அமைப்பாலும், அணியாலும், கருத்தாலும், புதியதொரு விமானம் கண்ட பரமேச்வரப் பெருந்தச்சன் எந்த நூல் வழி நின்று அதனைப் படைத்தானோ? அவற்றையும் நாம் அறியோம்.

திருவொற்றியூர்த் துங்கானை மாடக்கோயிலைத் திறம்பட அமைக்க இரவிப் பெருந்தச்சன் பின்பற்றிய நூல்வழிதான் எதுவோ? அறியோம். ஆனால், எதை எதைப் பயின்றிருப்பினும், எதை எதை இயற்றியிருப்பினும், அதனால் விளைந்த சிற்பக்கருவூலங்கள் பல வற்றை நாம் கிடைக்கப் பெற்றவர்களாக இருக்கிறோம். இதனை நினைந்து மகிழ்ச்சி கொள்ளலாம். பெருமைப்படலாம். இவை யெல்லாம், பிற்காலச் சிற்பிகளுக்கு இலக்கியமாகவும், இலக்கண மாகவும் பயன்பட்டிருக்கு மென்பதில் ஐயமில்லை.

தமிழகமே ஒரு சிற்பக்கலைக் கூடம். ஒவ்வொரு கலைச் சின்னமும் அதன் ஒவ்வோர் எடுத்துக்காட்டு. ஒவ்வொரு தலைமுறை யினரும் படைத்தவை அவற்றில் ஏராளம். ஏராளம்.

இத்தகைய சூழ்நிலையில் இந்த நூற்றாண்டில் வெளிவருவது இச்சிற்பச் செந்நூல். இஃதோர் எளிய முயற்சி. கலைபயில் மாணாக் கர்கட்குப் பாட நூலாகப் பயன்தர வேண்டுமென்பதே அடிப்படை நோக்கம்.

தமிழக அரசு 1957ஆம் ஆண்டு, மாமல்லபுரத்தில் சிற்பக் கலையைப் பயிற்றுவிப்பதற்காகவும், தமிழகச் சிற்பக் கலை மரபை வளர்ப்பதற்காகவும், நிறுவிய கட்டட-சிற்பக்கலைப் பயிற்சி நிலையத்திலும் வேறு பல் பயிற்சி நிலையத்திலும் பயிற்சி பெற்று வரும் மாணாக்கர்களுக்குப் பயன் தரும் பாட நூல்களாகக் கீழ்க்கண்ட நான்கு புத்தகங்களைத் தமிழிலே எழுதுவதற்காக G.O.M.S. No. 1925 (IND (Spl) Industries Labour and Co-operation Department Dated 3rd April 1965, And Go. M.S. No. 1767. IND (Spl) Dated 4.8.1970 மூலம் ஆணை பிறப்பித்தது. இவ்வாணை சிற்பக்கலை மறுமலர்ச்சிக்குத் தமிழக அரசு வழங்கிய பெருங்கொடை வளமாகும்.

**நூல்கள்**

1. பிரதிமாலக்ஷணம் படிமக்கலை நூல், 2. ரூபத்யாலக்ஷணம் உருவ அமைதி நூல் 3. பிராசாதலக்ஷணம் கட்டடக் கலை நூல், 4. ஜீர்கோத்தாரலக்ஷணம் பழுது நீக்கிப் பாதுகாக்கும் நூல்.

1. பிரதிமாலக்ஷணம் என்பது, படிமக்கலை அளவு இலக்கண நூலாகும். படிமங்களை இயற்றுவதற்குரிய இலக்கணங்களையும், விதிகளையும், முறைகளையும் பேசும் நூல். இந்த முதல் நூலே சிற்பச் செந்நூல்.

2. ரூபத்யாலக்ஷணம் என்பது, மேற்கண்ட சிற்ப இலக்கணங்களுக்கு ஏற்ப இயற்றப்பட்ட சிற்ப வடிவங்களின் அமைதிகளாகும். முதல் நூல் இலக்கணம் என்றால் இரண்டாவது நூல் அதன் இலக் கியமாகும். எண்ணற்ற வழிபடு படிமங்களின் உருவ வர்ணனை களுக்கு ஏற்ப பண்டைச் சிற்பக் கலைஞர்களாலும் ஞானி யர்களாலும் இயற்றப்பட்ட திருவுருவ விளக்கங்களின் தொகுப்பு நூல் இஃதாம்.

3. பிராசாதலக்ஷணம் என்பது, கட்டடக்கலை நூலாகும். கிராமம், நகரம், பட்டணம், தலைநகர் ஆகியவற்றின் அமைப்பிலக்கணமும், வீட்டுக் கட்டட இலக்கணங்களும், திருக்கோயில் கட்டட இலக்கணங்களும் அடங்கிய பெரு நூலாகும்.

4. சிற்பங்களையும், கட்டடங்களையும் பழுது பார்த்துச் செப்பனிடும் முறையினை விளக்குவது ஜீர்னோத்தாரலக்ஷணமாகும்.

*(சிற்ப குரு வை. கணபதி ஸ்தபதி தமிழகச் சிற்பக் கலை மரபிற்கே உரிய சிறப்பியல்புகளை, பல்வேறு விளக்கப் படங்களுடன், எளிய தமிழில் எழுதி வெளியிட்ட சிற்பச் செந்நூலுக்கு கம்பன் அடிப்பொடி வழங்கிய முன்னுரை)*





# SOME ICONOGRAPHIC CONCEPTS

GOD is perceived in various forms by saints and sages. "The ideas that emanate in an individual's mind,[1] the letters that give visual shape to these ideas[2], the words[3] and their meanings[4] are the manifestations of God", says Appar. Speaking about the abodes of Lord Muruga in "Tirumurugarrupadai", Nakkirar says that Muruga lives everywhere[5]; 'in the forest, in the rivers, in the streets and their junctions, in the pure hearts of the sages and in the abodes of the devout hunters'. "Paripadal" speaks of Muruga in identical terms[6] and says that the Lord assumes various forms according to the nature of the devotees[7]. Commenting on this, the celebrated commentator, Parimelalagar, states[8] 'that God manifests Himself in icons for the layman, in the sacrificial fire for the Brahmin, in the heart for the yogi and everywhere for the Jnani'. The all-pervasive nature of God is described by Appar[9]. Yet the Almighty is beyond the reach of all these[10]. The devotees give the Lord various forms and names. The personifications of the Lord as reflected in the Puranas and epics are the basis for various iconographic forms.

The Tamil genius has analysed the deeper meaning of each form and has given expression to the metaphysical aspect of each icon. The body of the texts dealing with various forms, measurements and like of icons came to be called Silpa sastras which, in turn, formed part of architecture or vastuvidya. These two texts are again greatly conditioned by the agamic or tantric literature, dealing with modes of worship

in temples. A perusal of this literature will show that it had its origin on the very early period, but most of the texts, as they are available today, have undergone modifications.

The Pasurams of the Alwars have considerably influenced Vaishnavite art, while Saivite representations have been inspired by the hymns of the Nayanmars, especially the "Devarams" of Appar, Sambandar and Sundarar and "Tiruvasagam" of Manickavasagar. A few examples would suffice to show that the "Devaram" hymns have moulded later iconographical forms.

There is an interesting metal image of Siva as Bhikshatana carrying a vina in his arm, at Valampuram, now called Melapperumpallam (near Kaverippoompattinam). No Silpa text seems to refer to the form of Bhikshatana carrying a vina in his arm and poised elegantly, suggesting movement. The hymns of Appar, addressed to the main deity of Valampuram, give a vivid description of Siva as Bhikshatana[11], moving around with a vina in his arms. Undoubtedly the verse of Appar has served as the dhyana sloka for making this image. An inscription in the temple, in the 8th regnal year of Rajadhi Raja II, refers to a metal image of Vattanai Katta Vantha Nayakar. The term, Vattanai Katta Vantha Nayakar, is very significant since it has been adopted from the Devaram hymns of Appar.

It is interesting to mention that the image of Nataraja is referred to in inscriptions as Adavallar. The Chola King, Raja Raja I named even the weights and measures as Adavallar. The Nataraja image is also referred to as "Koothadum Devar" in some inscriptions. Both the term, "Adavallar" and "Koothadum Devar" are derived from Appar's Devaram. There is no inscription which refers to the dancing form of Siva as Nataraja. Further, inscriptions in the Tamil country refer to the ewes gifted to the temples as those that never grow old or die, Sava Moovap Peradu. The terms seems to have been derived from Appar who refers to Lord Siva as Sava Moova Singam. The pleasing descrition of Durga[12] in "Silappadikaram"

# ஏதேனும் ஆகேனோ?

காப்பியத்தின் கட்டளையாய், கவித்துவத்தின் முத்திரையாய்
மாப்பெரிய தத்துவங்கள் மனத்துணர்த்தும் திருவிளக்காய்
கோக்கவிஞர் குலவேந்தாய்க் குலவுமொரு கம்பன்தன்
பாப்புனையும் கரந்தழுவும் பனையேடாய் ஆகேனோ? 1

வழியறியாக் கடையேற்கும் வழிகாட்டி வாழ்வளித்துப்
பழியறியா நெறிகூட்டிப் பைந்தமிழ்த்தாய் பதமலரில்
வழிதேறல் மாந்தவருள் மாகவிஞன் கம்பன்தன்
எழில்விரல்கள் பிடித்தெழுதும் எழுத்தாணி ஆகேனோ? 2

செம்பதுமத் திருவடியன் தேசுமிகு மலர்முகத்தன்
அம்பெரிய தடக்கையன் அகன்றதிரு மணிமார்வன்
வம்புசுவைத் தேனொழுகும் வாக்குடையன் கம்பனென்னும்
எம்பெருமான் இருந்தருளும் எழிற்பீடம் ஆகேனோ? 3

வானகத்தில் கொலுவிருக்க மண்ணகத்தில் ஆட்சிசெய
ஞானநிலை பெற்றுய்ய நான்சிறிதும் வேண்டுகிலேன்;
ஆனபெருங் கவியுலகின் அற்புதனாம் கம்பனவன்
போனகத்தை மகிழ்ந்துண்ணும் பொன்வட்டில் ஆகேனோ? 4

"மண்ணுலகில் வந்தகவி வாணர்களில் மற்றெவரும்
திண்ணமுற இவனைப்போல் திகழ்ஒருவர் இல்லை" எனும்,
விண்ணளவு புகழ்தழுவும் வித்தகனாம் கம்பனெனும்
புண்ணியன்தன் பால்பருகும் பொற்குவளை ஆகேனோ? 5

சந்ததமும் தமிழ்த்தாயின் தவமுணர்த்தும் தனிப்புதல்வன்
எந்தைபிரான் என்னாசான் என்தெய்வம் என்னுடையன்
சிந்தைசெவி தேன்பாய்ச்சும் செழுங்கவிஞன் கம்பனவன்
அந்தமிகு அரைதழுவும் ஆடையென ஆகேனோ? 6

சித்தமெலாம் அன்பரும்பச் செய்கையெலாம் அறம்மலரச்
சத்தியமே மணம்பரப்பத் தமிழ்வளமே நெறிசிறக்க
உத்தமநற் காப்பியத்தை உவந்தளித்த கம்பன்தன்
உத்தரீய மாகுமொரு உயர்பேறன் ஆகேனோ? 7

எழுத்துலகில் இதற்கு நிகர் இல்லையென அறிஞரெலாம்
வழுத்துபுகழ் இராமகதை மண்ணவர்க்குத் தானீந்த
விழுத்தமிழின் சுவையோடு வீறுமுணர் என்னப்பன்
கழுத்திலொளிர் மணிமாலைக் கடைமணியாய் ஆகேனோ? 8

செய்களெலாம் பொன்விளையும் செழும்பொன்னி வளநாட்டில்
பொய்கயமை இன்மைஎலாம் போயகல அவதரித்து
மெய்வாய்மை உண்மையவை விளக்கியருள் கம்பன்தன்
கையிலொரு குடையாகக் கடையன்யான் ஆகேனோ? 9

தொல்லையறம் கணித்தளந்தான் சொல்லின் வளம் எடுத்தளந்தான்
எல்லையில்நூல் முகந்தளந்தான் எம்மருங்கும் புகழ்நிறைந்தான்
புல்லறிவிற் கடையேற்கும் புகலளித்த கம்பனவன்
மெல்லெனவே துயில்கொள்ளும் மெத்தைஎன ஆகேனோ? 10

வேதமுடன் உபநிடதம் விளங்குபெரும் ஆகமங்கள்
தீதிலற நூல்களுடன் சிறந்த பல காப்பியங்கள்
காதலுடன் கற்றவற்றின் கரைகண்ட கம்பனவன்
ஆதரித்தே பயன்படுத்தும் அடைப்பையாய் ஆகேனோ? 11

கோக்கவிஞர் எல்லாரும் கும்பிட்டு நிற்கஉயர்
மாக்கவிதை வார்த்துநமை மகிழ்கடலில் ஆழ்த்துகிற,
வாக்குமனம் செய்கைஎலாம் மாண்புநிறை கம்பன்கைப்
பாக்குவெட்டி எனவிளங்கும் பாக்கியனாய் ஆகேனோ? 12

ஆன்பாலும் வரைத்தேனும் அடிக்கரும்பும் முக்கனியும்
வேம்பாக ஆகிடவே வியன்கவிதை வடித்தளிக்கும்
மேம்பாடு மிகவுடைய மெய்ப்புலவன் கம்பனவன்
தான்போடும் வெற்றிலையாம் தவமுடையேன் ஆகேனோ? 13

எட்டுவகை மெய்ப்பாடும் எண்ணூறாம் உளப்பாடும்
சொட்டுபெருங் காப்பியத்தைச் சுவைத்தமிழில் உபகரித்த
பட்டறிவுப் பெட்டகமாம் பாரளந்த கம்பனவன்
சுட்டுவிரல் தொட்டருளும் சுண்ணாம்பாய் ஆகேனோ? 14

உள்ளமெலாம் களிகூர ஓதும்நா தேனூற
அள்ளஅள்ளக் குறையாத அருஞ்சுவையார் கவிகணிறை
பள்ளமெனத் திகழுமொரு பருணிதனாம் கம்பனெனும்
வள்ளலவன் ஏறுபெட்டி வண்டிஎன ஆகேனோ? 15

பண்டிதராய், பாமரராய், பார்த்திபராய், மற்றவராய்
எண்டிசையும் வாழ்வார்கள் எல்லோரும் பாராட்டிக்
கொண்டாடும் கவிகுலத்துக் கோவேந்தாம் கம்பனவன்
வண்டிதனை இழுக்குமொரு மாடாக ஆகேனோ? 16

மால்படிந்த அடிநாயேன் மனத்துயரம் தீர்த்தவனாம்
நூல்தேர்வார் எல்லார்க்கும் நுவலரிய முழக்கோலாய்
நால்வகைசொல் நூற்பயனை நனியளக்கும் கம்பனவன்
கால்தேய்க்கும் பேறுபெறும் கருங்கல்லாய் ஆகேனோ? 17

ஒப்பற்ற பாத்திரங்கள், ஒவ்வொன்றும் நனிசிறக்க
எப்போதும் வாடாத எண்ணற்ற நிகழ்ச்சிகளைத்
தப்பேதும் இல்லாமல் தந்த கவிகம்பன்தன்
மெய்ப்போதாம் பதயுகத்தின் மிதியடியாய் ஆகேனோ? 18

வழுவற்ற அன்பறத்தின் வழிமுற்றும் காட்டிநமைப்
பழுதற்ற நெறிசெலுத்தப் பாருலகில் அவதரித்த
முழுதுற்ற பேரறிவின் மொய்ம்புருவாம் கம்பனவன்
செழுமுற்றம் பெருக்குமொரு திருவலகாய் ஆகேனோ? 19

முந்தையர்கள் அருள்நெறியை முழுதுமனு சரித்துவரும்
பிந்தையர்கள் கடைப்பிடிக்கப் பெருநெறியை நன்குணர்த்தும்
சந்தநிறை காப்பியத்தைத் தந்தருளும் கம்பனெனும்
எந்தைபிரான் சந்நிதியில் ஏதேனும் ஆகேனோ? 20

*(நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் குலசேகர ஆழ்வார் அருளிச் செய்த 'ஊன் ஏறு செல்வத்து' என்று தொடங்கும் பெருமாள் திருமொழிப் பாசுரங்களை அடியொற்றி, கம்பன் அடிப்பொடி புனைந்த கவி இவை)*



# ஊழி ஊழிப் பயன்சுரக்க...

உலகப் பெருமா கவிஞர்களில்
　　ஒப்பே இல்லா ஒருவன்என
இலகும் கம்பன் தந்தருளும்
　　இராம காதைக் காப்பியத்தில்
பலவாய் அமைந்த சுவையமுதைப்
　　பருகித் துய்த்து மகிழ்பவர்கள்
நலமார் உடலும் நிறைமனமும்
　　நாளும் சிறக்க வாழ்வாரே!

முன்னை நூல்கள் கற்றறிந்தான்;
　　மூவா முதலை உற்றறிந்தான்;
கன்னித் தமிழும் ஆரியமும்
　　காதல் கூரத் தோய்ந்தாய்ந்தான்
பின்னும் மொழிகள் சிற்சிலவும்
　　பேணும் கலைகள் பற்பலவும்
தன்னில் தேக்கி ஒளிருகின்றான்
　　தமிழ்த்தாய் ஈன்ற தனிக்கம்பன்!

எண்ணும் எழுத்தும் இலக்கமுடன்
　　எழிலார் சிற்பம் கட்டடங்கள்
பண்ணும் பரதக் கலையுடனே
　　பண்டை வரலாற் றுண்மைகளும்
நண்ணும் இயற்கை அறிவுவகை
　　நவிலும் பூத வேதியியல்
கண்ணும் அறிவும் கண்டுணரக்
　　கம்பன் அவனே நல்லாசான்!

பாத்தி ரங்கள் படைப்பதிலும்
படைத்த வற்றை இயக்கலிலும்
சாத்தி ரங்கள் விரிப்பதிலும்
தருமம் நீதி உரைப்பதிலும்
தோத்தி ரங்கள் இசைப்பதிலும்
தொன்மை மரபைக் காப்பதிலும்
மூத்த கவிஞர்ப் போற்றலிலும்
முன்னே நிற்பான் கவிகம்பன்!

பதியை உணர்த்திப் பசுவாம்நாம்
பாசம் அறுக்க வழிகாட்டி
விதியை உணர்த்திப் பின்னும்தீ
வினையைச் சாரா நெறிபுகட்டி
மதியைத் தெளிவு பெறச்செய்து
மன்னும் இன்பம் பொருள்அறத்தைக்
கதியாய்ப் பற்றி வீடுபெறக்
கம்பன் நாளும் துணைசெய்வான்

எந்த மதத்தும் குறைகாணான்;
எல்லாம் இறைவன் நெறிஎன்பான்;
சொந்த மொழியைப் போற்றிடுவான்;
தூற்றான் மற்றை மொழிகளையே;
சிந்தை அன்பு செழித்திடுவான்;
செய்கை அறமே மலர்ந்திடுவான்;
அந்தக் கவிஞன் நம்கம்பன்
அவனே கவிச்சக் கரவர்த்தி!

என்ற உண்மை தனையுணர்ந்து
எழிலார் வாழ்க்கை நடத்திடுவோர்
ஒன்றாய் விளங்கும் மெய்ப்பொருளை
உள்ளத் திருத்தி எஞ்ஞான்றும்
நன்றே எண்ணி நன்றுரைத்து
நன்றே புரிந்து பொழுதெல்லாம்
பொன்றல் இல்லாக் கம்பனுரை,
புனித வழியே போற்றுகின்றார்!

கோவை ஜி.கே. சுந்தரனார்
கொண்ட தூய ஆர்வத்தால்
நாவைச் செவியை இனிக்கச்செய்
நல்ல கவிதை அருள் கம்பன்
தேவைப் போற்றி என்றென்றும்
செய்ய தமிழை வளர்க்கின்ற
சேவை புரிய முன்வந்த
செல்வர்க் கெல்லாம் நல்வணக்கம்!

மன்னும் புலவர் பலர்உதித்த
மாண்பார் கொங்கு நாடிதனில்
என்னை அடிமை கொண்டருளும்
எந்தை பெருமான் கம்பனவன்
தன்னைப் போற்றி விழாஎடுக்கும்
தகையோர் தம்மைப் பலகாலும்
சென்னி தாழ்த்திக் கரம்கூப்பிச்
சித்தம் மகிழ வாழ்த்துகிறேன்!

கொங்கு நாட்டின் மணிமுடியாம்
கோவன் புத்தூர் மாநகரில்
இங்கே இன்று மலர்கின்ற
இன்பக் கம்பன் கழகமிது
மங்கை பாகன் திருமார்வன்
வாணி கேள்வன் தண்ணருளால்
எங்கும் என்றும் புகழ்மணக்க
இருந்து நாளும் வாழியவே!

என்றென் றடியேன் வாய்மணக்க
இதயம் களிக்க வாழ்த்துரைத்து
தொன்று தொட்ட அகத்தியனார்
தொடங்கிப் புலவர் அனைவோர்க்கும்
ஒன்றும் வணக்கம் பலசெலுத்தி
ஊழி ஊழிப் பயன்சுரக்க
நன்றார் கம்பன் கழகமிதை
நாதன் அருளால் தொடங்கிவைத்தேன்!

*(கோயம்புத்தூரில் 11-8-1973 சனிக்கிழமை கம்பன் கழகத்தைத் தொடங்கி வைத்துக் கம்பன் அடிப்பொடி ஆற்றிய **உரைதலையிட்ட செய்யுள்**)*

# திறங்காப்பான்

திருவேங் கடமுடையான்
தென்பாண்டி நாட்டில்
அரியக் குடியில்
அமரும் - உருவோங்கும்
*மாநகர்க்குக் கோபுரமும்
மன்னுவித்த நற்குடியில்
தானுதித்தான் வாழ்க
தழைத்து. 1

கொள்ளக் கிடையாக்
குவலயத்தே கல்விக்காய்
அள்ளிச் சொரிந்த
அழகப்ப - வள்ளல்
அறங்காட்டு கின்ற
அமைப்பவற்றை மேலாம்
திறங்காப்பான் வாழ்க
செழித்து. 2

ஆறுபத் தாண்டை அடைவேங்க டாசலனார்
நூறுபத் தாண்டளவும் நோயின்றி - வீறுபெற்று
அம்மையப்பன் ஆன அரிஅரன் தம்மருளால்
எம்மையினும் வாழ்க இனிது. 3

உலகிலுயர் கொடைவள்ளல் தனிமையிற்பல்
கலைக்கழகம் உதவும் வேந்தர்
அலகில்பெரும் புகழாளர் அறிஞர் அண்ணா
மலையரசும் அவர்தம் மைந்தர்

---

*மாநகர் - பெருங்கோயில்.

தலைமைபெறும் **இணைவேந்தர் தகுகுணத்தோர்**
தமிழர் தனித் தலைவர் ஆயோர்
**இலகியசீர் ராஜாசர் முத்தையப்**
**பேர்கொளும்நம் எழிற்கோ மானும்** 4

அன்புரிமை மாதுலரும் மைத்துனரும்
ஆதலினால் அவர்தாம் சென்ற
துன்பமிலா நெறிபற்றிக் கல்விஅறம்
பரப்பிடுமத் தொண்டின் மிக்கார்
மன்பதையி னுக்குதவ வள்ளல்அழ
கப்பரவர் வகுத்த கல்வி
இன்பநிலை யம்வளர்க்கும் அருஞ்செயலால்
என்றுமுயர் பெருமை பெற்றார்! 5

இன்னபெருஞ் சிறப்புறுநம் வேங்கடா
சலனாராம் ஏந்த லார்க்கு
முன்னியமூ விருபஃதாம் ஆண்டுநிறை
வெய்தியஇம் முதன்மை நாளில்
பன்னரிய அறிஞர்பெருஞ் செல்வர்மாண்
புறுபெரியோர் பலரும் கூடி
முன்னமிவர் செய்பணிகள் அனைத்தினையும்
நினைந்தேத்தும் முறைமை நன்றே! 6

தன்னிகரில் செயல்வீரர் மதிநுட்பம்
உடையவர் இவர் தகைமைக் கேற்ப
நன்னர்இரு முப்பானாண் டினிதுநிறை
விழாவிதனை நயந்து செய்து
அன்புரிமை மக்களொக்கல் சூழ்ந்திருக்க
அவனியில்நீ டூழி வாழ
மின்னுமணிப் பொதுவில்நடம் செயுமிறையோன்
திருவருளை வேண்டு வோமே! 7

*(கம்பன் மணிமண்டபத் திருப்பணியில் தாமாகவே முன்வந்து முனைந்து உதவிய அண்ணாமலை அரசரின் மாப்பிள்ளையும் அழகப்பா அறநிலையச் செயலாளருமான க.வெ.சித.வெ. வேங்கடாசலனாரின் மணிவிழாவில் வாழ்த்திய பாமாலை இது; அண்ணாமலை அரசர், முத்தையவேள், வள்ளல் அழகப்பர் ஆகியோரின் கொடைமடம் பற்றியும் பேசும் இப்பாக்கள்.)*



# கம்பன் திருநாளில்...

கம்பன் திருநாள் மேடை அலங்காரத்தில் வைக்கப்பெறும் பூரண கும்பத்தில் மஞ்சள் தடவிய தேங்காயைக் கம்பனடிப்பொடி இல்லத்தின் அருகில் உள்ள மேலைக்குளத்து முனி ஐயா விநாயகரை மழை வராது விழாச் சிறப்பாக நடைபெற வேண்டிப் பிரார்த்தித்து வைப்பது வழக்கம்; மூன்றுநாள் விழாவும் முடிந்ததும், மறுநாள் நாட்டரசன்கோட்டைக்குச் செல்லும் வழியில் அத்தேங்காயை அந்த முனிஐயா விநாயகருக்குச் சிதறுகாயாகச் செலுத்திச் செல்வதும் வழக்கம். அதற்காகக் கம்பனடிப் பொடி எழுதிய அற்புதமான பாடல் இதோ:

மேலைக் குளத்து விளங்கும் முனியையா!
சீலம் அருள் கம்பன் திருநாளில் - கோலமுகில்
பெய்யாமல், உன்னுடைய பேரடியோம் உள்ளமவை
எய்யாமல் காப்பாய் இருந்து.

ஒரு கம்பன் திருநாள் நிகழ்ச்சி நிரலைத் தை மீ பொங்கலுக்குப் பிறகு, நல்வேளையில் பிரார்த்தனையுடன், இதற்கென்றே பிரத்தியேக மாகத் தயாரிக்கப் பெற்ற சிறு நோட்டுப் புத்தகத்தில் எழுதிப் பங்கேற்பவர்கள் பெயர்களை பென்சிலால் எழுதி அவர்களிடமிருந்து இசைவு வந்ததும் அதனைப் பேனாவால் எழுதுவதும் தொன்று தொட்டுக் கம்பனடிப்பொடி கடைப்பிடிக்கும் வழக்கம். இன்றும் அதுவே பின்பற்றப்படுகிறது. அதற்காகக் கம்பனடிப்பொடி வேண்டி எழுதிய பாடல் இதோ:

எந்தக் குறையும்இன்றி இவ்வாண்டும் கம்பன்விழா
முந்தை விழாக்கள்போல் முன்நிற்க - செந்தின்
திருமுருகா! செவ்வேளே! செந்தமிழர் தேவே!
அருள் புரிக நெஞ்சம் அமைந்து. - ''வேழமுகன்''





தமிழ் வண்ணம்

# தமிழ் எழுத்துக்கள், அன்றும் – நாளையும்

தமிழ் எழுத்துக்களைப் பற்றிச் சிறந்த ஆராய்ச்சிகள் சமீபகாலமாக நடைபெற்று வருகின்றன. தமிழ் எழுத்துக்கள் என்று நான் இங்கே சொல்வது பிராம்மி, தமிழ்-பிராம்மி என்றெல்லாம் கூறுகிறார்களே, அதைத்தான் குறிக்கிறேன்.

கி.பி. 1903இல் திரு வெங்கோப ராவ் முதன் முதலில் மதுரை மாவட்டம் கீழவளைவு என்ற இடத்தில் காணப்படும் இவ்வெழுத்தை வெளியுலகுக்கு அறிமுகப்படுத்தினார். அதன் பிறகு, 1906இல் திரு. கெமைடு (Mr. Camide) திருநெல்வேலி மாவட்டம் மறுகால் தலையில் உள்ள மற்றொரு கல்வெட்டை வெளிப்படுத்தினார். அவற்றைத் தொடர்ந்து திருவாளர்களான எச். கிருஷ்ண சாஸ்திரியும், கே.வி. சுப்பிரமணிய அய்யரும் ஆனைமலை, அழகர்மலை, மேட்டுப்பட்டி, முத்துப்பட்டி, சித்தன்னவாசல் முதலிய இடங்களில் பல கல்வெட்டுக் களைத் தேடிக் கண்டு வெளிப்படுத்தினர். இதற்குப் பின்னர்த் திருச்சி, மாமண்டூர் முதலிய இடங்களிலும் இவ்வகைக் கல்வெட்டுக்கள் இருப்பவை வெளியாயின.

பல்லவர் வரலாற்றுத் துறையில் அரும்பணியாற்றிய ழொவா துபரே (Jouveav Dubrevil) பாண்டிச்சேரிக்கு அருகில் அரிக்கன்மேடு என இன்று வழங்குகின்ற அருகன்மேட்டில் இவ்வெழுத்துக்களுடன் கூடிய பானை ஓடுகளைக் கண்டெடுத்தார். அதே இடத்தில் மத்திய அரசின் தொல்பொருள் துறை வல்லுநர் டாக்டர் வீலர் (Dr. Mortimer Wheeler) தலைமையில் அகழ்வாராய்ச்சி நடந்த போது இவ்வகை எழுத்துக்கள் பொறித்த பானை ஓடுகள் பல கிடைத்தன.

அதன் பிறகு ஈரோடு வட்டத்தில் உள்ள அரச்சலூர் என இன்று வழங்குகிற அறச்சாலையூர் மலையில் உள்ள ஒரு கல்வெட்டை திரு. ராஜு கண்டு வெளிப்படுத்தினார். அதற்குப் பின்னர் அளகறையிலும், உறையூரிலும் திரு. டி.வி. மகாலிங்கம் தலைமையில் சென்னைப் பல்கலைக்கழகம் அகழ்வாராய்ச்சி நடத்தியபோது அவ்வகைப் பானை ஓடுகள் சில கிடைத்தன. 1966இல் திரு ஐ. மகாதேவன் மணிவாசகப் பெருமான் பிறந்த ஊரான திருவாதவூரில் மற்றொரு கல்வெட்டைக் கண்டு வெளிப்படுத்தினார்.

தொடக்கத்தில் இக்கல்வெட்டுக்களை ஆராய்ந்த அறிஞர்கள் "என்ன மொழி, என்ன லிபி என்றே புரியவில்லை!" என்று மயங்கினர். பின்னர் இது பிராம்மி எழுத்தென உரைத்தனர். படிப்பதில் பல்வேறு சங்கடங்கள் ஏற்பட்டன; என்றாலும் எப்படியோ ஒருவாறாகப் பொருள் விளக்கம் தர முயன்றனர்.

"இவை அனைத்தும் தமிழ்மொழி எழுத்துக்களே! தமிழ் மொழிக் குரிய சிறப்பெழுத்துக்களான ழ, ள, ற, ன ஆகியவை இக்கல்வெட்டுக் களில் காணப்படுகின்றன," என்று விளக்கம் கூறிச் சில கல்வெட்டுக் களை படித்துக் காட்டிய பெருமை திரு. கே.வி. சுப்பிரமணிய ஐயரையே சாரும். கி.பி. 1924ஆம் ஆண்டில் இப்பணியால் திரு. சுப்பிரமணிய ஐயர் தமிழ் மொழிக்கும், தமிழக வரலாற்றுக்கும் செய்த தொண்டு அற்ப சொற்பம் அல்ல. பழுத்த பழமாகக் கோயம்புத்தூரில் வாழ்ந்து வரும் இப்பெரியார்க்குத் தமிழர்கள் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறார்கள்.

இக்கல்வெட்டுக்களை ஆராய்ந்தவர்களைப் பற்றி எண்ணும் பொழுது திரு. பிரின்ஸப் (J. Princep) நம் கருத்தில் முதலிடம் பெற வேண்டியவராகிறார். அசோகனது கல்வெட்டுக்களை ஆராய்ந்து ஒவ்வோர் எழுத்துக்கும் ஒலி நிர்ணயம் செய்த பெருமை பிரின் ஸப்பிற்கே உரியது. அந்த நெறியிலே சென்று சிறந்த தொண்டாற்றிய மேதை ப்யூலர் (Her.Von. G. Buhler) நம் மனத்தில் நிரந்தர இடம் பெறக்கூடியவர். ஆந்திர நாட்டில் உள்ள பட்டிப்புரோலுவில் கிடைத்த கல்வெட்டுக்களை சிறப்பாக இவர் ஆராய்ந்துள்ளார். இவர் நெறி தமிழகப் பண்டைக் கல்வெட்டுக்களைப் படிப்பதற்கும் பேருதவி புரிந்திருக்கிறது.

''சங்க கால மன்னர்கள் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றனரா?'' என்ற கேள்விக்கு, ''ஆம்'' என, முதன்முதலாக விடை தந்தவர் திரு ஐ. மகாதேவனே. ''புகழூரிலும், மாங்குளத்திலும் முறையே சேர மன்னர்களும் பாண்டிய மன்னரும் குறிக்கப்படுகின்றனர்,'' என்று, கல்வெட்டிற்கும் சங்க இலக்கியத்திற்கும் உள்ள ஒரு தொடர்பை திரு. மகாதேவனே புலப்படுத்தினார். பெருவாரியான பண்டைத் தமிழ்க் கல் வெட்டுக்களை திரு. மகாதேவன் பொருள் சிறக்க வெளிப்படுத்தி யுள்ளார். ஒரு சில இடங்களிலும், எழுத்துக்களிலும், சொற்களிலும் கருத்து வேற்றுமைக்கு இடமளித்தாலும், மொத்தத்தில் எல்லாக் கல்வெட்டுக்களுமே, திரு. மகாதேவன் முறையால், பொருள்பட வாசிக்க முடிகிறது என்பதற்கு ஐயமில்லை.

இவ்வகை எழுத்துக்கள் பெரும்பாலும் சமணப் பெரியார்களுக்கு ஏற்படுத்திய படுக்கைகளையே குறிக்கின்றன. ''அந்தக் குகைத் தளங்கள் சமணர்களது இருக்கைகள்தாமா, அன்றிப் பவுத்தர்களது இருக்கை களா?'' எனக் கேட்போரும் உண்டு. என் கருத்து மிகமிகப் பெரும் பாலான தளங்கள் சமண முனிவர் இருக்கைகளே! அபூர்வமாக ஒன்றிரண்டு பவுத்தர்கள் தங்கிய இடமாகவும் இருக்கலாம். அந்த விவாதம் இங்கே இப்பொழுது வேண்டாம். இந்த எழுத்துக்களை இதுகாறும் ஆராய்ந்த முன்னையோர் 'தமிழகத்தில் உள்ள பிராம்மி எழுத்துக்கள்' என்றே குறிப்பிட்டனர். திரு ஐ. மகாதேவன் இவ்வெழுத்தைத் 'தமிழ்-பிராம்மி' எனக் குறிக்கிறார்.

'பிராம்மி' என்ற சொல் பிராகிருத மொழி வழிவந்த சம்ஸ்கிருதச் சொல். ''பிராம்மி'' என்ற சொல்லுத்து வரிவடிவம் (Script) என்றே பொருள். எனவே, தமிழ்-பிராம்மி என்றால் தமிழ் எழுத்து என்றுதானே பொருள்படும்?

அசோகன் கல்வெட்டுக்கள் அனைத்தும் இருவேறு எழுத்துக்களில் உள்ளன. பொதுவாக அவற்றைத் 'தம்ம லிபி' என்றாலும், 'பிராம்மி', 'கரோஷ்டி' என இருவகைப்படுத்தப்படுவதை நாம் மனத்தில் கொள்ள வேண்டும். 'சமவயங்கன சுத்து' என்ற சமண நூலும், 'லலித விஸ்தாரம்' என்னும் பவுத்த நூலும் அவ்வெழுத்துக்களைப் 'பிராம்மி', 'கரோஷ்டி' எனப் பெயர் கூறுகின்றன. இரண்டுமே பழைய நூல்கள் என்றாலும் 'சமவயங்கன சுத்து' இரண்டிலும் முந்தியதாகும். அந்நூலில் 18வித

எழுத்துக்கள் குறிக்கப்படுகின்றன. அதிலிருந்து அக்காலத்தில் பதினெட்டு வித எழுத்துக்களும் நடைமுறை வழக்கில் இருந்தன என்று கருதுதலே தகும்.

இதுவரை கிடைத்துள்ள கல்வெட்டுக்களைப் பார்த்தால் 'பிராம்மி', கரோஷ்டி என்னும் இரண்டும் அல்லாமல் வேறு எழுத்துக்கள், அல்லது முறைகள், உள்ளதை அறியலாம். பட்டிப்புரோலு எழுத்துக்கும் தமிழக எழுத்துக்கும் சில வேறுபாடுகளுடன் கூடிய ஒருவித ஒற்றுமை காணக் கிடக்கிறது. பட்டிப்புரோலு எழுத்து பழந்தமிழ் எழுத்தின் கால்வழி என்றே கருதுகிறேன். அவ்வெழுத்தைப் போலவே பட்டிப்புரோலு எழுத்துக்களின் உருவம் காணப்படுகிறது. ஆனால், 'ம' என்ற உயிர்மெய் எழுத்துத் தலைகீழாகக் காணப்படுகிறது. 'ஆ' உயிரேற்ற உயிர்மெய் நெடில் எழுத்துக்களும் சிறிது வேறுபட்டுக் காணப் படுகின்றன. இவற்றையெல்லாம் கூர்ந்து ஆயும்போது பிராம்மி, கரோஷ்டி அல்லாமல் இந்தியாவில் வேறுவகை எழுத்துக்களும் முற்காலத்தில் இருந்தமை புலப்படும். எனவே, தமிழகத்தில் அந்நாளில் வழக்கிலிருந்த எழுத்தைப் "பிராம்மி" எனப் பெயர் கூறுவது சரியன்று; தவறு. சமண நூல்களில் காணப்படுவதுபோல அதைத் "தாமிழி" எனக் கூறுவதுதான் பொருத்தமானது என்பது திரு ஆர். நாகசாமியின் கருத்து. அதை நான் முற்றிலும் உடன்படுகிறேன்.

தாமிழி என்பதைப் பவுத்த நூல்கள் 'த்ராமிளி' எனக் குறிக்கும். இதைத் 'த்ராவிடி' எனவும் சிலர் குறிப்பர். திராவிட தேயத்தில் வழங்கியது என்ற பொருளில் த்ராவிடி எனக் கூறினர் எனக் கொள்ளலாம். இங்கே நாம் பிறிதொன்றையும் புலப்படுத்திக் கொள்ள வேண்டும்.

நாம் சிறப்பாகத் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய நான்கையும் சேர்த்தே திராவிடம் எனக் குறிக்கிறோம். கல்வெட்டு ஆராய்ச்சியிலிருந்து ஒரு பேருண்மை நமக்குப் புலப்படுகிறது. கி.பி. 4.5ஆம் நூற்றாண்டை ஒட்டியே கன்னடமும் தெலுங்கும் வளரத் தொடங்கின. அதற்கு முன்னர் அவ்விரு மாநிலங்களிலும் பிராகிருதமே பெருவழக்கிலிருந்திருக்கிறது என்பது கல்வெட்டுக்களால் புலனாகிறது. காலப்போக்கில் இப்பிராகிருத மொழியே நிலப் பகுதிக்கேற்ப ஹளே கன்னடமாகவும், தெலுங்காகவும் பரிணமித்தது என்று கொள்ள

வேண்டியிருக்கிறது. மொழியில் உள்ள சொற்களை ஆயும்போது தமிழ்மொழிச் சொற்கள் தேய்ந்தும், சிதைந்தும் எண்ணற்றவை அவ்விரு மொழிகளுள்ளும் காணக்கிடக்கின்றன. தமிழ் உறவை விட்டுப் பிராகிருதத் தொடர்பைக் கொண்டனர் என்றும் கொள்ளலாம். அம்மாநிலங்களின் தென்பகுதியில் தமிழ்ச் சொற்களின் தொடர்பு பெருகிக் காணப்படுகிறது. தெற்கிலிருந்து வடக்கிலும் மேற்கிலும் செல்லச்செல்லத் தமிழ்ச்சொல் அருகி வருகிறது. மகாராஷ்டிரம், ஒரிஸ்ஸா மாநிலங்களை ஒட்டிய பகுதிகளில் அம்மொழிச் சொற்களின் எண்ணிக்கை பெருகிக் காணப்படுகிறது.

தென்பகுதியில் மலையாளம் கி.பி. 9ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் தான் தனி மொழியாக இயங்கத் தொடங்கிற்று என்ற உண்மையைக் கல்வெட்டுக்களும் உணர்த்துகின்றன.

இவற்றையெல்லாம் நாம் ஆழ்ந்து, நுணுகி ஆயும்போது கிறிஸ்து பிறப்பதற்கு முன்பும், கிறிஸ்து பிறந்து முன்னூறு ஆண்டுகள் வரையும் இந்தியாவில் வழங்கிய மொழிகள் இரண்டே என்னும் முடிவுக்கே வர வேண்டியவர்களாக உள்ளோம். அவை பிராகிருதமும், தமிழுமே என்பது கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் வெளியான சாதவாகனர்களின் நாணயங்களில் ஒருபுறம் பிராகிருதமும், மறுபுறம் தமிழும் இருப் பதிலிருந்து நன்குணரலாம். வடமொழி-தென்தமிழ் என்ற இருமொழிப் பெயரே பல பழ நூல்களில் காணப்படுகின்றமை இக்கருத்தை வலியுறுத்துவதாகும்.

இந்தியாவின் வடபகுதி மிகப் பரந்த நிலமாதலால் பிராகிருதம், அவ்வப் பகுதிகளுக்கும் ஏற்ப, 'கௌடி', 'பாஞ்சாலி', 'மாகதி', 'மைதிலி', 'அவதி', 'மகாராஷ்ட்ரி' போன்ற வெவ்வேறு பெயர் களுடனும் ஒரு சில வேற்றுமைகளுடனும் பரிணமித்தது. பின்னர்க் காலப்போக்கில் அதுஅது தன்னைத்தானே வளர்த்துக்கொண்டு மூலத் தனி மொழிகளாக ஆயிற்று.

தமிழ்நாட்டில் தமிழ் சிறந்து விளங்கிற்று. முடி வேந்தரும் குறுநில மன்னரும் கழகங்கள் வைத்து மொழி வளர, கலை வளர, அரும் பணியாற்றினர். சமண முனிவர்கள் ஆற்றிய பணி ஒப்பற்றது. தமிழகம் பல மாநிலங்களாகப் பிரிந்திருந்தது. நிலத்திற்கேற்ப அக்காலத்திலேயே சிற்சில வேறுபாடுகள் காணப்பட்டன.

தமிழ்நாட்டிற்கு வடக்கே வாழ்ந்தவர்கள் நம் மொழியைத் 'தாமிழம்' என வழங்கினர். பிராகிருத மொழியில் 'ழ' இன்மையால் 'தாமிளம்' எனக் குறிக்கலாயினர். இதுவே பின்னர், 'த்ராமிடம்' என்றாகி இன்று 'த்ராவிடம்' எனத் திரிந்தது. அதை நாம் தவறெனல் கூடாது. அது அவர்கள் மொழிநிலை. அவரவரும் தத்தம் மொழிமரபுக்கேற்பவே சொற்களை வழங்க வேண்டும்.

"வடசொல்-கிளவி வட எழுத்து ஒரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல் ஆகும்மே"

(தொல்-சொல்-9-5)

என்ற விதிக்கேற்ப 'லக்ஷ்மணன்' என்ற சொல்லை இலக்குவன் என்றும் விபீஷணன் என்ற சொல்லை வீடணன் என்றும் தற்பவமாக்கிக் கம்பன்தானும் கையாளவில்லையா? ஆதலால் அக்காலத்தில் திராவிடம் என்றது தமிழையே குறிக்கும்.

சங்க காலம் என்பது ஏறக்குறைய, கிறிஸ்துவாப்பத்தின் தொடக்கம் வரை நிலவிய காலம் எனலாம். அக்காலத்தே நிலவிய நாகரிகம் இரண்டே. ஒன்று பிராகிருத நாகரிகம்; மற்றது தமிழ் நாகரிகம். எனவே, அக்காலத்தில் தமிழ்மொழியை எழுதப் பயன்படுத்திய வரிவடிவைத் 'தாமிழி' என வடபுலத்தார் குறித்தது சரியே!

உண்மையாகச் சொல்ல வேண்டுமானால், அந்தக் காலத்து எழுத்தையும் நான் 'தமிழ்' என்றே இங்கு குறிக்க வேண்டும். தமிழ் என நான் சொல்வேனானால் பலருக்கும் இன்றைக்குள்ள தமிழ் வரிவடிவமே அகத்தில் காட்சியளிக்கும். தாமிழி என்னும் அவ் வரிவடிவமே பல்வேறு மொழி வரிவடிவத்திற்கும் அடிப்படையாக நின்று உதவியது என்பது என் கருத்து. புதிது புதிதாகக் கண்டுபிடிக்கப்படும் கல்வெட்டுக்கள் என் கருத்துக்கு மேலும் அரண் செய்கின்றன. அவற்றை யெல்லாம் ஈண்டு விரிக்க இயலாதன்றோ?

கி.பி. ஆறாம் நூற்றாண்டிலிருந்து தமிழ் மொழியை எழுத இரு வித எழுத்துக்கள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. ஒன்றைத் 'தமிழ்' என்றும், மற்றதை 'வட்டெழுத்து' என்றும் கூறுவர். அதே காலத்தில் தமிழகத்தில் சம்ஸ்கிருதத்தை எழுத நம்மவர் தமிழோடு இயைந்த ஒரு தோற்றத்துடன் ஒருவித எழுத்தை உண்டாக்கிக் கொண்டனர். அதைக்

கிரந்த எழுத்து என்றனர். இந்த மூவகை எழுத்துக்களும் பண்டையத் 'தாமிழி'யிலிருந்தே தோன்றியன. இங்ஙனம் பலவற்றிற்கும் தாய் எழுத்தாக விளங்கும் அதைப் பழம் பெருமை மிக்க, உலகறி பெயரான 'தாமிழி' என்றே நாமும் குறிப்பது பொருந்தும் என்றே கருதுகிறேன்.

இன்று நமக்குக் கிடைக்கிற முழுமையான இலக்கணங்களுள்ளே காலத்தால் பழமையானது தொல்காப்பியமே. அதுவே முதல் நூல் என நம்புவாரும் உண்டு. நிச்சயமாக அது முதல் நூல் அல்ல; அதற்கு முன்னர்த் தோன்றிய இலக்கண நூல்கள் தமிழ் மொழியிற் பற்பல இருந் திருக்கின்றன. தொல்காப்பியத்தை ஊன்றிக் கற்போரும், பார்ப்போரும் என் கருத்தை உடன்படவே செய்வர்.

**''மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த**
**தொல்காப்பியன் எனத் தன் பெயர் தோற்றி,**
**பல்புகழ் நிறுத்த படிமையோன்,**
**செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு**
**முந்து நூல் கண்டு, முறைப்பட எண்ணி,**
**எழுத்தும், சொல்லும், பொருளும் நாடிப்**
**புலம் தொகுத்தோனே''**

என்று பனம்பாரனார் சொன்ன பாயிரத்தாலும், நூலுள் ஆங்காங்கே ''என்மனார் புலவர்'', 'என மொழிப', 'என்ப', 'எனச் சொல்லினர்' என்றெல்லாம் தொல்காப்பியனே கூறுவதாலும் தொல்காப்பியத்திற்கு முன்னே பல நூல்கள் தமிழ் மொழியில் இருந்தன என்பது ஐயத்திற்கே இடமில்லா ஒன்று.

'' '(அ முதல்) ஔகார இறுவாய் பன்னீர் எழுத்தும் உயிர்' என மொழிப''

'' 'அ இ உ எ ஒ என்னும் அப்பால் ஐந்தும் ஓர் அளபு இசைக்கும் குற்றெழுத்து' என்ப''

'' 'ஆ ஈ ஊ ஏ ஓ ஐ ஔ என்னும் அப்பால் ஏழும் ஈர் அளபு இசைக்கும் நெட்டெழுத்து' என்ப''

என்பன தொல்காப்பியச் சூத்திரங்கள். எனவே, உயிர் பன்னிரண்டு; அவற்றுள், குறில் ஐந்து; நெடில் ஏழு என்ற வரையறை தொல் காப்பியர்க்கு முன்னமேயே (எத்துணைக் காலத்திற்கு முன் என்பது

இன்றுணர்ந்து உரைக்குமாறில்லை) ஏற்பட்டுவிட்டதெனக் கொள்ள வேண்டும். என்னதான் குறைத்து மதிப்பிட்டாலும் தொல்காப்பியனுக்கு ஒரு நூற்றாண்டாவது முற்பட்ட காலத்திலேயே அவ்வரையறை ஏற்பட்டுவிட்டது என்று கொள்வதே சரியாகும்.

இங்கே இரண்டு எழுத்துக்களைப் பற்றியே குறிப்பாக நாம் கவனிக்க வேண்டும். ஐ, ஔ இரண்டும் உயிர் எழுத்துக்கள்தாமா? அவை பிற எழுத்தின் உதவி இன்றித் தாமே ஒலிக்க வல்லனவா? இல்லை என்றே கூற வேண்டும். அ+இ=ஐ; என்றும் அ+ஊ=ஔ என்றும் முன்னையோர் அமைத்திருக்கிறார்கள். பின்னர் ஒலிக்கு ஏற்ப அ+ய்=ஐ என்றும் அ+வ்=ஔ என்றும் கொண்டிருக்கிறார்கள். ஐ என்பது ஒரு கூட்டெழுத்து. மேற்பகுதி 'அ'வையும் கீழ்ப்பகுதி 'ய்'யையும் கொண்டு அமைக்கப்பட்டது. இப்படியேதான் 'ஔ'வும். அ+ஊ=ஔ ஆயிற்று.

*(1966 அக்டோபர் 8, 9 தேதிகளில் சென்னையில் நடைபெற்ற கல்வெட்டுக் கருத்தரங்கில் பேசியதன் சாரம் இக்கட்டுரை)*



# தமிழ் மாதங்களின் பெயரும் – காரணமும்

ஓர் ஆண்டைப் பன்னிரண்டு மாதங்களாக வகுத்தனர் பண்டையோர். காலக் கணிதமுறை சந்திரனை அடிப்படையாகக் கொண்டும் சூரியனை அடிப்படையாகக் கொண்டும் இருவகையாகக் கணிக்கப் படும். சூரியனை அடிப்படையாகக் கொண்டு கணிக்கும் நெறிக்கு ''சவுரமானம்'' என்பது பெயர்; மேட முதல் மீனம் இறுதியாக உள்ள பன்னிரண்டு இராசி வீடுகளிலும் சூரியன் தங்கியிருப்பதை ஒவ்வொரு மாதமாகக் கணிப்பர். நியாயமாகச் சொல்ல வேண்டுமென்றால், அதை மாதம் எனாது ஞாயிறு அல்லது இரவி என்றே சொல்லவேண்டும். இந்த நெறி மலையாளத்தில் மேட ஞாயிறு, சிங்க ஞாயிறு, மீன ஞாயிறு எனச் செம்மையான முறையில், இன்றும் நடைமுறை வழக்கில் இருப்பதைக் காணலாம். தமிழ்நாட்டில் காணப்படும் பிற்காலக் கல்வெட்டுகளில் இம்முறை காணப்படுகிறது.

சந்திரனை அடிப்படையாகக் கொண்டு கணிக்கப்படும் நெறி ''சாந்திரமானம்'' எனப்படும். சாந்திரமான நெறியில் மாதத்தை நிர்ணயிக்கும் முறை இருவகைப்படும். ஒன்று நிறைமதி (பௌர்ணமி) யையும், மற்றொன்று உவாமதி (அமாவாசை)யையும் இறுதி நாளாகக் கொண்டு கணிக்கப்பெறும். முன்னதை ''பூர்ணிமாந்தமுறை'' என்றும், பின்னதை ''அமாந்தமுறை'' என்றும் நூலோர் கூறுவர்.

பண்டைத் தமிழர்கள் சாந்திரமான நெறியில் பூர்ணிமாந்த முறையையே கடைப்பிடித்து மாதங்களை வகுத்தனர். நிறைமதி (பௌர்ணமி) எந்த நட்சத்திரத்துடன் கூடி நின்றதோ அந்த நட்சத்திரத்தின் பெயரையே அந்த மாதத்தின் பெயராக அமைத்தனர்.

உதாரணமாகச் சித்திரை மாதம் என்றால் சித்திரை நட்சத்திரத்திலே திங்கள் (பூர்ணச்சந்திரன்) கூடியிருப்பது என்பது பொருள்.

முன்னாளில் தமிழாண்டு தை முதல் மார்கழி ஈறாகவும், ஆவணி முதல் ஆடி ஈறாகவும் இருவேறு நிலையில் கணிக்கப்பட்டு, வழக்கில் இருந்து வந்திருக்கிறது. பின்னர்க் கணிதத் துறையிலே ஏற்படும் சில சங்கடங்களைத் தவிர்ப்பதற்காக, இன்றுள்ள நெறியல் மேடத்துக்குச் சூரியன் வரும் நாள்முதல் மீனத்தைப் பிரியும் நாள்வரை ஓர் ஆண்டாகக் கணிக்கப்பட்டது. இம்முறைதான் இன்றைய வழக்கில் இருந்து வருவதாகும். ஆனாலும் பெயரைமட்டும் மாதம், மதி, திங்கள் என்றே வழங்கி வருகிறோம்.

மேட ஞாயிற்றைச் சித்திரை மாதம் என்றும், இடப ஞாயிற்றை வைகாசி மாதம் என்றும், மிதுன ஞாயிற்றை ஆனி மாதமென்றும், கடக ஞாயிற்றை ஆடி மாதமென்றும், சிங்க ஞாயிற்றை ஆவணி மாதமென்றும், கன்னி ஞாயிற்றைப் புரட்டாசி மாதமென்றும், துலா ஞாயிற்றை ஐப்பசி மாதமென்றும், விருச்சிக ஞாயிற்றைக் கார்த்திகை மாதமென்றும், தனுசு ஞாயிற்றைத் தை மாதமென்றும், கும்ப ஞாயிற்றை மாசி மாதமென்றும், மீன ஞாயிற்றைப் பங்குனி மாதமென்றும் கூறி வருகிறோம். இனி இம்மாதங்களின் பெயர்க் காரணத்தைப் பார்க்கலாம்.

சித்திரை நட்சத்திரத்தில் முழு மதி கூடியது வரை உள்ள காலப் பகுதி சித்திரைத் திங்கள் ஆகும். வைகாசி (விசாகம்) நட்சத்தித்தில் முழு மதி கூடியது வரை உள்ள காலப் பகுதி வைகாசித் திங்கள் ஆகும். ஆனி (மூலம்) நட்சத்திரத்தில் முழு மதி கூடியதுவரை உள்ள காலப் பகுதி ஆனித்திங்கள் ஆகும். ஆடி (உத்திராடம்) நட்சத்திரத்தில் முழு மதி கூடியது வரை உள்ள காலப் பகுதி ஆடித்திங்கள் ஆகும். ஆவணி (அவிட்டம்) நட்சத்திரத்தில் முழு மதி கூடியதுவரை உள்ள பகுதி ஆவணித்திங்கள் ஆகும். புரட்டாசி (பூரட்டாதி) நட்சத்திரத்தில் முழு மதி கூடியதுவரை உள்ள காலப் பகுதி புரட்டாசித் திங்கள் ஆகும். அற்பசி (அசுவதி) நட்சத்திரத்தில் முழு மதி கூடியதுவரை உள்ள காலப் பகுதி அற்பசித் திங்கள் ஆகும். கார்த்திகை (கிருத்திகை) நட்சத்திரத்தில் முழு மதி கூடியதுவரை உள்ள காலப் பகுதி கார்த்திகைத் திங்கள் ஆகும். மார்கழி (மிருக சீருஷம்) நட்சத்திரத்தில் முழு மதி கூடியதுவரை உள்ள காலப் பகுதி மார்கழித் திங்கள் ஆகும். தை (பூசம்) நட்சத்திரத்தில் முழு

மதி கூடியது. வரை உள்ள காலப் பகுதி தைத் திங்கள் ஆகும். மாசி (மகம்) நட்சத்திரத்தில் முழு மதி கூடியது வரை உள்ள காலப் பகுதி மாசித் திங்கள் ஆகும். பங்குனி (உத்தரம்) நட்சத்திரத்தில் முழு மதி கூடியதுவரை உள்ள காலப் பகுதி பங்குனித் திங்கள் ஆகும்.

இச்சந்தர்ப்பத்தில் மற்றொன்றையும் நாம் தெரிந்துகொள்வது பயனுடையதாகும். உரோமர்கள், கிரேக்கர்கள், வடநூலோர் போன்றோர் சாந்திரமான நெறியை வகுத்துப் பின் அதைக் கைவிட்டு சவுரமான நெறியில் காலத்தைக் கணிக்கத் தொடங்கிய பிறகும் திங்கள் என்ற சொல்லின் அடிப்படையில் பிறந்த மந்த் (Month) மாஸம் என்ற பெயர்களாலேயே மாதத்தைக் குறித்து வருகின்றனர்.

## கிழமை

ஒரு கிழமை அதாவது ஒரு வாரம் ஏழு நாட்கள் கொண்டது. நம்மைப் பொறுத்தவரை ஞாயிறு தோன்றுவது முதல் மறுநாள் ஞாயிறு தோன்றுவது வரை ஒரு நாள் ஆகும். கிறித்துவ முறைப்படி நள்ளிரவு முதல் மறுநாள் நள்ளிரவு வரை ஒரு நாள் என்பர். முகம்மதிய முறைப்படி ஞாயிறு மறைவது முதல் மறுநாள் ஞாயிறு மறைவது வரை ஒரு நாள் என்பர். எல்லோருக்குமே கிழமையும், நாட்பிரிவும், பெயர்க் காரணமும் கிட்டத்தட்ட ஒன்றாகவே அமைந்திருப்பது மகிழ்ச்சியையும் வியப்பையும் தரக் கூடியதாகும். ஏழு நாட்களுக்கும், சாயாக் கிரகங்களான இராகு, கேது ஆன இரண்டும் ஒழிந்த ஏழு கோள்களை (கிரகங்களை) முன்னிட்டே பெயரிடப்பட்டன. எல்லாவற்றையும் ஈர்த்துக் கொண்டு நிற்கும் சூரியனை முன்னிட்டு முதல் நாள் 'ஞாயிறு' எனப்பட்டது. சூரியனின் ஒளியைப் பிரதிபலிப்பதும் நமக்கு மிக அண்மையில் இருப்பதுமான சந்திரனை முன்னிட்டு இரண்டாவது நாள் 'திங்கள்' எனப்பட்டது. போருக்கு அதிதேவதையானதும் பூமியின் மைந்தன் எனக் கருதப்படுவதும் ஆன அங்காரகனை முன்னிட்டு மூன்றாவது நாள் 'செவ்வாய்' எனப்பட்டது. அறிவு, இன்பம் முதலிய வற்றை நல்கும் புதனை முன்னிட்டு நான்காவது நாள் 'புதன்' எனப் பட்டது. கலைப்புலமையும், பாப நீக்கமும் அருளும் குருவை முன்னிட்டு ஐந்தாம் நாள் 'வியாழன்' எனப்பட்டது. மழை, பொருள் முதலியவற்றை அருளும் சுக்கிரனை முன்னிட்டு ஆறாம் நாள்

'வெள்ளி' எனப்பட்டது. பலவித இன்னல்களை விளைவிக்கும் சனீச்சுரனை முன்னிட்டு ஏழாம் நாள் 'சனி' எனப்பட்டது.

இவ்வேழு நாட்களும் கிழமையின் கூறுகள். ஆனதால் ஞாயிற்றுக் கிழமை, திங்கட்கிழமை, செவ்வாய்க்கிழமை, புதன்கிழமை, வியாழக் கிழமை, வெள்ளிக்கிழமை, சனிக்கிழமை என்பது நமது மரபு. இங்ஙனமே அவற்றை ஆதித்ய வாரம், ஸோம வாரம், மங்கள வாரம், புத வாரம், குரு வாரம், சுக்ர வாரம், சனி வாரம், என முறையே வடநூலோர் கூறுவர். நம்மைப் போலவே அவற்றை Sunday, Monday, Tuesday, Wednesday, Thursday, Friday, Saturday என day என்றே மேலை நாட்டவர் பெயர் குறிப்பது ஈண்டு அறியற்பாலதாம்.



# தமிழக உணவு

**த**மிழகத்தில் உணவு வகைகள் பலப் பலவாய் பெருகி விளங்கு வதைப் பலவகை நூல்களிலும், கல்வெட்டுக்களிலும் காணலாம். உட்கொள்ளுதலுக்குரிய பல சொற்களும், ஆக்கும் முறை பற்றிய பல சொற்களும், உண்டிகள் பற்றிய பல பெயர்களும் அறியக் கிடக்கின்றன. அவற்றைப் பார்த்தால் எத்துணை அருமையாக முன்னையோர் எதையும் அளந்துரைத்திருக்கின்றனர் என்பது தெற்றெனப் புலனாகும்.

முதலில் உட்கொள்ளுதலுக்குரிய சொற்களைக் காண்போம். அவை அருந்தல், உண்ணல், உறிஞ்சல், குடித்தல், தின்றல், துய்த்தல், நக்கல், நுங்கல், பருகல், மாந்தல், மெல்லல், விழுங்கல் எனப் பன்னிரு வகையாகும்.

**அருந்தல்** = மிகச் சிறய அளவே உட்கொள்ளுதலை இச்சொல் குறிக்கும். (உதாரணம்: 'மருந்து அருந்தினான்')

**உண்ணல்** = 'துற்றல்' என்றும் கூறப்படும், இச்சொல் பசி தீர உட்கொள்ளுவதைக் குறிக்கும். (உ-ம்: 'வயிறார உண்டான்.')

**உறிஞ்சல்** = வாயைக் குவித்துக் கொண்டு நீரியற் பண்டத்தை ஈர்த்து உட்கொள்வதை இச்சொல் குறிக்கும். (உ-ம்: 'தாமரைத் தண்டு கொண்டு நீரை உறிஞ்சினான்.')

**குடித்தல்** = நீரியல் உணவைச் சிறிது சிறிதாகப் பசி நீங்க உட்கொள்வதை இச்சொல் குறிக்கும். (உ-ம்: 'கஞ்சி குடித்தான்; கூழ் குடித்தான்.')

**தின்றல்** = திற்றி என்றும் கூறப்படும் இச்சொல் கொறித்தலையும், அஃறிணை உயிர்கள் தீனி கொள்வதையும் குறிக்கும். (உ-ம்: முறுக்குத் தின்றான்;)

**துய்த்தல்** = சுவைத்து மகிழ்ந்து உட்கொள்வதை இச்சொல் குறிக்கும். (உ-ம்: பல் சுவைப் பண்டம் துய்த்தான்.)

**நக்கல்** = நாக்கினால் துளாவி உட்கொள்வதை இச்சொல் குறிக்கும். (உ-ம்: தேனை வழித்து நக்கினான்.)

**நுங்கல்** = முழுவதையும் ஒரு வாயில் ஈர்த் துறிஞ்சி விரைந்து உட்கொள்ளுவதை இச்சொல் குறிக்கும். (உ-ம்: 'நூறு குடம் கள் நுங்கினான்.')

**பருகல்** = நீரியற் பண்டத்தைச் சிறுகக் குடிப்பதை இச்சொல் குறிக்கும். (உ-ம்: 'நீர் மோர் பருகினான்.')

**மாந்தல்** = பெரு வேட்கையுடன், மடமடவென்று, உட்கொள்வதை இச்சொல் குறிக்கும். (உ-ம்: 'வந்தன எல்லாம் மாந்தி வளர்பசி யோங்க நின்றான்.')

**மெல்லல்** = கடிய பண்டத்தைப் பல்லால் கடித்துத் துகைத்து உட்கொள்வதை இச்சொல் குறிக்கும். (உ-ம்: சீடையை மென்று தின்றான்.)

**விழுங்கல்** = பல்லுக்கும், நாக்கிற்கும் வேலையே இன்றித் தொண்டை வழி குபுக்கென்று உட்கொள்வதை இச்சொல் குறிக்கும். (உ-ம்: 'மாத்திரை விழுங்கினான்.')

இங்ஙனம் பன்னிரு வகையாக உட்கொள்ளுவதை அறிந்தபின் உணவுப் பண்டங்களை ஆக்கும் முறை பற்றிய பெயர்களைக் காண்போம். அவை இருபத்திரு வகைப்படும். அவையாவன: அவித்தல், இடித்தல், கலத்தல், காய்ச்சல், கிண்டல், கிளறல், சுடுதல், திரித்தல், துகைத்தல், துவட்டல், பிசைதல், பிழிதல், பொங்கல், பொரித்தல், மசித்தல் வடித்தல், வதக்கல், வறுத்தல், வாட்டல், வார்த்தல், வெந்நீர்ப்படுத்தல், வேக வைத்தல்.

**அவித்தல்** = ஆவியால் வேகச் செய்வது இது. இது மூவகையாகும். குழாய் முதலியவற்றுள் செலுத்தி பிட்டு முதலியன அவிப்பது பெய்தவித்தல் என்றும், முகந்து இட்டு, இட்டலி போன்றவற்றை அவிப்பது இட்டவித்தல் என்றும், கட்டை, துணித் துளைகளின் வழிப்பிழிந்து இடியாப்பம் போன்றவைகளை அவிப்பது பிழிந்தவித்தல் என்றும் சொல்லப்படும்.

**இடித்தல்** = அரிசி முதலியவற்றை மாவாகவோ அன்றி அவலாகவோ இடித்து ஆக்குவது இடித்தலாம்.

**கலத்தல்** = பல பண்டங்களைச் கலந்து நீர்மோர் போன்றவற்றை ஆக்குவது கலத்தலாம்.

**காய்ச்சல்** = கஞ்சி, பால் போன்றவற்றைச் சூடேற்றிப் பக்குவம் செய்தல் காய்ச்சலாம்.

**கிண்டல்** = நீரிலோ அன்றி நெய்யிலோ குறிப்பிட்ட பண்டத்தையிட்டு நீர் வற்றக் கிண்டிக் கொண்டேயிருந்து களி, கும்மாயம் போன்ற வற்றை ஆக்குதல் கிண்டலாம்.

**கிளறுதல்** = தாளித்தபின் அதனுடன் அவல், பயறு போன்றவற்றை இட்டு, தாளிப்பும் தாளிக்கப்படுவதும் கலந்து விளங்குமாறு செய்வது கிளறுதலாம்.

**சுடுதல்** = அப்பளம், சோளம், பனம்பழம் முதலியவற்றை நேரடியாக நெருப்பின் தணலிலிட்டு வேகுமாறு பக்குவம் செய்தல் சுடுதலாம்.

**திரித்தல்** = பாலில் பிறை மோரிட்டுத் தயிராக மாறச் செய்வது போன்றவை திரித்தலாம்.

**துகைத்தல்** = ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட பண்டங்களை நசுக்கிக் கலந்து ஒன்றாகி விடுமாறுமல்லித் துகையலைப் போலச் செய்வது துகைத்தலாம்.

**துவட்டல்** = நீரில் வெந்த வாழைப்பூ, கீரை போன்றவற்றைத் துவண்டு செறியுமாறு பக்குவப்படுத்துவது துவட்டலாம்.

**பிசைதல்** = வேங்கைமா, தயிர்ச்சோறு முதலியவற்றை அவ்வவற்றிற் குரியவற்றைப் பெய்தும் தூவியும் கையால் நன்கு குழைந்து கலக்குமாறு பிசைவது பிசைதலாம்.

**பிழிதல்** = தேனடை, பழம் முதலியவற்றின் சாற்றைக் கையால் அல்லது துணி முதலிய கொண்டு சாறு வரச் செய்தல் பிழிதலாம்.

**பொங்கல்** = அரிசி போன்றவற்றைத் தனியாகவோ அன்றி, பருப்பு முதலியன கூட்டியோ் கொதிநீர் வடிக்காமல் அளவாக நீர் பெய்து ஆக்குவது பொங்கல் ஆம்.

**பொரித்தல்** = (1) கடுகு முதலியவற்றைக் காயும் எண்ணெயில் இட்டுத் தாளித்து நீரில் வெந்த அல்லது பச்சைக்கறி காய்களை அத்துடன் இட்டு வேண்டிய நேரம் அடுப்பில் இருக்கச் செய்து ஆக்குவதும்.

(2) அரிசி, நெல், கடலை போன்றவற்றை வரை யோட்டிலிட்டுப் பொரியச் செய்வதும் பொரித்தல் ஆம்.

**மசித்தல்** = கீரை, கிழங்கு போன்றவற்றை நன்கு வேக வைத்து அவற்றை மத்துக் கொண்டு மசித்துக் குழையச் செய்வது மசித்தலாம்.

**வடித்தல்** = அரிசி முதலியவற்றைக் கொதிநீரில் இட்டு, வெந்த பின்னா் உபரி நீரை வடித்து விட்டுச் சோறாக்கல் வடித்தலாம்.

**வதக்கல்** = காய்கறி முதலியவற்றை எண்ணெயிலிட்டு நீர்ச்சத்து நீங்கி அவை வதங்கித் துவளுமாறு ஆக்குவது வதக்கலாம்.

**வறுத்தல்** = காய் கிழங்கு முதலியவற்றை நன்கு காயும் எண்ணெயில் இட்டு மொறமொறவென ஆமாறு ஆக்கல் வறுத்தலாம்.

**வாட்டல்** = பிஞ்சுக்காய், அல்லது பசுங்கதிர் போன்றவற்றை நெருப் பிலிடாது அதன் அனலில் வாட்டிப் பதமாய்ப் பக்குவம் செய்வது வாட்டல் ஆம்.

**வார்த்தல்** = நன்றாகக் காய்ந்த தோசைக்கல் போன்றவற்றில் கரைத்த மாவை வார்த்துத் தோசை, அப்பம் முதலியவற்றைச் சுடுவது வார்த்தலாம்.

**வெந்நீர்ப்படுத்தல்** = நன்றாகக் கொதிக்கும் நீரில் பழம், காய்கறி, முட்டை போன்றவற்றை இட்டு வேகும்படி செய்தல் வெந்நீர்ப் படுத்தலாம்.

**வேக வைத்தல்** = நெருப்பிலோ, அனலிலோ, கொதி நீரிலோ, ஆவி யிலோ, எண்ணெயிலோ, அன்றி வேறு வழியிலோ எப்பண்டத் தையும் பச்சைத் தன்மையிலிருந்து மாற்றி உண்ணத் தக்கதாய் வெந்ததாய்ச் செய்வது வேக வைத்தலாம்.

மேலே கண்ட இருபத்திரு வகையன்றி 'ஊற வைத்தல்' போன்ற வேறு முறைகளும் தமிழகத்தில் இருந்து வருவதை நாமறிவோம். உணவு வகைகளை நாம் பார்ப்போமானால் பலப் பல பெயர்களைக் காண்போம். இலக்கியம், கல்வெட்டு, நிகண்டுகள்

ஆகியவற்றில் எத்தனை எத்தனையோ உண்டிப் பெயர்களை நாம் காணலாம். அவற்றை முழுவதும் இக்கட்டரையில் அடக்கிவிட முடியாது. அதற்கெனத் தனி நூல் ஒன்றை எழுதினாற்றான் ஒருவாறாக முழு விளக்கம் கிட்டும். எனவே, ஓரளவு பழம் பெயர்களை அறிந்தமட்டும் காணலாம்.

**அக்காளி** = கோயிற் பிரசாதம்.

**அக்காரவடிசில்** = சர்க்கரைச் சோறு.

**அக்கிரம்** = பாயசம்.

**அடை** = பயறுகளும் அரிசியும் கலந்து ஆட்டிப் பிசைந்து வடை போலத் தட்டித் தோசைக்கல்லில் இட்டுச் சுடுவது இது.

**அதிரசம்** = அரிசி மாவும் சர்க்கரையும் ஏலம் முதலியனவும் கலந்து நெய்யில் பொரிப்பது இது.

**அப்பம்** = அரிசி, சர்க்கரை சேர்த்து தோசை போல வார்த்தெடுப்பது.

**அமுத கலசம்** = பூரணக் கொழுக்கட்டை போன்ற இதனுள் பூரணத் திற்குப் பதிலாக, பானகம் போன்ற பாகு இருக்கும்.

**அவல்** = ஊறிய நெல்லை இடித்து உமி போக்கிய ஒன்று.

**அவலமுது** = அவலைக் கொண்டு செய்யும் உணவு.

**அவித்துவையல்** = வெந்து குழைந்த, கூட்டுப் போன்ற ஒரு வகைக் கறி.

**அவிழ்** = சோற்றுப் பருக்கை.

**ஆணம்** = குழம்பு; குழம்பின் காய்.

**ஆப்பம்** = தோசை போன்றது மூடிச் செய்யப்படுவது.

**இட்டலி** = தமிழனின் தனிப்பெரும் சிற்றுண்டி.

**இடி** = அரிசி மா.

**இடியாப்பம்** = அரிசி மாவால் செய்யப்படுவது.

**இலட்டுகம்** = உருண்டை வடிவாயமைந்த, மாவால் செய்த, இனிப்புத் தின்பண்டம்.

**இலைக்கறி** = கீரையால் செய்த கறி.

**இறைச்சோறு** = பெரியோர்க்கு அல்லது வந்து தங்கினோர்க்கு அளிக்கும் சோறு (?)

**உக்காரி** = உக்காரை என்றும் கூறப்படும் இது பயற்றம் பருப்பில் செய்த கேசரி போன்ற இனிப்புத் தின்பண்டம்.

**உழுத்தங்களி** = 'களி' காண்க.

**உழுத்தப்பம்** = ஊத்தப்பம் என இன்ற வழங்கப்படுவது.

**எச்சோறு** = ஏச்சோறு, எற்சோறு என்றும் வழங்கப்படும் இது பொதுப் பணியாளர்க்கு முறை வைத்து அளிக்கப்படும் உணவு.

**எண்ணாப்பூரி** = பூரிகை எனவும் வழங்கப்பெறும் இது ஒரு வகை இனிப்பு அப்பமாகலாம் (?) பூரி = நெல்.

**எள்ளுண்டை** = எள்ளுப் பொரியும், கருப்பட்டிப் பாகும் சேர்த்து உருட்டியது இது.

**எள்ளோரை** = எள் கலந்த சோறு; சித்திரான்னங்களுள் ஒன்று.

**ஐங்கறியமுது** = இலைக்கறி, தெற்றிக்கறி, புழுக்குக்கறி, புளிங்கறி, பொரிக்கறி என்ற ஐந்தினையும் ஒருசேரக் குறிப்பது இது.

**கஞ்சி** = தானியம் அல்லது மாவைக் கொதிநீரில் இட்டு நன்கு வெந்தபின், குடிக்கும் எளிய உணவு.

**களி** = அரிசி, உழுந்து, கேழ்வரகு, சோளம் போன்ற தானியங்களின் திரித்த மாவை நீரில் கரைத்துக் கிண்டி (அல்வா போல) ஆக்குதல். கெட்டிபட்ட கூழ் என்னலாம் இதை. எனவே களித் தின்னல் என்பது மரபு.

**கறி** = பல முறைகளில் சமைக்கப்படும் வியஞ்சனங்களின் பொதுப் பெயர்.

**கும்மாயம்** = பாசிப்பயிற்று மாவில் கருப்பட்டி கலந்து கிண்டி வெண்ணெய்போல அமைப்பது.

**கூழ்** = களி போன்றதே; ஆனால், அல்வா போல அல்லாமல் பாயசம் போல நீர்த்திருக்கும். 'எனவே கூழ் குடித்தல்' என்பதே மரபு.

**கொதி** = நைவேத்தியத்திற்குரிய வெண்சோறு; ஒரு குறிப்பிட்ட அளவுள்ளதாம்.

**கொழுக்கட்டை** = இது பலவகைப்படும். பிடி கொழுக்கட்டை, பூரணக் கொழுக்கட்டை, பிட்டுக் கொழுக்கட்டை, நீர்க் கொழுக்கட்டை, மோர்க் கொழுக்கட்டை, பாற் கொழுக்கட்டை, பதநீர்க் கொழுக் கட்டை என்றெல்லாம் பேர் பெறும் அவை. மோதகம் என்றும் பெயர் பெறும்.

**கொற்று** = கத்திரிக்காய் போன்றவற்றைத் தீயிற் சுட்டு புளியுடன் பிசைந்து ஆக்கும் ஒரு வகைத் துவையல். இன்று கொஸ்து என வழங்கும்.

**சட்டிச் சோறு** = ஆக்கிய சட்டியுடன் கூடிய சோறு.

**சம்பா** = அரிசிச் சோற்றுடன் மிளகு சீரகப் பொடியும் உப்பும் கலந்து நெய் விட்டுக் கிளறுவது.

**சுருளமுது** = வெற்றிலை பாக்குப் பட்டியல்.

**சோறு** = நெல்லரிசி, புல்லரிசி, வரகரிசி போன்றவற்றைப் பொங்கி அல்லது வடித்துச் சமைத்தது.

**தட்டை** = முறுக்கு மாவை அப்பளம் போலத் தட்டி எண்ணெய்விட்டுப் பொரித்தெடுப்பது.

**தயிர் அமுது** = தயிர்.

**தயிர்ப்போனகம்** = தயிர்ச் சோறு.

**தயிர்ப்போனக அமுது** = தாளித்து ஆக்கிய சிறந்த தயிர்ச் சோறு.

**தளிகை** = பலவிதமாய் தாளித்து அமைத்த சித்திரான்ன வகைகள்.

**திருப்போனகம்** = ஐவகைக் கறியும், பாயசமும், வடையும், பருப்பு, நெய்யுடன் வைத்துச் செய்யும் நைவேத்தியம்.

**தினைமா** = தினையின் மா; தேனொடு கூட்டிப் பிசைந்ததையும் குறிக்கும்.

**துகையல்** = நன்றாக அறைபட்டு வெண்ணெய் போல் ஆவது. மல்லித் துகையல் போல்வது.

**துவை** = புளி சேர்த்து அறைக்கும் துகையல் அல்லது புளிக்கறி.

**தெற்றிக்கறி** = கறிவகையில் ஒன்று; மசித்தலாயிருக்கலாம் (?)

**தேங்குழல்** = கட்டைத் துவாரத்தின் வழிப்பிழிந்து செய்வது.

**தொக்கு** = நீர்ச்சத்து அகல வதக்கி, நன்கு நசுக்க இடித்துக் கலக்கச் செய்வது இது.

**தோசை** = அரிசி, உழுந்து கலந்த மாவால் சுடுவது இது. கோதுமை, கேப்பை, பயறு முதலிய கொண்டும் செய்யப்படும்.

**நழுவமுது** = அரிசிக் களி.

**நாட்டிருவமுது** = பகல் நேரத்து உணவு; நாள்தோறும் படைக்கும் உணவு.

**நீச்சோறு** = நீர் விட்டுக் குளிர்ந்த சோறு.

**பங்சவமுது** = பஞ்சாமிர்தம்.

**பண்ணிகாரம்** = வெள்ளைப்பண்ணிகாரம், கற்கண்டுப் பண்ணிகாரம், பயற்றம் பண்ணிகாரம், பாற்பண்ணிகாரம், தேங்காய்ப் பண்ணிகாரம், காரப் பண்ணிகாரம் எனப் பலவகைப்படும். இது எண்ணெய் நிறைந்த இருப்புச் சட்டியில் பக்குவம் செய்தரைத்துக் கரைத்த மாவைக் கரண்டியால் ஊற்றி வேக வைப்பது.

**பழையது** = நீர் ஊற்றிய முன்னைநாட் சோறு.

**பாற்சோறு** = பாலில் வெந்த இனிப்புச் சோறு, க்ஷீரான்னம், கற்கண்டுச் சோறு என்றெல்லாம் இன்று வழங்கும்.

**பிண்டி** = தினைமாவாற் செய்யப்பட்ட உண்டி.

**பில்லடை** = இடியப்பம் போன்று பிழிந்து காய வைத்து அப்பளம் போல எண்ணெயிலிட்டுப் பொரித்தது.

**புழுக்குக் கறி** = குழைய வேகவைத்துச் செய்த வாழைக்காய், கருணைக்கிழங்கு போன்ற கறி.

**புளிங் கறி** = புளிச் சாற்றில் வெந்த அல்லது பொறித்த கறி.

**புளியோரை** = வெந்த புளிச்சாறு எண்ணெய் தாளிப்பு முதலியவற்றோடு பிசைந்த சோறு.

**பூரிகை** = எண்ணாப்பூரி காண்க.

**பெருஞ்சோறு** = மாண்டோர்களை முன்னி. . டு வழங்கும் சோறு.

**பொங்கல்** = குறித்த அளவு நீர் வைத்து கஞ்சி வடிக்காமல் அரிசியைச் சமைப்பது.

**பொடி** = சோறு, பலகாரத்துடன் கொள்ளத்தக்கது. மிளகு பொடி, கறிவேப்பிலைப் பொடி, பருப்புப் பொடி என்று எத்தனையோ வகைப் பொடிகள் உண்டு.

**பொடித்தூவல்** = காய் கிழங்குகளை மிகப் பொடியாக நறுக்கிப் பொரிக்கும் ஒருவகைக் கறி.

**மசியல்** = கிழங்கு, கீரை, காய்கறிகளை நன்றாகக் குழைய அவித்த மத்திட்டுக் கடைந்து மசியச் செய்யும் ஒரு வகைக் கறி.

**மணகோலம்** = ஓமப் பொடி பிழிந்து அதனுடன், பொரிகடலையும், தேங்காய்ப் பல்லும் சேர்த்து வெல்லப்பாகு கூட்டிச் செய்வது இது. மனோகரம் என்றும் பெயர் பெறும்.

**முறுக்கு** = கையால் முறுக்கிச் சுற்றுவதும், கட்டைத் துவார வழி பிழிவதுமான திின்பண்டம்.

**வடகம்** = அரிசி முதலான தானிய மாவைக் கூழ் ஆக்கி அதை வெயிலில் வார்த்தும், பிழிந்தும், கிள்ளியிட்டும் உலர்த்திச் செய்வது வடகம். இதை வடாம் என்றும் கூறுவர்.

**வடை** = உளுந்து வடை, ஆமை வடை, காரா வடை, கற்கண்டு வடை, பாகு வடை எனப் பல வடைகள் உண்டு. கையினால் தட்டி எண்ணையில் வேக வைப்பது இது.

**வற்றல்** = காய் கறிகளை அல்லது கிழங்குகளை மோரில் ஊற வைத்து, அல்லது நீரில் வேக வைத்து உலரச் செய்தல் வற்றலாம்.

**வறளி** = காய் கறி முதலியவற்றைப் பச்சையாக வெயிலில் உலர வைப்பது வறளியாம்.

**வியஞ்சனம்** = பலவகைக் கறிகளையும் குறிக்கும் சொல்.

**வெச்சமுது** = சூடு தணியாத உணவு.

**வெட்டிச்சோறு** = ஊர்ப் பணியாளனான வெட்டிக்கு அளிக்கும் முறைச்சோறு.

**வெஞ்சனம்** = 'வியஞ்சனம்' காண்க.

**வெம்புழுக்கு** = வெறுஞ்சோறு; வெண்சோறு.



# தமிழகத்து அளவை முறை

**அ**ளவை முறை ஏழு வகைப்படும். அவைபற்றி பண்டை நிகண்டுகளும் இலக்கண இலக்கிய நூல்களும் பேசுகின்றன. முதலில் அவற்றின் பெயர்களையும், அடுத்து அவை ஒவ்வொன்றிற்கும் பொருளையும், அதன்பின் அவற்றின் விளக்கத்தையும் இக்கட்டுரையில் காணலாம்.

ஏழு வகை அளவையாவன : (1) எண்ணம், (2) நிறுத்தல், (3) முகத்தல், (4) பெய்தல், (5) நீட்டல், (6) தெறித்தல், (7) சார்த்தல், என்பனவாம்.

**Systems of Measurement of The Tamils**

Systems of measurement were seven in number. They are referred to in old dictionaries, grammars and treatises. In this essay, it is proposed to enumerate first their names, then their purpose and thirdly their discriptions.

The Seven systems of measurement are:

| | |
|---|---|
| (1) எண்ணல் | Counting (or) Computation. |
| (2) நிறுத்தல் | Weights. |
| (3) முகத்தல் | Liquids. |
| (4) பெய்தல் | Grain measure. |
| (5) நீட்டல் | Linear measure. |
| (6) தெறித்தல் | Time measure. |

(7) சார்த்தல் — Saarthal (This was a system peculiar to the Tamils wherein sound, colour, shape etc., are compared with certain more popular objects).

1. **எண்ணல் :** - ஒன்று, இரண்டு, மூன்று என்ற எண்ணாகவோ, வீசம், அரைக்கால், கால் என்ற இலக்கமாகவோ, அல்லது பதாதி, சேனாமுகம், குமுதம் எனத் தொகையாகவோ எண்ணிக் கணக்கிடுவது எண்ணலளவை ஆகும்.

2. **நிறுத்தல்:-** குன்றிமணி, வராகனெடை, பலம், வீசை, துலாம் என, படிக்கல் கொண்டு தராசிலிட்டு நிறுப்பது நிறுத்தலளவை ஆகும்.

3. **முகத்தல்:-** பால், மோர், நெய் போன்ற நீரியல் பொருளை உழக்கு, படிகளால் மொண்டு எடுத்து அளப்பது முகத்தலளவை ஆகும்.

4. **பெய்தல்:-** நெல் முதலியவற்றை படி, மரக்கால்களில் சொரிந்து அளப்பது பெய்தலளவை ஆகும்.

5. **நீட்டல்:-** விரல், சாண், முழம் என, நீளத்தை கை அல்லது கோல்களால் அளப்பது நீட்டலளவை ஆகும்.

6. **தெறித்தல்:-** நொடி, நாழிகை, நாள் என, காலத்தைக் கணித்து அளப்பது தெறிப்பளவை ஆகும்.

7. **சார்த்தல்:-** சுரம், ஒலி, நிறம், உரு முதலியவற்றைக் கூறி ''இப்படி'' ''அதைப் போல'' என்று, ஒப்பிட்டு அளப்பது சார்த்தலளவை ஆகும்.



# நீர் நிலைப் பெயர்களும் விளக்கமும்

"இலஞ்சி, பண்ணை, ஏல்வை, குண்டம், அலந்தை, பொய்கை, வலயம், சுனை, சிறை, பட்டம், உடுவை, பயம்பு, படுகர், குட்டம், தாங்கல், கோட்டகம், ஏரி, உவளகம், மடு, ஓடை, படு, குடம், வாவி, தடாகம், ஆவி, குழி, கிடங்கு, சலதரம், கேணி, பணை, கயம், பல்வலம், நளினி, இலந்தை, மூழி, குழி, குளம் நீர்நிலைப் பெயரே''

என, பிங்கலத்தை நீர்நிலைக்கு 38 பெயர் கூறுகிறது. சூடாமணி 29 பெயர்களைக் கூறுகிறது. ஆனால், பிங்கலந்தையில் காணப்படாத வட்டம் (வலயமாக இருக்கலாம்) சூடாமணியில் காணப்படுகின்றது. நாம தீபத்திலோ 35 பெயர்கள் உள்ளன. அவற்றில் புட்கரணி, ஊருணி, வங்கம், அலங்கல், சரசு ஆகிய ஆறு புதுச் சொற்கள் காணப்படுகின்றன. ஆனால், பொய்கையை உணர்த்தும் சரசு, திருக்குளத்தை உணர்த்தும் புட்கரணி போன்ற சம்ஸ்கிருதச் சொற்களைக் கொண்டு நீர்நிலையை வேறுபடுத்திக் கொள்ள முடியாது.

இவற்றை எல்லாம் மனத்துட்கொண்டு இயன்றவரை பல்வேறு சொற்களையும் பொறுக்கி ஊகித்தும், உசாவியும், ஆய்ந்து அடியிற் கண்டவண்ணம் நீர்நிலைப் பெயர்களுக்கு விளக்கம் தரப்பட்டிருக் கின்றன.

1. அகழி **(Moat)** — கோட்டையின் புறத்தே அகழ்ந் தமைக்கப்பட்ட நீர் அரண்.

2. அருவி **(Water-fall)** — மலை முகட்டுத் தேக்க நீர் குத்திட்டுக் குதிப்பது.

| | | |
|---|---|---|
| 3. | ஆழிக்கிணறு (Well in sea-shore) | கடலருகே தோண்டிக் கட்டிய கிணறு. |
| 4. | ஆறு (River) | பெருகி ஓடும் நதி. |
| 5. | இலஞ்சி (Reservoir for drinking and other purposes) | பல்வகைக்கும் பயன்படும் நீர்த் தேக்கம். |
| 6. | உறை கிணறு (Ring well) | மணற்பாங்கான இடத்தில் தோண்டி சுடுமண், (அல்லது சிமிந்தி) வளையமிட்ட கிணறு. |
| 7. | ஊருணி (Drinking water tank) | மக்கள் பருகுநீர் உள்ள நீர்நிலை. |
| 8. | ஊற்று (Spring) | அடியிலிருந்து நீர் ஊறுவது. |
| 9. | ஏரி (Irrigation tank) | வேளாண்மைப் பாசன நீர்த்தேக்கம். |
| 10. | ஓடை (Brook) | அடியிலிருந்து ஊற்றெடுக்கும் நீர் எப்பொழுதும் பொசிந்து வாய்க் கால்வழி ஓடும் ஒரு நீர் நிலை. |
| 11. | கட்டுக்கிணறு (Built-in-well) | சரளை நிலத்தில் வெட்டி கல், செங்கல்லால் அகச்சுவர் கட்டிய கிணறு. |
| 12. | கடல் (Sea) | சமுத்திரம். |
| 13. | கம்வாய் (Irrifation tank) | பாண்டி மண்டலத்தில் ஏரிக்கு வழங்கும் பெயர். (கம் - நீர், வாய் - இடம்) |
| 14. | கலிங்கு (Sluice with many ventways) | ஏரி முதலிய பாசன நீர்த்தேக்கம் உடைப்பெடுக்காமல் இருப்பதற்கு, முன் எச்சரிக்கையாகக் கற்களால் உறுதியாகக் கட்டப்பட்டுப் பலகை களால் அடைத்துத் திறக்கக் கூடிய தாய் உள்ள நீர் செல்லும் அமைப்பு. |

| | |
|---|---|
| 15. கால் (Channel) | நீரோடும் வழி. |
| 16. கால்வாய் (Supply channel to a tank) | ஏரி, குளம், ஊருணிக்கு நீர் ஊட்டும் பாய்கால் வழி. |
| 17. குட்டம் (Large pond) | பெருங்குட்டை. |
| 18. குட்டை (Small pond) | சிறிய குட்டம், மாடு முதலியன குளிப்பாட்டும் நீர் நிலை. |
| 19. குண்டம் (Small pool) | சிறியதாயமைந்த குளிக்கும் நீர் நிலை. |
| 20. குண்டு (Pool) | குளிப்பதற்கேற்ற ஒரு சிறு குளம். |
| 21. குமிழி (Rock-cut-well) | நிலத்தின் பாறையைக் குடைந்து அடி ஊற்றை மேலெழும்பி வரச் செய்த குடை கிணறு. |
| 22. குமிழி ஊற்று (Artesian fountain) | அடிநிலத்து நீர் நிலமட்டத்திற்குக் கொப்புளித்து வரும் ஊற்று. |
| 23. குளம் 1. (Bathing tank) | ஊர் அருகேயுள்ள மக்கள் குளிக்கப் பயன்படும் நீர் நிலை. |
| 24. குளம் 2. (Irrigation tank) | கொங்கு மண்டலத்தைச் சார்ந்த இடங்களில் ஏரிக்கு வழங்கும் பெயர். |
| 25. கூவம் (Abnormal well) | ஓர் ஒழுங்கிலமையாத கிணறு. |
| 26. கூவல் (Hollow) | ஆழமற்ற, கிணறு போன்ற ஒரு பள்ளம். |
| 27. கேணி (Large well) | அகலமும் ஆழமும் உள்ள பெருங்கிணறு. |
| 28. சிறை (Reservoir) | தேக்கப்பட்ட பெரிய நீர் நிலை. |
| 29. சுனை (Mountain pool) | மலையிடத்து இயல்பாய் அமைந்த நீர் நிலை. |

| | | |
|---|---|---|
| 30. | சேங்கை (Tank with duckweed) | பாசிக்கொடி மண்டிய குளம் |
| 31. | தடம் (Beautifully constructed bathing tank) | அழகாக நாற்புறமும் கட்டப்பட்ட குளம். |
| 32. | தளிக்குளம் (Tank surrounding a temple) | கோயிலின் நாற்புறமும் சூழ்ந்தமைக்கு அகழி போன்ற நீர் நிலை. |
| 33. | தாங்கல் (Irrigation tank) | இப்பெயர் தொண்டை மண்டலத்தை ஒட்டிய பகுதியில் ஏரியைக் குறிக்கும் |
| 34. | திருக்குளம் (Temple tank) | கோயிலின் அணித்தே அமைந்த நீராடும் குளம். இது புட்கரணி எனவும் பெயர் பெறும். |
| 35. | தெப்பக்குளம் (Temple tank with inside pathway along parapet walls) | ஆளோடியுடன் கூடிய, தெப்பம் சுற்றி வரும் குளம். |
| 36. | தொடுகிணறு (Digwell) | ஆற்றின் அகத்தும், அணித்தும், அவ்வப்பொழுது மணலைத் தோண்டி நீர் கொள்ளும் இடம். |
| 37. | நடைகேணி (Large well with steps on one side) | இறங்கிச் செல்லும் படிக்கட்டமைந்த பெருங்கிணறு. |
| 38. | நீராவி (Bigger tank with centre Mantapam) | மைய மண்டபத்துடன் கூடிய பெருங்குளம். ஆவி என்றும் கூறப்படும். |
| 39. | பிள்ளைக்கிணறு (Well in middle of a tank) | குளம், ஏரியின் நடுவில் அமைந்த கிணறு. |
| 40. | பொங்கு கிணறு (Well with bubbling spring) | ஊற்றுக்கால் கொப்புளித்துக் கொண்டேயிருக்கும் கிணறு. |

| | | |
|---|---|---|
| 41. | பொய்கை (Lake) | தாமரை முதலிய மண்டிக் கிடக்கும் இயற்கையாய் அமைந்த நீண்டதொரு நீர் நிலை. |
| 42. | மடு (Deep place in a river) | ஆற்றிடையுள்ள அபாயமான பள்ளம். |
| 43. | மடை (Small sluice with single ventway) | ஒரு கண்ணேயுள்ள சிறு மதகு. |
| 44. | மதகு (Sluice with many ventways) | பல கண்களையுள்ள ஏரி நீர் வெளிப்படும் பெரிய மடை; அடைப்புத் திறப்புள்ளது. |
| 45. | மறுகால் (Surplus water channel) | அதிக நீர் கழிக்கப்படும் பெரிய வாய்க்கால். |
| 46. | வலயம் (Round tank) | வட்டமாய் அமைந்த குளம். |
| 47. | வாய்க்கால் (Small water course) | ஏரி முதலிய நீர் நிலைகளிலிருந்து பயிருக்கு நீர் பாயும் சிறிய கால். |
| 48. | வாவி (Stream) | ஆற்று நீர் அல்லது தன் ஊற்று நீரால் நிரம்பி மறுகால் வழி மிகை நீர் வெளிச் செல்லுமாறு அமைந்த அல்லது அமைக்கப்பட்ட நீர் நிலை. |
| 49. | புனற்குளம் (Tank of rain water) | நீர் வரத்து மடையின்றி மழை நீரையே கொண்டு விளங்கும் குளிக்கும் நீர் நிலை. |
| 50. | பூட்டைக் கிணறு (Well with water-lift) | கமலை நீர் பாய்ச்சும் அமைப்புள்ள கிணறு. |



# பெருமை மிகு திருவாசகம்

இலக்கியம், இலக்கணம், சிற்பம், இசை, கூத்து ஆகிய துறைகளில் தமிழர்கள் ஒப்பற்ற செல்வர்கள். அழிவற்ற கவிதைகள் நமக்கு ஆயிரமாயிரம் உண்டு. அறம்-பொருள்-இன்பம்-வீடு என்னும் நான்கு பெரும் பயன்களையும் எய்துவிப்பதே தமிழர் இலக்கியத்தின் பணி.

காவிய மண்டலத்தில் கம்பனும், அற உலகில் வள்ளுவனும் எங்ஙனம் நிகரற்றவர்களோ, அங்ஙனம் மணிவாசகப் பெருமான் பக்திப்பேருலகில் ஒப்பற்று விளங்குபவர். அவர் பாசுரங்கள் யாவும் வண்ணமான மலர்கள் சேற்றில் முளைத்த செந்தாமரைகள் அல்ல. அவையாவும் கண்ணீர்ப் பொய்கையில் முளைத்தெழுந்த கன்னித்தமிழ் மலர்கள். ஊனினை உருக்கி, உள்ஒளி பெருக்கி, உலப்பிலா ஆனந்தமாய தேனினைச் சொரியும் செவிநுகர் செந்தமிழ்க்கனிகள், அறிவால் அளந்து யாத்த சொற்கலை அல்ல அவை; அருளால் தெளிந்து வடித்த அற்புதங்கள் ஆம்.

அண்டங்கள் அனைத்தையும் ஆக்கிக் காத்தருளும் ஆதிமுதல்வன் அருள் பெற்றவராமையால் அண்ட முதல் அனைத்தையும் அளந்தறிந்துணர்த்தும் பேரறிவு நிரம்பி நிற்கிறார். அண்டங்களின் நிலையையும் தொகையையும் கணித்துக் கூறும் அருமையை ஆழ்ந்து சிந்திக்கும் போது 'ஐன்ஸ்டீன்' நம் கண்முன் நிற்பார்.

**''அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்**
**அளப்பு அரும்தன்மை; வளப்பெரும் காட்சி**
**ஒன்றனுக்கு ஒன்று நின்ற எழில் பகரின்**
**நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன!''**

ஐன்ஸ்டீன் முதலிய விஞ்ஞானப் பெரும்பேராசான்கள் "1010 million" என்று கணிப்பர். ஆனால், தொலைநோக்கி முதலிய எக்கருவி

யுதவியுமின்றி ''நூற்றொருகோடி'' என்று, கணிப்பதுடன், ''அதற்கும் அதிகப்படப் பெருகி நிற்கின்றன'' என்று கூறும் மணிவாசகப் பெருமானின் நுண்மாண் நுழைபுலம் நமக்கெல்லாம் ஆச்சரியத்தை மட்டுமல்ல- அச்சத்தையே விளைக்கிறது.

அங்ஙனமே அறிவியலார் பொருள்களை, தாவரம்-சங்கமம்; சரம்-அசரம்; movable-Immovable; இயங்கு திணை-இயங் காத்திணை; என்று இருகூறாகவே வகுத்தனர். இப்பெருமான் அவ்விரு வகையைப் பொதுவாகக் கூறுவார். ஆனாலும் மூன்றாக ஆக்கிய பெருமை இவர்க்கே என்பதை நூலறிவுடையோர் மறுக்கமாட்டார்கள்.

**''நால்-திசை, நடப்பன நடாஅய்,**
**கிடப்பன கிடாஅய்,**
**நிற்பன நிறீஇ''**

- அண்.108 110

நடப்பன, நிற்பன, கிடப்பன என்று மூவகையாகப் பிரித் துணர்த்தும் தன்மையை எண்ணிப் பார்க்கும்பொழுதுதான் இப்பாகுபாட்டின் சிறப்பெலாம் தெரியவரும்.

நடப்பன = மனிதர், விலங்கு, பறவை, புழு ஆகிய சீவன்கள்யாவும். நிற்பன = மரம், செடி, கொடி, புல், மலை ஆதிய சீவன்கள் யாவும். கிடப்பன = ஆட்டுக்கல், குந்தாணி, நாற்காலி, சட்டி முதலிய ஜடப்பொருள்கள் யாவும்.

நிற்பன வளரும்; உயிர்க்கும்; அழும்; சிரிக்கும்; உண்ணும்; உறிஞ்சும்; ஆனால், கிடப்பன உயிரற்றவையன்றோ? எம்மாறுதலும் அடையாதன அன்றோ? தேடிச் சென்றும் கிட்டற்கரிய சிவனருள் நாடி வந்தும் நலன் தரும் என்பர் பெரியோர். எந்தைபிரான் மணிவாசகருக்கு அவனருள் நாடி வந்தே ஈர்த்து ஆட்கொண்டது. அதனால் அழியா அறிவும் ஆனந்த வாரிதியில் முழுகித் திளைத்த எம்மான் ஆக்கிய அற்புதத் திருக்கோயில் இரண்டு ஒன்று திருவாசகம். மற்றையது திருப்பெருந்துறை. கற்றோர்க்குக் கடைத்தேற்றம் அளிப்பது மலங் கெடுக்கும் மணிவாசகமாம், சொற்கோயில். கற்றோர்க்கும், கல்லார்க்கும் சதியளிப்பது திருத்தலமாம் பொய்கைத் திருப்பெருந்துறையில் நிறை மலர்க் குருந்தம் மேவிய சீர் அருத்தனுக்கு அடிகள் ஆக்கிய கற்கோயில்.

பாடல் பெற்ற தலங்களினும் இது பெரும் சிறப்புடையது. மூவர் முதலிகள் பாடல்களால் எல்லாக் கோயிலும் பவித்திரமடைந்தன. ஆனால், இத்தலம் ஒன்றுதான் மணிவாசகப் பெருமானின் பாடல்களால் சிறந்ததுடன் அவர் திருப்பணியிலும் கீர்த்தி மிக்குடையதாயிருக்கின்றது. சமயாசாரியர் கட்டிய கோயில் வரலாறு அறிந்தவரை இது ஒன்றுதான். ஆண்டவனைப் போலவே, அவன் திருப்புகழை நமக்கெல்லாம் உணர்த்தி நிற்கும். தெய்வத் தீந்தமிழ்ப் பாசுரங்களும் என்றும் அழியா அமரத்துவம் பெற்றவை. ஒலியும், ஒலியால் அமையும் மொழியும், காலமுள்ளளவும் நிலைத்து நிற்பவை. எனவே, திருவாசகத் திருக்கோயிலைப் புதுக்கவோ, பழுதுபார்க்கவோ வேண்டிய நிலை ஏற்படாது. ஏதோ சிலர் இலக்கண நெறியறியாது, பழம் பிரதிகளை நோக்காது திருவாசகத்தையும் திருத்தமுற்பட்டனர். அப்பாவச் செயலை அறிஞர் உலகம் ஒப்பவுமில்லை. மறுக்கவும் செய்கிறது. சைவர்கட்குச் சிவனுக்கு அடுத்தபடி திருவாசகமே! காலத்தால், அளவால் மேம்பட்ட தேவாரத் திருமுறைகளும் திருவாசகத்தின்படியைப் பெறவில்லை. இப்படிச் சொல்வதால் தேவாராதிகளின் சிறப்பைக் குறைத்துவிட்டதாக யாரும் கருதிவிடலாகாது. உதாரணமாக ஒன்றை மட்டும் காட்டி என் கருத்தின் உண்மையைப் புலப்படுத்திக் கொள்ளுவேன்.

சிவதீட்சை பெற்று, சிவபூசை எழுந்தருளச் செய்து கொள்வதை நம்மில் பலரும் அறிவோம். சிவபூசை எடுத்துக் கொள்ளுபவர்கள் தேவார முதலிய எந்தச் சுவடியையும் பூசை மூர்த்தியாக எடுத்துக் கொள்ளும் மரபில்லை. இலிங்கம் அல்லது திருவாசகத்தைத்தான் இறையுருவாய்க் கொண்டு வழிபாடாற்றும் நெறி தொன்றுதொட்டே வழிவழி வரும் வழக்கமாகும். ''இதன் பொருள் என்னை?'' என்றார்க்கு தில்லைக்கூத்தனையே காட்டியருளிய கதை நமக்கெல்லாம் தெரிந்ததுதானே? அன்றியும் வாதவூரர் சொல்லப் படி எழுதியவன் பரமனே என்ற செய்தியும் நமக்குத் தெரியும்.

இங்ஙனம் திருவாசகப் பெருமைகளை எடுத்துரைத்துக் கொண்டே சென்றால், நாளும் பொழுதும் போதா. ''திறமான புலமை எனில் வெளிநாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும்'' என்பான் பாரதி. அந்தக் கணக்கின்படி ஆங்கில நாட்டுப் பேரறிஞர் ஒருவர் தமிழகம் வந்தார். தமிழர்தம், கலை-அறிவு-நாகரிகம்-பண்பாடு ஆகியவற்றைக் கண்டு வியந்தார்; மகிழ்ந்தார் ஈடுபட்டார்; அவற்றிற்கு ஆட்பட்டார்.

தமிழர் தம் வாழ்வு நெறி அவரைப் பெரிதும் ஈர்த்துப் பிடித்துக் கொண்டுவிட்டது. அவர்தான் தன் சமாதிக் கல்லில் ''தமிழ் மாணாக்கன் ஒருவன் இங்கே துயில்கொள்ளுகிறான்'' என்று எழுதப் பணித்துவிட்டு மாண்ட ஜி.யு.போப் என்னும் கிறிஸ்தவக் குருவாவார்.

கிறிஸ்தவம் பரப்பத் தமிழகம் வந்தார். தமிழைக் கற்றார்; தமிழுக்கே பித்தர் ஆனார். தமிழ்க்கு அரும்பணி பல புரிந்தார். தமிழர் நெறியை உலகுக்குணர்த்த அவாவினார். உலகப் பொதுமறையாம் திருக்குறளை மொழிபெயர்த்தார். அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாலை உலகிற்குணர்த்தியாயிற்று என்ற ஆறுதல் கொண்டார். முக்கால் முடிந்தது; முழுதும் முடியவில்லையே என்று சிந்திக்கலானார். ஆம்; 'வீடு' பற்றிய தமிழர் உணர்வையும் எடுத்துக்காட்டினால் அன்றி நாற்பெரும் பயனாய்க் கணித்து வாழும் தமிழர் வாழ்வை முழுமையாய்க் காட்டிய நிறைவு ஏற்படாதென்ற முடிவுக்கு வந்தார்.

உலகம் மாயை என்ற கருத்து தமிழர்க்கு ஒவ்வாத ஒன்று. மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்; வாழவேண்டும்; என்பதே நம்மவர் நெறி. இதை வற்புறுத்தி நிற்பது திருக்குறள். அதை ஏற்று மகிழ்ந்தவர் போப் ஐயர். அதே கண்ணோட்டத்துடன் பார்க்கும்போது வீட்டு நெறியை உணர்த்த வல்லதொரு நூல் திருவாசகமே என்னத் தெளிந்தார். கிறிஸ்து பெருமான் மலைப் பொழிவைப்போலவே மணிமொழியும் அவர் உள்ளத்தை உருக்கிற்றென்பார். வேதாந்த-சித்தாந்த நூல்கள் பற்பலவும், தோத்திர-சாத்திர நூல்கள் பற்பலவும் இருக்கும்போது திருவாசகத்தை ஒரு பிறமதப் பிரசாரகர், குருவானவர், பேராசிரியராய் ஆக்ஸ்போர்டில் பிறங்கியவர் தேர்ந்தெடுத்தார்.

இதைவிடத் தமிழுக்கும் திருவாசகத்திற்கும் பெரும் பெருமை வேறென்ன இருக்க முடியும்?







# கம்பனும் சம்ஸ்கிருத மொழியும்

உலகில் உள்ள தொன்மையான மொழிகள் ஒரு சிலவற்றுள் நம் தமிழ் மொழியும் ஒன்று. இஃது ஒரு தனிச் செம்மொழி. எம்மொழிக்கும் இல்லாத சிறப்புக்கள் தமிழுக்கு மட்டுமே உண்டு. தனக்கே உரிய எழுத்துக்கள், எண்கள், இலக்கங்கள், குறுக்கங்கள், குறியீடுகள் முதலிய அனைத்தையும் கொண்ட மொழி தமிழே; தமிழ் ஒன்றே!

ஒருமொழிக்கு இலக்கணம் தோன்ற வேண்டுமானால் அதற்குப் பல ஆண்டுகட்கு முன்னமேயே இலக்கியங்கள் தோன்றியிருக்க வேண்டும். இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர்த் தோன்றிய இலக்கணங்கள் நமக்கு உண்டு. இன்று முழுமையாகக் கிடைக்கும் மிகப் பழைய இலக்கணம் தொல்காப்பியம்; அதுவும் முதல் நூல் அன்று. தொல்காப்பியச் சூத்திரங்கள் பல, 'என்ப', 'எனமொழிப', 'என்மனார் புலவர்' என்றெல்லாம் மொழிவதாலே அதற்கும் முற்பட்ட இலக்கண நூல்கள் சிலவோ அன்றிப் பலவோ இருந்திருக்க வேண்டும் என்று அறிகிறோம்.

மொழி இலக்கணம் மட்டுமின்றி, இசை இலக்கணம், நாடக இலக்கணம், கட்டட இலக்கணம், படிம இலக்கணம், அணி இலக்கணம் போன்ற பலவகை இலக்கணங்களும் தமிழர்க்கு இருந்தன; இருக்கின்றன. இவற்றையெல்லாம் ஓரளவு சிந்தித்தாலே தமிழின் தொன்மையும் வளமும் நன்கு புலப்படும்.

அப்படியானால் முன்னைப் பழமையான இலக்கியங்கள் யாவை? ஆயிரம் ஆயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட அவை என்னாயின?

இன்று நமக்குக் கிடைக்கும் தொன்மையான இலக்கியச் செல்வம் சங்கப் பாடல்களே. ஆனால் அவற்றுக்கு முந்திய இலக்கியங்கள் சங்கச் செய்யுள்கள் தோன்றியபின் பொலிவிழந்து போயினவோ, அன்றிப் போற்றிக் காப்பார் இன்றிப் பொன்றினவோ? புலப்படுமாறில்லை. இத்துணைக் கருத்தாழமும், பண்பாட்டு வளமும், நாகரிக மேம்பாடும் உடைய செய்யுள்கள் தோன்ற வேண்டுமானால் இவற்றிற்கு உரமிட்டு ஊட்டம் தந்த செய்யுள்கள் எத்தனை எத்தனையோ இருந்திருக்க வேண்டுமன்றோ?

இன்று நிலைபேறுடையனவாய் விளங்கும் பல நூல்கட்கும் சங்கச் சான்றோர் பாடல்களே முன்னோடி. சங்க காலத்தை ஒட்டித் தோன்றிய நூல்களுள் வள்ளுவப் பேரசான் வடித்தளித்த திருக்குறள் என்னும் அறநூலே ஒப்பேதுமில்லா துயர்ந்து விளங்குவது. பல்வேறு சிறப்புக் களால் தான் மங்காது நின்று நிலவுவதுடன், எத்தனையோ நீதி நூல்கட்கும், பிறவகை இலக்கியங்கட்கும் ஒளியூட்டி வழிகாட்டி நின்கிறது.

தமிழகப் பெரும் புலவர்கள் எல்லோரும் ஆழ்ந்து அகன்ற கல்வியறிவுடையவர்கள்; பல்வேறு கலைகளும் கற்றவர்கள்; தமிழும், சமஸ்கிருதமும் இருகண் என மதித்துக் கற்றுத் துய்த்துப் பயன் சுரந்தவர்கள்.

இங்ஙனம் வந்த தமிழ்ப் புலவர் குழுவிலே என்னப்பன் கம்பன் ஒருவன், அவன் சொல்லின் செல்வன்; கவி; மகாகவி; கவிச் சக்கரவர்த்தி; நாடகக் கலைவலான், பெருங்காப்பியம் அருளிய மாமேதை; எல்லாவற்றிற்கும் மேலாக, கல்வியிற் பெரியன்; கம்பன் பக்தியால் இப்படிச் சொல்லவில்லை. அவன் படைப்பாற்றலை, அவன் பல்கலை அறிவை, பழமொழிப் புலமையை, ஒப்பற்ற கவிதா சந்தத்தை, தத்துவ ஞானத்தைக் காணக் காண அவன்பால் ஏற்பட்ட பக்தி, பணிவார்ந்த பயபக்தி (Reverential fear) யாக மாறிவிட்டது.

**“இல்லாத, உலகத்து எங்கும் -,**
**இவன் இசைகள் கூரக்**
**கல்லாத கலையும், வேதக்**
**கடலுமே! என்னும் காட்சி”**

யான் அறிந்தவரை கம்பனிடத்திலேயே காணக்கிடக்கிறது. தமிழகத்தில் வாழ்ந்த எந்தப் பெரும் புலவரும், அவர்கள் தத்துவத் துறையில், பக்தித் துறையில், இலக்கியத் துறையில், இலக்கணத் துறையில் அல்லது பிறவேறு கலைத் துறையில் ஈடுபட்டவர்களாயினும் தமிழ் மொழியிலும் சமஸ்கிருத மொழியிலும் உள்ள பல்வேறு துறை நூல்களையும் நன்கு கற்றுத் தேறியவர்களாகவே இருந்திருக்கின்றனர். அகத்தியன் பற்றிக் கேட்கவே வேண்டாம். அவன் வகுத்த இலக் கணமான அகத்தியத்தில், இன்று உரையாசிரியர்களால் மேற்கோளாகக் காட்டப் பெறும் சூத்திரங்களே அவன் தன் பல்துறைப் புலமையையும் சம்ஸ்கிருதப் பாண்டித்தியத்தையும் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன. கம்பன் காலத்தில் 'அகத்தியம்' முழுதும் நின்று நிலவியிருக்க வேண்டும்.

அகத்தியன் மாணாக்கர்கள் பன்னிருவர் என்றும், அவர்களும் அகத்தியன் அடியொற்றி இலக்கண நூல் பல ஆக்கினர் என்றும் தக்க சான்றுகளால் அறியமுடிகின்றது. அவைகளுள் தொல்காப்பியன் ஆக்கிய நூலான தொல்காப்பியமே இன்று தலைசிறந்த முழு இலக்கணமாகச் சான்றோர்களால் கொள்ளப் பெறுகிறது. தொல்காப்பியன் சம்ஸ் கிருதத்தில் மிக்க பயிற்சியும் ஈடுபாடும் கொண்டவன். அவன் புகழ் பேசும் பனம்பாரனார் ''ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்'' (அதாவது இந்திரன் என்னும் பெரும் புலவனாற் செய்யப்பட்ட 'ஐந்திரம்' எனப் பெரிய சம்ஸ்கிருத இலக்கணத்தை நிரம்ப அறிந்த பழைய காப்பியக் குடியில் தோன்றியவன்) என்று பாயிரத்தில் பகர்கிறார்.

இங்ஙனமே பண்டைப் பெரும் புலவர்கள் யாவரும் தமிழ் சம்ஸ்கிருதம் ஆகிய இருமொழிகளிலும் பெரும்புலமை பெற்றுப் பிறங்கினர். கம்பன் என்னும் கவிச்சக்கரவர்த்தியும் தமிழ், சம்ஸ்கிருதம் மட்டுமின்றி வேறுசில மொழிகளும் கற்றுத் தேர்ந்துள்ளான். வேதம் உபநிடதம், கீதை உள்பட வானநூல், சிற்ப நூல், கட்டட நூல், இசை நூல், பரத நூல் முதலான பல நூல்களும் கற்றுத் தெளிந்திருக்கிறான். ஆனால் சிலர் உண்மையறியாமையாலோ, அல்லது ''அந்தணரல்லாதார் சம்ஸ்கிருதம் கற்கும் தகுதியில்லார்'' என்ற முறைகேடான கொள்கை காரணமாகவோ கம்பன் சம்ஸ்கிருதம் அறியான் என்று புனைந்துரைக்க முற்பட்டனர். வேதியர்கள் வான்மீகியின் மூலக்கதையைப் படித்துத் தமிழில் சொல்ல, கம்பன் இராமாவதாரத்தைக் கவிதையாக வார்த்தான் என்று கதைகட்டவும் தொடங்கினர்.

சம்ஸ்கிருதம் அந்தணர்க்கே உரிய தனிமொழியன்று, அது இந்தியரின் - அறிவாளிகளின் - பொதுமொழி. வேதமும் பிராமணர் களாலேயே செய்யப்பட்டதன்று. எல்லாப் பகுதி அறவோர்களின் ஆக்கத்தின் தொகுப்பே அது. பிராமணத்துவத்தை உண்டாக்கும் காயத்ரி மந்திரத்தை ஆக்கி உபகரித்த மகானான விஸ்வாமித்திரன் பிராமணன் அல்லன். வேதம் தமிழ் செய்த மாறனான நம்மாழ்வார் பிராமணர் அல்லர். வியாக்யானம் அருளிய பெரியார் ஒருவர் ''வேதம் கற்கும்போது தோன்றும் ஐயத்தை நீக்கித் தெளிவை அருள்வது திருவாய்மொழி'' எனப் போற்றி மகிழ்கிறார்.

இன்னும் எத்தனை எத்தனையோ பிராமணர் அல்லாத சம்ஸ்கிருதப் புலவர்களை அடுக்கிக் கொண்டே போகலாம். இன்றும் பல்வேறு பல்கலைக் கழகங்களில் சம்ஸ்கிருத, தத்துவ சமயப் பேராசிரி யர்களாகப் பிராமணர் அல்லாத பெருமக்கள் பதவி வகிக்கின்றார்கள். கேரளம் முதலான மாநிலங்களில் தீண்டத்தகாதவர்கள் என்று ஒதுக்கி வைக்கப்பட்ட பலர் சம்ஸ்கிருதப் பெரும்புலவராக இன்றும் விளங்குவதைக் காணலாம்.

எனவே தமிழகத்தில் முற்காலத்தில் சம்ஸ்கிருதம் எல்லோராலும் கற்றுவரப் பெற்றதென்பதும், பெரும் புலவர்கள் யாவரும் சம்ஸ்கிரு தத்தில் ஆழங்காற்பட்டவர்களாய் இருந்திருக்கின்றனர் என்பதும் பல்வேறு சான்றுகளால் நன்கு புலப்படுகின்றன. இனிக் கம்பனை நோக்குவோம்.

கம்பன் பேசுகிறான், ''இராமன் கதையை வான்மீகி, வசிட்டன், போதாயனன் என்ற மூவர் எழுதியுள்ளனர். அவற்றுள் காலத்தாலும், வளத்தாலும் முன்னுள்ள வான்மீகி ராமாயணத்தை அடியொற்றியே நான் இக்கதையைப் புலப்படுத்துகிறேன்'' என்று.

**''தேவ பாடையின் இக்கதை செய்தவர்**
**மூவ ரானவர் தம்முளும் முந்திய**
**நாவினான் உரையின்படி நான் தமிழ்ப்**
**பாவினால் இஃது உணர்த்திய பண்பு - அரோ''**

**பால.கா. பாயி : 10**

மேலும் பேசுகிறான், ''கோட்டம் அற்ற நான்கு அடிகளையுடைய ஸ்லோகங்களை முதலில் ஆக்கிய வான்மீகி எனச் சிறப்பித்துக்

கூறப்படுகிறவன், மேலோர்களும் பருகி மகிழுந்தரத்ததாய் (இராமாயணத்தை) ஆக்கினான். அங்ஙனம் அவன் புகழ்ந்த கோசல தேயத்தை ஊமை ஒருவன் பேசலானான் என்னுமாறு, அன்பு என்னும் மதுவை மண்டியதால், மொழியலானேன்'' என்று.

''வாங்கரும் பாதம் நான்கும்
வகுத்த வான்மீகி என்பான்
தீங்கவி செவிகள் ஆரத்
தேவரும் பருகச் செய்தான்
ஆங்கு, அவன் புகழ்ந்த நாட்டை
அன்பு எனும் நறவம் மாந்தி
மூங்கையான் பேசல் உற்றான்
என்னயான் மொழியல் உற்றேன்''

**பால. கா. நாட்டு 1**

வேறோர் இடத்தில் கூறுகிறான், ''இந்திரசித்துவுடன் சென்ற சேனையை அளந்துரைக்க என்னால் இயலாது, எனினும் புகழ் கொண்ட வான்மிகன் என்னும் சிறந்த வேதியன் 'அதன் தொகை நாற்பது வெள்ளம்' எனக் கூறினான். வேறு யார் அஃதை உணர்ந்து ''கணக்கிட வல்லவர்?'' என்று.

''அன்னானொடு போயின தானை அளந்து கூற
என்னால் அரிதேனும் இயம்பு வான்மீகன் என்னும்
நல்நான் மறையான் ''அது நாற்பது வெள்ளம்'' என்னச்
சொன்னான்; பிறர் யார் அஃது உணர்ந்து தொகுக்க வல்லார்''

**யுத். கா. நாகபா : 24.**

இங்கும், இவை போன்ற இடங்களிலும், கம்பனின் நேர் அனுபவம் பேசுகின்றதேயன்றிப் பிறர்வாய்க் கேட்ட செய்தி வெளிப்படவில்லை. இவை போல மேலும் பலப்பல இடங்களைக் காட்டலாம். விரிவஞ்சி எடுத்து, வான்மீகி சொல்லாத பலவற்றில் ஒன்றிரண்டை மட்டும் காட்டிவிட்டுக் கட்டுரையை முடிக்கிறேன்.

இரணியன் வதைப்படலம் கம்பனால் புகுத்தப்பட்ட ஒன்று; வான்மீகத்தில் இல்லாதது. இதில் கம்பனுடைய் உபநிடத ஞானமும், அதில் அவனுக்கிருந்த பேரீடுபாடும் மிக நன்றாக வெளிப்படுகின்றன. அன்றியும் வேத நெறியில் தோன்றிய மீமாம்சை, நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், வேதாந்தம் ஆகிய ஆறு வகைத்

தரிசனங்களில் அவனுக்கிருந்த தெளிந்த ஞானமும் நன்கு புலப்படுகிறது. இவற்றை எல்லாம் பிரகலாதன் வாய்மொழியாகக் கேட்கும்பொழுது நமக்கு சங்கரரும், ராமாநுஜரும் உபதேசிப்பதாகவே தோணுகிறது; சுவானுபவத் திருவாக்காவே மலர்ந்து மணம் பரப்புகிறது. கட்டிக் கொடுத்த சோற்று மூட்டையன்று என்பதும் தெற்றெனத் தெரிகிறது.

**''சாங்கியம், யோகம், என்று இரண்டு தன்மைய,**
**வீங்கிய பொருள் எலாம் வேறு காண்பன;**
**ஆங்கு அவை உணர்ந்தவர்க்கு அன்றி, அன்னவன்**
**ஓங்கிய தனிநிலை உணரற் பாலதோ?''**

**''அளவையான் அளப்பஅரிது; அறிவின் அப்புறத்து**
**உள;ஐயா! உபநிட தங்கள் ஓதுறு**
**கிளவிஆர் பொருள்களான் கிளத்து றாதவன்**
**களவையார் அறிகுவார். மெய்ம்மை கண்டிலார்''**

என்பன போன்ற கருத்துக்கள் பிறர் கூறக் கேட்டு எழுதக் கூடியனவா? நேர்மையாளர் சிந்திக்க வேண்டும்!

தமிழகத்தில் வழக்கொழிந்ததோ, அன்றி இன்றும் வழக்கில் இருந்து வருவதோ ஆன பல வகைக் கலை நூல்களும் சம்ஸ்கிருதத்திலே ஆக்கப் பெற்றவை. அவை பெரும்பாலும் தமிழ்ச்சான்றோர்களாலேயே ஆக்கப் பெற்றவை. சிலவற்றை ஆக்கியோர் பெயர் முதலிய விவரங்கள் தெரிய வில்லை. ஆக்கியோரே தம் பெயரை வெளிப்படுத்த விரும்பாதிருந் திருக்கலாம். எத்தனையோ தமிழ் நூல்களின் ஆசிரியர்கள் பெயர்கூட அறியக் கூடாமலிருப்பதை நாம் அறிவோம். தமிழகத்தில், தமிழரால், தமிழர்க்காகவே ஆக்கப்பெற்ற இசை நூல்கள் நாட்டிய நூல்கள் சிற்ப நூல்கள், கட்டகக் கலை நூல்கள் பலப்பல. அவற்றுள் ஒன்று பரத நூல். கம்பன் பரத நூல் பற்றிச் சிலஇடங்களில் குறிப்பிடுகிறான். இந்த நூலை எழுதியவர் பெயர் அறியுமாறில்லை. எனவே வரலாற்றுக் கயிறு திரிப்பவர்கள் ''பரத முனிவர் என்பவர் இதை இயற்றினார்'' என்று கூறி வைத்தார்கள். பௌராணிக நெறியினர் அதைப் பரப்பி வைத்தார்கள். ஆனால் உண்மை என்ன? தமிழகத்திலிருந்த நாட்டியக்கலை மேதை (ஒரு நட்டுவனார்) அதை ஆக்கினார். பாவம், ராகம், தாளம் ஆகிய மூன்று சொற்களின் முதல் எழுத்துக்களான ''ப - ர - த'' மூன்றும் முன்னிருக்க, மூன்று சொற்களின் இறுதி எழுத்தான ''ம்'' கடைசி

யிலிருக்க ''பரதம்'' என்றாயிற்று அக்கலையின் பெயர். இதுவே மெய். இந்த உண்மையைப் பரத சாஸ்திரம்,

**''பாவமொ டராகம் தாளமிம் மூன்றும்**
**பகர்வதால் பரதமென் றுரைப்பர்''**

என்று விளக்கம் கூறும். பரத நூலைப் பற்றி வான்மீகி எங்கும் குறித்த தாகத் தெரியவில்லை. ஆனால் கம்பன் நூலைப் பற்றிக் குறிப்பிடு வதுடன் மட்டுமின்றிப் பரத கலையின் இலக்கணத்தையும் வடித்துக் காட்டுகிறான். முதலில் பரத நூல் சூத்திரம் ஒன்றைப் பார்த்துவிட்டுக் கம்பனைக் காணலாம்.

**''யதோ ஹஸ்தஸ் ததோ திருஷ்டி;**
**யதோ திருஷ்டிஸ் ததோ மன:''** - என்பதை,

**''கைவழி நயனம் செல்லக் கண்வழி மனமும் செல்ல''**

என்ற பொருளும் காட்டி மேலும் விளக்கம் தருகிறான். அப்பாடலை முழுதுமாய்க் காண்போம்.

**நெய் திரள் நரம்பின் தந்த மழலையின் இயன்ற பாடல்,**
**தைவரு மகர வீணை தண்ணுமை தழுவித் தூங்க,**
**கைவழி நயனம் செல்ல, கண்வழி மனமும் செல்ல,**
**ஐய, நுண், இடையார் ஆடும் ஆடக அரங்கு கண்டார்.**

(தேன் ஒழுக்குப் போன்ற யாழின் நரம்பொலி ஒத்த மழலை யனைய இனிய பாடல், தடவி ஒலிக்கின்ற மகர வீணையும், மிருதங்கமும் கலந்து ஒலிக்க, கைமுத்திரையை நோக்கி விழிகள் செல்ல, கண் சென்ற வழிக் கருத்தும் செல்ல, 'உண்டோ இல்லையோ?' எனச் சந்தேகப்படக் கூடிய மெல்லிய இடையார் ஆன மகளிர் நடம்புரியும் பொன்மயமான நடனமேடையைக் கண்டார்கள்.)

என்று இவ்வளவு வளமாக வருணிப்பவன் 'யார் யாரோ படித்துப் பொருள் கூறுவதைக் கேட்டுக் காப்பியம் படைத்தான்'' என்று கூசாமற் கூறுவது எவ்வளவு நியாயம் என்பதை மெய்ந்நெறியாளர் சிந்திப் பார்களாக! இத்தகைய அநியாயக் கற்பனைக் கதைகளை மேலும் கூறி ஒப்பற்ற மாகவிகளை இழிவுபடுத்துவதைக் கற்றறிவுடையோர் கைவிட்டு உயர்வார்களாக!

***(நன்றி : திருப்பத்தூர் கம்பன் விழா மலர், 1979)***

# கம்பனின் தாவர அறிவு

கம்பன் ஒரு கவி; மகாகவி; கவிச்சக்கரவர்த்தி; கலைஞன்; நாடகக் கலைவலான்; தத்துவ ஞானி; பெருங்காப்பியம் படைத்த பெரும் புலவன்; ஆனால், அத்தனைக்கும் மேலாக, ''கல்வியில் பெரியன்!''

**''இல்லாத, உலகத்து எங்கும்-**
**இவன் இசைகள் கூரக்**
**கல்லாத கலையும் வேதக்**
**கடலுமே.....''**

என்பதை யான் அறிந்தவரை கம்பனிடமேதான் காண்கிறேன்! வேதம், உபநிடதம், சாத்திரங்கள், தேவாரம், திவ்வியப் பிரபந்தம் முதலிய தோத்திரங்கள்; சான்றோர் கவியான சங்கப் பாடல்கள்; இசை, பரதம், ஓவியம் முதலான பல்வேறு கலைகள்; பூத, பௌதீக, தாவர, வானிலை முதலான விஞ்ஞானத் துறைகள் போன்ற பலவற்றையும் கற்றறிந்த மேதை என்பதை அவன் அருளிய காப்பியம் நன்கு புலப்படுத்திக் கொண்டிருக்கிறது.

அவற்றுள்ளே எந்தை பிரான் கம்பன் தாவர இயலில் பெற்றுள்ள புலமை நயத்தை ஒரு சிறிது ஈண்டுக் காண்போம். புல் முதலாக ஆல் வரையான பல்வகைத் தாவரங்களையும் பற்றிப் பேசுகிறான். அவற்றுள் பல வகை மலர்களையும் நமக்குக் காட்டுகிறான். அவற்றுள் நீர்ப்பூக்கள் சிலவற்றை எடுத்துக் காட்டுவதை மட்டும் இங்கே நாம் சிறிது காணலாம்.

அவற்றைக் காணுமுன்னர் நாம் ஒன்றை நன்றாக மனத்துட் கொள்ள வேண்டும், பல வகைகளில் நமக்கு உரையாசிரியர்கள், கண்ணாய் இருந்து, பல அருமைப்பாடுகளைக் காண உதவுகின்றார்கள்.

ஆனாலும் சிற்சில இடங்களில் நம்மைக் குழப்பி மயங்கவைப்பதையும் மறந்துவிடலாகாது. கவிஞன் தான் கண்மெய்யாக் கண்டவற்றைக் கவிதையாக வடிக்கிறான். உரையாசிரியர்களோ நூலறிவும் நுண்ணறிவுமே துணையாக் கொண்டு உரை வகுத்தருளுகின்றனர். கவிஞனைப் போன்ற நேர்முக அனுபவம் சில விஷயங்களில் உரையாசிரியர்கட்கு இல்லை என்றே துணிய வேண்டியிருக்கிறது. இப்படிச் சொல்வதால் உரையாசிரியர்களின் பெருமையைக் குறைத்து மதிப்பிடுவதாக எண்ணிவிடப்படாது. இவற்றை மனத்திற் கொண்டு மேலே செல்வோம்.

கம்பன் தன் பெருங் காப்பியத்தில்,

*அரத்தம், அல்லி, ஆம்பல், கழுநீர், காவி, குவளை, தாமரை, நீலம், நெய்தல், பானல், முளரி ஆகிய நீர்ப் பூக்களைப் பற்றிப் பேசுகிறான். இவை யாவும் தமிழ்ச் சொற்கள்.*

அம்புயம், அரவிந்தம், உற்பலம், கஞ்சமலர், கந்தமலர், கமலம், குமுதம், குவலயம், நளினம், நீலோற்பலம், பங்கயம், பதுமம், புண்டரீகம், முண்டகம் ஆகிய சமஸ்கிருதச் சொற்களையும் பயன் படுத்துகிறான்.

*அம்புஜம் என்றால் நீரில் பிறப்பது என்றும்,*
*உற்பலம் என்றால் கிழங்கில் முளைப்பது என்றும்*
*கஞ்சமலர் என்றால் நீர்ப்பூ என்றும்,*
*கந்தமலர் என்றால் கிழங்கில் தோன்றிய பூ என்றும்,*
*பங்கஜம் என்றால் சேற்றில் பிறப்பது என்றும்*

பொருள். இவை பொதுவாக தாமரை, அல்லி, குவளை, கழுநீர் முதலான எல்லாப் பூவுக்குமே பொருந்தும். ஆனாலும் சிறப்பாக இவை தாமரையையே குறிக்கும். அரவிந்தம், கமலம், நளினம், பதுமம், புண்டரீகம், முண்டகம் ஆகியவை தாமரையையே குறிக்கும். குமுதம் என்பது அரத்தம்; குவலயம் என்பது குவளை; நீலோற்பலம் என்பது நீலம் ஆகும்.

அல்லி என்பது இனத்தின் பொதுப் பெயராகும். சிற்சிலபோது தாமரையையும் குறிக்கும். ஆயினும் வெள்ளை, சிவப்பு, நீல நிறமுள்ள மூன்றையுமே சிறப்பாகக் குறிக்கும். வெண்ணிற அல்லியை ஆம்பல்

என்பர்; செந்நிற அல்லியை அரத்தம் என்பர்; நீலநிற அல்லியை நீலம் என்பர்; எனவேதான் சேதாம்பல், அரக்காம்பல் என்றெல்லாம் அடைகூட்டிச் செவ்வல்லியைக் குறிக்கலாயினர்.

கழுநீர்ப் பூவை அதன் நிறம் கருதிச் செங்கழுநீர் என்போம். ஒருவாறு அல்லி இனத்தைச் சேர்ந்ததோ என்று கருதலாம் என்றாலும் இஃது அல்லியின் இனத்தைச் சார்ந்ததன்று. முற்றிலும் வேறுபட்டது. மணம், நிறம், அமைதி, தோற்றம், அளவு ஆகிய எல்லா வகையாலும் நீலம் அல்லது நீலோற்பலம் என்னும் நீலநிற அல்லியினின்றும் வேறுபாடுடையதாகும். இன்றும் செங்கழுநீர் மலர் திருவாரூர் போன்ற சில கோயில்களில் தினமும் வழிபாட்டிற்குப் பயன்படுத்தப்படுகின்றது. அதன் நிறம் சுத்த நீலமல்ல; ஊதா விரவிய நீலம் (Purplish Blue) ஆகும். ஆழமான நீர் நிலைகளில் இது வளராது; வாழாது; மூன்றடி ஆழத்திற்கு மேற்படாத சேறு நிறைந்த குட்டைகளிலேயே இது வளரும். இத்தகைய உண்மை நிலைகளை எல்லாம் உணர்ந்த கம்பன்

**''மேதிக் குழி எலாம் கழுநீர்க் கொள்ளை''**
**''குழி எலாம் கழுநீர் ஆகி,**
**துறை எலாம் கமலம் ஆன''**

என்று பிரித்துக் காட்டுவான். மேலும் மதுச் சாடியில் உள்ள மதுவை வெளியே எடுக்க நீண்ட நாளமான கருங்குவளைத் தண்டைப் பயன்படுத்துவதை

**''தாள் கருங்குவளை தோய்ந்த**
**தண் நறைச் சாடி''**

என்று புலப்படுத்துவான். அப்படியே மது நிறைந்த வள்ளத்தில் கழுநீர்த் தண்டை இட்டு அருந்துவதை

**''ஊன்றிய கழுநீர் நாளத்**
**தாளினால் ஒருத்தி உண்டாள்''**

என்று தெரிவிப்பான்.

இவற்றிலிருந்து தாமரை அல்லி முதலிய நீர்ப்பூக்களின் தண்டு ஆறடி ஏழடி இருக்கும் என்பதும், அவை பொய்கை, ஏரி, குளம் முதலிய ஆழமான நீர்நிலைகளில் வளரும் என்பதும், கழுநீர் இரண்டு

மூன்றடித் தண்டையுடையவை என்பதும், ஆழமற்ற குட்டை கழி ஓடைகளிலேயே வளரும் என்பதும் நன்கு புலப்படும்.

காவி என்பது கருங்குவளை. இதை மணிவாசகர் ''பைங் குவளைக் கார்மலர்'' என்பர். இருண்ட நீலநிறம் உள்ள இம்மலர் அடி திரண்டும், கழுத்து நெருங்கியும், வாய் அகன்றும் இருக்கும். செவ்வரி ஓடிய வெளிர் நீலநிறம் அம்மலரில் காணப்படும். அதன் அமைதியை, தோற்றத்தை அடிப்படையாகக் கொண்ட காரணத்தாலேயே அருந்தும் ''டம்ளர்'' குவளை எனப் பெயர் பெற்றது.

நெய்தல் என்பது பெரும்பாலும் கடற்கரைப் பகுதியில் காணப் படும் கரு நீல நிறமுடைய ஒரு வகை நீர்ப்பூ. பானல் என்பது மருதநிலப் பகுதியில் வாய்க்கால்களிலும் குளக்கரைகளிலும் காணப்படும். நிறம் நீலமே ஆயினும் உருவும் அளவும் அமைதியும் முற்றிலும் தனித்தன்மை கொண்டது.

தாமரை, மலர்களின் அரசியாகும். சுனையுடன் கூடிய நாளமுடைமையால் முள்+தாள்+தாமரை= ''முட்டாட்டாமரை'' என்பர் மேலோர்; இதையே ''முளரி'' என்றும் கூறுவர். முள்+அலரி = முளரி ஆயிற்று. தாமரையைக் கம்பன் எப்படி எல்லாமோ அனுபவித்திருக்கிறான்;

**''விருந்து கண்டு உள்ளம்**
**களிக்கும் மங்கையர் முகம் எனப்**
**பொலிந்தன கமலம்''**
**''கொழுநர் வர மணித்தேரோடும்,**
**கண்டுமனம் களிசிறப்ப, ஒளி சிறந்து,**
**மெலிவு அகலும் கற்பினார் போல்,**
**புண்டரிக முகம் மலர, அகம் மலர்ந்து**
**பொலிந்தன பூம் பொய்கை எல்லாம்''**

என்று எண்ணற்ற இடங்களில் தாமரையின் அழகில் ஈடுபட்டுப் பலவாறாய் மகிழ்ந்திருக்கிறான். அது மட்டுமல்ல; கார் காலத்தும் வேனிற் காலத்தும், பனிக்காலத்தும் எல்லாம் தாமரை மலர்களைக் கூர்ந்து நோக்கி ஆய்ந்திருக்கிறான். எத்துணைக் கடுமையான வெய்யில் அடிப்பினும் தாமரை வாடுவதில்லை. பெருமழைக் காலம் அஃது அழுகிப் போவதில்லை. ஆனால், பனிக்காலத்தில் தன் மலர்கள் கருகித்

தீய்ந்து போவதை நம்மில் எத்தனை பேர் அறிவோம் என்பது எனக்குத் தெரியாது. இதைக் கம்பன் நன்கறிந்திருக்கிறான்.

இராமனுடைய திருமுகச் செவ்வி நோக்கி அவன் மிக்க கண்ணழகில் ஈடுபட்டு நிற்கும் மாருதி, தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளும்பொழுது,

**''நளிர் இரும் பனிக்கும் தேம்பாக்**
**கஞ்சம் ஒத்து அலர்ந்த செய்ய கண்ண!''** என்று இராமனை விளிக்கின்றானே, அதில் வரும் ''பனிக்கும் தேம்பார் கஞ்சம்'' (பனிக்கும் வாடாத-கருகாத-தாமரை) என்ற சொற்றொடர் கம்பனின் தாவர அறிவுக்கு ஓர் எடுத்துக்காட்டு. இந்தச் சொற்றொடரே அனுமனுக்கும் ''சொல்லில் செல்வன்'' என்ற பட்டத்தை வாங்கிக் கொடுத்திருக்கிறது!

இப்படி எந்தத் துறையை எடுத்துக்கொண்டாலும் பெற்ற புலமை பளிச்சிடும் பேராற்றற் பேரறிவுக் களஞ்சியமாகத் திகழ்வதாலேயே அறிவுலகம் கவிச்சக்கரவர்த்தியை, ''கல்வியிற் பெரியன்'' என்று போற்றிப் புகழ்கிறது!





## பணி வணக்கம்

தாம் எழுதிய ''பிள்ளையார்பட்டி தல வரலாறு'' என்ற வரலாற்று ஆய்வு நூலுக்கு கம்பன் அடிப்பொடி, யாரும் இதுவரை இப்படி எழுதியிராத வகையில் எழுதிய **காணிக்கை வரிகள் :**




எவர்களின் பேரன்பால்,
எவர்களின் பேருழைப்பால்,
எவர்களின் கண்காணிப்பால்
இத்திருக்கோவில் இவ்வளவு
சீருடன் இலங்குகின்றதோ
அவர்கட்கு - அதாவது
பிள்ளையார்பட்டிக் கோவில்

**ந க ர த் தா ர் க் கு**

# கம்பன் மணி மண்டபக் கால்கோள் விழா

சௌமிய-பங்குனி-ஆறாம் நாள் வியாழன்
19-3-1970

''உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும்,
நிலைபெறுத்தலும், நீக்கலும், நீங்கலா-
அலகிலா - விளையாட்டு உடையார்அவர்
தலைவர்; அன்னவர்க்கே சரண் நாங்களே!'' - கம்பன்

★★★

அன்னையாய், அத்தன் ஆகி, அருளும்நல் ஆசான் ஆகிப்
பின்னும்எனை ஆண்டு கொண்ட பெரும்தெய்வம் தானே ஆகி,
கன்னிஎனும் தமிழ்த்தாய் ஈன்ற கவிச்சக்கரவர்த்தி ஆன
என்னுடையன் கம்பன் பாதம் என்றும்எனது உச்சிமீதே!

★★★

முன்னைமொழி யாவுக்கும் மூத்த தமிழ்க் கிழவி
கன்னிநிலை மாறாக் கவின்குமரி - இன்னுந்தான்
''என்னைஇவள் காலம்?''என யாரும் கணிக்கஒணா
அன்னவள்தான் சென்னிக்கு அணி.

★★★

மாண்புமிகு கல்விஅமைச்சர் நாவலர் அவர்களே!
மாண்புமிகு நிதியமைச்சர் மதி அவர்களே!
தமிழறிஞர்களே! அறச் செல்வர்களே!
பெரியோர்களே! தாய்மார்களே!

உங்கள் அனைவரையும் வணங்கி வரவேற்கிறேன். ஏழையேன் வாழ்நாளில் இந்நாள் ஒரு நன்னாள்; பொன்னாள்; புனித நாள்! காலமெல்லாம் உள்ள தமிழ் மொழிக்கு, ஓர் ஒப்பற்ற காப்பியத்தை அருளிச் செய்து, ''என்று முள தென் தமிழ்'' என்று ஏற்றம் காட்டித் தமிழ் மொழி, தமிழ்க்கலை, தமிழ் நாகரிகம், தமிழ்ப் பண்பாடு ஆகியவற்றை யெல்லாம் அற்புதமாகச் சித்திரித்து விளங்கும் என்னப்பன், என் ஆசான், என் தெய்வம், கவிச்சக்கரவர்த்தி கம்பனுக்கு மணிமண்டபம் எடுப்பதற்குக் கால்கோள் விழா நிகழும் இந்நாள் எத்துணை விழுமியதென்பதை ஏழையேன் எங்ஙனம் எடுத்துரைக்க மாட்டுவென்?

இந்த மணி மண்டபம் நாப்பண் நனி விளங்க, இதன் தெற்கில் உலகத் தவிசில் ஓங்கியிருந்தருளும் கன்னித் தமிழ்த் தாயின் திருக்கோயில் திகழவும், வடக்கில் பன்னரும் பெரும் புகழ்ப் பழந்தமிழ்க் கலைகள் பயன் பிலிற்றும் கூடங்கள் மிளிரவும், நாற்புறமும் தமிழ் மணம் கமழவும் வேண்டும் என்பது பெருநோக்கம்.

தமிழ் அன்பர்களும், படிமக் கலைஞர்களும், வெளிநாட்டறிஞர் களும் மெய்யாகப் பாராட்டியது, நிகழ்காலத்தில் தோன்றிய தமிழ்த்தாயின் திருப்படிமம், இப்படிமத்தைக் கண்டு அறிஞர் அண்ணா அவர்கள் மனமுருகப் பாராட்டினார்கள். இதன் அச்சுப் படத்தைப் பெற்றுக் கொண்டபோது அதைக் கண்ணில் ஒற்றிக் கசிந்துள்ளம் நெகிழ்ந்தார்கள். தமிழ்த்தாயின் செப்புப் படிமத்தை வடித்துவெற்றி கண்ட அமரர்-சிற்பகலா சாகரம்-திரு. ம. வைத்திநாத ஸ்தபதியார் இதன் அருமையை, அமைதியை, வடிவினை, உள்ளுறை பொருளை, எல்லாம் பலவாறு பாராட்டி மகிழ்ந்தார். அப்பொழுது அவர்,

> **''நடராஜ மூர்த்திக்குப் பிறகு இம்மூர்த்தியே பல்லாற்றானும் கலை, தத்துவம், விஞ்ஞானம் ஆகிய மூன்றின் கருத்துச் செறிவு முள்ளது; எங்களைப் போன்ற ஸ்தபதிகட்கு இந்த இரண்டு மூர்த்திகளுந்தான் அற்புதப் பொருளாக உள்ளன!''**

என்று கூறியது என் செவிகளில் இன்னும் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

படிமக் கலைத்துறையில், இத் திருப்படிமம், ஒரு சிறந்த, புதிய அடைவு என்று படிமக்கலை வல்லுநர்கள் நெஞ்சார மொழிகின்றார்கள். இத்தகு தனித்துவம் பெற்ற, ஒரு திருப்படிமத்தைப் பெறும் பேற்றை

ஆண்டவன் அருளால் நாம் பெற்றமைக்காகப் பெருமையும், பெருமகிழ்வும், உள நிறைவும் கொள்ள வேண்டும். கொள்ளுகிறோம். உலகமிசை உவந்திருந்தருளும் ஒரு தனிச் செம்மொழி யரசியாம் கன்னித் தமிழ்த் தாய் காரைக்குடியில் முதன் முதலாகக் கோயில் கொண்டருளிக் காலமெல்லாம் பயன் சுரக்க அன்னை அவளருளை வேண்டி நிற்போம்.

மணி மண்டபத்து வடபால் அமையும் தமிழ்க் கலைதெரி கழகக் கூடங்களில் மொழி, கலை, பணி மலர வேண்டும். வரலாறு, மொழி யின், எழுத்தின்-எண்ணின்-இலக்கணத்தின் படிவளர்ச்சி, கட்டடத் துறை, ஓவிய-சிற்ப-படிமக்கலை, இவற்றுடன் இயைந்த கோணிலை, ஒளிநூல், ஆகமம், உருப்பா (தியான சுலோகம்) முதலியவற்றை முறைப்படி கற்பித்து வருங்காலத்தில் இத்துறை அறிவு வளம்பெறச் செய்யும் பயிற்சித்துறை மலர அன்னையவள் அருளை வேண்டுவோம்.

இந்த உணர்ச்சியை ஊட்டி, ஆர்வத்தை உண்டாக்கி, ஈடுபாட்டைக் கொளச் செய்தவன் கவிச்சக்கரவர்த்தி கம்பனே! ''இவன் இசைகள் கூரக் கல்லாத கலையும், வேதக் கடலும் உலகத்து எங்கும் இல்லாத!'' என்று சொல்லுமாப் போலே கல்வியிற் பெரியனாய்ப் பிறங்குகின்றான் கம்பன். ''என்னையுமே தன்னடியனாய்க் கொண்டு, கன்னித் தமிழ்ப் பணிக்கு என்னைக் கை காட்டி விட்ட அன்னவன் அடித்துகளே அடியனேன் சென்னிக் கணி!'' என, நாளும் மகிழ்வேன்.

இந்தப் பவித்திரமான விழாவுக்குத் தலைமை தாங்கி இவ் விழாவினையும், பயன் சுரக்கவிருக்கும் திருப்பணியினையும், பொலிவும், வலிவுமுள்ளதாக்க மனம் கொண்டு ஈண்டுப்போந்துள்ள கல்விப் பொதுநலத்துறை அமைச்சர் மாண்புமிகு நாவலர் நெடுஞ் செழியன் அவர்களின் அன்புக்குக் கைம்மாறும் உண்டோ?

அங்ஙனமே உள்ளம் நிறைந்த அன்புடன் மணிமண்டபத்துக்கு அடியிட இசைந்து ஈண்டுப் போந்துள்ள நிதியமைச்சர் மாண்புமிகு மதியழகன் அவர்கட்கும் என்ன கைம்மாறு செய்யவல்லோம்?

கல்வியும் செல்வமும் ஒரு வழியானால் எல்லையில் பயனை எய்தலாம் அன்றோ? அவ்விரு துறை அமைச்சர் பெருமக்களும் ஒருங்கு வந்து பணியாற்ற இசைந்த-நேர்ந்த-வாய்ப்பே அரும் பேறாகும்! பண்புக்கும் பயனுக்கும் அடிப்படையான கல்வி-நிதி

யமைச்சர்கள் இவ்விழாவில் தலைமை ஏற்றும் அடிகோலியும் உதவ முன் வந்தது தமிழ்த்தாயின் நல்லூழே; நமது பெரும் பேறே!

ஏழையேன் கடந்த சில ஆண்டுகளாகப் புரிந்து வரும் சிறிய பணியையும், தமிழ்ப் பற்றுள்ளமும் என்பால் கொண்ட அன்பும் காரணமாக என்னையும் ஒரு பொருட்டாய் மதித்து இப்பணி வாழவேண்டும்; வளர வேண்டும்; வளர்ந்து பயன் சுரக்க வேண்டும் என்ற பெரும் பரிவினால், கருணையால், அரும்பொருள் திரட்டி உதவ முன்வந்துள்ள அன்பர்கள், அறவோர்கள், கொடைஞர்கள், ஆகியவர்கட்கெல்லாம் இந்த இப்பிறவியில் மட்டுமின்றி இனி வரும் பிறவிகளிலும் நன்றி மறவா நலனுடையயேனாகக் கம்பனருளை வேண்டிநிற்கின்றேன். இவர்கள் யாவருக்கும் ஆண்டவன் எல்லா நலன்களையும் அருள வேண்டுமென்று நெஞ்சார வேண்டி நிமலனைத் தொழுவதல்லால் எளியனேன் மற்றென் செயவல்லேன்?

இன்று நாவலர் தலைமையில் மதிவலர் அடியிட்ட இம் மணிமண்டபமும், இதனைச் சுற்றி மலர உள்ள மனைகளும் அன்பை, அறத்தை, அறிவை, ஒழுக்கத்தை, நாகரிகத்தை, பண்பாட்டை வளர்க்கும் தமிழ் நாற்றங்காலாய்-விரைப்பண்ணையாய்- என்றும் நின்று விளங்க, ஆண்டவனும், அரசும், அன்பர்களும், அறவோர்களும், அறிஞர் களும், அனைத்து மக்களும் துணைபுரிய வேண்டும் என்று பல்காலும் சிரந்தாழ்த்தி, கரங்கூப்பி, நிலந்தோய்ந்து, வேண்டிக் கொள்ளுகிறேன்.

மீண்டும் இப்பணிக்கு உதவ முன் வந்துள்ள யாவருக்கும் ஈண்டு எழுந்தருளியுள்ள யாவருக்கும் நன்றி ததும்பும் நெஞ்சார வணக்கம் செலுத்தி நல்வரவு கூறியமைகின்றேன்.

**காரைக் குடிஓங்கும் 'கம்பன் அறநிலை'தான்**
**சீராய் வளர்ந்து செழித்திருக்க - நேராய்ப்**
**புரந்துஅளித்துக் காப்போர் புகழ்ச் சேவடிஎன்**
**சிரம்தன்மேல் வீற்றிருக்கும் சேர்ந்து.**

★★★

**'கம்பன் அறநிலை'யைக் காத்துப் புரப்பவர்தாள்**
**நம்பித் தலைக்கணியும் நலம்கூர்வான்-செம்பதுமக்**
**கம்பன் அடிமலரில் காலம்எலாம் தேன்சுவைக்கும்**
**தும்பி கணேசன் தொடர்ந்து.**

★★★

# கம்பன் மணி மண்டபம்

*1976ல் கம்பன் அடிப்பொடி கம்பன் மணிமண்டபம் அமைப்பு பற்றி எழுதியது:*

**1939 ஏப்ரலில் காரைக்குடியில் கம்பன் திருநாள் தொடங்கப் பெற்றது. 1976 மார்ச்சில் நடைபெற்றது 38ஆவது ஆண்டுத் திருநாள் ஆகும்.**

காரைக்குடிக் கம்பன் திருநாள் தமிழகத்தில் குறிப்பிடத்தக்க ஒரு பெரும் இலக்கிய விழாவாகப் பல்லோராலும் கருதப்பெறுகிறது. நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் சாதி, மத, கட்சி வேறுபாடு களின்றி அறிஞர்களும், ரசிகர்களுமாக ஆயிரக்கணக்கானவர்கள் வந்து கலந்து மகிழ்கின்றனர்.

கம்பன் திருநாளை ஏற்பாடு செய்து முறையாக நடத்தி வருவது கம்பன் கழகம். காரைக்குடிக் கம்பன் கழகத்தைத் தாய்க்கழகமாகக் கொண்டு, தமிழகத்தில் பல நகரங்களிலும் கம்பன் கழகங்கள் தோன்றி, நற்பணி ஆற்றி வருகின்றன.

கம்பன் கழகத்தை நிறுவி, அதன் செயலாளராக இருந்து, நல்லன்பர் பல்லோர் துணையோடு இலக்கியப் பணி ஆற்றி வரும் திரு. சா. கணேசனின் தொண்டைப் பாராட்டி, அவரது அறுபதாண்டு நிறைவின் போது, 1968-ல் பெருந்தொகை கொண்ட பணமுடிப்பை வழங்கத் திரு. சா.நா.அ.சொ. அண்ணாமலை செட்டியாரவர்களைத் தலைவராகக் கொண்ட மணிவிழாக் குழு ஏற்பாடு செய்தது. ரூபாய் ஒரு லட்சத்திற்கு மேல் திரட்டியுமிருந்தது. திரு. சா. கணேசன் தமக்கென நிதியுதவி பெற்றுக்கொள்ள இசையவில்லை. எனவே, பேரன்பும் பெருந்தகைமை யுமுள்ள மணிவிழாக் குழுவினர் நல்லதொரு திட்டத்தை வகுத்தனர்.

அத்திட்டப்படி கம்பன் மணி மண்டபம் ஒன்றை எல்லா வசதி களுடனும் எழுப்புவதென்றும், அப்பணிகளை எல்லாம் மேற்கொள்ளக் கம்பன் அறநிலை (Kamban Trust) என்ற பெயரில் ஒரு நிறுவனத்தை நிறுவுவதென்றும் முடிவு செய்து, அதன்படி கம்பன் அறநிலை விதிப்படி பதிவு செய்யப்பெற்றது. இந்த நேரத்தில் அமரர் திரு. C.V.Ct. V. வேங்கடாசலம் செட்டியாரவர்களும் பேராற்றல் பெருந்துணையாக வந்து சேர்ந்துகொண்டார்கள். நிதி வசூலும் நிரம்பிற்று.

காரைக்குடி நகர நடுப்பகுதியில் முக்கோண வடிவுள்ள மூன்று ஏக்கர் நிலம் விலைக்கு வாங்கப்பெற்றது. அதன் நடுப்பகுதியில் சுமார் 5000 பேர் அமரக்கூடிய 200x130 அடி அளவுள்ள மணிமண்டபம் கட்டப்பெற்று, மாடிப்பகுதி கட்டவேண்டிய நிலையில் அடிப்பகுதி (Ground floor) நிறைவேறியுள்ளது.

மோட்டார் பம்புடனும் மேனிலைத் தண்ணீர்த் தொட்டியுடனும் கூடிய பெரிய கேணி நிறைவேறிக் குழாய்களும் அமைக்கப் பெற்றுள்ளன.

பெரிய அளவில் பயன்தரும் சமையற்கட்டு முழுதும் நிறை வேறியுள்ளது.

உணவுச்சாலையாகவும், பள்ளி வகுப்பறைகளாகவும் பயன் தரும் 120க்கு 38 அடி அளவுள்ள தார்சுக் கட்டடம் கொத்தமங்கலம் K.M.S. வள்ளியம்மை ஆச்சி தருமப் பண உதவியால் நிறைவேறியுள்ளது.

திட்டப்படி கட்டப்பெற வேண்டிய மணமக்கள் இல்லம் இரண்டில் ஒன்றான 'நம்பி திருமனை' காரைக்குடி திரு. சா.நா.அ.சொ. அண்ணாமலை செட்டியாரவர்கள் நிதியுதவியால் நிறைவேறியுள்ளது. 'நங்கை திருமனை' தொடங்கப் பெற வேண்டும்.

உலகிலேயே முதன் முதலாகத் தோன்றுகிற தமிழ்த் தாய் திருக்கோயில் கருங்கற் பணியாக நடந்து வருகிறது.

கம்பன் அறநிலையின் கணக்குகள் யாவும் முறைப்படி தணிக்கை செய்யப்பெற்று, வருமானவரித் துறையினருக்குக் காட்டி ஒப்புதல் பெறப் பெறுகின்றன. இந்திய வருமான வரிச் சட்டத்தின் 80G பிரிவின்படி கம்பன் அறநிலைக்கு வழங்கும் நன்கொடைக்கு வருமான வரி விலக்கு அளிக்கப்பெற்றுள்ளது.
(Ref: A.No. 34/1968-69 dated 25-2-1969)




கம்பன் மணிமண்டபத்தின் முன் தோற்றம்




கம்பன் மணிமண்டபத்தின் தரைப்படம்

# தமிழ்த் தாய் திருக்கோயில் பற்றிய குறிப்புகள்

## 1970-இல் பெயர்த்தெழுதியது

1. தமிழ்த்தாய் திருக்கோயிலின் கீழ்த்திசை வேலியை ஒட்டி வேம்பும், மேல்திசை வேலியை ஒட்டிப் பனையும் வடதிசை வேலியை ஒட்டி ஆத்தியும் வரிசையாய் வளர்ந்திருக்கச் செய்ய வேண்டும்.

2. தமிழ்த்தாய் திருக்கோயிலும் விமானமும்

   அ. ஆறுபட்ட ஆறு நில ஆறுறுப்பு விமானம் (ஷட்கோண - ஷட்தள - ஷடாங்க விமானம்) ஆக அமையும்.

   ஆ. வடகீழ்க் கோடியில் வள்ளுவனும், தென்கோடியில் இளங் கோவும், வடமேற்கோடியில் கம்பனும் சுற்றுக் கோயில்களில் எழுந்தருளியிருப்பர்.

   இ. நடு விமானத்தின் கீழ் நாப்பண் தமிழ்த் தாய் வீற்றிருந்தருள வலப்புறம் அகத்தியனும், இடப்புறம் தொல்காப்பியனும் காட்சி தருவர்.

   ஈ. இருந்தருளும் (மூலபேரமான) தமிழ்த்தாய்க்கு முன், தாமரைத் தவிசில் எழுந்தருளும் (உத்சவ பேரமான) தமிழ்த்தாயின் பொன்னுருவம் காட்சி தரும்.

   உ. தமிழ்த்தாயின் திருமுற்ற முகப்பை மூன்று நில மூன்று கலசக் கோபுரமும், சுற்றுக் கோயில்கள் மூன்றின் திருமுற்ற முகப்பைத் தோரணவாயில்களும் அணி செய்யும்.

3. அ. வாழை, மா, பலா, இளநீர், தேங்காய், தேன், பால், சர்க்கரை போன்றவையே படையற் பொருள் களாக அமையும்.

ஆ. மலர், மாலை, நறும்புகை முதலியவை திருமுற்றத்தில் அதற்கென உள்ள தாம்பாளம் முதலியவற்றிலேயே படைக்கப் பெறும்.

ஒவ்வொரு மாதமும் முதல் தேதி திருவுருவங்கட்கு எண்ணெய் சார்த்தித் திருநீராட்டுச் செய்யப் பெறும்.

இ. மூர்த்திகட்குத் திருநீராட்டும் பொழுது அதற்கென அன்று ஆக்கிய புதிய தொன்னை போன்றவற்றாலேயே நீராட்ட வேண்டும். உலோகம், மரம், மண்கலன்கள் பயன்படுத்தப் பெறலாகா. (திருக்குட நீராட்டு விழாப் போன்ற பெருஞ் சாந்திக் காலங்களில் மட்டும் இவ்விதி தளர்த்தப் பெறலாம்).

ஈ. தமிழ்த்தாய் முதலிய வழிபாட்டுத் திருவுருவங்கட்கு ஆடை, அணி, மாலை, மலர் முதலிய அணிதல் கூடாது. ஆனால், மூர்த்திகளை எவ்வகையாலும் ஒட்டாமல் மேலும், கீழும், பின்புறமும், இருபக்கங்களையும் அணி செய்யலாம்.

உ. நறும்புகைக்கால், ஒளிவிளக்குக் கால், குடத்தட்டு முதலியவற்றால் வழிபாடு செய்யும்போது, திருவுருவங் களுக்கு இப்பால் எட்டி நின்று பணிபுரிதல் வேண்டும்.

ஊ. வழிபாடு செய்பவர்கள் யாவருக்கும் சந்தனம், பால், சர்க்கரை, மலர் ஆகியவையே அருட்பொருளாய் வழங்கப் பெறும்.

எ. வழிபட வருவோர் அவரவர் மதித்துப் போற்றும் சமயக் குறிகளுடனும், சமயச் சின்னங்களுடனும் வரலாம். அவரவர்களின் சொந்த உபயோகத்திற்குத் தேவையான திருநீறு, குங்குமம், திருமண், கோபி போன்றவை கிடைக்கும்படி செய்யலாம். ஆனால், அஃதெதுவும் கோயிற் பொருள் (பிரசாதம்) என்ற முறையில் அல்ல.

4. கோயில் பொது வழிபாடு நிறைவேறியதும் தேங்காய் பழம் மலர் முதலிய உள்ள தாம்பாளத்தை வந்திருக்கும் பெருமக்களில்

ஆண்டு முதலியவற்றால் மூத்த ஒருவர்க்கு (சாதி-மத பேதமின்றி) வழங்கி மரியாதை செய்தபின் யாவர்க்கும் சந்தனம்; மலர், சர்க்கரை வழங்கப் பெற வேண்டும்.

5. மூர்த்திகட்கு நீராட்டுவதும் ஆண்டுக்குப் பன்னிரண்டுக்கு மேல் போகாமல் வரையறை செய்துவிட வேண்டும். எண்ணெய், பால், தயிர், இளநீர், பழச்சாறுகள், நறுமண நீர், கங்கை, மந்திரக்கலய நீர், பன்னீர் போன்றவை திருநீராட்டுக் காலத்தில் பயன்படுத்தப் பெறலாம்.

மந்திரக் கலய நீர் ஆக்குவதற்கு மூன்று, ஆறு, பன்னிருவர் இருந்து தமிழ்ப் பாசுரங்கள் பாடிப் பாராயணம் செய்ய வேண்டும். 16, 24, 32, 64, 96, 108 முறை மாறி மாறிப் பாசுரங்கள் ஓத வேண்டும். அத்துடன் போற்றி வணக்கம் ஓதி மலரும் பச்சிலையும் தூவ வேண்டும்.

இந்த மந்திரக் கலய நீரை மேளவாத்தியம் தீவட்டில் முதலிய மரியாதையுடன் எடுத்துச் சென்று திருநீராட்டுச் செய்ய வேண்டும்.



# பட்டி மண்டபப் பாங்கறிந்து...

*(ஏதோ ஓர் இதழுக்கு பேட்டியாக, அவர்கள் பட்டிமண்டபம் பற்றிய வினாக்களுக்கு, தம் கையாலேயே கம்பன் அடிப்பொடி பதில் எழுதியது இவை; என்ன காரணத்தினாலோ, பாதியிலேயே பூர்த்தி ஆகாது நின்றுவிட்டது)*

1. ***பட்டி மண்டப நிகழ்ச்சியின் தாய் என்று தங்களைக் கூறலாமா?***

   ஏதோ இறைவனருளால் தற்காலப் பட்டிமண்டப அமைப்பை முதலில் தொடங்கியவன். அவ்வளவுதான்.

2. ***'பன்னருங்கலை தெரிபட்டி மண்டபம்' என்ற தொடருக்குத் தாங்கள் காண்கின்ற பொருள் யாது?***

   பன்ன = விளக்கியுரைக்க, அரியதான கலைகளை ஆய்கின்ற பட்டிமண்டபம்.

3. ***இன்றைய பட்டி மண்டபங்களுக்கு இந்தத் தொடர் பொருந்துமா?***

   ஓரளவு பொருந்தும்.

4. ***கம்பனுக்கு முன் இந்தத் தொடரைக் கையாண்ட கவிஞர்கள் உண்டா? அவர்தம் கருத்துக்கும், கம்பன் கருத்துக்கும் வேறுபாடு உண்டா?***

   இளங்கோ, சாத்தனார், மணிவாசகர் ஆகியோர் இத்தொடரை ஆண்டுள்ளனர். ஒருவர்க்கொருவர் பெருத்த வேறுபாடு கொண்டுள்ளனர் எனக் கூற முடியாது.

5. *அந்தத் தொடர்களைப் படிக்கும் போது பட்டி மண்டபம் தொடங்க வேண்டுமென்ற எண்ணம் ஏற்பட்டதா? அல்லது கம்பனைப் படித்த பிறகு அந்த எண்ணம் ஏற்பட்டதா?*

கம்பனைக் கற்ற பிறகுதான்.

6. *கம்பனைப் படிக்கும்போதுதான் ஏற்பட்டதென்றால், அவ்வாறு ஏற்படக் காரணம் என்ன?*

எம்பெருமான் கம்பன் ''பன்ன அரும் கலைதெரி'' என்றமையால் இலக்கியம் பற்றிய வாதப்பிரதி வாதங்களை இத்தலைப்பில் ஆற்றச் செய்யலாம் என்ற உணர்வுதான்.

7. *பண்டைக் காலத்தில் பட்டிமண்டம் நடந்தது என்று எண்ணு கிறீர்களா? நடந்திருந்தால் எவ்வாறு நடந்திருக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?*

நடந்திருக்கும்; மணிமேகலையில் ''ஒட்டிய சமயத்து உறுபொருள் வாதிகள் பட்டி மண்டபத்துப் பாங்கறிந்து ஏறுமின்'' என்ற தனாலும், திருவாசகத்தில் ''பட்டிமண்டபம் ஏற்றினை, ஏற்றினை-எட்டினோடு இரண்டும் அறியேனையே'' என்றதனாலும், பின்னர் கம்பன் ''பன்ன அரும் கலைதெரி பட்டிமண்டபம்'' என்று விளக்கம் தருவதாலும் முற்காலத்தில் நடந்திருக்கின்றதென நம்புகிறேன்.

8. *முதன்முதல் இந்தப் பட்டிமண்டபம் தொடங்க வேண்டு மென்று எங்கே நினைத்தீர்கள்?*

முதலில் 1932ல் ரெங்கூனில் நினைத்து ''தனவணிகன்'' வார இதழில் 'பட்டிமண்டபம்' என்ற தலைப்பில் செய்தியும் - விளக்கமும் எழுதி வந்தேன். பின்னர் காரைக்குடியில் கம்பன் விழா தொடங்கிய மூன்றாவதாண்டு 1941ல் மேடையில் வாதப் பிரதிவாதம் செய்யக்கூடிய முறையில் பட்டிமண்டபத்தை அமைத்தேன். ''கம்பனும் ஒட்டக்கூத்தனும் ஒரு காலத்தவரா?'' என்ற ஆராய்ச்சி முதல் பட்டிமண்டபத்தில் நிகழ்ந்தது.

9. *இது தங்கள் நினைவா? அல்லது கூட்டு நினைவா? கூட்டு நினைவென்றால் தாங்கள் இவ்வாறு நினைத்தபோது தங்களுடன் இருந்தவர்கள் யார்?*

எளியேன் தனி முயற்சியே.

10. *இந்த நிகழ்ச்சி அமைப்பு முழுவதும் தங்களுடைய தானா? அல்லது வேறு யாருடைய கருத்தாவது உண்டா?*

பெரும்பாலும் எளியேன்தான் அமைப்பது. ஆனால், சிற்சில வேளையில், சொ. முருகப்பர், ராய. சொக்கலிங்கன் போன்றோர் கருத்தும் கேட்கப்பட்டதுண்டு.

## முதல் நிகழ்ச்சி:

1. *முதல் பட்டிமண்டபம் அமைந்த வரலாற்றைக் கொஞ்சம் விரிவாகச் சொல்ல முடியுமா?*

கம்பனும் ஒட்டக்கூத்தனும் ஒரு காலத்தவர் அல்லர்; உத்தரகாண்டம் ஒட்டக்கூத்தரால் பாடப்பட்டதல்ல; சுமார் 500-550 ஆண்டுக்குள் பாடப்பட்டது அது என்பது என் தீர்மானமான முடிவு. அதற்கு அசைக்க முடியாத சான்றுகள் உத்தர காண்டத்திலும், அரசகேசரி பாடிய இரகுவம்சத்திலும் உள. எனவே, ஒட்டக்கூத்தனும் - கம்பனும் ஏதோ போட்டி போட்டுக் கொண்டு ராமகாதை பாடியதாயும் அதில் ஒட்டக்கூத்தன் தோற்றுவிட்டதாயும் கடப்பட்ட அபத்தக் கதையை மறுத்து உண்மையை உலகுக்குணர்த்த வேண்டுமென்று கருதி இவ்விவாதத்தை முதலில் நான் என் எழுத்துரையைப் படித்துத் தொடங்கினேன். வையாபுரியார் தலைமை தாங்கினார் மு. இராகவையங்கார், கே.என். குமரேசபிள்ளை, கு. அருணாசலக் கவுண்டர், மு. அருணாசலம், ஜி. சுப்ரமண்யம் போன்றவர்கள் ஒட்டியும், வெட்டியும் பேசினர். முதற்பட்டி மண்டபத்தில் கட்சி பிரிந்து நின்று வாதிடவில்லை. அவரவரும் தத்தம் விருப்பப்படி வாதிட்டனர். வையாபுரியார் இருவரும் வேறு வேறு காலத்தவர் என்றும் உத்தரகாண்டம் ஒட்டக்கூத்தன் பாடியதல்ல என்றும், ஒட்டக்கூத்தன் காலத்திற்கு மிகவும் பிற்பட்டதென்றும் தீர்ப்பளித்தார்.

2. *அப்போது 2 கட்சியா? மூன்று கட்சியா?*

முதலில் கட்சிப் பிரிவில்லை. மறு பட்டிமண்டபம் 2 கட்சியையும் பிறகு 3 கட்சியையும் பிறகு நான்கு கட்சியையும் கொண்டிருந்தது.

3. ***முதன்முதல், பட்டி மண்டபம் பற்றி நீங்கள நினைத்ததைப் பேச்சாளர்கள் புரிந்து கொண்டார்களா?***

தெளிவாக மனங்கொண்டனர்.

4. ***பட்டி மண்டபத்தைப் பற்றிப் பேச்சாளர்கள், பொதுமக்கள் புரிந்துகொள்ளத் தாங்கள் என்ன ஏற்பாட்டுக்களைச் செய்தீர்கள்?***

முதலில் ''வேழமுக வில்லியர்'' பட்டிமண்டப அமைப்பையும் நடைமுறை முதலியவற்றையும் கூறி ஒரு சிறு நிகழ்ச்சி நடத்துவர். அஃது அவையோர்க்கு ஒரு தெளிவுண்டாக்கிற்று.

5. ***தாங்கள் விளக்கிச் சொன்ன கருத்துக்கள் ஏதேனும் தற்போது நினைவில் உள்ளதா? தயைகூர்ந்து அதை விளக்கிச் சொல்ல முடியுமா?***

அமரர் அ. சீனிவாசராகவனாரும் எளியேனும் மேடையில் வந்து மைக்கின் முன் அமர்ந்தோம். பேராசிரியர் பேச்சைத் தொடங்கு வார். நான் பதில் உரைப்பேன். பட்டிமண்டபம் என்றால் என்ன என்பார். யான் சிறிது விளக்குவேன். அவர் மேலும் தெளிவு செய்வார். பட்டிமண்டபம் என்றால் ஒரு வாதமேடையே! இங்கு சொற்போர் நிகழும்; ஒரு தரப்பினர் ஆம் என்றும் மற்றொரு தரப்பினர் இல்லை என்றும் வாதிடுவர். அதனால் தனிச் சொற்பொழிவைவிட கேட்பவர் உள்ளத்தில் மகிழ்ச்சியையும் தெளிவையும் இஃது அரும்பச் செய்யும் என்று கூறியது நினைவில் உளது.

6. ***முதல் பட்டி மண்டபம் நடக்கும்போது தங்களுக்கு ஏற்பட்ட நினைவுகள் என்ன?***

அவையோர் காட்டிய ஆர்வமும் பரபரப்பும், தீர்ப்பை அறிவதில் ஏற்பட்ட துடிதுடிப்பும் என்னைப் பெரிதும் கவர்ந்துவிட்டன.

7. ***அந்தப் பட்டிமண்டபம் முடிந்தபோது தாங்கள் என்ன நினைத்தீர்கள்?***

நன்று, நன்று; பல பேச்சுக்களின் பயனும், எதிலும் கிட்டாத ஆர்வமும் பட்டிமண்டபத்தாலேதான் ஏற்படுகிறது என்ற எண்ணமே!

8. ***பொதுமக்களிடமிருந்து அதற்கு வரவேற்பிருந்ததா? எதிர்ப்பு இருந்ததா?***

நல்ல வரவேற்புத்தான்.

9. ***எதிர்ப்பே இல்லையா?***

காரைக்குடிப் பட்டிமண்டபத்தில் விரசம் ஏற்படுவதில்லை. ஆதலால், எதிர்ப்பே இல்லை.

10. ***எதிர்ப்பு இருந்ததென்றால் இருந்தும் ஏன் நடத்துகின்றீர்கள்?***

இக்கேள்வி எழவில்லை.

11. ***கருத்தரங்கு போன்ற நிகழ்ச்சிகளுக்கு மூன்று நான்கு பேர் போதுமானதாக இருக்கும்போது, 9 அல்லது 13 பேரை அழைத்து ஏற்பாடு செய்வது கடினமான பணியல்லவா? அத்துடன் பொது மக்கள் எதிர்ப்பும் இருக்கும்போது இதைத் தொடர்ந்து நடத்த வேண்டுமென்று தங்களுக்குத் தோன்றியது ஏன்?***

இருமாடு பட்டி இழுத்துச் செல்லும் சகடையைவிட ஆயிரம் பேர் கூடி இழுத்துச் செல்ல வேண்டிய தேர்த் திருவிழாவைத்தானே முற்காலம் கொண்டு நல்லோரும் பெரியோரும் மிகவும் போற்றி வந்திருக்கின்றனர்.

12. ***கட்சி வாதம் என்றால், உண்டு, இல்லையென்று இரண்டு தானே இருக்கமுடியும்! தாங்கள் ஏன் மூன்றாக்கினீர்கள்?***

வினா சரியில்லை; இருகட்சிதான் என்பது ஒப்புக்கொள்ள முடியாதது. நன்மை-தீமை மட்டுமின்றி ஒன்றுமின்மையும் உண்டல்லவா? ஆதி, அந்தம், நடு என்பதைப்போல வெம்மை, தண்மை, குளிர்மை போல.

13. ***எப்போதாவது இரண்டு கட்சிகள் அமைத்து நடத்தியிருக்கின்றீர்களா?***

ஆம்; அடிநாட்களில் இரண்டு கட்சிதான்.

14. ***நடத்தியிருந்தால் இரண்டிற்கும் ஏதாவது வேறுபாடுகள் கண்டீர்களா?***

ஆம். இரண்டு கட்சியைவிட மூன்று கட்சிவாதம் அதிகப் பரபரப்பையும், கிளர்ச்சியையும் உண்டாக்கின.

## பட்டி மண்டபம் :

1. *பட்டி மண்டபம் என்றே தாங்கள் குறிப்பிடக் காரணம் என்ன?*

   மரபு மாற்றப்படக் கூடாதது. முன்னையோர் எல்லாம் ஒருபடித் தாய்ப் ''பட்டிமண்டபம்'' என்றே வழங்கி வந்துள்ளனர். கம்பனும் அப்படியே.

2. *இதுவரை தாங்கள் அமைத்த பட்டி மண்டபங்கள் எத்தனை?*

   சுமார் அறுபதுக்குமேல்; காரைக்குடியில் மட்டும் சுமார் 43 ஆகும்.

3. *தாங்கள் பங்குகொண்ட பட்டி மண்டபங்கள் எத்தனை?*

   சுமார் முப்பது.

## தலைப்பு :

1. *பட்டி மண்டபத் தலைப்புக்களை எப்படித் தேர்ந்தெடுப்பீர்கள்?*

   பெரும்பாலும் கம்பனிலிருந்துதான்; வீரம், அன்பு, பாசம் முதலானவற்றை அடிப்படையாகக் கொண்டும்.





வரலாற்று வண்ணம்

# வரலாற்றை மறந்தமையால் வந்த குழப்பம்

**பா**லகாண்டத்தில் குலமுறை கிளத்து படலம்; அதில் முதற்பாட்டு:

''ஆதித்தன் குல முதல்வன் மனுவினை யார் அறியாதார்?
பேதித்த உயிர் அனைத்தும் பெரும் பசியால் வருந்தாமல்
சோதித் தன் வரி சிலையால் நிலமடந்தை முலை சுரப்பச்
சாதித்த பெருந்தகையும் இவன் குலத்து ஓர் தராபதி காண்!''

இஃதோர் அருமையான பாட்டு; கம்பன் காலத்தை நிர்ணயிப்பதற்கு ஒரு நல்ல சான்றாகும்.

முதலில் வை.மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் என்னும் பெரியாரின் உரையைப் பார்க்கலாம்.

''ஆதித்தன் குலமுதல்வன் சூரிய வமிசத்தில் தோன்றிய முதற் புத்திரனான; மனுவினை - மனுச்சக்கரவர்த்தியை'' என்று எழுதிப்போந்தார்.

அடுத்து அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பைப் பார்க்கலாம்;

''விசுவசுவான் என்ற சூரியனது குலத்துக்கு முதற் புதல்வனாகத் தோன்றிய வைவசுதன் என்ற மனுச் சக்கரவர்த்தியை'' பொருள் கூறுகின்றது அப்பதிப்பு.

ஆதித்தன் என்றதுமே சூரியன் என்ற முடிவுக்கு வந்துவிட்டதால் முதல்வன் என்ற சொல்லுக்கு முதற்புத்திரன் என்று வலிந்து பொருள் கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது. முதல்வன் என்ற சொல்லுக்கு முதற்புதல்வன் என்று வேறு பிரயோகம் காட்ட முடியாது என்றே அடியேன் கருதுகிறேன்.

இங்கே ''ஆதித்தன்'' என்பது கம்பனின் நண்பன் விஜயாலய சோழனின் (கி.பி. 850-871) மைந்தன்; கி.பி. 871-907ல் கோலோச்சியவன்; ராமகதையில் கொண்ட ஈடுபாட்டால் தன் பெயரைக் கோதண்டராமன் என்று மாற்றிக் கொண்டவன். காளத்திக்கு அணித்தேயுள்ள தொண்டைமான் நாடு என்ற இடத்தில் இவனுடைய பள்ளி படைக்கோவில் உள்ளது. அதில் உள்ள கல்வெட்டு 'கோதண்ட ராமேச்சுரம் என்ற ஆதித்தேச்சுரம்' என்று அந்தச் சமாதிக்கோவிலைக் குறிப்பிடுகிறது. அந்தக் கோவிலை எடுத்தவன் இவன் மைந்தனான முதற்பராந்தகன் (கி.பி. 907-955) ஆவான்.

இந்தப் பாட்டில் குறிக்கப்படும் ஆதித்தன் என்பது முதலாம் ஆதித்தனே! அவனுடைய குலத்துக்கு முதல்வன் - ஆதியானவன் மனு என்று கூறினால் சிக்கலின்றி இயல்பாக இருக்கிறது. கம்பன் தன் காலத்தவரைக் குறிப்பிடும்பொழுது அவர்களின் முன்னவர்களை ராமன் காலத்திற்கு - ஏன், அதற்கு முன்கூடக் கொண்டு சென்று விடுவான்.

ராமனுக்கு மகுடாபிஷேகம் செய்கிற பொழுது ஒப்பற்ற வள்ளல் சடையப்பனைச் சொல்லத் துடிக்கிறது கம்பனின் நன்றி மறவாப் பெரு மனம். சடையனை எப்படி அங்கே - பட்டாபிஷேக மண்டபத்திற்கு - இட்டுச் செல்லுவது என்று சிந்திக்கிறான். சடையனின் முன்னோர்கள் அக்காலத்தில் இருந்திருக்க வேண்டுந்தானே! ஆம்! எனவே,

**''விரிகடல் உலகம் ஏத்தும்
வெண்ணைமன் சடையன் வண்மை
மரபுளோன் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி''**

என்று பாடி மன நிறைவு கொண்டு விடுகிறான்.

அதைப் போலவே ஆதித்தன் என்னும் தன் அன்பிற்குரிய நண்பனையும் ஜனக மன்னனின் மணிமண்டபத்தில் வீற்றிருக்கச் செய்து விடுகிறான். இந்த ஆதித்த சோழனின் மூல புருஷன் என்று மனுவை அறிமுகப்படுத்துகிறான் கவிச் சக்கரவர்த்தி. இந்த வரலாற்றுண்மையை மனத்தில் கொண்டு பொருள் செய்தால் வலிந்து பொருள் கொள்ள வேண்டிய நிர்பந்தம் ஏற்படாது, இல்லையா?

இனி மற்றொரு பாடலையும் கண்டு விட்டு இக்கட்டுரையை முடிக்கலாம்.

பரதன் கேகய நாட்டிலிருந்து அயோத்திக்குத் திரும்புகிறான்; நடந்தவற்றை எல்லாம் உணருகிறான்; கைகேயியை வெறுத்துவிட்டுக் கோசலையின் அரண்மனைக்குச் செல்கிறான். தன் மனத்தைத் திறந்து நடந்தவற்றிற்குப் பரதன் வருந்திப் புலம்புகிறான். அப்பொழுது பரதனின் உள்ளத் தூய்மையை உணர்ந்த கோசலை,

**''கைகயர் கோமகள் இழைத்த கைதவம்**
**ஐய! நீ அறிந்திலை போலுமால்?''**

என்றாள். இச்சொல் செவியிற் படலும் கதறிப் பதறி அழுது பதினெட்டுப் பாடல்களில் சபதமொழி கூறுகிறான். அப்படி அந்த வஞ்சனையை யான் அறிவேனானால் இன்ன இன்ன பாவங்கட்கு ஆளாவேனாக! என்றெல்லாம் சூளுரை கூறுகிறான் பதினெட்டுப் பாடல்களில் அதில் இறுதிப் பாடல் வருமாறு:-

**''கரும்பலர் செந்நெல் அம் கழனிக் கானநாடு**
**அரும்பகை கவர்ந்து உண, ஆகி பேணினென்**
**இரும்பலர் நெடுந்தனை ஈர்த்த காலொடும்**
**விரும்பலர் முகத்து எதிர் விழித்து நிற்க யான்!''**

இப்பாடலுக்கு, வை.மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார்

''அலர் கரும்பு செந்நெல் அம் கழனிக்கானம் நாடு = பரந்த கரும்பையும், நெற் பயிரையும் கொண்டுள்ள அழகிய கழனிகளின் கூட்டத்தைக் கொண்ட தேசத்தை'' என்று பொருள் செய்கின்றார்.

அண்ணாமலைப் பதிப்போ,

''கரும்பையும், பரவிய செந்நெற் பயிரையுமுடைய அழகிய கழனிக் காட்டையுடைய நாட்டை'', என்று பொருள் கூறுவதுடன் ''கழனிக் கானம் என்றது, வயற்காடு கழனிக் காடு என்றாற் போன்றது,'' என்று சப்பைக் கட்டுக் கட்டுகிறது.

இங்கும் வரலாற்றுண்மையை அறியாமற் போனதால் தான் இப்படி எல்லாம் இடர்ப்பட நேர்ந்திருக்கிறது.

கரும்பு அலர் = கரும்பைப் போல என்று பொருள் கொள்ள வேண்டும் இங்கே ''அலர்'' என்ற சொல் உவமன் உருபு ஆகும். எனவே, கரும்பைப் போலச் செழிப்பாக வளர்ந்துள்ள செந்நெல் என்று பொருள் கொண்டால் இடையூறு இல்லை. ஞானசம்பந்தப் பெருமான் ஓரிடத்தில் ''செந்நெலெலாம் கன்னல் காட்டச் செங்கரும்பு கமுகு காட்டும்'' என்று கூறுவது ஒப்பு நோக்கத்தக்கதாகும். இனிப் பாடலில் முழுப் பொருளையும் பார்க்கலாம்.

கரும்பைப் போலச் செந்நெல் வளரும் வளமிக்க நன்செய் நிலங் களைக் கொண்ட ''கான'' நாட்டைக் கொடும் பகைவர்கள் கைப்பற்றி அனுபவித்துக் கொண்டிருப்பதைக் கண்டு மானங்கெட்டு எப்படியாவது உயிர் பிழைத்தால் போதுமென்று கருதி அவர்கள் இட்ட இரும்பாலான நெடிய விலங்கை இழுத்துக் கொண்டு செல்லும் காலோடு அப்பகைவர் முகத்துக்கு எதிரில் விழித்துக் கொண்டு நிற்கும் நிலையை யான் அடைவேனாக!'' என்று சூளுரை கூறுகிறான்.

இங்கே கானநாடு என்பது புதுக்கோட்டைக்குத் தெற்கேயுள்ள ஒரு நாட்டுப் பகுதி, அதைக் கானோடு என்றும், கானநாடு என்றும் கூறுவர். இப்பொழுதுள்ள கானாடுகாத்தான் என்னும் நகரம் அந்த நாட்டைச் சேர்ந்ததே. அதைச் சோழர்களிடமிருந்து கொடும்பாளூர் வேளிர்கள் கைப்பற்றி விட்டனர். அதை விஜயாலயன் காலத்தில் ஆதித்தன் மீட்டான் என்பது வரலாறு. அதை உணர்த்தும் இந்தச் செய்தி உரை செய்த அறிஞர்கட்கெல்லாம் கிட்டாத காரணத்தால்தான் இப்படி வலிந்து பொருள் கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டது. இந்தச் செய்தியாலும் இன்னும் சில சான்றுகளாலுமே கம்பன் காலம் ஒன்பதாம் நூற்றாண்டு என்று துணிய முடிகிறது. எண்ணிய சகாத்தம் எண்ணூற்றேழின் மேல் என்ற சாற்றுக்கவியானும் இஃது உறுதியாகின்றது.

**''எண்ணிய சகாத்தம் எண்ணூற்று ஏழின்மேல், சடையன் வாழ்வு**
**நண்ணிய வெண்ணெய்நல்லூர் தன்னிலே கம்பநாடன்**
**பண்ணிய இராமகாதை பங்குனி அத்தநாளில்**
**கண்ணிய அரங்கர் முன்னே, கவி அரங்கேற்றினானே.''**



# சீர்திருத்தத் தந்தை

செட்டிமார் நாடு எல்லைப் பரப்பால் மிகச் சிறியது. நகரத்தார்கள் எனச் சிறப்புப் பெயர்கொண்டு விளங்கும் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் ஜனத்தொகையால் சிறிய சமூகத்தினரே. ஆயினும் மிக்க துணிச்சலுடன் ஆயிரமாயிரம் மைல்கள் கடல் கடந்து வாணிபம் செய்து ஏராளமாகப் பொருள் ஈட்டித் தாராளமாக அறவழியில் செலவு செய்தமையால் இவர்கள் புகழ் எங்கணும் பரவி நிற்கிறது. முடியுடை மூவேந்தர்க்குப் பின்னர்ப் பாடல்பெற்ற ஸ்தலங்களும் மங்களாசாசனம் பெற்ற திருப்பதிகளுமாக இவர்களால் புனர் நிர்மாணம் செய்யப் பெற்றவை மிகப் பல. காசி முதல் ராமேச்வரம் வரை இவர்களின் அறக்கட்டளை இல்லாத ஆலயம் இல்லை எனச் சொல்லிவிடலாம். இத்தகு பெரும்புகழ் வாய்ந்த சமூகத்தில் வேண்டாத பல பழக்கங்களும் காலத்தோடிணைந்து செல்லவொட்டாத சில தடைகளும் நிலவி வந்த காலத்தில் துணிந்து எழுந்த தொண்டர் திரு. சொ. முருகப்பா அவர்கள்.

இவர்கள் மலேயாவில் கொண்டு விலை செய்து கொண்டிருந்த பொழுது, மகிபாலன்பட்டி திரு. மு. சின்னையா செட்டியார் அவர்களின் தொடர்பு இவர்களுக்குக் கிட்டியது. சமூக சீர்திருத்தம் பற்றிய எண்ணம் இவர்கட்கு அவர்களால்தான் உதித்தது என்று சொல்ல வேண்டும். அந்தக் காலத்திலிருந்தே சமூக சேவையில் இவர்களின் உள்ளம் முழுதும் ஈடுபட்டுவிட்டது. தாய்நாடு திரும்பியதும் சமூக வளர்ச் சிக்கான பணிகளில் முழுமூச்சுடன் ஈடுபடத் தொடங்கிவிட்டார்கள். எப்பணிக்கும் ஒரு ஸ்தாபனம் இன்றியமையாததென்பதை நன்குணர்ந்த படியால் ஒரு சங்கம் ஸ்தாபிக்க வேண்டிய முயற்சியை மேற் கொண்டார்கள். அதற்கு ஒத்த பிராயமும் ஆர்வமுள்ள இளைஞர்கள் சிலரின் கூட்டுறவைப் பெற்றார்கள். சங்கமும் தொடங்கப் பெற்றது.

ஹிந்துமதப் பெற்றி தன்னைப் பார் முழுதும் பரப்பிய கர்ம யோகியாம் சுவாமி விவேகாநந்தப் பெருமானின் மெய்ப்புகழ் நாடெல்லாம் மணத்துக் கொண்டிருந்த காலமாதலால் சங்கத்திற்குப் பெயர் ''ஹிந்து மதாபிமான சங்கம்'' என்று அமைக்கப் பெற்றது. விவேகாநந்தரும், அவர்தம் குருமகான் ராமகிருஷ்ண பரமாம்ஸரும் சங்கத்தின் லட்சிய புருஷர்களாக விளங்கினர். சங்கத்தில் நூல் நிலையம் ஒன்றமைத்து, அதற்கு ''விவேகாநந்த புத்தகசாலை'' என்று பெயரிட்டனர். எல்லோரும் முறையாகத் தமிழ் பயில வழிசெய்து காலை மாலை வகுப்புகள் நடத்தினர். நல்ல தமிழறிஞரான ஆசிரியர் சு. சிதம்பர ஐயர் அவர்கள் முறையாகப் பாடம் சொல்லிக்கொடுத்து வந்தார்கள். அதற்கு ராமகிருஷ்ண கலாசாலை எனப்பெயர் சூட்டப் பெற்றது. அன்பர்கள் பலர் தமிழ் இலக்கிய இலக்கணம் கற்கத் தொடங்கினார்கள்.

இங்ஙனமாக ஒரு ஸ்தாபனம் வலுப்பெற்றுவிட்டதால், பல அன்பர்கள் ஒருங்கு சேரவும், கலந்து பழகவும், பல பொருள்கள்பற்றிச் சர்ச்சை செய்யவும் நல்லதொரு வாய்ப்புக் கிட்டிவிட்டது. வளர்ந்துவரும் மக்களைப்பற்றி அறியலானார்கள். பல்வேறு சமூகத்தவரும் எங்ஙனம் திருந்தி வருகின்றனர் எனபதையும் நோக்கினார்கள். செட்டிமார் சமூகத்தில் சீர்திருத்தப் பெற வேண்டிய நடைமுறைகளைப் பற்றியெல்லாம் சிந்திக்கத் தொடங்கி விட்டார்கள். அப்புறம் கேட்பானேன்; எண்ணம் செயலாய் அரும்பத் தொடங்கிவிட்டது. ''தன வைசிய ஊழியர் சங்கம்'' என்ற பெயருடன் சமூக சீர்திருத்த ஸ்தாபனம் உதித்துவிட்டது. அதில் சில கட்டுப்பாட்டிற்குட்பட்டே அங்கத்தினர்கள் சேர்த்துக் கொள்ளப் பெற்றனர். அதில் சேர முடியாதவர்கள் எல்லாம் சேர்ந்து கொள்வதற்கு ஏற்றதாகத் ''தனவைசிய வாலிபர் சங்கம்'' என்ற ஒரு ஸ்தாபனமும் தோன்றியது. நாடெல்லாம் சுற்றிச் சமூக சீர்திருத்தப் பிரசாரம் வெகு மும்முரமாகச் செய்யப் பெற்றது. அனைத்திற்கும் தளபதி சொ. முருகப்பாதான் என்பதைச் சொல்லவா வேண்டும்?

அந்த நாளில் இத்துறைகளில் பெரும் பங்கு கொண்டு அரும்பணி ஆற்றிய அன்பர்கள் பலர். திருவாளர்களான ராய. சொக்கலிங்கன், பிச்சப்பா சுப்பிரமணியன், வைசு. ஷண்முகன், அழ. அருணாசலன், மு. காசிவிஸ்வநாதன் செட்டியார், கி. நாராயணன் செட்டியார், அ. ராம. ராம. இராமநாதன் செட்டியார், செ.அ. ராம. முருகப்ப செட்டியார், கோகலே அருணாசலன் செட்டியார் முதலியவர்கள் குறிப்பிடத்

தக்கவர்கள். இச்சந்தர்ப்பத்திலே அவர்கட்கெல்லாம் நமது நன்றி யறிவுடன் கூடிய வணக்கத்தைப் புலப்படுத்திக் கொள்வோமாக!

இங்ஙனம் நல்லதொரு திருக்கூட்டமாக அமைந்த இச்சங்கத்தார் தங்கள் சீர்திருத்தப் பணியில் பல எதிர்ப்புக்களைச் சமாளிக்க வேண்டி யிருந்தது. புதுமையைப் புறக்கணித்துவிட்டு, மறுமலர்ச்சியைக் காணவும் கண்கூசிப் பழமை, பழமை என்று கொக்கரிப்பதால் நன்மை ஏற்பட்டதே இல்லை என்பதை வரலாற்று ஏடுகள் சுட்டிக் கொண்டேயிருந்தாலும் நாட்டில் எந்தச் சீர்திருத்தத்திற்கும் எதிர்ப்பு ஏற்படாமல் இருந்ததுண்டா? நல்ல சீர்திருத்தங்கட்குத் தோன்றிய எதிர்ப்பெல்லாம் காலப்பெருந்தீயால் பொசுங்கிச் சாம்பராகப் போனதைக் கண்டும் கற்றும் அறிந்திருந்தாலும் எதிர்ப்போர் இருந்து கொண்டுதானே இருக்கிறார்கள்? எதிர்ப்போர் இன்றேல் எந்த இயக்கமும் உரம் பெறாது என்பதற்காகவே ஆண்டவன் எந்த நல்ல இயக்கத்திற்கும் எதிர்ப்பையும் தோற்றியருளுகிறான்போலும்! கேவலம் மொட்டைத் தலையைக் கிராப்பாக்கினால் குடியே முழுகிப் போனது போன்ற கூக்குரல் கிளப்பத் தொடங்கிவிடுவார்கள், சில பெரிய மனிதர்கள்.

கிராப்புத் தலையுடன் காணப்பெறும் இளைஞர்களை அழைத்து வந்து தங்கள் முன்னிலையில் இருத்தி க்ஷவரம் செய்யச் செய்த காட்சிகளை நம்மில் சிலராவது கண்டிருக்கிறோம்; பலர் கேட்டிருப் பார்கள். அன்றியும் நகர விருந்து முதலான பெரும் பந்திகளில் கிராப் தலையர்கள் வேண்டுமென்றே தடை செய்யப்பட்டார்கள் என்றால் சீர்திருத்த எதிர்ப்பின் கடுமையை-ஏன்-கொடுமையை - ஒருவாறு உணர்ந்து கொள்ளலாமன்றோ? முதன் முதல் கிராப்பு வைத்து வழிகாட்டிய அன்பர் காலஞ் சென்ற மகிபாலன்பட்டி மு. சின்னையா செட்டியார் அவர்கட்குப் பின் சந்ததியார் யாவரும் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம். அவர் தம் துணிச்சலுக்கு நமது வணக்கம்!

இத்தகைய எத்தனையோ எதிர்ப்புகளை எல்லாம் மிக்க சாமர்த்தியமாகச் சமாளித்துக் கொண்டு இந்தத் திருக்கூட்டம் நாட்டிலே நல்லதொரு செல்வாக்கைப் பெற்றுவிட்டது; கூடாமலே இருந்த தொண்ணூற்றாறூர்க் கூட்டத்தைக் கூட்டிற்று; உடனடித் தேவையான பல தீர்மானங்களை நிறைவேற்றியது; அதை அமல் நடத்த சத்யாக்கிரக

முறையினையும் மேற்கொண்டு அரும்பணியாற்றியது; எத்தனையோ மக்களின் மனமார்ந்த வாழ்த்துக்களைப் பெற்றது.

இத்தனைக்கும் மூலபுருஷராக இருந்த முருகப்பா 'தனவைசிய ஊழியனை' ஆசிரியராக இருந்து அருமையாக நடத்தினார். 'ஊழியனை' திரு. ராய. சொக்கலிங்கன் ஏற்று நடத்தத் தொடங்கியதும் குமரனைத் தோற்றுவித்துப் பல்லாண்டுகள் அருமையாக நடத்தினார்.

நாடெல்லாம் சிறு தெய்வ வழிபாடு மல்கி அதன் காரணமாக உயிர்க்கொலை பெருகி நின்றமை அன்பர் முருகப்பாவின் இதயத்தை வெதும்பச் செய்தது. அதன் காரணமாகக் ''காரைச் சிவனடியார் திருக்கூட்டம்'' காணப் பெற்றது. எங்கெங்கு உயிர்க்கொலை வழிபாடு நடைபெறுகின்றனவோ அங்கெல்லாம் சென்று பெரும் பிரசாரம் செய்யப் பெற்றது. சேரி முதலிய இடங்கட்கெல்லாம் சென்று பையன்களைத் திரட்டி அவர்கட்கு நெற்றியில் நீறு பூசிக் கழுத்தில் ருத்ராக்ஷம் அணிவித்து அமாவாசை, பாவாடை, இருளன், காட்டேரி போன்ற பெயர்களை எல்லாம் அம்பலவாணன், நடராஜன், திருச்சிற்றம் பலம், கண்ணப்பன் என்றெல்லாம் மாற்றிச் செய்த திருப்பணி அருமைப் பாடுடையதாகும். இத்திருக்கூட்டத்தினர் பல்வேறு முறையான துண்டுப் பிரசுரங்களை எழுதிக் கோடிக்கு மேற்பட அச்சிட்டுத் தமிழர் சென்றிருக்கும் நாடெல்லாம் பரப்பினர்.

பெண் குலத்துரிமையை நிலைநாட்ட அன்பர் முருகப்பர் மிக்க தொண்டியற்றினார். ''மாதர் மறுமண சகாய சங்கம்'' கண்டார்; மகளிர் இல்லம் தோற்றுவித்தார்; நாட்டினில் ஜாதி பேதம் தொலையக் கலப்பு மணத்திற்கு ஆக்கந் தந்தார். இங்ஙனம் பல்வேறு துறையிலும் ஈடுபட்டு இவர் ஆற்றிய தொண்டு பலப்பல.

சுருக்கமாகச் சொன்னால் இன்று செட்டிமார் நாட்டில் கல்வி ஆர்வமும், சேவை உணர்ச்சியும், சீர்திருத்த மனப்பான்மையும் வளர்ந்து நிற்கின்றதென்றால், பலர் நல்ல பேச்சாளர்களாக விளங்குகின்றார்கள் என்றால், அனைத்திற்கும் மூலகாரணம் அன்பர் முருகப்பர். செட்டிமார் நாட்டின் சீர்திருத்தத் தந்தையும் இவரே!



# சகோதரர் பாஸ்கரத் தொண்டைமான்

திருநெல்வேலியில் ஒரு பாராட்டு விழா. ஒரு முதுபெரும் புலவர் எண்பதாண்டு முற்றிய மகிழ்ச்சியால் தமிழ் அன்பர்கள் கூடி விழா எடுக்கின்றார்கள். வெள்ளகால் வெ.ப. சுப்பிரமணிய முதலியார் அவர்கள்தாம் விழாவுக்குரிய பெருமகனார். எண்பதாண்டு நிறைந்த தமிழ்ப் பேரறிஞர் ஒருவரைப் போற்றி எடுக்கும் விழாவிற்குத் தக்க ஒருவர் கிடைக்க வேண்டுமே, தலைமை தாங்கி ஆசி அருள! தமிழர் செய்த தவமே மண்மிசை அவதரித்ததோ என்று வியந்து மகிழத் தமிழ் மொழிக்கும், தமிழ்க் கலைக்கும் ஒப்பற்ற பணியாற்றிய உ.வே.சா. அவர்களின் நினைவே பலருக்கும் வந்தது.

ரசிகமணி டிகேசி, ''வெள்ளகாலை வாழ்த்த உத்தமதான புரத்திற்குத்தான் தகுதியுண்டு!'' என்று தீர்ப்புக் கூறிவிட்டார்கள். பிறகு மறு பேச்சுக்கு ஏது இடம்? ரசிகமணியே ஐயரவர்களுக்கும் எழுதினார்கள். அவர்களும் இசைந்தார்கள்.

விழா இந்துக் கல்லூரியில் மாடியில் நடந்தது. விழா நேரத்திற்கு முன்பே தமிழ் அறிஞர்களும் அன்பர்களும் நிரம்பிவிட்டனர். விழா நேரத்தில் விழாத் தலைவர் தாட்சிணாத்திய கலாநிதி, மகாமகோ பாத்தியாய டாக்டர், உ.வே. சாமிநாதையர் அவர்கள் விழா மண்டபத்தை நோக்கி வருகிறார்கள். முதிர்ந்த பிராயம். தளர்ந்த உடல். விழா நடக்கும் இடமோ மேல்மாடி. எனவே, தலைவரை அழைத்துக் கொண்டு, வழிகாட்டி, ஆங்காங்கே உள்ளனவற்றை எடுத்துரைத்துக் கொண்டு ஓர் இளைஞர் முன்னே செல்லுகிறார். தலைவர் மெல்ல மெல்ல மாடிப்படி ஏறி, விழா மண்டபத்தை அடைந்து தலைமைப் பீடத்தில்

அமர்கின்ற வரையில், அந்த இளைஞர் கூடவே சென்று, பின்னர் ஐயரவர்களின் கண்ணுக்கு மறைந்துவிடுகிறார்.

விழா முறைப்படி தொடங்குகிறது. மாலைகள், வாழ்த்துமடல், வரவேற்பிதழ் முதலிய சடங்குகள் நிறைவேறித் தலைவர் உரை தொடங்குகிறது. ஆம், ஐயரவர்கள் பேசத் தொடங்குகிறார்கள். தம்மை இப்பெரு விழாவிற்கு அழைத்தமைக்கு விழாக் குழுவினர்க்கு நன்றி கூறியதும், அவர்கள் மற்றொருவருக்கும் நன்றி கூறினார்கள்.

''என்னைப் பலகாலும் வற்புறுத்தி நீ மேலேற வேண்டும். எனவே, நீ எப்பொழுதும் கற்பதில் ஊக்கம் உள்ளவனாயிருக்க வேண்டும் என்று கூறி, ஒவ்வொரு நாளும் படி, படி!'' என்று தூண்டி வந்தவர்கள் என் ஆசிரியர் பெருமானாகிய பிள்ளையவர்கள். இப்பொழுது என்னை அப்படி ஊக்குவிப்பார் ஒருவரையும் காணேன். நான் நிரம்பக் கற்றவன் என்று நீங்களெல்லாம் என்னை மதித்து மரியாதை செய்யவும் தொடங்கி விட்டீர்கள்.

''நெல்லைக்கு வந்தபின் நான் கற்க வேண்டியவை பல உள்ளன என்பதையும், அவற்றை எல்லாம் கற்றுத்தான் மேனிலை எய்த வேண்டும் என்பதையும் உணர்ந்தேன். மேலும் மேலும் படி படி என்று சொல்ல ஆசிரியப் பெருமானாகிய பிள்ளையவர்கள் இல்லையே என்னும் குறையும் இன்று தீர்ந்தது. என்னை அழைத்து வந்தானே ஒரு பிள்ளையாண்டான், அவன் ஆண்டிலும் உருவத்திலும் சிறியவன்தான். ஆனால், அவன்தான் என் ஆசிரியப் பெருமானின் ஸ்தானத்தை இன்று வகித்தவன். ரெயிலடியில் இறங்கியது முதல் இங்கு வரும்வரை என் உடனேயே இருந்து கூடவே வந்து, படி படி என்று கூறி வழியும் காட்டி, மேலேற வேண்டும் என்று சொன்னதுடன் அமையாது, மேனிலைக்கே கொண்டு வந்து தலைமைப் பீடத்திலும் அமர்த்திச் சென்றுவிட்டான். ஆகவேதான், பிள்ளையவர்கள் ஸ்தானத்தை வகித்து, என்னை ஆண்டான் என்ற பொருள்பட இந்தத் தம்பியைப் பிள்ளையாண்டான் என்று குறிப்பிட்டேன்,'' என்று கூறியதுடன், ''இந்தத் தம்பி பல்லாண்டு நல்வாழ்வு வாழ்க!'' என்றும் வாழ்த்தியருளினார்கள்.

சிலேடை நயம் தோன்றக் கூறிய அவ்வுரை மக்களைப் பெரிதும் மகிழ்வித்தது என்பதை, ஆங்கு ஒலித்த கைதட்டும் ஆரவாரமும் புலப்படுத்தின. அந்தத் தம்பியாகிய பிள்ளையாண்டான் அடைந்த

ஆனந்தத்திற்கு அளவே இல்லை என்னலாம். ''தமிழ்த் தாயின் தவப்புதல்வர் திருவாயால் வாழ்த்துப் பெறவும், தம்பி என்று அமுதூர அழைக்கவும் என்ன பாக்கியம் செய்தேன்!'' என்று எல்லையிலா இன்பத்தில் ஆழ்ந்த அவர் கண்களில் இரு சொட்டு நீரும் துளிர்த்தன.

அந்தப் பிள்ளையாண்டான்தான் வெள்ளகால் எண்பதாண்டு விழாக் குழுவின் காரியதரிசியான திரு. தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான். ஐயரவர்கள் வாய் மணக்கக் கூறிய தம்பி என்பதைப் பிற்காலத்தில் தமது புனைபெயராகக் கொண்டு எத்தனையோ கட்டுரைகள், கவிதைகளை தொ.மு.பா. எழுதியுள்ளார்.

திரு. தொண்டைமான் வருமானத் துறையில் வருமானச் சோதனையாளராகச் சேர்ந்தார். படிப்படியாக மேலேறி, இந்திய நிர்வாகப் பணியாளர்களுள் ஒருவராகி மாவட்டக் கலெக்டர் வரை உயர்ந்து ஓய்வு பெற்றார்.

இவர் பாட்டனார் சுவையான சிறு பிரபந்தங்களையும் வண்ணக் கவிகள் பலவற்றையும் தந்தவர். இவர் தந்தையாரோ வண்ணக் கலவைகளால் மாந்தரை மகிழ்விக்கும் ஓவியம் பல படைத்தவர். இவருக்குக் குருவாகக் கிடைத்த ரசிகமணி டிகேசி ரஸானுபவ மேதை என்பதை யாரே அறியாதார்? இந்த முப்பெருந் தொடர்பே பாஸ்கரத் தொண்டைமானை வளமாக்கியது என்று சொன்னால் அது மெய்யேதான்.

கலையும் தமிழும் தொ.மு.பாவுக்கு இரு கண்கள். தமிழ் வழியே கலையைக் காண்பார், துய்ப்பார், மனம் பறிகொடுத்து நிற்பார். தமிழை, தமிழ்க் கவியை ரசிப்பார், சுவைப்பார். இரண்டையும் பற்றித் தெளிவாகவும் கவர்ச்சியாகவும் பேசுவார், எழுதவும் எழுதுவார்.

இவருக்கு வாய்த்த பேறு இரண்டு. ஒன்று இவர் தமிழனாய்ப் பிறந்தது, மற்றொன்று இவர் முன்னோர்கள் நெல்லைக்குக் குடியேறியது. இல்லாவிட்டால் ரசிகமணி என்று தமிழ் கூறும் நல்லுலகம் எல்லாம் ஒருமுகமாய்ப் பாராட்டும் டிகேசியின் உறவு இவருக்குக் கிட்டியிருக்குமா? அவர் உறவின்றி இவர் தமிழோடு ஒட்டி உறவாடி இப்படி எல்லாம் விளையாடத்தான் முடியுமா?

மகாத்மா காந்தியடிகளுக்குச் சத்தியமும் அஹிம்சையும்போல இவருக்குக் கலையும் தமிழும். காந்தியடிகள் கூறுவார், தமக்குச் சத்தியந்தான் லட்சியம், அகிம்சை அச்சத்தியத்தை அடைய வாய்த்த வழிதான் என்று. ஆனால், அத்துடன் விட்டுவிட மாட்டார். லட்சியம் எவ்வளவுக்கு விழுமியதோ அவ்வளவுக்கு, லட்சியத்தை அடைய மேற்கொள்ளும் வழியும் விழுமியதாக இருக்க வேண்டும் என்றும் தெளிவுபடுத்துவார். அப்படித்தான் தொண்டைமானுக்குக் கலையும் தமிழும். கலை இவர் லட்சியம். கலையைக் கண்டு துய்க்கவும், காட்டித் துய்க்கச் செய்யவும் மேற்கொண்ட பெருவழியே தமிழ்.

பாஸ்கரத் தொண்டைமான் கலைப்பித்தர். தமிழறிஞர். தெய்வம் தெளிந்தவர். தெளிந்தாரைப் பேணும் பண்பினர். நல்லனவற்றை யெல்லாம் காணத் துடிப்பவர். கண்டதும் அருமையைப் பாராட்டக் கூசாதவர். அப்படியே குறைகளை எடுத்துரைக்க அஞ்சாதவர். இனிப்புப் பண்டத்திலும் காபியிலும் எவ்வளவு ஆசையோ அவ்வளவு ஆசை அவருக்குத் தலயாத்திரை செய்வதிலே. எண்ணற்ற தலங்களுக்குச் சென்றார், கண்டார், உள்ளம் பறிகொடுத்தார், தமிழ் மக்கள் பலரையும் உள்ளம் பறிகொடுக்கச் செய்தார்.

குமரி முதல் வேங்கடம் வரையுள்ள பன்னூறு ஆலயங்களையும் கண்டார், வணங்கினார். சிற்பங்களை யெல்லாம் ஆய்ந்தார். அந்த அழகிலே தோய்ந்தார். அவற்றை எல்லாரும் காணாமலே கண்டு அநுபவிக்கச் செய்தார். இமயம் வரை சென்றார். எத்தனையோ படங்கள் எடுத்தார். அவற்றின் குறிப்புக்களை எழுதிக் குவித்தார். அவற்றில் சில வெளிவந்தன, பலப்பல கிடந்துவிட்டன.

கம்பன் அடியார்களிலே சிறந்த ஒருவர் இவர். ஆண்டு தவறாமல் கம்பன் திருநாளில் கலந்து கொள்வதையே பெரும் பேறாகக் கருதி மகிழ்பவர். இவ்வாண்டுதான் வர முடியாமல் போய்விட்டது. இனி எங்கே இவரைக் காண்போம்? இவர் உரையைக் கேட்போம்? க ம்பன் திருக்கூட்டத்திலே ஒருவர் இல்லை என்பதை மறக்க முடியாமல் நிலைநாட்டி விட்டுச் சென்றவர் சகோதரர் பாஸ்கரன்.

இவருக்குத் தமிழகத்தில் நிரந்தரமான நினைவுச்சின்னம் ஒன்று உண்டு. அதுதான் இவர் எடுத்த தஞ்சைக் கலைக்கூடம். கலை

உள்ளவரை, தமிழ் உள்ளவரை, இவர் புகழைப் பேசிக் கொண்டிருக்கும் அக்கலைக்கூடம்.

கம்பன் திருஅடியான்
கன்னித் தமிழ்த்தெண்டன்
செம்பு,சிலை, சிற்பத்
திறன்ஆய்வான் - நம்பன்மால்
வீற்றிருக்கும் ஆலயங்கள்
மேவி அவற்றின்சீர்
சாற்றியவன் பாஸ்கரனேதான்.

காடு, மலை, வாய்க்கால்,
கழனி, குளம், சாலை, இடி
பாடுகளும் சென்றடைந்து
பார்த்தெடுத்த கேடில்
சிலைக்கூட்டந் தன்னையவன்
சேமித்தான் தஞ்சைக்
கலைக்கூடம் கண்டதிலே காண்.

தேடிச் சிலைகளுடன்
செப்புப் படிமங்கள்
நாடிக் கொணர்ந்தங்கே
நாட்டினான் - கூடிநிதம்
மக்கள்பலர் நோக்கி
மகிழ்கின்றார், பாஸ்கரனுக்கு
எக்காலும் நன்றி இசைத்து.

கல்லில் மலரும்
கலையழகெல் லாம்திரட்டி
வெல்லத் தமிழால்
விருந்தளித்த நெல்லைநகர்
ஈந்தளங்கள் பாஸ்கரன்தான்
எம்பெருமான் பொன்னடிக்கிழ்
சாந்தியுடன் வாழ்வான் சமைந்து.

ஒத்த பல ஆலயங்கள் ஓங்கிவிட்டதென்றறிந்து
எத்தனையோ கோயிலவை ஏங்கி நிற்கும் இத்தரையில்
நின்றுவளர் தம்புகழும் நீளுதற்குப் பாஸ்கரன்தான்
என்றுவருவான் இங்கே என்று.

# தனவணிகர்களும் பொருளாதாரமும்

கணக்கிலணுவாகிலும் விடாது சிறுகச் செய்து பெருக வாழ்ந்த தென்னிந்தியர்களுட் சிறப்பாயவர்கள் தனவணிகப் பெருமக்களே என்பதை எவரும் மறுக்கத் துணியார். செட்டு நிலையோடு கட்டுமுறையுஞ் சேர்ந்து அன்னார் வாழ்வை இன்பமயமாக்கிற்று! அக்கட்டு முறையில் காலத்திற்கும் பிறவற்றிற்கு மேற்பத் தள்ளப்பட வேண்டியன இல்லாமலில்லை; என்றாலும், தொழின் முறையில் அவர்களிடையே நிலவிய கட்டுப்பாடும் ஒற்றுமையும் பெரும்பான்மை நலனையே நல்கியிருக்கின்றது.

நாணயத்திலும், உறுதியிலும் நந்தன வணிகர்கள் மிகச் சிறந்தவர்களாய் வாழ்ந்து வந்திருக்கின்றார்கள் என்பது சரித்திர சம்மதமானவோர் உண்மையாகும். மேலும் எந்த நாட்டிலும் தனவணிகரைப் போன்று ''கொடுக்கல் - வாங்கல்'' (Banking) என்னுந் தொழிலையே கொண்ட ஒரு வகுப்பினரைக் காண்டல் அரிது. இற்றை நாளில் ஒரு தேயத்தின் உயிர்நாடியாக விருப்பது பொருளாதாரத் துறை (Financial)யே யாகுமென்பதை மறுப்பார் யாரே! இங்ஙனம் பொருளாதாரத் துறையே தங்கையில் வைத்திருக்கும் ஒரு வகுப்பார். நினைத்தால் அந்நாட்டையே - அந்நாட்டரசாங்கத்தையே - ஆட்டி வைக்கும் பேராற்றல் படைத்தவராயிருந்திருக்க முடியும். உதாரணமாக வட அமெரிக்காவில் மெக்ஸிகோ (Mexico)வுக்கும், கானடியன் எல்லைப் புறத்திற்கும் (Canadian Frontier) இடையிலுள்ளதும்; நாற்பத்தெட்டுச் சிறு மாகாணங்களாலிணைக்கப்பட்டதும், 3,690,419 சதுர மைல்கள் அளவுள்ளதுமான ''அமெரிக்க ஐக்கிய மாகாணங்கள்'' (United States of America) எனப் பெரிய செல்வங் கொழிக்குஞ் சீமான்கள் செறிந்திலங்கும் தேயத்தை யாண்டு வரும் ஐக்கிய குடியரசு அரசாங்கத்தையே (Federal Republic Government) ஆட்டி வைப்பவர் ''ஹென்றி போர்டு'' என்னும் ஒரு மோட்டார் வியாபாரியேயாகும்.

உலகிலுள்ள வல்லரசுகளிலெல்லாம் மிகப் பெரிய, ''சூரிய அஸ்தமன மென்பதே கிடையாது'' எனப் புகழ்ந்துரைக்குந் தன்மை வாய்ந்த அத்துணைப் பெரிய நிலப்பரப்பைத் தன்னாட்சியிற் கொண்டதுமான பிரித்தானியத் துரைத்தனத்தைப் பெயரளவில் எந்த கட்சியினர் ஆண்டு வந்த போதிலும், அந்தப் ''பிரிட்டிஷ் கவர்ன்மெண்'டை உண்மையிலேயே ஆண்டு வருவது இங்கிலாந்து வங்கி (Bank of England) என்னும் பொருளாதார நிலையமே யாகுமென்பதையும் பொருளா தாரத் துறை புக்கார் நன்கறிவர். அப்படியாக உலக வல்லரசுகளை எல்லாம் ஆட்டி வைக்கும் பேராற்றல் படைத்த பொருளாதாரத் துறையே தமது சொந்தத் தொழிலாகக் கொண்டு எண்ணிலடங்காப் பெருந் தொகையை நம் சோதர நாடாகிய பர்மா நாட்டிலும் மற்றைய பல்வேறு அந்நிய நாட்டிலும் வாரி இறைத்திருக்கும் நந்தன வணிகப் பெருமக்கள் அதிகாரத்தைக் கைப்பற்ற நினையாது நாட்டின் நலன் ஒன்றையே தமதரு நோக்கமாகக் கொண்டு தமக்கும் சிறிது இலாபம் கிடைக்குமாறு தொழிலாற்றி வருவதொன்றே அவர் களின் அதிகார வேட்கை யின்மையும், ''நாடெங்கும் வாழக் கேடொன் றுமில்லை'' என்றெண் ணும் மனப்பான்மையும் நன்கு விளக்கும்.

அன்றியும் பொருளாதாரத் துறையில் அவர்கட்கு உள்ள அறிவும் அனுபவமும் வேறு ஆங்கிலம் படித்த பேரறிஞர்களிடையிலுங் காணமுடியாதென்று கூறின் அது மிகைப்படக் கூறியதாக மாட்டாது! அவர்கள் பொருளாதாரக் கலை வளர்ச்சியிலும் பேரார்வங் கொண்ட வர்கள் என்பது இரங்கூன் சர்வகலா சாலையில் பொருளாதாரக் கலையில் வல்லுனராகிய ஒரு பண்டிதரை நியமிக்கச் செய்து மாணவர்கட்கு அக்கலையில் பயிற்சியளித்து வரச் செய்ததிலிருந்தும், அதற்கெனவொரு நிரந்தரமான மூல நிதியாக இரண்டு நூறாயிரங்கட்கு மேல் நன்கொடையளித்ததிலிருந்தும் நன்கறியக் கிடக்கின்றது.

அதிகார இச்சையின்றி, நாட்டின் நலன் ஒன்றையே கருதி, முன் பின்னறியாத தேயங்கட்குச் சென்று ஏழை, விவசாயிகட்குக் கடன் கொடுத்து அவர்கள் சமயமறிந்து திரும்பப் பெற்றுக் கொண்டவர்கள் வேறொருவமிருக்க மாட்டார்கள்; எத்துணையோ பெரிய பெரிய பாங்குகள் இருந்த போதிலும் செல்வர்களுள் பெரும்பாலார் வாணிபம் செய்பவராயிருப்பாரே யல்லாது விவசாயஞ் செய்பவராயிருக்க முடியாது. ஏனெனில் விவசாயிகட்குக் கொடுத்து விட்டுப் பயிரறுக்குங் காலம் வரை அவர்கள் காத்திருக்க விரும்பார்கள். ஆகவே நந்தன

வணிகர்கள் தமது இலாபத்தை ஒருபாற் கருதி இத் தொழிலாரம்பித் திருப்பினும் இதன் பயனால் நாடு வளர்வதற்குத் தனிப் பெருங் காரணமான வேளாண்மை விருத்தியடையலாயிற்று.

நாம் அதிகாரம் நமக்குக் கிடைக்க வேண்டுமென்று எண்ணாது தேயநலங் கருதித் தொழிலாற்றினோமாயினும், ஒன்றை மட்டும் துப்புரவாக மறந்தே போயினோம்! அது வென்னையோ வெனிற் கூறுதும். அதுதான் பாதுகாப்பு. அப்பாதுகாப்பைத் தலைப்பிலேயே பெற முயன்றிருப்பின் எளிதில் முற்றுப் பெற்றிருக்கும். ஆனாலும் இன்னும் முழுகிப் போய்விடவில்லை. முயன்றால் முடியாத தொன் றுண்டோ? நமக்கு பர்மா அரசியலில் என்ன உரிமையிருக்கின்றது? சமீபத்திற்றான் நமது சமூகத்தவர் ஒருவர்க்குச் சட்டசபையில் ஒர் இடம் கிடைத்தது! அதுவும் நிரந்தரமல்ல, தேர்தலுமல்ல! அரசினரின் நியமனம்!!! அதேனும் இத்துணை நாட்களுக்குப் பிறகு கிடைத்ததே! அதுபற்றி மகிழ்வு கொள்ள வேண்டியதே! முதலாவது அந்த இடத்தை நிரந்தரமாக்க முயல வேண்டும். மேலும் அரசியலில் நமக்கும் மற்றைய வர்கட்குள்ள பூர்ண உரிமையும் இருக்கும்படி செய்ய வேண்டும்! அது பற்றிய விபரங்களை நமது ''தனவணிகன்'' அவ்வப்போது கூறி வருவான் என்று கருதுகிறேன்.

உலகம் வெகு வேகமாகச் சென்று கொண்டிருக்கின்றது. முற்காலத்தைப் போன்று இக்காலமிருக்கவில்லை. இன்னும் நாம் நமது தொழிலைப் பழைய முறையிலேயே வைத்துக் கொண்டிருப்பது சால்புடைத்தாகாது. நமது இளைஞர்களை நன்கு ஆங்கிலம் கற்றவர்களாக ஆக்கவேண்டும். பொருளாதார நூல்களை நன்கு கற்கச் செய்ய வேண்டும். ஒவ்வொருவரும் கணக்கு வைத்துக் கொள்ளும் முறையும், கணக்குத் தயாரிக்கும் முறையும், கணக்கு முடிக்கும் முறையும் தெரிந்தவர்களாக முயற்சிக்க வேண்டும்! இவை சில மாதங்கள் முயன்றால் மிக எளிதாக வந்துவிடும். ஆதலால் தனவணிகச் செல்வர்கள் காலத்தின் சுழற்சிக்கேற்பத் தாமும் நடந்து நலம்பல துய்ப்பார்களென்று இறைவனை வேண்டி இக்கட்டுரைக்கு இறுதி காண்கின்றோம்.

*(கம்பனடிப்பொடி பொருளாதாரத் துறையையும் விட்டு வைத்தாரில்லை என்பதற்கு சான்று பகரும் இக்கட்டுரை 1933ல் தனவணிகன் இதழில் வெளிவந்தது. தம் 25ஆம் வயதில் சாதித்த சாதனை இது! அதுசரி, அவர் தம் அழகு தமிழ் நடையைக் கவனித்தீர்களா?)*

# இளைஞர்களும் சீர்திருத்தமும்

*இரங்கூனிலிருந்து வெளிவந்த "தனவணிகன்" 1933 நவம்பர் இதழில் வெளிவந்தது இக்கட்டுரை என்பதை மறந்துவிட்டுப் படித்தால், இன்றும் அப்படியே பொருந்தும்!*

**உ**லகம் இயற்கை நெறியொழுகவேயமைந்தது. அத்தூநெறி நல்வாழ்வை நல்கும். அந்நெறியினின்றும் வழுவினால் வாழ்க்கையிற் குறைகள் வந்தடையும். அக்குறைபாடுகள் ஒவ்வொரு வகைத்தாயிருந்து மக்கட்குப் பேரின்னல் விளைக்கும்.

நந்தமிழ்நாட்டை அத்தகு குறைபாடுகள் பல புகுந்து நல்வாழ்வைக் குலைத்து வருகின்றன. அவற்றுட் சிறப்பாக இண்டெடுத்துரைக்கத் தக்கன:- பிறப்பினாலுயர்வு தாழ்வு கற்பித்தல், அதனால் தீண்டாமை நெருங்காமை முதலிய கொண்டொழுகல், பெண்ணடிமையாக்கல், பொருளற்ற குருட்டுச் சடங்குகட்கடிமைப்பட்டுக் கிடத்தல் ஆகியவாம். இவற்றைக் களையப்புகும் பொழுது பண்டைத் தமிழர்களின் நிலை மையையும், கொள்கையையும் ஆராய்தல் இன்றியமையாததாகும். அங்ஙனம் ஆராய்ந்து செயலிற் கொணர்ந்து நாட்டிற்கு நலம் பல செயவல்லவர் வீர இளைஞர்களேயென்பதை எவரே மறுக்கவல்லார்? உலகச் சரித்திரமும் இதற்கே ஆதரவு நல்குகின்றது. இளைஞர்களின் சலியா முயற்சியாலேயே பல தேயங்களும் எத்துறையிலும் வெற்றிபெற்று மிளிர்கின்றன! மாஜினி முதலிய நாட்டன்பர்கள் இளைஞர் இயக்கத்தின் மூலமாகவே நாட்டின் விடுதலை கண்டார்கள். இவையும் இவை போன்ற பிறவும் சரித்திரங்களில் பரக்கக் காணலாம். அஃதை ஈண்டு விரிவஞ்சி விடுத்து மேற்செல்வாம்.

பழைய சரித்திரங்களைத் துருவியாராய்வதால் ஒருவகைப் புத்துணர்ச்சியும் புதிய ஊக்கமும் இளைஞர் உள்ளத்தில் எழுந்து

புத்தாற்றல் தரும்! உலக சரித்திரம் எழுதுவதின் தத்தவமுமிதுவே! வாழ்வின் செழுமைக்கு அதன் துணை பெரிதும் வேண்டப்படுவதாகும். எனவே, பண்டைத் தமிழர் நெறிபுக்குச் சிறிதாராய்வாம்.

பத்துப்பாட்டு, புறநானூறு, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய தமிழ் முது நூல்கள் தொன்மைத் தமிழ்நாட்டின் பொருட்காட்சி மாளிகைகளாக மிளிர்கின்றன. அவற்றிற்காணும் தமிழ்நாட்டிற்கும் இன்று காணுந் தமிழ்நாட்டிற்கும் அம்மம்ம! எத்துணை மாற்றம்! எத்துணை வேறுபாடு! இராமாயணம், பாரதம் முதலிய இதிகாசங்களில் தமிழ்நாட்டின் புகழ் பேசப்படுகின்றது! அசோகன் சாசனத்தில் தமிழ்நாட்டின் மணம் வீசுகின்றது! மேகஸ்தினிஸ் என்பார் எழுதிவைத்த குறிப்பிலும் தமிழ்நாட்டின் ஒளி வீசுகின்றது! இத்தொன்மையும் சீர்மையும் செறிந்த பைந்தமிழ் நாட்டைப் புரந்தளித்த மூவேந்தர்களும் வீரத்தாலும், மனத்தாலும், நெறி திறம்பா நேர்மையாலும், அன்பாலும், அருளாலும், சிறந்து மிக்கோங்கி யாவரும் விரும்பும் பெரும்புகழ் படைத்திருந்தனர். அவர்களின் அருங்குணங்கள் யாவும் இன்று பாவுருக்கொண்டு பரிமளிக்கின்றன!

பாண்டிய மன்னர்களின் நடுநிலைமையும் அறங்காத்தலும் சிலப்பதிகாரத்தில் நன்கு விளக்கப்படுகின்றன. கண்ணகியென்னுங் கற்புத் தெய்வம் பாண்டியன் அவைக்களஞ் சென்று தன் காதலனாங் கோவலனைக் கொன்றது அறமன்றனச் சிலம்புச் சான்றால் வெளிப்படுத்துகின்றாள். தன் செயல் தவறெனவுணர்ந்த பாண்டியன்

**"பொன் செய் கொல்லன் தன்சொற் கேட்ட**
**யானோ அரசன்? யானே கள்வன்!**
**மன்பதை காக்குந் தென்புலங் காவல்**
**என்முதற் பிழைத்தது. கெடுகவென்னாயுள்"**

எனப் புகன்று மனங்கலங்கி, அறிவிழந்து, செயலற்று அரியாசனத்திலிருந்து கீழ் விழுந்து தன்னுயிர் அழிந்தான். ஒரு புரவலன் தன் பிழையுணர்ந்து மனச் சான்றால் மடிந்தான் என்றால் அவன் செங்கோலின் திறந்தானென்னே! அவன்றன் அறத்தின் மாண்புதானென்னே! இளைஞர்களே! உங்கள் தமிழ் மன்னர்களின் ஆட்சியின் மாட்சியை எண்ணுங்கள்!

அத்தகு சீரிய சிலப்பதிகாரக்கதை இன்று களியாட்டக்காரர்களாம் நாடகக்காரர்கையில் சிக்குண்டு படும் பாட்டை எண்ணும்பொழுது கண்ணீர் துளும்புகின்றது. ''பழிக்குப் பழி கொடடா பழிகாரப் பாண்டியா'' என்று அலறிப் பாண்டியன் மீது பாய்ந்து அவன் குடரைப் பிய்த்துக் கடித்துத் துவைக்கும் நாடகத்தில் வரும் கண்ணகிக்கும் சிலப்பதிகாரக் கற்புக் கடவுளாம் பெண்மையின் தெய்வமாம் கண்ண கிக்கும் ஏதாவது தொடர்பு உண்டா? இவற்றைக் கருதுங்கால் உண்மைத் தமிழர்கள் கண்மடை வெள்ளம் பொழிவார்கள் என்பதில் ஐயமில்லை! இப்பாழும் செயலையே பொருளாக்கொண்டு சில புல்லறிவாளர்கள் நாட்டின் சீரைக் கெடுக்கின்றார்கள்!

செந்தமிழ் மன்னர்களின் வீரம் புறநானூற்றில் செறிந்து விளங்குகின்றது. சோழன் நலன் கிள்ளி என்னும் வயவேந்தன் தன் மாற்றான் ஒருவன் தன்னாற்றால் தெளியாது தன்னுடல் இளமை யொன்றையே கருதிப் போர் தொடுக்க வருவதறிந்து ''மெல்லென வந்து என்னடி வணங்கி இரப்பானாகில் வென்றி முரசதிரும் இவ்வரசு மட்டுமா, எனது இனிய உயிரையும் மறுக்காதீவேன். ஆனால், வல்லார்களின் வல்லமையை மதியாது என் மனத்தைப் புண்படுத்திய அறிவிலி, உறங்கும் புலியைத் தட்டி எழுப்பிய குருடன் போல்வான். இனியவன் உயிர் கொடு திரும்புவதுமுண்டா? வலிய யானைக்காலில் அகப்பட்ட மூங்கிலின் நீண்ட முளையைப்போல அவனைச் சமரில் கசக்கிப் பிழியேனாகில் தீநெறி படிந்த உள்ளத்தில் உண்மையன்பு இல்லாத வேசையர்களின் முறையற்ற கலவியிடை எனது வெற்றிமாலை கிடந்து துவழ்வதாக!'' எனும் பொருள் தோன்ற

மெல்லவந்தென் நல்லடிபொருந்தி
ஈயென இரக்குவ ராயிற் சீருடை
முரசுகெழுகாயத் தரசோ தஞ்சம்?
இன்னுராயினுங் கொடுக்குவெனின்னிலத்து
ஆற்றலுடையார் ஆற்றல்போற்றாதென்
னுள்ளமெள்ளிய மடவோன்றுள்ளிதிற்
றுஞ்சுபுலியிடறிய சிதடன்போல
வுய்ந்தனன்பெயர்தலோ அரிதேமைந்துடைக்
கழைதின்யானைக் காலகப்பட்ட
வன்றிணிநீண்முளை போலச் சென்றவண்

**வருந்தப் பொரேஎ னாயிற் பொருந்திய**
**தீதி னெஞ்சத்துக் காதல் கொள்ளாப்**
**பல்லிருங் கூந்தல் மகளிர்**
**ஒல்லா முயக்கிடைக் குழைகவென்றாரே!**

என்று சபதங் கூறுகின்றான். இதினின்றும் செந்தமிழ் மன்னர்களின் இரப்போர்க்கீயும் வள்ளன்மையும் வீரத்தின் மாண்பும் ஒழுக்கத்தின் விழுப்பமும்தெள்ளிதிற் புலனாகின்றது!

(வீர இளைஞர்களே! இதைக் கற்குந்தோறும் உங்கள் குருதியில் வீர எண்ணமும் உரைக்க முடியா ஓர் விதப் புத்துணர்ச்சியுந் தோன்று கின்றதன்றோ? இத்தகு மெய்த்திரு வீரர்களின் வென்றிசேர் சரித்திரங் களைக் கற்பிக்காது இரத்தவெறிபிடித்த ஜான் நிக்கல்சனையும், கிளைவ் போன்றாரையும் கற்பிப்பதே தற்காலக் கல்விமுறையின் குறைபாடுகளி லொன்றாகும்! தற்காலத்தவர் வீரம் என்ற சொல்லுக்கு உயிர்வதை செய்வதையே பொருளாகக் கொள்ளுகின்றனர். பல பேரைக் கொன்றவன் ஒரு வீரனாம்! ஆனால், பண்டைப் பெரியோர்கள் வீரம் என்ற சொல்லுக்கு ஆற்றல் என்றே பொருள் கொண்டார்கள்! எவைவரினும் பொறுமையுடன் தாங்குவதே உண்மை வீரனின் இலக்கணமாகும்! தருமர், நாவுக்கரசர், கிறிஸ்து, சாக்ரெட்டிஸ், காந்தி முதலிய பெரியார்களே உண்மை வீரர்கட்கு உதாரணமானவர்கள்! தொண்டுகிழவனான காந்தியடிகள் தமது ஆற்றலால் இவ்வுலகையே ஆட்டுகின்றார். அத்தகு ஆற்றல் நமக்கு மீண்டும் வந்துதிக்குமாறு இறைவனை வேண்டுவோமாக!

இனிப்பழந்தமிழர் மானங்காக்கு மாண்பினைச் சிறிதாய்வாம். மூவேந்தர்களுள் வஞ்சிநாடுடைய வள்ளலாம் செங்குட்டுவன் வடஇமயம்வரைச் சென்று, தமிழ் மக்களைக் ''கோழைகள்'' எனக் கூறி இகழ்ந்த கனக விசயரைப் போரில் வென்று கண்ணகியுருச் சமைப்பான் இமயத்திலெடுத்த கல்லினை அன்னார் தலைமிசை ஏற்றிக் கொணர்ந்த துடனல்லாது இமய நெற்றியில் வெற்றிக்கறிகுறியாக இலச்சினையு மிட்டுத் திரும்பினமை சிலப்பதிகாரத்தில் ஒலிக்கிறது. தம்மை இகழ்ந்தோர் எத்தன்மையராய் எத்துணைச் சேய்மையிலிருந்தாலும் அன்னவர்க்குச் சரியான முறையில் புத்திகற்பித்து தம் பெருமைக்குச் சிறுமை நேராவண்ணம் காத்து வந்திருக்கின்றனர். மானமிக்க

இளைஞர்களே! இன்று உங்களைப்பற்றிக் கூறப்படும் உண்மைப்பழிக்கு என்ன விடையிறுக்கப் போகின்றீர்கள்?

பண்டைத் தமிழ்நாட்டில் வகுப்புப்பிணக்கும், அதனால் தீண்டாமை, உயர்வு-தாழ்வாதியவுமிருந்தனவா என்பின் இல்லை என்னும் ஒரே மொழியிற் பதிலிறுக்கலாம்! சமயாசிரியர்களுள் முன்னையரான மணிவாசகப் பெருந்தகையாரின் திருக்கோவையாரில் காதல் மணத்தின் பெருமைகளெல்லாம் விளக்கப்படுகின்றன. காதல் என்னும் ஒரு பெருவெள்ளத்தை சாதி, மதம், என்னும் சிறுதுரும்புகள் தடைப்படுத்திவிட முடியாது. அன்றியும் சைவசமயத்திற்கே ஒரு கண்ணென நிலவும் திருத்தொண்டர் புராணம் கலப்பு மணம், சமரச சகோதரத்துவ மனப்பான்மை, உடனுண்ணல், பார்ப்பனரல்லாதாரைப் பார்ப்பனர் குருவாகக்கோடல் முதலிய நாடுவிழையும் நற் சீர்திருத்தங் கட்கு ஆதரவு தருகின்றது. ''பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்,'' ''ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்,'' சாத்திரம் பல பேசும் சழக்கர்காள் கோத்திரமும் குலமும் கொண்டென் செய்வீர்,'' ''சாதி விடாத குணங்கள் தம்மோடு சலித்திடுமாகாதே'' முதலிய பெரியார் மொழிகளானும் இஃது தெளியப்படுகின்றது. இறைவனுறையாலயம் எனக் கருதப்படும் திருக்கோயில்களில் எவ்வகுப்பிலுமுதித்த அடியார்களை எல்லாம் வைத்து விழ வெடுக்கின்றோம். ஆனால், அன்னார் பிறந்த வகுப்பில் வந்த மக்களை அனுமதிக்கின்றோமில்லை. மக்களுள் பிறப்பின் காரணமாகச் சிலரை ஒதுக்கி வெறுத்தல் எவ்வுயிரும் நீங்காதுறையும் இறை சிவனை இழிவுபடுத்தியதாகும். இளைஞர்களே! தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, திருமந்திரம், திருவருட்பா முதலிய அருள் நூல்களை எடுங்கள்! எடுத்துப் புரட்டிப் பாருங்கள். அந்தோ! எங்காவது வேற்றுமை உணர்ச்சி இருக்கின்றதா! இல்லை! இல்லை!! சத்தியமாகவும் இல்லை!!!

இனிப் பெண்களைப் பற்றி முன்னையோர் கொண்ட கருத்தைச் சிறிதாராய்வோம்! செந்தமிழ்ச் செல்வர்கள் பெண்ணையே முதன்மை யாகக் கருதி வந்திருக்கின்றனர். சிவனுடலிற் பாதியைப் பெண்ணுரு வாய் வகுத்தனர். உலகம் சிவமயம். எவ்வுயிரும் நீங்காதுறைபவன் இறை சிவன். உலகம் சரிபாதி ஆணினத்தையும், சரிபாதி பெண்ணி னத்தையும் கொண்டது. ஆகவேதான் அம்மையப்பனென்னும் பெயருடன் இறைசிவனை வகுத்தனர். திருமால் மார்பில் மலர் மகளை

வைத்துள்ளார். செல்வத்தைப் பெட்டியிலன்றோ வைத்துப் போற்ற வேண்டும்! நான்முகன் கலைமகளை நாவில் வைத்து மகிழ்ந்தான்! கலைவன்மை நாவினின்றேயன்றோ வெளிப்படும்! செல்வத்தையும், கல்வியையும், நிதியாதியவற்றையும், இவையெல்லாவற்றையுங் கொண்டதேயத்தையும், தேயம் பலவடக்கிய இவ்வுலகத்தையுமே மூதறிவாளர் பெண்ணுருவாய்க் கண்டுபோற்றினர். இன்றும் அங்ஙனமே நிகழ்கின்றது. அப்படிப் போற்றிப் புகழப்பட்ட பெண்ணினம்- தண்மை மிக்க தாயினம்-இன்று எந்நிலையிலிருக்கின்றது! கல்வியில்லை, சுதந்திரமில்லை, கண்ணில்லை. கையில்லை. வாழ்க்கையின் பங்காளி களிருவரில் ஒருவர் துன்பமடையில் வாழ்க்கை எங்ஙனம் இன்பமுடை யதாயிருக்கும்! பெண் மக்கள் கல்வியறிவு பெறாமையாலன்றோ உலக நிகழ்ச்சியும் பிறவும் அறியமாட்டாதவராயிருக்கின்றார்கள். அதனா லன்றோ மூடப்பழக்கவழக்கங்களைக் குருட்டுத்தனமாக உடும்புப் பிடியாகப்பற்றிக் கொண்டிருக்கின்றனர். என்று பெண்ணடிமை ஒழியுமோ அன்றுதான் நாடு அடிமைத் தளையினின்று, அறியாமைப் படுகுழியினின்று விடுதலை பெறும்!

இனி மக்கள் ஒழுக்கத்தை எடுத்துக்கொள்வோம். பண்டை அறிஞர்கள் ஒழுக்கத்தைச் சமய வாழ்வுடன் இணைத்திருக்கின்றார்கள். இன்றும் ஒழுக்கமிக்காரை ஆங்கிலத்தில் அவர் ஒரு சமய வாழ்க்கை யுடையார் (He is a relegious man) எனப் புகல்வதுண்டு! சமய வாழ் வென்றதும் வெளிப்பூச்சு, வேடம், திருவிழா முதலியவற்றிற் கருத்தைச் செலுத்தி அவைகளே சமயவாழ்வெனக் கொண்டு இடர்ப்படுதலாகாது. அவைகள் சமய வாழ்வென்னும் பெருமாளிகையின் வாயிற்படி களேயாகும். ஆனால், அவை இன்று படிகளாகவும் நின்று துணை செய்வதில்லை. அப்படிகள் இன்று சமயவாழ்வென்னும் மாளிகையுட் செல்ல விழைவார்களைத் தடுக்கி இடரிவிட்டுக் காயப்படுத்தி விடுகின்றன. சமயம் என்றதும் பல சமயங்களின் பெயரைச் சொல்லி எது உயர்ந்தது எது தாழ்ந்ததென்னும் சண்டையினை விளைத்து முட்டுப்படுதலாகாது. இச்சமயத்தில் தாயுமானாரின் திருப்பாடல் ஒன்று நினைவுக்கு வருகின்றது.

“வேறுபடு சமயமெல்லாம் புகுந்துபார்க்கின்
விளங்குபரம் பொருளேநின் விளையாட்டல்லால்

மாறுபடுங் கருத்தில்லை முடிவின் மோன
வாரிதியில் நதித்திரள்போல் வயங்கிற் றம்மா''

என்று கூறும் பகுதி இக்கொள்கைக்குத் தக்க சான்றாயிருக்கின்றது. கிறிஸ்து பெருமானின் மலைப்பிரசங்கத்திற்கும், திருவாசகத்திற்கும் யார் வேற்றுமை காணக்கூடும்? கிறிஸ்து பெருமான் செயலுக்கும் அப்பர் செயலுக்கும் இருக்கும் வேற்றுமையென்னே? ஆகவே, உலகிலுள்ள எல்லாச் சமயங்களும் இறைவனையெய்துவிக்கும் நெறியே யென்றுணர்க.

கொலை, களவு, கள், காமம், பொய்யாதிய படுகுழியில் வீழாதவாறு தடுத்தாட் கொள்வது சமயநெறியொன்றே தானென்று விருது கூறுகின்றேன். அந்நெறிபற்றியொழுகுவதே இளைஞர்களின் வளர்ச்சிக்குத் துணையுமாகும்! உயிர்வர்க்கத்திற்குத் தொண்டு செய்வதே சமய வாழ்வின் தலையாய நோக்கம். ஆயின் அதற்காகப் பெண்டு பிள்ளைகளைத் துறந்து ஓடுவது சமயவாழ்க்கையாகாது; பெண்டு பிள்ளைகளும் உயிர்வர்க்கமே. அங்கும் இறைசிவனிருக்கின்றான். போலித்துறவு, திண்ணைவேதாந்தம் முதலியவற்றால் நாடு அடைந்து வரும் இன்னல்கள் அளப்பில. அத்துறவில், அவ்வேதாந்தங்களில் இளைஞர்களே! உங்கள் மனம் செல்லாதிருக்குமாக! மனைவி மக்களுடன் பொருந்திய வாழ்க்கை நடாத்தி எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் செவ்வழி பற்றிச் செல்வதே சீரிய சமய வாழ்க்கை யாகும்.

இனிச்சிலர் சமய வாழ்க்கையைச் சடங்கிற்கு அடிமைப்படுத்தி வருவது மாறுபட்டதாம் என்க! சடங்குகள் என்பவை வெவ்வேறு அடிப்படையின்மேல், வெவ்வேறு மக்களால், வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு தன்மையினவாயமைகின்றன, ஆரம்பத்தில் சில அடிப்படைகளைக் கொண்டு தோன்றும் அவை காலக்கிரமத்தில் பொருளற்ற குருட்டு வழக்கமாகத் திரிந்து விடுகின்றன, இதற்குத் தக்கசான்று தற்கால மணவினைச் சடங்குகளே சாலும்! இப்படிப்பட்ட குருட்டு வழக்கங்கள் இயற்கையின் நியதிப்படி சீர்திருத்தப்படுகின்றன. சீர்திருத்தம் விழையும் நல்லன்பர்கள் வாழ்க்கை முறையில் குருட்டு வழக்கங்கள் நுழையாதவாறு கண்ணுங் கருத்துமாயிருந்து வரவேண்டும்.

இங்கு மூன்று விஷயங்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. சமயத்திற்கும் சடங்கிற்கும் பாலமமைப்பது பெருந்தீமை விளைவிப் பதாகும். நல்வினை தீவினைக்கருமங்கட்கு பார்ப்பனரையோ பண்டாரத்தையோதான் வரவழைக்க வேண்டுமென்பது மனித சமுதாய சுதந்திரத்தைக் கொலை செய்வதாகும்! குறிப்பிட்ட பொருள் விளங்கா வேற்று மொழியிலேயேதான் மந்திரங் கூறவேண்டுமென்பது தாய்மொழி வளர்ச்சிக்கு ஊறுவிளைவிப்பதாயும், அடிமை மனப் பான்மையை வளர்ப்பதாயுமிருக்கின்றது! ஆகவே, இவை சடங்கில் உள்ள பெருந்தீமைகளாகும்!

மேற்கண்ட குறைபாடுகளை எல்லாம் ஒழிக்க வேண்டுமென்றால் முதலாவதாக நமது நாட்டின் தற்காலக் கல்விமுறைகளை மாற்றியமைக்க வேண்டும். தாய்மொழிகளை முதன்மை தரா வரையில் நாட்டில் வளர்ச்சி கிட்டாது! ஒரு காலத்தில் தென்னாடு வரைப் பரந்து விளங்கிய தண்டமிழ் மொழி இன்று தனது மக்களாலேயே புறக்கணிக்கப்படு கிறதென்றால் இதனினும் உண்மை வேறென்ன வேண்டும்? நாட்டு மொழி வளர்ச்சியே நாட்டின் வளர்ச்சி என்பதை அயர்லாந்து நன்கு விளக்கியிருக்கிறது. அயர்லாந்தின் விடுதலைக்கு எவ்வெவ் வழிகளி லெல்லாமோ முயன்றும் வெற்றி பெறாமை கண்ட தேயத்தலைவர்கள் மொழிவளர்ச்சி செய்வதில் முனைந்து நின்றார்கள். சொந்த மொழி வளர்ச்சியடையவே இவர்களின் வேலைகளும் எளிதிற் பயன் பெற்றது. விடுதலைப் போரில் வெற்றியும் பெற்றார்கள். இது உலகறிந்த உண்மை! நாடு என்னும் மாளிகை, மொழி என்னும் அடிப்படையின் மீது கட்டப்பட்டிருக்கின்றது. மொழியாம் அடிப்படை அழியின் நாடு நாசமுறக் கேட்கவும் வேண்டுமா?

மொழி வளர்ச்சி பெற்றதென்றால் நெடுங்கணக்கிலுள்ள எழுத்துக்கள் பெருகிற்றென்பதில்லை. எக்கலையையும் மக்கள் அம்மொழியிலேயே கற்றுக்கொள்ளக் கூடிய வசதிகளிருக்க வேண்டும். ஒவ்வொருவரும் அறிவுக்கலை (சைன்ஸ்) உடற்கூறு (ஃபிஸியாலஜி) உடல் ஓம்பல் (ஃபிஸிகல் கல்ட்சர்) தாவரம் (பொட்டனி) பூத பௌதீகம் (ஜியாலஜி) முதலிய கலைகளிற் பொது அறிவேனும் பெற்றவர் களாயிருக்க வேண்டும். இவ்விடத்திற்றான் பலர் ஐயப்பாடுகளைக் கிளப்புகிறார்கள்! ''நந்தமிழ் மொழியில் இவையெல்லாம் இல்லையே இவற்றை ஆங்கிலம் முதலிய வேற்றுமொழித் துணைகொண்டு தானே

கற்கவேண்டும்?'' என்கின்றார்கள். ஆங்கிலம் ஜெர்மனி ஃபிரஞ்சு முதலிய மொழியினர் யாவரும் புத்தம் புதிய கலைகளையெல்லாம் தத்தம் மொழியிலேயே கற்று வருவதியாவருமறிந்ததாம். பண்டைத் தமிழ் நாட்டில் இக்கலைகள் எல்லாம் நிறைந்திருந்தனவென்பதற்கும், மக்கள் இத்துறைகளில் வல்லவர்களாயிருந்தனர் என்பதற்கும் பல மறுக்க வொண்ணாச் சான்றுகளிருக்கின்றன. அவற்றை ஈண்டு விரிப்பிற் பெருகும். அவற்றை எல்லாம் இடைக்காலப் ''பெரியார்கள்'' கடலுக்கோ அன்றிக் கறையானுக்கோ தானம் செய்துவிட்டார்கள். நிற்க, இன்று ஆங்கிலத்திலுள்ள எல்லா நூல்களும் அவர்களாலேயே கண்டெழுதப் பட்டதல்ல! மொழி பெயர்ப்பு நூல்களும், அவற்றுட்கிடக்கின்றன என்பதை எடுத்தியம்ப வேண்டுவதில்லை! அன்றியும் ஜெர்மனி, பிரஞ்சு, ஆங்கிலம் முதலிய மொழியினர் எல்லாம் வேற்று மொழியிலுள்ள அரும் பெருங் கலைகளை அம்மொழிபயின்றே கற்கவில்லை! அம்மொழி வல்லாரைக்கொண்டு தத்தம் மொழியில் அக்கலை நூல்களைப் பெயர்த்து அதனைக் கற்றே அறிஞராகின்றனர். அங்ஙனமே நாமும் செய்தாற்றான் மொழி வளர்ச்சியடையவதுடன் நாமும் அக்கலையை ஐயந்-திரிபு அறக்கற்றுப்பயனெய்தலாம். ஈண்டு,

> **''பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ்**
> **மொழியில் பெயர்த்தல் வேண்டும்''**

என்னும் பாரதியார் வாக்கு சிந்திக்கத் தக்கதாகும்!

## இளைஞர்களே!

நேற்றுப்பிறந்த புதிய மொழிகளை எல்லாம் பாருங்கள்! பழமைக்கும் பழமையாமுங்கள் தண்டமிழ் மொழியையும் பாருங்கள்! அப்புது மொழிகள் எல்லாம் இன்று மின்னெறி முடியணிந்து பொன்னரி யாசனத்தில் தன்னிகரில் பெருமையோடு இறுமாந்திருக்கின்றன. ஆயின், தண்டமிழ்த்தாயின் மடிமிசையமர்ந்து தவழ்ந்து விளையாடிய இளைஞர்களே! உங்கள் அன்னையையும் உற்று நோக்குங்கள்! அந்தோ! உலக மொழியாட்கெல்லாம் முன்னவளான உங்கள் தாயின் மணிமுடி எங்கே? செங்கோல் எங்குபோய் இருக்கின்றது? கிண்கிணிச் சிலம்புகள் யாண்டுபோய்ப் பதுங்கின? அவள் உடையெங்கே? உணவெங்கே? உறையுள் தானெங்கே? ஐயோ! செந்தமிழ்ப் பைந்தொடி மைந்தர்காள்! உமது அன்னைக்கு உயிர் இருக்கின்றதா? நாடி ஒடுக்கிடுந் தருணமும்

உற்றதோ? மக்களே! மக்களே! எனக் கதறும்மொழியுங்கள் செவிப் புகவில்லையா? பெற்றதாயினும் பெரிய பொருள் உங்கட்கு உண்டா? உடனே எழுங்கள்! எழுந்து தாயை மறலிகையினின்றும் மீட்க முயலுங்கள்! தாயை எடுத்து நந்நீராட்டி பூந்துகிலணிவித்து செந்திலக மிட்டு புதுஅணிபலவால் அலங்கரித்து அரியாசனத்தமர்த்தப் போகின்றீர்களா, அன்றி மடியுந் தருவாயிலிருக்கும் மாதாவுக்கு ஈமக்கடனாற்றப் போகின்றீர்களா? தமிழ் இறந்தபின் தமிழ்த்தரை மட்டும் இருந்தென்ன? மொழியன்றோ நாடு! கலையன்றோ உயிர்!

தமிழ் மக்களே! உங்கட்கென ஓவியமாளிகைகளிருக்கின்றன! இசை நிலயங்களிருக்கின்றன. காவியப்பொழில்களிருக்கின்றன! அன்பு மலர்களிருக்கின்றன! வேறு பல அறிவுக்களஞ்சியங்களுமிருக்கின்றன. அந்தக் காட்சிசாலையுட் செல்லவும் அஞ்சுகின்றனரே! காவியத்தைக் கற்கும் தமிழன் எத்தனை? ஓவியத்தை ஓம்பும் தமிழன் எத்தனை? இசையைப் போற்றுவார் எத்தனை? அறிவுக் களஞ்சியங்களை அன்பின் நிலையங்களை எத்துணை பேர் கற்கின்றனர்?

தொல்காப்பியப் பொருளின்பமும், வள்ளுவர் அறமும், இளங்கோவின் எழிலும், சம்பந்தர் பண்ணும், சேக்கிழார் அன்பும் மணிவாசகர் உருக்கமும், புறநானூற்றின் வீரமும், கம்பன் கவியும், இராமலிங்கர் நேர்மையுமன்றோ நமது அழியாச் செல்வங்கள்! அவையேயன்றோ நமது ''பிதுர்ராஜ்ய'' சொத்துக்கள்; குன்றாத கருவூலங்கள்! இத்துணைச் சிறப்புவாய்ந்த நந்தா நிதியையணுகவும் அஞ்சுவரோ! இளைஞர்களே! அந்நிதியைக் கொள்ளை கொள்ளுங்கள்! செஞ்சொற்கவியின்பத்தை நுகருங்கள்! அறிவை விலாசப்படுத்துங்கள்!

ஓவியம் ஓம்பல் நமது நாட்டில் இம்மியும் இல்லை! அணுவும் கிடையாது! இதை நீங்கள் பெருமாள் கோவில்களில் கண்ணாரக் காணலாம். பெருமாளின் 'பிரசாதம்' என்னும் உண்டைப்பருக்கையை மூக்குமுட்ட மாந்தி எண்ணெய்க் கையை அழகொழுகுந் திருமுகத்துடன் அருகிருக்கும் ஓவியச்சாலைகளின்மேல் அப்பித்துடைத்து அழகினைப் பாழ்படுத்தும் மக்கட்கும் ஓவியம் ஓம்புவதற்கும் என்ன தொடர்பிருக்க முடியும்?

இசைப் பயிற்சி அருகிவருகின்றது. அருட்பாக்கள் எல்லாம் அடங்கி வருகின்றன? யாழ் குழல் முதலிய கருவிகள் பொன்றி வருகின்றன! ''மாமாப் பாட்டு''ம் ''வண்ணான் பாட்டு''ம் ''ட்றியோப் பாட்டு''ம் மல்கிவருகின்றன. புல்புல்தாரா முதலிய கருவிகள் இசையினிமையைப் பாழ்படுத்தி வருகின்றன! ஆர்மோனியம் வந்ததால் இசையுலகமே கொலை செய்யப்படுகின்றது! போதாக் குறைக்கு மோர்ஜிங்கு என்னும் பேயும் கூடிவிட்டால் கேட்கவும் வேண்டுமோ? யாழ் குழல் முதலிய இனிய கருவிகள் ''இன்னகாலத்தில் இந்திய நாட்டில் இசைக்கருவிகளாய்க் கருதப்பட்ட கருவிகள்'' என்றெழுதிக் காட்சி சாலையில் வைக்கும்படியான நிலையும் வந்துவிடுமோ என்னவோ? யார் கண்டது!

சீர்திருத்தம் வேண்டும் இளைஞர்களே! எழுமின்! எழுமின்! நாட்டின் வளர்ச்சி கருதி ஆக்கவேலையும் அழித்தல் வேலையும் செய்ய முனையுங்கள்! தொடக்கத்தில் பெரியார் (வயதால்) எனப்படுபவர்கள் முட்டுக்கட்டைதான் போடுவார்கள்! அஞ்சாது முனைவிரேல் ஆக்கம் பெறுவீர்! வெற்றியுறுவீர்!

**''பழையன கழிதலும் புதியன புகுதலும்**
**வழுவல கால வகையி னானே''**

***(தம் 25-ஆவது வயதில் கணேசனார் எழுதிய எழுத்துக்களின் நடையைக் கவனியுங்கள்; திரு.வி.க.வை நினைவூட்டவில்லையா? அன்றைய பண்டித நடையிலும் கணேசனார் வல்லவராயிருந்தார்!)***



# பணக்கஷ்டம்

பணக்கஷ்டம்! பார்க்கும் இடமெல்லாம் பணக்கஷ்டம்! நோக்குந் திசையெல்லாம் பணக்கஷ்டம்! இப்பணக் கஷ்டமென்னும் சுழலில் அகப்பட்டுக் கொள்ளாத எந்தவொரு நாடோ சமூகமோ திண்மையாயில்லை. கர்நாடகங்களாய் வாழ்ந்த முன்னோர்கள் இது போன்ற பெருங் கஷ்டத்திற்கெல்லாம் அவ்வளவாய் அஞ்சவில்லை! ''வெந்ததை தின்று விதி வந்தால்'' செத்தார்கள்! அவர்கட்கு உண்ண உணவும் உடுக்க உடையும் படுக்கவொரு குடிசையுமிருந்து விட்டால் பரமானந்தம்! சதாகாலமும் சிவநாம பஜனை! ஆனால் இன்றோ? உண்ணவும் உடுக்கவும் ஒன்றுமில்லாவிட்டாலும் களியாட்டங்கட்குத் தவறக் கூடாது! வாணிபத் துறையிலுள்ள பொறுப்புள்ளவர்களே உண்மையில் பணக்கஷ்டத்தை அனுபவிக்கின்றார்கள்! ஆனால் மற்றவர்கள் பணத்திற்குக் கஷ்டப்படவில்லை! பாவம், அந்தப் பணம் இவர்கள் கையிற் சிக்கிக்கொண்டு படும் கஷ்டந்தான் பார்க்க முடியாததாயிருக்கின்றது! அதிலும் சீட்டாட்டம் முதலிய சூதாட்டங் களில் அப்பணம் படுங் கஷ்டத்தை எழுதி மாளாது! வாயிருந்தால் உலகம் நடுங்கும் படி இடியென முழங்கிக் கதறும்!

முன்னாள் மக்கள் தேவையானவற்றிற்கே மதிப்புக்கொடுத்து வந்தார்கள்! ஆனால் இன்றோ மக்கள் தேவையில்லாப் பிற பொருள்களுக்கே மதிப்புச் செலுத்தி வருகின்றார்கள். உதாரணமாக ஒருவனுக்குக் கல்யாணமாக வேண்டுமென்றால் மணமகளின் பெற்றோர்கள் மணமகன் தனது வாழ்வைச் செம்மையாய் நடத்தத் திறனுள்ளவனா? உணவுக்குத் தேவையான அளவு வரும்படியுள்ள ''நிலம் பலம்'' உண்டா என்பதை ஆராய்வதில்லை! ஆனால் வீடு

பெரிய வீடா? மோட்டாருண்டா? வயிர நகையுண்டா என்பனவே பிரதானமாகக் கவனிக்கப்பட்டு வருகின்றன! மனிதன் வாழ்வது எதற்காக? மனிதனை நெடுநாள் வாழச் செய்வன எவை? என்று எவரும் எண்ணுவதுகூட இல்லை. மனிதனுக்குத் தேவையில்லாத எல்லாம் இன்று இன்றியமையாத பொருள்களாக மாறிவிட்டன! கைக்கெடிகாரம், மோட்டார், ஊற்றுப்பேனா போன்றது இன்றி வாழ முடியாது என்ற நிலைமைக்கு வந்து விட்டோம்.

சினிமாப் பார்க்காத - நாடகங்கள் காணாத மக்கள், மனித கூட்டத்தில் வைத்து எண்ண முடியாத நிலைமைக்கு வந்து விட்டனர். ஆதலால் மக்கள் பணத்திற்குப் பேயாய் அலைகின்றனர்! பணம் பணம் என்று சதா கனவு காண்கின்றனர்! எப்படியும் பணம் சம்பாதித்து விடவேண்டும் என்பதுவே அவர்களின் குறிக்கோள்! ''இரவும் பகலும் பிரியாது வணங்கி''த் திரட்டும் பணமெல்லாம் 100க்கு 90 தேவையற்ற வழிகளிலேயே கரைக்கப்படுகின்றது. அத்தேவையற்ற வழிகளை அடக்கிக் கொள்ளும் ஆற்றல் பெற முடியாத அளவு அவற்றைப் பெருக்கிக் கொண்டு விட்டு இன்று மக்கள் படும் துன்பம் கொஞ்ச நஞ்சமல்ல! எளிய வாழ்வை விட்டு டாம்பீக வாழ்வில் அடியெடுத்து வைத்த அன்றைக்கே பிடித்தது சனியன்! பரமார்த்திக வாழ்க்கை வாழ்ந்த இந்தியா பண்டமாற்று முறையில் பழையபடி சென்றால்தான் நிலைமை சரிப்படுமோ யார் கண்டது?

*('கேஜி' என்ற புனை பெயரில் 1933ல் எழுதியிருப்பது எவ்வளவு யதார்த்தமாக உள்ளது?')*



# பெயரிடும் நோக்கம்

முன்புள்ள பெரியோர்கள் தமக்குப் பிறந்த மக்களுக்கு தெய்வப் பெயரையும், பெரியார் பெயரையும் இட்டு வந்தனர். மக்களின் எண்ணம் வரும் பொழுதாவது தெய்வ சிந்தனையும் பெரியார் நினைவும் தோன்றட்டும் என்பதே அவைகளின் கருத்து.

ஆனால் இன்று நடப்பது என்ன? அழகான பெயர்களான கிருஷ்ணன் ''கிட்டு'வென்றும், நாராயணசாமி 'நாச்சாமி' என்றும் பொற்காடியாள் 'பொய்க்கடியாள்' என்றும் சிவகாமி 'சோயி' என்றும் அறியாமையால் அழைக்கப்படுகின்றது. எல்லாம் கற்றவர்கள் என்று பறையடித்துக் கொள்ளும் 'சிவிலைஸ்ட் பீப்பிள்' தங்கள் பெயரை குறுக்கல் விகாரம் செய்து கொள்கின்றார்களே? அது உங்களுக்குத் தெரியுமா? திருஞான சம்பந்தம் எனப் பெயருடைய சிலர் 'கோண எழுத்து' என்று கூறப்படும் ஆங்கிலத்தில் கொஞ்சம் பயிற்சி பெற வேண்டியதுதான் தாமதம்! உடனே அவர்களுடைய மீசை குறைந்து குறைந்து 'இஞ்ச்' மீசையாவது போல் 'டி.ஜி. பந்தம்' என்று பெயரும் கட்டையாகி விடுகின்றது. திருவுக்கும் ஞானத்துக்கும் இவரிடம் சம்பந்தம் இல்லை போலும்! அந்தோ நவீன நாகரீகமே! எங்கள் நாட்டைத்தான் மொட்டையாக்கினாய்! அது போதாதென்று மக்கள் பெயரையுமா மொட்டையாக்க வேண்டும்!



# மகன் கடமை

முன்னாளிலிருந்த மக்கள் தமது குலப் பெயரை விளக்க வந்த தகுதியினராயிருந்தார்கள். பத்து மாதம் சுமந்து பெற்ற அன்னை யிடத்தும் தமது குடும்பத்தின் தனிப் பேரரசனான தந்தையினிடத்தும் பேரன்பு கொண்டு அவர் சொல்லுக்கு அணுவும் பிறழாது வாழ்ந்து வந்தனர். அங்ஙனம் அவர்கள் நடப்பதற்கேற்ற நல்லறிவைக் கல்வி என்னும் அருமருந்தால் அடைந்திருந்தனர்.

ஆனால் இன்றோ? எல்லாம் தலை கீழ்ப்பாடம். பெற்றோரால் நல்ல கல்வியறிவு தரப்படாத காரணத்தாலும் பணத்திற்குப் பஞ்ச மின்றியிருந்தவரானதாலும், தீயொழுக்கத்தைச் சென்று விரைவில் பற்றும் குணமுடையோரையே மிகுதியாகக் காணக்கிடக்கின்றது. முப்பது வயதினை முட்டி மேற் சென்றோரும் ''மைனர்'' என்ற சொல்லிற்கு முரணின்றி நடந்து வருகின்றனர்.

சில பிராமணரை அழைத்து வந்து அவருக்கு அரிசி பருப்பு தட்சணை கொடுத்துக் கும்பிட்டு விழுவதுடன் தாயார் தகப்பனார்கட்குச் செய்யும் கடமை முடிந்து விட்டதென்று எண்ணி விடுகின்றனர். இதற்கெல்லாம் காரணம் என்ன? உண்மையான கல்வியறிவைப் பெறாமை அன்றோ? முதற் கோணல் முற்றும் கோணல்! அக்கோணலைத் திருத்தி நேரான வழியில் வளர்க்க வேண்டிய பொறுப்பு அறிவுடையோரைச் சேர்ந்ததாகும்! இல்லாவிட்டால் ''என் மகன் சில துஷ்டர்களுடன் சேர்ந்து கொண்டு'' என்று பத்திரிகையில் வெளிவரும் விளம்பரம் யாதொரு குறைவுமின்றிப் பெருகுவதைத் தவிர வேறு வழியொன்றும் பெற முடியாது.



# மந்திரி

முற்காலத்தில் சமய உசிதமான புத்தியும் அரசியலறிவும், உலக அரசியல் தந்திர யுக்தியும் அன்பும் நம்பிக்கையும் உள்ள பெரியோர் களை மந்திரிகளாக நியமித்து அரசியலும் சீரும் சிறப்பும் பெற்று விளங்கிற்று. அம்மந்திரிகளின் ஊழியத்தால், நாட்டிற்கும், நாட்டு மக்களுக்கும் நலன் பல விளைந்தன.

ஆனால் இன்று நடப்பதென்ன? மந்திரியாவதற்கு அறிவோ, அன்போ அவ்வளவு பிரதானமில்லை. தமக்கென ஒரு கூட்டம் பலமானதாய் இருந்து விட்டால் போதும். ஆளுக்குத் தகுந்த சம்பளம் கிடையாது. அந்த ஸ்தானத்திற்கு யார் வந்தாலும் ஒரே தொகைதான் சம்பளம். இவர்களுடைய காலம் எல்லாம் திறப்பு விழா நடத்துவ தற்கும், தலைமை தாங்குவதற்கும், உபசாரப் பத்திரம் பெறுவதற்கும், மாலை சூடுவதற்கும், ஊர்வலங்கள் செல்வதற்குமேதான் பெரும்பாலும் செலவழிக்கப்படுகின்றது. இவர்களாலாவது இவர்களுடைய இச் செயல்களாலாவது நாட்டிற்கு ஏதாவது பயனுண்டா? அந்தக் கலத்தில்தான் பெரிய கோழி முட்டை!

*(1933-ல் 'கேஜி' என்ற புனை பெயரில் எழுதிய இவை மூன்றும் இன்றும் பொருந்துவது ஆச்சரியமே!)*



# வாழ்க திருத்தொண்டர்

– தவத்திரு இராமநாத சுவாமிகள்

உலகில் தோன்றிய உயிர்கள் அனைத்தும் தத்தம் இயல்புக்கேற்பச் செயல்புரிந்தே வாழ்கின்றன. சிற்றுயிருங்கூட இமைப்பொழுதும் செயலற்றிருப்பதில்லை. கரும நியதியின் உண்மை தெரிந்து, செய்யும் செயல்களைக் கருமயோகமாகச் செய்வது மேலோர் இயல்பு. செய்யும் செயல்கள் அனைத்தையும் கருமயோகமாகச் செய்தால், அதுவே வாழ்க்கையின் குறிக்கோளாகிய வீடுபேறு அடைவதற்கான சாதனமாக அமைகின்றது.

**''கடப்பாடு அறிந்து கருமம் புரிவோன்**
**இடர்ப்பாடு இன்றி இச்சையின் நீங்கி**
**ஆன்ம விளக்கம் அடையப் பெறுமே''**

என்பார். தவராஜ சிங்கமாகிய ஸ்வாமி விவேகானந்தர். தன்னலம் கருதாது பயனில் கருத்தின்றிச் செயல்புரிவதே கருமயோகத்தின் தனிச் சிறப்பாகும்.

**''கருமத்தில் மட்டுமே உனக்கு அதிகாரம்,**
**பயனில் ஒருபோதும் இல்லை. பயன் கருதிக்**
**கருமம் புரிபவனாக இராதே. செயலின்**
**மையில் பற்றும் ஏற்பட வேண்டாம்.''**

**''தனஞ்ஜயா! யோகத்தில் நிலைபெற்றுப்**
**பற்றை நீக்கி, வெற்றி தோல்விகளில் சமமாக**
**இருந்து, கருமத்தைச் செய்வாய். சமநிலையே**
**யோகம் என்று சொல்லப் பெறும்.''**

என்பவை கீதா வாசகம்.

பயனில் கருத்தின்றிச் செயல்புரிவது எப்படி? அதற்கும் பகவத் கீதை விளக்கம் தருகிறது.

**"கௌந்தேய! நீ எதைச் செய்கின்றாயோ,**
**எதைப் புசிக்கின்றாயோ, எதை ஹோமம்**
**செய்கின்றாயோ, எதைத் தானம் செய்கின்**
**றாயோ, எந்தத் தவம் செய்கின்றாயோ,**
**அவற்றை எனக்கு அர்ப்பணமாகச் செய்வாய்."**

பட்டினத்தடிகள்,

**"என்செயல் ஆவது யாதொன்றும் இல்லை இனித்தெய்வமே!**
**உன்செய லேயென்று உணரப் பெற்றேன்!"**

என்று அருளியவண்ணம், இறைவன் கைக் கருவியாக, அவன் ஆட்டு விக்கும் வழி செயல்படுவதே கருமயோக சாதனையின் ரஹஸ்யமாகும். அன்பர் சா.க.வுக்கு இக்கரும யோகக் கலை, பிரயத்தனமின்றியே மரபுவழி கைவந்துள்ளது. இவர்தம் தந்தையார் உயர்திரு. சாமிநாதன் செட்டியாரவர்கள் பண்பட்ட கருமயோகியாவர். அவர்கள் சமயத் துறையிலும், சமுதாயத்துறையிலும் ஆற்றியுள்ள பணிகள் எண்ணிறந் தனவாகும். ஆடம்பரமின்றி அடக்கமாகவே பணிபுரியும் பண்பினர் ஆதலின், அவர்கள் செயல்கள் விளம்பரத்தில் இடம்பெறுதலில்லை. ஆயினும், பிள்ளையார்பட்டிக் கற்பக விநாயகர் ஆலயத்தின் முன், ஓங்கி உயர்ந்து கலையழகுடன் விளங்கும் இராஜகோபுரம், என்றென்றும் அவர்கள் புகழைப் பறைசாற்றி நிற்கும். இன்னும் அவர்களுடைய நேர் கண்காணிப்பில் நிர்மாணிக்கப் பெற்ற வெள்ளி ரதங்கள் பலவும், வாகனங்கள் பலவும் அற்புதமான கலை நுட்பத்துடன் அவர்கள் பெயர் முழக்கி நிற்கும். திருக்கோயில்களில் கும்பாபி ஷேகங்கள், பெருவிழாக்கள் சிறப்பாகவும் முறை தவறாமலும் நடாத்துவிப்பதில் தனித் திறமையுடையவர்களாயிருந்தார்கள். வேத விற்பன்னர்கள், ஆகம பண்டிதர்கள், பண்ணிசை வாணர்கள், சிற்பக் கலைஞர்கள், ஆபரணப் பணியாளர்கள் என்றின்னோரன்ன குழுவினர் எந்நேரமும் அவர்களைச் சூழ்ந்திருப்பர். அவரவர்களுக்கு ஏற்ற வகையில் பணிகள் அமைத்துக் கொடுத்துச் சிறந்த முறையில் நிறை வேற்றி வைப்பதில் பெருமகிழ்வு பெற்றார்கள். தெய்வீகப் பணியே சிந்தை முழுதும் நிறையப் பெற்றிருந்தார்கள். சமுதாயத்துறையிலும்

வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம் தாமாகவே முன்வந்து சரீர சிரமத்தையும் பொருட்செலவையும் பாராட்டாது, கருமமே கண்ணாக இருந்து, செவ்வனே செயலாற்றுவதில் நிகரற்று விளங்கினார்கள்.

''தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்''

என்னும் பொய்யாமொழிக்கிணங்க, அன்பர் கணேசனாருக்கு அவர்தம் தந்தையார் தேடி வைத்த அழியாச் செல்வம், தனக்கென வாழாது பிறர்க்கென வாழும் பெருநெறிச் செல்வமாகும்.

அன்பர் கணேசன் அவர்களின் தேசத்தொண்டு, தமிழ்த்தொண்டு, கலைத்தொண்டு உலகம் அறிந்ததே. அவருடைய தொண்டு உள்ளம், கருவிலேயே உருப்பெற்றதாகும். உணவு இல்லாமல்கூட அவர் வாழ இயலும். தொண்டு செய்யாமல் வாழ அவரால் இயலாது. இதனை நன்கு உணர்ந்து கொண்ட ஸ்ரீகாமகோடி பீடாதிபதி, ஜகத்குரு ஸ்ரீசங்கராச்சார்ய ஸ்வாமிகள் அவர்கள், ''தொண்டர்குல சேகரர்'' என்ற விருது வழங்கிக் கௌரவித்துள்ளார்கள்.

நெஞ்சில் உரமும் நேர்மைத் திறமும் மிக்கவர். பணிவும் அதே நேரத்தில் கண்டிப்பும் உடையவர். வளைந்து கொடுத்துக் காரியம் சாதிப்பதை ஒருபோதும் விரும்பாதவர். பணத்திற்கோ அன்றி அதிகாரத் திற்கோ அடிபணியும் சுபாவமற்றவர். வேண்டியவர் என்பதற்காக எவருக்கும் விட்டுக் கொடுப்பதை விரும்பாதவர். தமக்குச் சரி என்று தோன்றுவதைத் தனியாகவேனும் நின்று சாதிக்கும் தன்மை உடையவர். அவருடைய அசைக்க முடியாத மனஉறுதி அவரை அஹங்காரம் கொண்டவர் போலக் காட்டும். ஆனால், உண்மையில் அகந்தை இல்லாத எளிய தொண்டர் என்பதை அவருடன் நெருங்கிப் பழகியவர்கள் அறிவார்கள்.

வாழ்க்கையில் சிக்கலான நிலைமைகள் தோன்றும் காலத்தில் ஒருவர் எங்ஙனம் நடந்து கொள்ளுகிறார் என்பதிலிருந்து அவருடைய உண்மையான மனப்பாங்கை அறிந்துகொள்ள முடிகின்றது. இதனைச் சோதனைக்காலம் என்று பெரியோர் பகர்வர். இத்தகைய சோதனைகள் அன்பர் கணேசனாருக்கு எத்தனையோ முறைகள் நேர்ந்துள்ளன. இதுவரை, மற்றவர்கள் அறிந்திராத ஒரு சோதனையையும், அதில் காட்டிய தந்நலத்துறவையும் இங்கு நினைவுகூர்தல் பொருத்தமாகும்.

1935-ஆம் ஆண்டில் கணேசனாரின் அருமைத் தந்தையார் இவ்வுலக வாழ்வை நீத்ததன்பின் குடும்பப் பொறுப்பு முழுமையும் கணேசனாரே ஏற்க வேண்டியது ஆயிற்று. அந்நாளில் குலதர்ம முறைப்படி, பர்மாவிலும் மலேயாவிலும் லேவா தேவித்தொழில் நடைபெற்று வந்தது. கணேசனாரின் மனமோ தொழில்துறையிலும் குடும்பக் காரியங்களிலும் சிறிதும் நாட்டம் கொள்ளவில்லை. தேசியத் திருத்தொண்டிலேயே சிந்தை உடையவராயிருந்தார். நேரிடையான கண்காணிப்பு இல்லாத காரணத்தால், பர்மாவில் நடைபெற்று வந்த தொழில் பெரும் நஷ்டத்தை உண்டாக்கும் வகையில் திசை மாறலாயிற்று. குடும்பநலனில் அக்கறை உடைய உறவினர்களும் நண்பர்களும் சேர்ந்து, உடனே பர்மா நாடு சென்று, தொழில் செம்மையாக நடைபெறுவதற்குரிய ஏற்பாடு செய்ய வேண்டுமென்று நிர்பந்தம் செய்ததன் மேல், உற்றார் உறவினரின் தொல்லை பொறுக்க முடியாமல், ஒருவாறாகக் கணேசனார் பர்மா சென்று திரும்ப இசைந்தார். ஏற்கெனவே பர்மா நாட்டில் இருந்துவரும் நெருங்கிய உறவினரான பெரியார் ஒருவர், கணேசனாருடன் உடனிருந்து தொழில் முறையைச் சீர்செய்வதென்றும் திட்டமிட்டு, பர்மாவுக்குப் புறப்படுவதற்கான நாளும் குறிக்கப்பெற்றுப் பிரயாணத்திற்கென ஏற்பாடுகளும் செய்யப் பெற்றன.

இந்த நிலையில், காரைக்குடியில் முப்பத்தாறாவது தமிழ் மாகாணக் காங்கிரஸ் மாநாடு நடைபெறுவதற்கான ஏற்பாடுகள் தொடங்கப் பெற்றன. மாநாட்டில் பங்கு கொண்டு பணியாற்றத் துடித்தார் கணேசனார். பர்மாவிலிருந்து வந்து கொண்டிருந்த செய்திகள் உடனடியாகப் பர்மா புறப்படுவதற்கான அவஸ்யத்தை வற்புறுத் துவனவாயின. உற்றார் உறவினர் ஒரு பக்கம் பர்மாப் பிரயாணத்துக்கு நிர்பந்தம் செய்து வந்தனர்.

பர்மாப் பிரயாணத் தேதிக்குச் சில நாள்கள் முன்னதாக முப்பத் தேழாவது தமிழ் மாகாண மாநாட்டு வரவேற்புக்குழு அமைப்பதற்காக, 'தமிழ்க்கடல்' இராய.சொ. அவர்கள் இல்லத்தில் காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் உறுப்பினர் கூட்டம் நடைபெற்றது. தேச விடுதலையில் தீவிரப் பங்குகொண்ட தலைவர்களும், ஊழியர்களும், பெரும் அளவில் கூடியிருந்தனர். வரவேற்புக் குழுவுக்கு மெய்யான காந்திய பக்தர் உயர்திரு காந்தி மெய்யப்ப செட்டியார் அவர்கள் தலைவராகவும்,

''காந்தி பிள்ளைத்தமிழ்'' இயற்றிய 'ஊழியன்' ஆசிரியர் (தமிழ்க்கடல்) இராய.சொ. அவர்கள் உபதலைவராகவும், அன்பர் கணேசன் அவர்கள் செயலாளராகவும் பிரேரேபிக்கப்பெற்று, ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர்.

அன்பர் கணேசனாரின் தொண்டு உள்ளம் குடும்பக் கடமையை உதறித்தள்ளி, நாட்டுக்குத் தொண்டு செய்யக் கிடைத்த அரிய வாய்ப்பைப் பெறுதற்கரிய பேறாக மதித்துப் போற்றியது. வரவேற்புக் குழுவினர் அரும்பாடுபட்டு, அதுவரை நாடு கண்டிராத வகையிலும், என்றும் மறக்க இயலாத வகையிலும் மாநாட்டைச் சிறப்புறச் செய்தனர். செட்டிமார் நாட்டுக்கே உரிய தனி உபசரிப்புக் கலையின் உச்சநிலையை மாநாட்டினர் நன்கு அனுபவித்துப் பாராட்டினர்.

மாநாடு மிகவும் சிறந்த முறையில் நிறைவெய்திய பின்னரும் பர்மாப் பிரயாணத்தில் கருத்தின்றித் தட்டிக்கழித்து வந்தார். உரிய காலத்தில் சிரத்தை கொள்ளாத காரணத்தால், பர்மா நாட்டில் நடைபெற்று வந்த தொழில் பெருநஷ்டத்துக்குள்ளாயிற்று. அப்பொழுதுங்கூடக் கணேசனார் அதைப் பொருட்படுத்தாது தேசத்தொண்டுக்கே தம்மை அர்ப்பணித்துவிட்டார்.

தந்நலத்தையும் குடும்ப நலத்தையும் உதறித் தள்ளி, சேவையாகிய வேள்வியில் தம் வாழ்வையே ஆஹுதியாக அர்ப்பணித்த அன்பர் கணேசனார் அவர்களை உள்ளன்புடன் வாழ்த்திப் பாராட்டுகிறோம்.

**வாழ்க திருத் தொண்டர்!**
**வளர்க திருத் தொண்டு!**



# என் அரிய நண்பர்

- ம.பொ. சிவஞானம்

இராம காதை படைத்த கம்பருக்கு ஆண்டுதோறும் விழா நடத்தும் வழக்கத்தை - குறிப்பாக, நாட்டரசன் கோட்டையிலுள்ள கம்பன் சமாதிக்கு ஆண்டுதோறும் வழிபாடு நடத்துவதை நம்முடைய கம்பனடிப்பொடிதான் தொடங்கி வைத்தார். புதுவை, சென்னை, கோவை போன்ற பிரதான நகரங்களிலெல்லாம் கம்பருக்கு ஆண்டுதோறும் இன்று விழா நடந்து வருகிறதென்றால், அதற்குக் காரணமாக இருந்தவர் கம்பனடிப் பொடிதான்.

என் அரிய நண்பர் சட்டப்பேரவை, சட்ட மேலவை ஆகிய இரு அவைகளிலுமிருந்து, பார்லிமெண்டரித்துறையிலும் நாட்டுக்குப் பணிபுரிந்திருக்கிறார். நான் மேலவைத் துணைத்தலைவராக இருந்த போது அவர் உறுப்பினராக இருந்தார். அப்போது அவரது வாதத்திறமையை நான் பெரிதும் ரசித்ததுண்டு.

காரைக்குடியில் அவர் நிறுவி வைத்துப்போயுள்ள கம்பர் நினைவு மண்டபமும், தமிழ்த்தாய் கோயிலும் அவருடைய நினைவுச் சின்னங்களாக என்றென்றும் நிலைத்து நிற்கும். கம்பர் புகழ் விளக்கை இமயத்தின் உச்சியிலே ஏற்றிவிட்டு அடிப்பொடி மறைந்துவிட்டார்.



# தமிழ் மரபுக் காவலன்

**- ஏ.என். சிவராமன்**

நம்மாழ்வார் ‘வேதம் தமிழ் செய்த மாறன்’ எனப் போற்றப்பட்டார். அவரது காலத்தில் அவரது புகழ் பாடிப் பெருமை பெற்றவர் மதுரகவி ஆழ்வார். பிற்காலத்தில் நம்மாழ்வார் புகழ் பாடிய கம்பன், கம்ப நாட்டாழ்வார் எனக் கொண்டாடப்பட்டார். கம்பனுக்கோர் ஆழ்வார் இல்லை என்ற குறையைத் தீர்க்கப் பிறந்தவர் காரைக்குடி சா. கணேசன். கம்பன் அடிப்பொடியாகி, கம்பன் இலக்கியத்தைப் பரப்பக் கன்னித் தமிழ்பாடி வந்த தமிழ் மரபுக் காவலன்.

அவரது வாழ்நாளில் எழுந்த எந்த அறக் குரலுக்கும் செவிசாய்த்த பெருமை படைத்தவர். பதினெட்டு வயதில் காந்தியத்தின் சுதந்திரப்போர் முரசு கேட்டுப் பாரதச் சுதந்திரப்போரில் ஈடுபட்டவர். சுதந்திரத்துக்கு இடமில்லாத வெளி வாழ்வைத் துறந்து, சிறைக்கோட்டம் புகுந்தவர். ஒரு தடவை அல்ல. பல தடவை. காந்தியத்தின் எளிமையின் சின்னமாக வாழ்ந்தார். அவரது இலக்கியச் சிறப்பையெல்லாம் இந்த எளிமை மறைத்துக் கொண்டிருந்தது. நூல் நூற்புப் பயிற்சி அளிக்கும் தொண்டனாக, சுதந்திரப் போர் வீரனாக மட்டுமே உலகம் மதிப்பிட்டது. அவரது பெருமை அறிந்த பெரியோர்கள் தமிழ்நாடு சட்டமன்றப் பேரவையில் இடம் அளித்தனர். அவரது அனைத்து அரசியல் பணிகளிலும் சீர்மையும், செம்மையும் படிந்திருக்கும்.

1939-இல் கன்னித் தமிழின் குரல் கேட்டுக் காரைக்குடியில் கம்பன் கழகம் நிறுவினார். தேரழுந்தூரில் பிறந்த கம்பன் காரைக்குடியில் குடியேறிவிட்டது போன்ற மயக்கம் தமிழ்நாடு நெடுகப் பரவும் வகையில் பங்குனி தோறும் கம்பன் விழாக்கண்ட வித்தகன் அவர். இது

இப்போது கம்பன் கழக இயக்கமாகவே பரவி மாவட்டம்தோறும் வேர்விட்டுத் தழைத்தோங்கி வருகிறது. கம்பன் புகழ் பாடாத ஊர் இல்லை என்று சொல்லும்படி பரவி விட்டது. தமிழ் இலக்கியம், தமிழ் மொழி வளர்ச்சிக்குப் பாடுபட்டார். தமிழ்க் கலை மரபுக்குத் தலையாய சிற்பத் துறையில் ஈடுபாடு கொண்டவர். தமிழன்னையின் எழில், இலக்கியத்தில், சிற்பத்தில், கலைகளில் ஊடுருவி நிற்பதைக் கண்டானந்தித்தார். இத்தகைய மரபினை வளர்த்த வரலாற்றிலும் உள்ளம் விழைந்தது. கல்வெட்டு ஆராய்ச்சியில் ஈடுபட்டார். அறிவாற்றலைப் பயன்படுத்தும் அனைத்து நல்துறைகளும் அவரது கவனத்தை ஈர்த்தன.



# மறக்க முடியாத மா மனிதர்

**– சிவானந்த விஜயலக்ஷ்மி**

**க**ம்பனுக்கு அவர் (திரு. சா. கணேசன்) படைத்துள்ள மலர் வழிபாட்டுப் போற்றிப் பதிகம் பூரணமான கம்பன் காவியச் சாற்றைப் பிழிந்து நிரப்பிய பொற்கிண்ணம். குலசேகர ஆழ்வாரின் அடிச்சுவட்டைப் பின்பற்றிக் கம்பனுடன் தொடர்பு கொண்ட ஏதேனும் ஒன்றாகப் பிறக்க ஏங்கும் அந்தப் பாடல்களில்தான் எத்தனை பக்தி! எத்தனை உருக்கம்! எத்தனை ஏக்கம்! எத்தனை அற்புதமான சொல்லாட்சி!

இதே போன்று பிள்ளையார்பட்டியில் எழுந்தருளியிருக்கும் கற்பக விநாயகப் பெருமான்பால் கனிந்துருகும் காதலுடன் அவர் அமைத்துள்ள பாடல்கள் மிகச் சிறப்பாக இருக்கின்றன. பாராயணம் செய்து நற்பயன் பெற உதவும் தூய்மையான பக்தி நிரம்பிய பாடல்கள் அவை. உதாரணத்திற்கு இங்கு ஒன்றிரண்டு காட்டலாம்.

காரைக்கால் அம்மையார் பாடியுள்ள 'காலனையும் வென்றோம்' என்ற பாடலை அநேகமாக அப்படியே எடுத்துக் கையாண்டுள்ள ஒரு பாடல் அழகானது. மனதிற்கு மரணத்தை வென்று விடலாம் என்ற எழுச்சியை ஊட்டவல்லது.

**காலனையும் வெல்வோம் கடு நரகுக்கு ஆட்படோம்**
**மேலை இருவினையும் வேர் அறுப்போம் - ஞாலம் இதில்**
**தெள்ளு மருதங்குடித் தேசி விநாயகப்**
**பிள்ளையார் தன்னருளைப் பெற்று.**

இந்தப் பாடலைப் பாடும்போது யம பயம் நம்மைக் கண்டு பயப்பட்டு ஓடிவிடும் என்ற உணர்ச்சி தானே நமக்கு உண்டாகிறது!

ஒருவேளை தன்னை இறுதியில் சந்தித்த மரணத்தையும் நோக்கி ''நமஸ்காரம்'' என்று தன் உறுதி தொனிக்கும் குரல் கொடுத்துக் கைகூப்பி அழைத்து ஏற்றாரோ அவர் என்றே எண்ணுகிறது நம் மனம்.

பகவத் கீதையின் சாரத்தையே ஒரு பாடலில் காட்டுகிறார் - திரு. சா. கணேசன். செய்யும் செயல்களையெல்லாம் இறைவனுக்கு அர்ப்பணித்துப் பற்றின்றி வாழ்பவர் முக்தி பெறுவர் என்பது கண்ணன் உரையின் பரம தாத்பரியம். அதனைத் தெளிவாகவும் சுருக்கமாகவும் இப்பாடலில் காட்டுகிறார்.

**எவையெல்லாம் செய்தோம் எவைஎல்லாம் செய்வோம்**
**அவையெல்லாம் நம் செயல்க ளல்ல -சிவைபாலா**
**அத்துணையும் நின்செயலே அப்பயனும் நிற்கேதான்**
**முக்திஅருள் வேழ முகா.**



# தொட்ட துறைகள் எல்லாம்...

– அரங்க. சீனிவாசன்

கட்டடக் கலையா சிற்பக்
கலைகளா கல்லில் முன்னோர்
வெட்டிய எழுத்தைக் கற்கும்
வித்தையா வரலாற்று அப்பாற்
பட்டன ஆய்ந்து காட்டும்
பண்பட்ட ஆய்வா இங்கே
தொட்டன துறைகள் எல்லாம்
துலங்கிடச் செய்த தோன்றல்.



# ஜைனமும் சா. கணேசனாரும்

**- ஜீவபந்து ஸ்ரீபால்**

புதைபொருள் ஆராய்ச்சி, கல்வெட்டுச் செய்திகள் ஆகியவற்றில் இப்பெருந்தகையால் புதிய கண்டுபிடிப்புகள் வெளிப்பட்டன. குறிப்பாக, ஜைன சமய வரலாற்றுச் செய்திகள் பல வெளிவந்தன. தமிழகத்தில் மிகத் தொன்மை வாய்ந்த ஜைன சமய வரலாற்றுச் செய்திகளை ஆராய்ச்சியாளர்களில் பலர் வெளிக் கொணர்வதில்லை. எவ்வளவு தூரம் மறைக்க இயலுமோ அவ்வளவு தூரம் மறைத்தே வைத் துள்ளனர். ஏதோ சிலர் இங்குமங்குமாக ஆராய்ந்து வெளியிடுவர். வரலாற்றுத் துறையில் திரு. சா. கணேசனார் இறங்கியதும் பல உண்மைகள் வெளிப்பட்டன. அதுமட்டுமல்ல, ஜைனப் பெருமக் களுக்கும், இளைஞர்களுக்கும் இப்பெரியாரால் ஒரு புத்துணர்ச்சி ஏற்பட்டதெனில் மிகையாகாது.

வந்தவாசி, திருத்தக்க தேவர் இலக்கியமன்றச் சார்பிலும், ஆரணி ஜைன சங்கச் சார்பிலும் அப்பெரியார் ஆற்றிய சொற்பொழிவுகளால் தமிழக ஜைன சமயத்தினர் கண் திறந்தனர். தமிழகத்திலுள்ள பிராமி கல்வெட்டுச் செய்திகள் பற்றியும், ஆங்காங்குள்ள ஜீன மலைகளில் காணும் குகைப்பள்ளிகள் பற்றியும் அவர் விளக்கிப் பேசிய போது அறிஞர் சா. கணேசனார் அவர்களை ஜைனப் பெருமக்கள், பகவான் மகாவீரர் சமண சரண அறவுரை மண்டபத்தில் விளக்கம் கொடுத்து வந்த கணதரரின் மறு அவதாரந் தானோ எனப் புகழ்ந்து போற்றினர். அத்தகு சிறந்த சொற்பொழிவை ஆற்றிய அறிஞரை இன்றும் ஜைனப் பெருமக்கள் போற்றிப் புகழ்ந்து வருகின்றனர். மேலும், அண்ணல் சா. கணேசனார் தம்முடன் வந்திருந்த புதைபொருள் ஆராய்ச்சியாளர் உயர்திரு. நாகசாமி அவர்களையும் மற்றும் பல சகாக்களையும் கொண்டு, வந்தவாசி தாலுகாவிலுள்ள சாத்தமங்களம் வெடால்,

தொண்டூர், அகலூர் முதலிய கிராமங்களிலுள்ள பாறைகளிலும், மலை களிலும், கோவில்களிலுமுள்ள கல்வெட்டுச் செய்திகளை ஆராய்ந்து வந்தார். இவையாவும் இப்பெரியாரால் புதிதாகக் கண்டுபிடிக்கப் பட்டவை. கலைக்காட்சி நினைவாக ஒரு மலர் வெளியிட்டார். அம்மலரில் ஜைனம் என்ற தலைப்பில் ஒரு கட்டுரை அனுப்புமாறு என்னைப் பணித்தார்கள். அவ்வாறே எழுதி அனுப்பினேன். அக்கட்டுரையை வரலாற்றுச் சிறப்புமிக்க கலைக்காட்சி மலரில் வெளியிட்டு ஜைனசமயத்திற்கு ஒரு நல்வாய்ப்பை அளித்துக் கௌரவித்தவர் அப்பெரியார்.

இத்தகு சிறப்புகளை ஜைன சமயத்திற்கு அளித்துள்ள அண்ணல் அவர்கள், ஒருமுறை சென்னை வந்திருந்த ஆசாரிய துளசி அடி களாரைத் தரிசித்து, ஒரு சொற்பொழிவாற்றினார். அவ்வுரையில் தாம் கோவலன், கண்ணகி மரபில் வந்தவரென்றும், இன்னும் தம்முடைய உடலில் ஜைன இரத்தம் ஒரு துளி ஓடிக்கொண்டு இருக்கிறதென்றும் கூறி, அனைவரையும் மகிழ்ச்சியில் ஆழ்த்தினார். இவரைப் பாராட்டிப் பேசிய ஆசாரிய துளசி அடிகள், ''அன்பர் சா. கணேசனார் உரையால், யான் தமிழகத்தின் வரலாற்றுண்மையை அறிந்தேன். அன்று மாத்திரம் அவர் ஜைனரா? இன்றும் ஜைனத்துறவியர் போல் சட்டை ஒன்றும் தரித்துக் கொள்ளாமல் அரையில் ஓர் ஆடையும் மேலே ஒரு துண்டுமாகக் காட்சியளிப்பதனின்றும், இன்றும் அவர் ஜைனரே!'' எனப் பாராட்டிப் புகழ்ந்தார்.

இந்நிகழ்ச்சிகளினின்றும் அறிஞர் சா. கணேசனார் அவர்களால் தமிழக வரலாற்றில் ஜைன சமயம் எத்தகைய சிறப்பைப் பெற்றுள்ளதென்பதை அறியலாம். இப்பெரியாரைத் தமிழக ஜைனப் பெருமக்கள் என்றும் மறவாமல் தங்கள் உள்ளத்தில் வைத்துப் போற்றக் கடமைப்பட்டுள்ளனர்.



# கணேசனும் நாடகமும்

- ஔவை தி.க. சண்முகம்

1937-இல் நாங்கள் காரைக்குடி ஷண்முகவிலாஸ் நாடக அரங்கில் நடித்து வந்தோம். அன்று ''குமாஸ்தாவின் பெண்'' நாடகம். எங்கள் நாடகத்திற்கு ஆயிரக்கணக்கில் வருவாய் தந்த நகரம், காரைக்குடி. அதே நேரத்தில் ஐம்பது, அறுபது பேரைச் சபையில் வைத்துக் கொண்டு நாடகம் நடத்தும் அவலநிலை ஏற்பட்டதும் காரைக்குடியில்தான். 1937-எங்களுக்கு வருவாய் இல்லாத காலம். அன்று குமாஸ்தாவின் பெண் நாடகத்திற்கு வந்திருந்த ரசிகர்களின் எண்ணிக்கை நூற்றுக்கு மேலிராது. நாடகம் நடைபெற்றது. உள்ளூர்த் தலைவர் ஒருவர் ரசிகர்களிடையே சபையில் வீற்றிருந்தார். நாடகம் அவருக்கு நிரம்பவும் பிடித்தது. இந்த அருமையான நாடகத்திற்கு வருவாயில்லாதது அவருக்கு மிகுந்த வேதனையைத் தந்தது. நாடகத்தைப்பற்றிச் சில வார்த்தைகள் பேச விரும்பினார். நாங்களும் மகிழ்வோடு ஒப்புக் கொண்டோம்.

வழக்கமாக, நாடகம் முடிவதற்கு ஒரு காட்சி இருக்கும் நேரத்தில்தான் தலைவர்கள் பேசுவது வழக்கம். நாடகம் முடிந்த பிறகு பேசினால் சபையில் மக்கள் இருக்க மாட்டார்களென்று கருதியே இந்த ஏற்பாடு நடைமுறையில் இருந்து வந்தது. அதன்படி நாடகத்தில் கடைசிக் காட்சிக்குமுன் பேசுமாறு தலைவரைக் கேட்டுக்கொண்டோம். அதை அவர் விரும்பவில்லை. ''நாடகம் முடிந்த பிறகு பேசுகிறேன்,'' என்று சொன்னார். அவருக்கு அனுபவமில்லாததால் ஏதோ புரியாமல் பேசுகிறார் என நாங்கள் எண்ணினோம். ''நாடகம் முடிந்தபிறகு சபையோர் கலைந்து விடுவார்கள்; அதனால் தாங்கள் முன்னால் பேசிவிடுவது நல்லது,'' என்று வற்புறுத்தினோம்.

''குமாஸ்தாவின் பெண்'' நாடகத்தில் இறுதிக்காட்சி மிக முக்கியமானது. அக்காட்சியில்தான் நாடகத்தின் மிகச்சிறந்த முடிவு தெளிவாகிறது. எனவே, அக்காட்சியை முடிக்கு முன் பேசத் தலைவர் அவர்கள் ஒப்பவில்லை. ''நாடகம் முடிந்த பிறகு நான் பேசப்போகிறேன் என்பதை நீங்கள் அறிவித்துவிடுங்கள். போகிறவர்கள் போகட்டும், அதைப்பற்றிக் கவலையில்லை,'' என்று அழுத்தமாகக் கூறிவிட்டார். அதன்படியே இறுதிக்காட்சி தொடங்குமுன் நாங்கள் மேடைக்கு வந்து, ''அடுத்த காட்சியோடு நாடகம் முடிவு பெறுகிறது; முடிந்த பின் தலைவர் அவர்கள் பேசுவார்,'' எனப் பெயரைக் குறிப்பிட்டு அறிவித்தோம். சபையோர் கைதட்டி வரவேற்றார்கள்.

நாடகம் முடிந்தது; திரைவிடப்பட்டு மீண்டும் உயர்ந்தது. சபையோர் ஒருவர்கூட எழுந்திருக்கவில்லை; எங்களுக்கு வியப்பாக இருந்தது. தலைவர் அவர்கள் மேடைக்கு வந்தார். ''குமாஸ்தாவின் பெண்'' நாடகத்தின் சிறப்பினைப்பற்றி மிக அருமையாகப் பேசினார். ''இப்படிப்பட்ட ஒரு சிறந்த நாடகத்திற்கு நாட்டுக்கோட்டை நகரத்தார் மிகுதியாக வாழும் காரைக்குடியில் ஆதரவு இல்லாத நிலைமை தனவணிகப் பெருமக்களுக்கு இழுக்காகும்,'' என இடித்துக் கூறினார். அப்போது நாங்கள் ''ஸ்ரீ கிருஷ்ண லீலா'' நாடகத்தைச் சிறப்பாக நடத்திக் கொண்டிருந்த காலம்.

''இந்த லீலாக்களை எல்லாம் கொஞ்ச காலம் நிறுத்தி வைத்துவிட்டு மக்களுக்கும், சமுதாயத்துக்கும் பயன்தரக்கூடிய குமாஸ்தாவின் பெண் போன்ற நாடகங்களைத் தொடர்ந்து நடத்துங்கள்,'' என்று எங்களுக்கு அறிவுரை கூறினார்.

**ஏறத்தாழ அவருடைய இருபது நிமிடப் பேச்சை இருந்து கேட்டுவிட்டுத்தான் சபை கலைந்தது. எங்கள் வாழ்நாளில் நாடகம் முடிந்தபிறகு ஒருவர் பேசியது அதுதான் முதல் தடவை.** இந்தப் பெருமைக்குரிய தலைவர்தாம் திரு. சா. கணேசன் அவர்கள்.



# கணேசனும் கலை ஆராய்ச்சியும்

**- கே.ஆர். ஸ்ரீநிவாஸன்**

"அட கடவுளே, எதுக்கையா இந்தத் தடபுடல்-சரியாப் போச்சு-நான் எதை அப்படிச் செய்துவிட்டேன்!'' என்றே எவ்விதப் பாராட்டுக்கும் மிக்க அடக்கமுடன் பதில் அளிக்கும் இப்பெருமகன்பால் என்னை முதலில், பல ஆண்டுகளுக்கு முன்னரே ஈர்த்தவை. அன்னாரது கசடற்ற காந்தீயமும், தீவிர தேசபக்தியும், அதில் காட்டிய தியாகமும், தீரமுமேயாம். இவ்வழியில் அவருடன் தோழமை பூண்டு, பங்கு பெற என்னால் இயலாது போயினும், அரசாங்கத்தில் பணிபுரிந்து வந்த என்னொத்தவர்களின் பெருமதிப்புக்குரிய தேசபக்தராகவே என் மனதில் திகழ்ந்து வந்தார். ஆயினும், தொல்பொருளியல் துறையில் ஆராய்ச்சிப் பணியைத் தொழிலாக மேற்கொண்ட எனக்கு, இத்துறை பற்றிய பலவற்றில் அன்னாருடன் நெருங்கிய பழக்கமும் தோழமையும், அன்னார் செயல்களிலும் கருத்தோட்டங்களிலும் ஓரளவு பங்கும் ஏற்பட்டன. இத்தொடர்பு முப்பது ஆண்டுகளாக வளர்ந்து நீடித்துள்ளது. வாழ்விலும் செயலிலும் உழன்று பல பட்டைகள் தீட்டப்பெற்று, பண்பினால் ஒப்பனிடப்பட்டு, பலச்சையல்லாது, பல கதிர் ஒளிக்கும் மணியின் மேல், எக்கோணத்திலிருந்தும் படும் ஒளிக்கதிர் பல்கிப் பெருகியே பிரதிபலிக்கும். தொல்பொருள் ஆய்வு என்ற என் கோணத்திலிருந்து பாய்ச்சப்பட்டுத் தெறித்துப் பல்வண்ணத்தில் என்பால் திரும்பிய ஒளிச்சுடர்களில் நான் கண்டுகொண்ட சில இங்கு கூறப் புகுந்தேன்.

கடவுள் காரியம், கன்னித்தமிழ், கம்பன், கவின் கலைகள், கல்வெட்டு சாஸனங்கள், கட்டடக்கலை, கோயில் திருப்பணிக்கலை ஆகியவற்றில் ஒருங்கே ஈடுபாடும், ஆர்வமும், அறிவாற்றலும் கொண்ட இவரிடத்தில் எது மேலோங்கி நிற்பது என ஆராய்ந்து

துணிவது வீண் சிரமமும் கால விரயமும் ஆம் என்பது நான் அறிந்த ஒன்றாகும். இவ்வளவும் தம் தேசீய, சமூக சேவைகளுக்கும், சொந்த அலுவல்கள் பலவற்றுக்குமிடையே இவருக்கு எப்படி இயலும் என்பதே இன்றும் என் பெருவியப்பு.

சோழ நாட்டையும் பாண்டி நாட்டையும் பிரிக்கும் எல்லையான தென்வெள்ளாற்றின் வடக்கிலும் தெற்கிலுமாகப் படர்ந்திருந்த சிறிய தனித்தமிழ் அரசான புதுக்கோட்டை இராச்சியத்தில் அவ்வரசின் தொல்பொருள் ஆய்வுத்துறை, மற்றும் அதையொட்டிய கண்காட்சிச் சாலை ஆகியவற்றின் இயக்குநர் என்ற பணியில், முப்பத்துமூன்று ஆண்டுகளுக்குமுன் சேர்ந்து பணியாற்றிவந்த காலந்தொட்டே, இத்துறை பற்றிய பலவற்றால் திரு. சா. கணேசனுடன் என் நெருங்கிய பழக்கம் தொடங்கியது. இது எனக்குப் பலவிதத்தில் பயனளித்த ஒரு வாய்ப்பு. எல்லையின் இருமருங்கும் படர்ந்து சோழவள நாடும், பாண்டி நாடும் கூடும் பிரதேசமாகவும், அதுபற்றி மாறிமாறி அவ்வரசர்களின் ஆட்சிகளின்கீழ் வந்ததும், இடையிடையே பல்லவர், முத்தரையர், இருக்குவேளிர் போன்றவரின் ஆட்சிக்குட்பட்டதும், பிற்காலங்களில் பல்வேறு ஆட்சிகளின்கீழ் வந்ததுமான புதுக்கோட்டைச் சீமையும் அதன் சுற்று வளையும் இப்பல்வேறு காலத்திய நிலைகளையும் பண்புகளையும் பாங்குகளையும் எடுத்துக்காட்டும் சின்னங்களான குகைகள், கோயில்கள், சிற்பங்கள், சித்திரங்கள், கல்வெட்டுகள், செப்பேடு, சாஸனங்கள், சுவடிகள் போன்ற பலவுடைத்தாயிற்று. தமிழகத்தின் வரலாறு, சமூக வளர்ச்சி, கலை வளர்ச்சி, மொழி வளர்ச்சி, எழுத்துகளின் பரிணாமம் போன்ற ஆராய்ச்சிகளுக்குகந்த பலவும், தமிழ்நாட்டின் நடுவகத்தேயுள்ள இச்சிறு பிரதேசத்தில் 'மாதிரிகளின் களஞ்சியம்' அல்லது 'மியூசியம்' போன்று சேர்த்துவைக்கப்பட்டது போல் தோன்றும். இத்துறைகளில் அதிகம் அலையாது, ஆராய்ச்சி வேண்டுவோருக்கு இது ஒரு சிறந்த வேட்புலம் ஆகும்.

திரைகடலோடியும் திரவியம் தேடிச்சென்ற மரபில் வந்தவரான திரு. கணேசனுக்கு இப்படிப்பட்ட செல்வங்களின்மேல் நாட்டம் ஏற்படின், மிக அண்மையிலுள்ள இவையாவும் எவ்வாறு அவர் கண்ணிலும் கருத்திலும் சிக்காமற்போகும். இப்பகுதியிலுள்ள பலவகைக் கோயில்களையும் அவற்றின் இடிபாடுகளையும், சிற்ப, பணி விசேடங்களையும், இவற்றினின்றும், ஏனையவிடங்களினின்றும்

படியெடுத்துப் பதிப்பித்துப் பிரசுரமான கல்வெட்டுகளையும் படித்தறிந்து, இவ்விடங்களைத் தேடிச் சென்று கண்டு ஆராய்ந்தறியும் ஆவலே இவரை இத்துறையில் ஊக்குவித்தது. மேலும், இவர் தந்தையார் காலத்திலும், இவர் இளமைக் காலத்திலும், கைதேர்ந்தவரும் சாஸ்திர விற்பன்னர்களுமான ஸ்தபதிகள், சிற்பக் கலைஞர் ஆகம பண்டிதர்கள் ஆகியோரின் தொடர்புகொண்டு ஆற்றிய பல கோயில் திருப்பணி களாலும், பிரதிஷ்டைகளாலும், கும்பாபிஷேகங்களாலும், கோயில் நிர்மாண, நிர்வாகக் கலைகளான வாஸ்து, சில்ப, ஆகம சாத்திரங்கள், பிரதிமாலக்ஷணம், வடமொழி, மற்றும் இவை போன்றவற்றிற்குகந்த பல துறைகளில் நேரிடைப் பயிற்சியும், விஷயஞானமும் தாமே ஏற்பட்டன. ஆக, இத்துறைகள்பற்றிக் கற்கவும், ஆராயவும் எனப் பல அரிய நூல்களைத் தேடிச்சேர்க்கவும் தலைப்பட்டார். நாளடைவில் அது ஓர் அருமையான நூல் நிலையமாகப் பெருகியுள்ளது. புதுக் கோட்டையில் நானிருந்த பதினோராண்டுகளில், அவ்வரசின்கீழ்க் கல்வித்துறையில் ஆசிரியராகவும் இயக்குநராகவும் பணியாற்றி வந்த என் தமையனார் திரு. கே.ஆர். வெங்கடராமன், இந்தியக் கலாசாரத் திலும், தொல்பொருளியலிலும் உண்மையான ஆர்வங்கொண்டிருந் தவரும், சமஸ்தான அரசு நிர்வாகியுமாயிருந்த ஸர் அலெக்சாண்டர் டாட்டன் ஹாமின் விருப்பத்திற்கிணங்கி, அச்சீமையின் பண்டை வரலாற்றையும் தொல்பொருட் சின்னங்களையும் கல்வெட்டு சாஸனங்களையும், அரசு மரபு அரசியல் முறைகளையும் ஆராய்ந்து புத்தகங்களாக வெளியிடும் பணியில் ஈடுபட்டிருந்தார். ஆக, எங்கள் மூவருக்கும் இருந்த இந்தப் பொதுவான ஈடுபாடு பற்றி ஒருமைப்பாடும் ஏற்பட்டது. சகோதரர்களான எங்கள் இருவருடன் திரு. கணேசனின் சந்திப்பும் சர்ச்சைகளும் புதுக்கோட்டையிலும் காரைக்குடியிலும் அடிக்கடி நிகழ்வதுண்டு. நாங்கள் ஒருங்கே கூடிய சில சமயங்களில் பல கோயில்களையும் பண்டைச் சின்னங்களையும், சேர்ந்து சென்று பார்த்தறிந்ததும் உண்டு.

இதன் விளைவாகச் சித்தன்னவாசலில், ஏழடிப்பட்டம் என வழங்கப்படும் பாழியான 'பாயற் பள்ளியில்' காணப்பட்ட பிராமி லிபி (கி.மு. இரண்டாம் மூன்றாம் நூற்றாண்டுகளுக்குரியது), பண்டைத் தமிழ் லிபிக் கல்வெட்டுகள் முதலாகப் பல்லவர், பாண்டியர், சோழர், முத்தரையர், இருக்கு வேளிர், போசளர், மதுரைசூரத்தான்கள்

(சுல்தான்கள்) விஜயநகர, நாயக்க மன்னர்கள், ஆங்கிலக் கிழக்கிந்தியக் கும்பேனி, தொண்டைமான்கள், சேதுபதிகள் காலம் வரை வந்துள்ள பல கல்வெட்டுகள் ஈறாகப் படித்தறிந்து விளக்கம் கூறும் ஆற்றலும் இவர் பெற்றார். இவையாவும் தம் தனிப்பட்ட முயற்சியாலேயே என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது. பல ஆண்டுகளுக்கு முன் வானொலி மூலம் மடத்துக் கோவிலிலுள்ள ஒரு பழைய தமிழ்ச்செய்யுள் கல்வெட்டைப் பற்றி மிக அருமையாக விளக்கியதும், சென்னையில் கூடிய கல்வெட்டுக் கருத்தரங்குகளில் பெரிய பங்குகொண்டு காட்டிய இவர் புலமையும் இதற்குச் சான்று பகரும்.

சித்தன்னவாசல், மற்றும் திருச்சிராப்பள்ளி, இராமநாதபுரம், மதுரை, திருநெல்வேலி, கோயம்புத்தூர், செங்கல்பட்டு மாவட்டங்களில் ஏனைய மலைமுழைஞ்சுகளில் காணப்பட்ட பிராமி லிபிக் கல்வெட்டு களின் மொழி தமிழேயாகும் என்ற என் கருத்தை அக்காலத்திலேயே ஏற்றுக் கொண்டவர்களில் திரு. கணேசனும் ஒருவராவார். பின்னர், அரிக்கமேடு, உறையூர் முதலிய இடங்களின் அகழ்வாராய்ச்சியின் விளைவாகக் கிடைத்தவையும் பிராமிலிபியில் கீறியெழுதப்பட்ட சொற்கள் கொண்டனவையுமான மட்கலவோடுகள் இதையே நிரூபித்தன. இத்துணிவினாலேயே 'கலைக்களஞ்சியம்' தொகுப்பில் 'அரிக்கமேடு' என்ற தலைப்பின்கீழ் இக்கருத்தைச் சில ஆண்டுகளுக்கு முன் வெளியிட்டுமுள்ளேன். இடைக்காலத்தில் விட்டுப்போயிருந்த இப்பிராமி எழுத்துச் சொற்களைப்பற்றிய ஆராய்ச்சி, அண்மையில் அறச்சலூர் போன்றவிடங்களிலும் காணப்பட்டவை கொண்டு மீண்டும் ஆராய்ச்சியாளர்களின் கவனத்தைப் பெரிதும் கவர்ந்துள்ளது. இதில் திரு. சா. கணேசனாரும், திரு. மகாதேவனும், திரு. நாகசாமி மற்றும் பலரும் ஈடுபட்டுள்ளனர் என்பது சென்னையில் நடந்த தமிழ் மாநாட்டில் கலந்துகொண்டவர் அறிவர்.

தமிழ்க் கல்வெட்டு தாமிர சாஸனங்களில் காணப்பட்ட செய்யுட் பகுதிகள் அந்நாள் முதலே திரு. கணேசன் கவனத்தையும் ஆராய்ச்சி யையும் கவர்ந்தவை. பெரும்பாலும் உரைநடையிலும் பொருந்திய வக்கணைச் சொற்றொடர்களிலும், நெட்டெழுத்திலும் அமையப்பெற்று, எழுதிப் பொறிக்கப்பட்ட இக்கல்வெட்டுகளும், பட்டயங்களும், சுவடிகளும் அவ்வக் காலங்களுக்குரிய சொல்வழக்கு, வழக்கொழிவு, பொருள் மாற்றம், மாற்றுச் சொற்கள், தொகுப்பியல், பரிபாஷை,

அல்லது கலைச்சொற்கள், திசைச்சொற்கள், இலக்க வடிவங்கள் போன்ற மொழியாராய்ச்சிக்குகந்த பல விசேடங்கள் நிறைந்திருப்பது கண்டு, இவற்றையும் ஊன்றிப் படித்தறிய ஆர்வமும் கொண்டார். அரியதும் பயனூட்டுவதுமான இத்துறையில் இறங்கி ஈடுபாடு காட்டும் நம் தமிழ் ஆராய்ச்சியாளரின் எண்ணிக்கைக் குறைவைக் கண்டு வருந்துபவரும் இவர். இலக்கணக் கட்டுக்கோப்புக்குள் யாத்ததான இலக்கியத்தமிழ் ஆராய்ச்சியுடன் இத்தகைய அன்றாடப் பழகு தமிழ் ஆராய்ச்சி, நாம் இடைக்காலத்தில் மறந்து, இப்பொழுது வேண்டிநிற்கும் பொருட் செறிவுள்ள நல்ல தமிழ்க் கலைச் சொற்களை மீண்டும் புழக்கத்தில் கொண்டுவர இயலும் என்று நம்பியவர்களில் இவர் ஒருவர்.

'யாதும் ஊரே' என்பதற்கிணங்கத் தென்னிந்தியாவின் பல பகுதிகளிலும் தோன்றிப் பன்மொழிகளான தமிழ், தெலுங்கு, கன்னடம் போன்ற தாய்மொழி படைத்தவர்களான விளைஞரும், வணிகரும் ஒருங்கு கூடி இணைந்து, நாட்டின் எண்டிசையிலும், அப்பாலும் கடல் கடந்து சென்று வாணிபம் நடாத்திய, 'சித்திர மேழி நாட்டார்', 'நானாதேசியத்திசை ஆயிரத்து ஐஞ்ஞூற்றுவர்' என்ற வாணிபக் குழாம் (Corperate... Merchant Guild) பல கிளைகளுடன் இயங்கி வந்த வரலாற்றுச் செய்தியை இவர்களைப்பற்றிய பல மொழிகளிலும் உள்ள கல்வெட்டுகளினின்றும் அறிவோம். கிறிஸ்து அப்தத் தொடக்கமான நூற்றாண்டுகளில் இவர்களின் தாயகம் தக்காணத்தில் கன்னட நாட்டில் உள்ள அய்ஹொளே (அய்யம்பொழில்)யினின்றும் பரவி, தென்னாடு முழுவதும் தம் பண்டங்களுடனும், ஊர்திகளுடனும், அவற்றைக் காக்கும் படைகளுடன் சென்று, ஆங்காங்கே தம் வணிக நிலையங்கள், பண்டக சாலைகளான தாவணங்கள் அமைத்து, அவ்விடங்களிலுள்ள பொருள் தானிய விளைஞர்களான சித்திரமேழி நாட்டார் இணைப்பு களுடன் ஒன்றி, அவ்வவ்விடங்களுக்கேற்றவாறு, அவ்வூர்களை அய்யம்பொழில், நகரம், மணிக்கிராமம், பட்டினம், வீரபட்டினம், நியமம் (நேமம்), பெருந்தெரு என்ற வகைப் பெயர்களை இட்டமைத் தார்கள். இவ்வணிக மக்கள் பொருள்கள் கொண்டும் கொடுத்தும், பொதிகளை வேற்றிடங்களுக்கு அனுப்பியும், பெற்றும், தம் தொழில் நடத்துவதுடன், அரசாணை (Charter) பெற்றுக் கோட்டை காவல் அமைத்து, அந்நிலையங்களின் ஆட்சி நிர்வாகத்தையும் ஏற்று நடத்தினர். அரசு மாறினும், ஆட்சி முறை மாறாது நிர்வகித்துப் பல

சமயங்களையும் போற்றி வளர்த்து, கோயில்களும், பள்ளிகளும் மடாலயங்களும் அறச்சாலைகளும், மற்றும் பலவும் தாம் ஈட்டிய பொருள் கொண்டு பொதுப்பணியாக அமைத்து நாட்டை வளப் படுத்தினர். இக்குழாத்தின் ஒரு பிரிவரே இன்றும் நாட்டுக்கோட்டை நகரத்தார் எனப்படுவர். எனின், தென்வெள்ளாற்றின் தென்கரை யொட்டிய பகுதியில், மேற்சொன்ன ஐஞ்னூற்றுவர் மரபில் வந்து, நகரங்கள், நியமங்கள், பட்டினங்கள் போன்ற வணிகயிருக்கைகள் கண்டமைக்குச் சான்றுகள் பல உள. இப்பகுதியில்தான் ஐஞ்னூற்று வரைக் குறிக்கும் பத்தாம் நூற்றாண்டுக்குரிய முதல் தமிழ்க் கல்வெட்டு முன் சந்தை (கல்வெட்டில் முனியந்தை) என்னுமிடத்தில் காணப்பட்டது. பின்னர் நார்த்தாமலை (நகரத்தார் மலை) என்ற நகரத்திலுள்ள கல்வெட்டுகளும், பிரான்மலையில் இன்னும் விரிவான செய்திகள் கூறும் கல்வெட்டும், மற்றும் இது போன்று தென்னாட்டிலும், வடக்கே விசாகப்பட்டினம் வரை பலவிடங்களிலும் இவர் பற்றிய தமிழ்க் கல்வெட்டுகளும், ஏன், இவர் சென்றடைந்த கடல் கடந்த கீழை நாடுகளிலும் காணப்படுகின்றன. மேலும் இக்காலத்திய நகரத்தார் குலக் கோயில்களாகக் கொண்டாடுபவை ஐந்தும் இப்பகுதியில்தான் உள்ளன. இவை திருக்களாக்குடி, ஐஞ்னூற்றீசுவரம் முதலானவை. என் தமையனாருடன் ஐஞ்னூற்றுவரைப்பற்றிய கல்வெட்டுகளிலிருந்து அவர்களின் வரலாற்றை ஆராய்ந்து கொண்டிருக்கும் பொழுது, 'ஐஞ்னூற்றீசுவரர் துணை' என்று தலைப்பிடப்பட்ட திருமண அழைப்பிதழ் இந்நாட்டிலிருந்து ஒன்று எங்களுக்கு வந்தது. அது தொடர்ந்து, திரு. சா. கணேசனுடன் இதுபற்றிய பேசிய பொழுது, இக் கிளைக் கோயில்களைப்பற்றியும், காரைக்குடியடுத்த ஐஞ்னூற்றீச்வரம் பற்றியும் எங்களுக்குத் தெளிவுபடுத்தினார். அவரும் இவ்விஷயம் பற்றி ஆராயலானார். அவர் குல முன்னோர் சோழவரசன் நடத்தையாற் சினங்கொண்டோ, அல்லது மற்றொரு கர்ணபரம்பரைக் கூற்றின்படி பாண்டிய மன்னன் அழைப்பிற்கிணங்கியோ, தம் பண்டைப் பதியான பூம்புகாரினின்றும் குடிபெயர்ந்து, வெள்ளாற்றின் தென்பகுதிப் பாண்டி நாட்டெல்லையில் குடியேறினர் என்பது வழக்காறு. முனியந்தைச் சான்றின்படி இது பத்தாம் நூற்றாண்டிற்குச் சற்று முற்பட்டது என்ற செய்தி ஐயத்துக்கிடமின்றிக் கிடைக்கலாயிற்று. இப்பகுதியிலுள்ள ஐஞ்னூற்றீச் வரமும், இதற்குப்பின் வந்ததாகும். மற்றும் இவர்கள் குடியேறிய இச்செட்டி நாட்டுப் பகுதியில் தம் பல்வேறு தாவணங்களான

நிலையங்கள் தோன்றின. உதாரணங்கள் சில கூறப் புகின், கள்ளம்பட்டி ஒரு அய்யம் பொழிலாக இருந்தது. இச்செய்தி அங்குள்ள கல்வெட் டொன்றில் அய்யம் பொழில் நாச்சியார் குறிக்கப்படுவது பற்றியாகும். அய்யம் பொழில் என்பது அய்யை (தேவி-விந்தியா வாஸினீ)= பொழில் (காவு) எனப் பிரியும். தெலுங்கு நாட்டு வணிகரும், கன்னட தேசத்து வணிகரும் கன்னிகா பரமேச்வரியைச் சிறப்பாகக் கொண்டாடுவது ஈண்டு கவனிக்கத்தக்கது. மிழலைக் கூற்றத்து வாளர மாணிக்கம் (மழவர் மாணிக்கம்) என்ற ஊரிலுள்ள நானாதேசி நாச்சியாரை மற்றொரு கல்வெட்டும் குறிக்கும். நார்த்தா மலை (நகரத்தார் மலை) ஒரு நகரமாகவும் கொடும்பாளூர் ஒரு மணிக்கிராமமாகவும், குன்றக்குடிக்கடுத்துள்ள நேமம் ஒரு நியமமாகவும் காளையார் கோயில் காளையர் காலப் பெருந்தெருவாகவும், இதுபோன்று பில்ல மங்கலம் - அளகாபுரி அரச நாராயணப் பெருந்தெருவாகவும், பேரையூர் குலசேகரப் பெருந்தெருவாகவும், சுந்தரம், தேசியுகந்த பட்டினமாகவும் விளங்கியது கல்வெட்டுகளினின்றும் அறிந்த செய்தி.

மற்றும், தனக்குகந்த கணபதிக் கடவுளின் மூர்த்தம் தமிழ்நாட்டில் முதலாவதாகத் தம் பாண்டி நாட்டிலே காணப்படுவது பற்றிப் பெருமைப்படுபவர் திரு. கணேசன். தேவார காலத்துக்கு முன் போந்த சங்க நூல்களில் வழங்கப்பெறாத தெய்வங்களில் கணபதியும் ஒன்றாகும். ஆதியிலே, ஆறாம் நூற்றாண்டு தொடங்கி, தக்காண சளுக்கியர் (வாதாபி சளுக்கியர்) சிற்பங்களில் கணபதி மூர்த்தம் காணப்படுவதும், சமகாலத்தில் காஞ்சி பல்லவர் சிற்பங்களிற் காணப்படாததும், ஆயினும், இடையிலிருந்த கங்க நாட்டிலும் (மைசூர்) தென்பாண்டி நாட்டுக் குகைக்கோயில்களிலும், அதையடுத்து வெள்ளாற்றுக்கு வடக்கில் உள்ள பகுதியில் முத்தரையர்களின் குகைக் கோயில்களிலுமே காணப்படுவதும் பற்றி இவ்வழிபாடு, தமிழ்நாட்டில் தெற்கே பாண்டி நாட்டிற்கு, கங்கநாடு வழி வந்து, பின்னரே அக்காலத்து வடதமிழ்ப் பகுதியான பல்லவர் நாட்டைச் சென்றடைந்தது என்பதும் புலப்படும். பல்லவரது இறுதிக்காலத்தில், அதாவது, கி.பி. எட்டாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் இராஜசிம்ம பல்லவனால் கட்டப்பட்ட காஞ்சி கைலாஸநாதர் கோவிலில்தான் இவ்வழிபாடுடைய மூர்த்தம் முதலாவதாகத் தொண்டைநாட்டுக் கோவில் ஒன்றில் அவ்வரசனால் சேர்க்கப்பட்டது காணலாம். பிள்ளையார்பட்டி, திருக்களாக்குடி, குன்றக்குடி, நச்சாந்து

பட்டியடுத்த மலையக்கோவில், தேவர்மலை, இன்னும் தெற்கே திருநெல்வேலி மாவட்டத்தில் திருமலாபுரம், வீரசிகாமணி, வெள்ளாற்றின் வடகரை, திருக்கோகர்ணம், குடுமியான்மலை, குன்றாண்டார் கோவில், மலையடிப்பட்டி, திருச்சிராப்பள்ளி உச்சிப் பிள்ளையார் மலையின் அடிவாரத்திலுள்ள குகைக்கோயில் ஆகிய குகைக் கோயில்களில் இம்மூர்த்தம் செதுக்கப்பட்டுள்ளது. இச்சிற்பச் சான்றுகளின் வாயிலாகக் கணேசர் மரபு வல்லபர்களின் வாதாபி யினின்று கங்கநாடுவழித் தமிழ்க் கன்னி நாடு புகுந்து, பொன்னி நாடு கடந்து, தொண்டை நாடு இருந்து அண்டைக் கீழ்க்கடல் நாடுகளுக்குப் பரவியது என்பது விளக்கம். இத்துறையில் தம் இஷ்ட தெய்வமான கணேசர் இருக்கும், தம் பிள்ளையார்பட்டிக் கோவிலைப் பற்றி திரு. கணேசனார் எழுதியுள்ள நூலைக் குறிப்பிடலாம்.

இத்தகைய ஆராய்ச்சிப் பண்பு கொண்ட திரு. கணேசனின் செயலாற்றல்களும் குறைவானவையல்ல. அவர் ஆண்டுதோறும் சிறப்புடன் எடுக்கும் கம்பன் விழா ஒன்றே இதற்குச் சான்றாகும். மற்றும் கலைப்பொருள்களின் திறனாராய்ந்து தரப்படுத்திக் கண்காட்சி அமைத்து அதை நிர்வகிக்கும் இவருடைய திறனை, 1968-இல் நடந்த உலகத்தமிழ் மாநாட்டுக் கண்காட்சியைக் கண்டவர் உணர்ந்திருக்கலாம். தஞ்சையில் இராசராச சோழன் சதயத் திருவிழாவில் பெருவுடை யாருக்குப் பெருமுழுக்குக் காரியங்களைத் திறம்படத் திட்டமிட்டு ஆகமரீதி வழுவாது செய்தும் காட்டியுள்ளார். சிற்ப நூல்களிற் காணப்படாததும் இலக்கணங்கள் வகுக்கப்படாததுமான கண்ணகி மூர்த்தம் வடித்துக் கொடுக்கும் சோதனையான பணியில் தம் உற்ற நண்பரும், தேர்ந்த ஸ்தபதியுமான திரு. கணபதி ஸ்தபதியாரின் துணைகொண்டு சங்க நூல்களிலும் சிலப்பதிகாரத்திலும் கூறப்பட்ட அணி, உடை, ஆபரணச் சிறப்புகளைச் செவ்வனே ஆராய்ந்து, அச்சிலைக்குகந்த பிரதிமாலக்ஷணம் கற்பித்துத் தெய்வக்களை பொருந்திய அவ்வொன்றை அழகுறச் செய்தும் வைத்த பெருமை இவரையே சாரும். இத்துடன் பூம்புகாரில் கண்ணகி கோயிலுக்கென இடம் பார்த்தும், கோயிலமைப்பைத் திட்டமிட்டும், இப்படிமத்தைப் பிரதிஷ்டை செய்வதிலும் உதவியுள்ளார். இப்பணிகள் இத்துறைகளில் அன்னாருக்கிருக்கும் சிரத்தையையும் அநுபவத்தையும் கைப்பழக்கத் தையுமே காட்டி நிற்கும்.



# கணேசனும் கல்வெட்டுகளும்

– இரா. நாகசாமி

“திரு. சா. கணேசன் அவர்கள் கல்வெட்டுகளைப்பற்றி நன்கு ஆராய்ச்சி செய்திருக்கிறார்கள்,” என்று தமிழகம் முழுதும் எங்கு சென்றாலும் சொல்லக் கேட்டிருக்கிறேன். இது எவ்வளவு உண்மை என்று அவருடன் நெருங்கிப் பழகியவர்களுக்கு நன்கு தெரியும். சுமார் 35 ஆண்டுகளுக்கும் முன்னரே தமிழ்க் கல்வெட்டுகளிலிருந்து நூற்றாண்டுவாரியாகத் தமிழ் உயிரெழுத்துகளும், மெய்யெழுத்துகளும் அடைந்த வளர்ச்சியை வகைப்படுத்திப் பெரிய படங்களாக எழுதி வைத்திருக்கிறார்கள். காரைக்குடி, அழகப்பாபுரம், மதுரை, சென்னை ஆகிய இடங்களில் அவற்றைக் காட்சியிலும் வைத்திருக்கிறார்கள். திருவெள்ளறையில் நந்திவர்மன் காலத்தில் எழுதப்பட்ட “கண்டார் காணா உலகத்தே” என்ற செய்யுட் கல்வெட்டையும் தாமே எழுதி வைத்திருக்கிறார்கள். அக்காலத்தில் கல்வெட்டுகளைப் பற்றி அச்சாகி வந்த எல்லா நூல்களையும் வாங்கிக் கம்பன் கழகத்திற்கு உடைமையாக்கி இருக்கிறார்கள். இப்போது பெரும் விலை கொடுத்தாலும் அந்நூல்கள் கிடைப்பது அரிது.

திரு. சா. கணேசன் அவர்களை 1962-இல் தான் முதன் முதலில் சந்தித்தேன். தென்னிந்தியத் தொல்பொருள் ஆராய்ச்சிக் கழகத்தின் செயலாளனாக அப்போது பணிபுரிந்து வந்தேன். அக்கழகத்தின் வெள்ளி விழாவை ஒட்டி ஒரு கலைக்காட்சியைச் சென்னை-எழும்பூர் மியூசியத்தில் ஏற்பாடு செய்திருந்தேன். திரு. சா. கணேசன் அவர்களும் அவருடன் வேறு ஒரு நண்பரும் அங்கு வந்து கலைக்காட்சியைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அப்போது நான் அங்கு சென்றேன். திரு. சா. கணேசன் அவர்களைப்பற்றி அப்போது எனக்கு ஏதும் தெரியாது.

அருகில் இருந்த அலுவலர் ஒருவர், ''இவர் சா. கணேசன் அவர்கள் - சட்டமன்ற உறுப்பினர்,'' என்று அறிமுகப்படுத்தினார். நான் 'வணக்கம்' என்றேன். அவரும் 'வணக்கம்' என்றார். பிறகு, நானும் பேசவில்லை, அவரும் பேசவில்லை. உபசாரத்திற்காகச் சிறிது அவருடன் சென்றேன். அங்கு முப்புரம் எரித்த ஒரு மூர்த்தியின் செப்பு உருவம் காட்சியில் இருந்தது. அதைக் கண்டவுடன் திரு. சா. கணேசன் அவர்கள் என்னிடம், ''சமீபத்தில் ஹிந்து பத்திரிகையில் ஒரு கட்டுரை வந்திருக்கிறது. அதில் தஞ்சையில் உள்ள ஒரு செப்பு உருவத்தைத் 'தஞ்சை அழகர்' என்று குறித்து யாரோ எழுதியிருக்கிறார். அதைத் திரிபுராந்தக மூர்த்தி என்று குறிப்பிட்டிருக்கிறார். அது தவறு,'' என்று கூறினார். ''அக்கட்டுரையை எழுதியது நான்தான்,'' என்றேன். ''அப்படியா! எனக்குத் தெரியாது. இருப்பினும் நான் உங்கள் கருத்திலிருந்து வேறுபடுகிறேன்,'' என்றார். இவ்வாறுதான் எங்கள் நட்பு ஆரம்பமாகியது. அவ்வுருவைப் பற்றி இன்னும் எங்களிருவரிடையே கருத்து வேறுபாடு உண்டு. அதன்பிறகுகூட அதிகத் தொடர்பு இல்லை. 1965-இல் நான் தமிழக அரசுத் தொல்பொருள் ஆய்வுத்துறையில் சிறப்பு அலுவலராகப் பணி ஏற்றேன். அப்போது சென்னை ராஜாஜி மண்டபத்தில், ஒரு காட்சியை அமைத்தேன். அக்காட்சியில் தமிழகக் கோயில்கள், சிற்பங்கள், ஓவியங்கள், ஆய கலைகளைப்பற்றிய சிறந்த நிழற்படங்களைத் தயாரித்துப் பெருமளவில் வைத்திருந்தேன். அக்காட்சி அனைவருடைய மனத்தையும் கவர்ந்தது. அதைக் கண்ணுற வந்த கணேசன் அவர்கள், ''உங்களிடம் பேசவேண்டியுள்ளது. வரமுடியுமா?'' என்று கேட்டார். அவரைக் காணச் சென்றேன்.

சில நாள்களுக்கு முன்னர் தான் முதலமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் அவர்களை உதகையில் இவர் சந்தித்திருந்தார். திரு. எம். பக்தவத்சலம் அவர்களை மத்திய அரசின் கல்வெட்டுத் துறைக்கு அழைத்துச்சென்று, அங்குள்ளவைகளை விரித்துரைத்து, தமிழ்நாட்டுக் கல்வெட்டுகள் அச்சிடப்படவேண்டிய அவசியத்தையும் வலியுறுத்தி யிருந்தார். திரு. பக்தவத்சலம் அவர்கள், திரு. கணேசன் கூறியவற்றை முற்றிலும் ஏற்றுக்கொண்டு, சென்னைக்குத் திரும்பியதும், கல்வெட்டு களை அச்சிடும் விஷயமாக ஒரு திட்டத்துடன் தம்மைக் காணும்படி திரு. சா. கணேசனைக் கேட்டுக்கொண்டிருந்தார்.

''தமிழகக் கல்வெட்டுகளை அச்சிட ஒரு திட்டம் தயாரிக்க வேண்டும், அது விஷயமாக உங்கள் கருத்து என்ன?'' என்று கேட்கத் தான் என்னை அன்று அழைத்திருந்தார். இவர் தம்முடைய கருத்துகளைக் கூறினார். நான் எனக்குத் தெரிந்த சிலவற்றைக் கூறிவைத்தேன். சுமார் இரண்டு நாள்கள் தொடர்ந்து சிந்தித்தோம். அதன்படி இவர் ஒரு திட்டத்தைத் தயாரித்தார். அது முடிந்த இரண்டு நாள்களுக்குள்ளாக திரு. பக்தவத்சலம் அவர்களைச் சந்தித்துத் தமது திட்டத்தை அவரிடம் சமர்ப்பித்தார். முதலமைச்சர் அவர்களும் அதை ஆமோதித்து அது செயல்பட ஆவன செய்ய வேண்டும் என ஆணையிட்டார். அப்போது தமிழ் வளர்ச்சித் துறைக்கு இயக்குநராக இருந்த திரு. வி. கார்த்திகேயன் அவர்களும் இதில் சிறந்த ஆர்வம் காட்டினார். ஒரு கூட்டம் கூட்டி, அதில் இதை விவாதித்தோம். முடிவில் திரு. சா. கணேசன் அவர்கள் சமர்ப்பித்த திட்டத்தை ஏற்று, உடனடியாகச் செயல்பட அரசு ஆணையிட்டது.

பத்து ஆண்டுகளில், தமிழகக் கல்வெட்டுகள் அச்சாக வேண்டும்; அதற்கான ஒரு சிறிய அச்சகம் தொல்பொருள் ஆய்வுத்துறையின் கீழ் அமைக்கப்பட வேண்டும்; மாவட்டம் மாவட்டமாகக் கல்வெட்டுகளை ஆய்ந்து, எழுதி அச்சிடப்பட வேண்டும் என்பதே இவர் திட்டம். பணநெருக்கடி இருந்தபோதிலும், அரசு இத்திட்டத்தை அனுமதித்து, வேண்டிய தொகையை ஒதுக்கியது.

தமிழகக் கல்வெட்டுகளை அச்சிட வேண்டும் என்று அவர் கொண்டுவந்த திட்டம் மிகவும் போற்றத்தக்கது. அதன் பயனாகத் தமிழக வரலாறு குறை நீக்கப்பட்டு நல்ல முறையில் எழுதப்படும் என்று திடமாகக் கூறலாம். தமிழக வரலாற்றை நெறிப்பட எழுத அடிகோலிய பெரியவர் என்று அவரை வருங்காலத் தமிழ்ச் சமூகம் போற்றத்தான் போகிறது. வரலாற்று ஆசிரியர்கள் அவர்களின் தொண்டை எடுத்துக் கூறாமல் இருக்கமாட்டார்கள் என்பது திண்ணம்.

கல்வெட்டுகளில் மட்டுமல்ல, அச்சிடும் துறையிலும் அவருக்குச் சிறந்த அனுபவம் உண்டு. அச்சகங்களை ஆய்ந்து, அச்சுகளைத் தேர்ந்தெடுப்பது முதலியவற்றிலும் அவர் சிறந்த அனுபவம் பெற்றவர். சாதாரணமாக ஒரு அச்சகத்தை அமைப்பது எளிதாக இருக்கலாம். ஆனால், கல்வெட்டுகளைப் பதிப்பிப்பது அவ்வளவு எளிதல்ல.

தொல்பொருள்துறையில் ஒரு அச்சகம் ஏற்பட்டபோது, திரு. சா. கணேசன் அவர்கள் தாம் பலவகைகளிலும் கருத்துரைகளை நல்கி அது அமைக்கவும் இயங்கவும் உதவினார்கள். அவர்களுடைய உதவியின் றேல் இவ்வளவு எளிதில் அச்சகம் அமைத்திருப்பது கடினம். இந்திய நாடு முழுவதிலும் பல மாநில அரசுகளிலும் தொல்பொருள் துறைகள் இருக்கின்றன. இருப்பினும், நூல்களை அச்சிடுவதற்கு எந்த மாநிலத் தொல்பொருள் துறையிடத்திலும் அச்சகம் இல்லை. ஏன், மத்திய அரசுத் தொல்பொருள் துறைக்கே இதுவரை அச்சகம் இல்லை. அது தமிழகத்திற்கே உள்ள தனிப் பெருமை. அப்பெருமைக்குக் காரணம், திரு. சா. கணேசன் அவர்களே.

ஒருமுறை நானும் திரு. சா. கணேசன் அவர்களும், கல்வெட்டு களைப் படிக்கவேண்டும் என்று வந்தவாசிக்குச் சென்றோம். செல்லும் போது, வழியில் வல்லம், மாமண்டூர் முதலிய இடங்களில் மகேந்திர வர்மனின் கல்வெட்டுகளைப் பார்த்துக்கொண்டு சென்றோம். வல்லம் குகையில், மகேந்திரனின் கல்வெட்டில் 'ம' என்ற எழுத்துப் பொறிக்கப் பட்டிருந்த விதம் எங்களைப் பெரிதும் கவர்ந்தது. பண்டைய 'ம'விலிருந்து இன்றைய 'ம' எவ்வாறு தோன்றியது என்பதைப் புரிந்துகொள்வது கடினம். அங்குள்ள எழுத்துத்தான் அதை நன்கு எடுத்துக்காட்டுகிறது. அன்று நாங்கள் பெரும் மகிழ்ச்சி கொண்டோம்.

அதற்கடுத்த நாள் வந்தவாசியிலிருந்து வெடால் என்ற இடத்துக்குச் செல்லக் கிளம்பினோம். வழியில் சாத்தமங்கலம் என்ற ஓர் ஊர் வந்தது. திரு. சா. கணேசன் அவர்கள், ''இது சமணத் தொடர்புடைய ஊர் போலிருக்கிறது. இங்கு ஏதாவது கல்வெட்டிருக்கிறதா என்று பார்க்கலாமே,'' என்றார்கள். எங்களுடன் திரு. ஸ்ரீ பாலும் வந்திருந் தார்கள். அங்குள்ளவர்களை விசாரித்தோம். அவர்களுக்கு ஏதும் தெரியவில்லை. ''போய்ப் பார்த்துவிட்டுத்தான் வருவோமா?'' என்று சா. கணேசன் அவர்கள் கூறவே, வண்டிகள் அப்பக்கம் திரும்பின. நெடுஞ்சாலையிலிருந்து இரண்டு கல் உள்ளே செல்ல வேண்டும். பாதைகூட நல்ல பாதை அல்ல. ஊருக்குச் சென்றோம். ஏதும் கண்ணில் படவில்லை. ஊரின் பின்புறம் ஒரு பாறை. அதில் ஏறிப் பார்த்தேன். ''சார், இங்கு வாருங்கள்,'' என்று குரல் கொடுத்தேன். ''என்ன, ஏதாவது கல்வெட்டுகளைக் கண்டீர்களா?'' என்று கேட்டார்கள். ஒன்பதுக்கு மேற்பட்ட பண்டைய கல்வெட்டுகள் - நந்திவர்மபல்லவன் காலம் (கி.பி.

785) முதல் முதல் இராஜராஜன் (கி.பி. 1010) காலம்வரை உள்ள கல்வெட்டுகள் ஒரு சமணப்பள்ளிக்குக் கொடுத்தவை அங்குப் பாறையில் பொறிக்கப்பட்டிருந்தன. திரு. சா. கணேசன் அவர்கள் சொல்லாவிட்டால் அங்குச் சென்றிருக்கமாட்டோம். நான் கல்வெட்டு களை வாசித்தேன். திரு. சா. கணேசன் அவர்கள் எழுதிக்கொண்டே வந்தார். அவற்றில் பல சொற்களுக்கு எனக்குப் பொருள் விளங்க வில்லை. அவை இலக்கியங்களிலும் அதிகம் கையாளப்படுபவை அல்ல. கல்வெட்டாய்வாளர்கள் அவற்றிற்குப் பொருள் எளிதில் சொல்ல முடியாது என்பது என் நம்பிக்கை. ஆயினும், திரு. சா. கணேசன் அவர்கள், அச்சொற்களுக்கு அவ்வப்போது உடனடியாகப் பொருள் எடுத்துக்கூறி வந்தது, அங்கிருந்த அனைவரையும் வியப்பில் ஆழ்த்தியது. தமிழகக் கல்வெட்டுகளில் பொருள் தெளிவாகத் தெரியாத பகுதிகள் பலபல உள்ளன. அவற்றைத் தெளியவைக்கக் கூடிய ஒரே ஒரு அறிஞர். திரு. சா. கணேசன் அவர்கள்தாம் என்று நான் திடமாக நம்புகிறேன்.

தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுப் பாதுகாப்பு மசோதா 1966-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள், சட்டமன்றத்தில் விவாதத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. மிகவும் குறுகிய காலத்தில் சட்டமன்றத்தில் கொண்டுவரப்பட்டது. முதலமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் அவர்கள் மசோதாவைப் பிரேரேபித்தார். போதிய காலம் கொடுக்கப்படாததால், இம்மசோதாவை அன்று எடுத்துக்கொள்ள வேண்டாம் என்றும், பின்னர் எடுத்துக்கொள்ளலாம் என்றும், எதிர்க்கட்சியில் இருந்த சில உறுப்பினர்கள் கருத்துத் தெரிவித்தனர். திரு. சா. கணேசன் அவர்கள் உடனே அன்று எதிர்க்கட்சித் தலைவராக விளங்கிய நாவலர் இரா. நெடுஞ்செழியனிடம் கலந்து பேசினார்கள். நாவலர் அவர்களுக்குத் தொல்பொருள் ஆய்வில் உள்ள ஈடுபாடும், வரலாற்றில் உள்ள ஆர்வமும் தமிழுலகம் நன்கு அறிந்ததே. எனவே, போதிய அவகாசம் கொடுக்கப்படாதது அவ்வளவு உகந்தது அல்ல எனினும், இம்மசோதா தமிழ் வரலாற்றுக்கு அடிகோலியதாகும். ஆனதால், இதை விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளலாம் என்றும் விருப்பம் தெரிவித்தார். இம்மசோதாவுக்காக அனுமதிக்கப்பட்டிருந்த நேரம் சுமார் ஒரு மணி நேரமாகும். முதலில் சா. கணேசன் அவர்கள்தான் எழுந்து பல்வேறு அமிசங்களைப்பற்றிப் பேசினார்கள். அவருடைய அன்றைய பேச்சு,

அன்னாருக்கு வரலாற்றிலும், கல்வெட்டுகளிலும் உள்ள ஈடுபாட்டை மட்டும் அல்ல, ஆழ்ந்த அறிவையும் அனுபவத்தையும் எடுத்துக் காட்டிற்று. செஞ்சிக்கு அருகில் திருநாதர்குன்றில் உள்ள சமணர் கல்வெட்டையும், திருவாதவூர் அறச்சாலையூர் (அறச்சலூர்) முதலிய இடங்களில் உள்ள பண்டைய கல்வெட்டுகளைப்பற்றியும் எடுத்துக் கூறி, அவை இன்றுள்ள நிலையையும், அவற்றைக் காக்கவேண்டிய அவசியத்தையும் தெளிவாக எடுத்துப் பேசினார்கள். பனமலைக் குகையில் உள்ள கல்வெட்டையும், வாயலூரில் வரலாறு கூறும் பல்லவர் கல்வெட்டையும் எடுத்து விவரித்தார்கள். திருவல்லிக்கேணி பார்த்த சாரதி ஆலயத்தில் காலால் மிதிபட்டு, அடைபட்டு அழிந்துபோகும் நந்திவர்மனின் கல்வெட்டின் நிலையைக் கேட்பார் நெஞ்சுருகும்படி வரலாற்றுக்கு ஏற்பட்ட அவல நிலையையும், அது காக்கப்பட வேண்டிய அவசியத்தையும் வற்புறுத்தினார்கள். தமிழக அரசுத் தொல்பொருள் ஆய்வுத்துறையின்கீழ்க் கல்வெட்டு ஆய்வுப்பிரிவை விஸ்தரிக்க வேண்டியதையும், விஞ்ஞானரீதியில் ஆராய உயர்ந்த கருவிகள் பெறவேண்டிய அவசியத்தையும் எடுத்துரைத்தார். அன்று அவருடைய பேச்சு மிகவும் சிறப்பாக அமைந்திருந்தது. அதில் ஏற்பட்ட வேகம், ஒரு மணி நேரம் மட்டும் அனுமதிக்கப்பட்டிருந்த மசோதா ஒரு நாள் முழுவதும் சபையின் கவனத்தைக் கவர்ந்தது. இதை ஆதரித்துப் பலர் பேசினர். அன்று எதிர்க்கட்சித் தலைவராக விளங்கிய நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள், மேலை நாடுகளில் இத்துறையில் காணப்படும் ஈடுபாட்டையும், நாம் செய்யவேண்டிய பணிகளையும், மக்களை ஈர்க்க, நவீன முறைகளைக் கடைப்பிடிக்க வேண்டிய அவசியத்தையும் எடுத்துரைத்ததோடு, இம்மசோதாவைக் கொண்டு வந்ததற்காக திரு. எம். பக்தவத்சலம் அவர்களைப் போற்றினார்கள். பக்தவத்சலம் அவர்கள் சபையில் எல்லோரும் போற்றிய மசோதாவை நிறைவேற்றினார்கள். அன்று அவை கலைந்து வெளியே வரும்போது, ''இது சா. கணேசன் மசோதா,'' என்று கூறியது என் காதில் வீழ்ந்தது. தமிழகத் தொல்பொருள் ஆய்வுத்துறை மசோதா நிறைவேறியது அவர்களின் அருமுயற்சியால் எனில் அது மிகையாகாது.



# கணேசனும் கலைக் காட்சியும்

**- இரா. முத்துக்குமாரசாமி**

கலைச்செல்வர் திரு. சா. கணேசன் அவர்கள் பல்கலை வல்லுநர். சிறந்த பண்பாளர். திண்ணிய மனத்தினர். எண்ணிய எண்ணியாங்கு செய்து முடிக்கும் செயல் மறவர். தமிழ் மொழி, இலக்கியம், தமிழர் கலை, கல்வெட்டு, அரசியல் போன்ற பல துறைகளிலும் பேரீடுபாடு கொண்டவர். அரிய தமிழ் நூல்களைத் தொகுத்தல், நூல்களை அழகுறப் பதிப்பித்தல், கோயில்களுக்குக் குடமுழுக்குச் செய்தல் போன்றவற்றிலும் ஆர்வம் காட்டுபவர். தம்மைப் பற்றி விளம்பரம் செய்து கொள்ளாதவர். தந்நடக்கமுடையவர். இத்தகு சிறந்த பண்புகளைக் கொண்ட இப்பெரியாரைப்பற்றி நன்கு தெரிந்து கொள்ள வேண்டுமாயின் இவருடன் நெருங்கிப் பழகினால்தான் முடியும். அத்தகையதோர் அரிய வாய்ப்பு 1968-இல் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டையொட்டி எனக்குக் கிடைத்தது.

மிகச் சீரோடும் சிறப்போடும் நடத்தப் பெற்ற உலகத் தமிழ் மாநாட்டையொட்டிக் கலைக்காட்சி ஒன்றும் மாநாட்டு அமைப் பாளர்களால் அமைக்கப்பெற்றது. அக்கலைக்காட்சிக் குழுவின் தலைவராக திரு. சா. கணேசன் பொறுப்பேற்றுச் சிறந்த தொண்டாற் றினார். அக்குழுவின் செயலாளர்களுள் ஒருவனாக நானும் பணியாற்றினேன். மூன்று மாதங்களுக்கு மேல் நாங்கள் ஒன்றாக இணைந்து பணியாற்றினோம். அதற்கு முன் அவர் காரைக்குடிக் கம்பன் என்றும் அரசியல் தலைவர் என்றுமே எனக்குத் தெரியும். விழா முடிந்த பின், அவர் நினைத்ததைச் செய்து முடிக்குமாற்றல் பெற்றவரென்றும், எதையுமே செம்மையாகச் செய்யும் திறன் மிக்கவர் என்பதும் புலனாயிற்று.

இக்கலைக்காட்சி அவர் தலைமையில் மிகச் சிறப்பாக அமைந்தது. பல்வேறு துறைகளில் சிறந்து விளங்கிய அறிஞர் பலரையும் உறுப்பினர் களாகக் கொண்ட கலைக்காட்சிக் குழுவிற்குத் தலைவரான திரு. கணேசன், அனைவரையும் தழுவிச்சென்று, கருத்து வேறுபாட்டுக்கு இடங்கொடாது, தம் தலைமைப் பொறுப்பை நடத்தினார். காட்சியை அமைத்து, அதில் கடைசிவரை பணியாற்றிய தொண்டர்களையும் அவர் அரவணைத்துச் சென்றார். மொத்தத்தில், காட்சி சிறந்து விளங்க, அவர்தம் தழுவிச் செல்லும் மனப்பான்மை மிகவும் துணை செய்தது. அதற்காக அவர் பிறர் கூறிய கருத்துகளனைத்தையும் ஏற்றுக் கொண்டாரென்று கூறமுடியாது. சில விஷயங்களில் அவர் கடைசிவரை தாம் நினைத்ததையே நிறைவேற்றினார். குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால், காட்சியின் நுழைவுக் கட்டணத்தை ஒரு ரூபாயிலிருந்து எட்டணாவாகக் குறைக்க வேண்டுமென்று யார் யாரோ கூறியும் அதை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்.

அவர் மிகக் கண்டிப்பானவர். காட்சிக்குள் இலவசமாக யாரும் நுழைய அனுமதிக்கவில்லை. அவர்தம் மனைவியாரும் உறவினரும் வந்த பொழுதுகூட, அவர்களும் காசு கொடுத்தே நுழைவுச் சீட்டை வாங்கிச் சென்றனர். உடலில் ஒரு பாகமாகிய உமையம்மையாருக்கே இந்நிலையென்றால், பிறர் நிலைபற்றிக் கேட்கவா வேண்டும்.

காட்சி சிறப்பாக அமைய மூன்று மாதங்களுக்குமேல் கண் துஞ்சாது, வேளைக்கு உணவருந்தாது, பேருண்டி அருந்த வேண்டிய நேரங்களில் சிற்றுண்டியையும், சிற்றுண்டி நேரத்தில் தேநீரையும் உண்டு, மெய்வருத்தம் பாராது உழைத்தார். ஊரைவிட்டு வந்தவர், எத்தனையோ சொந்த வேலைகளையும் உறவினர் சடங்குகளையும் ஒதுக்கிவிட்டுக் காட்சி முடிந்த பின்னர்தான் சொந்த ஊருக்குத் திரும்பினார்.

இவ்வளவு அரும்பாடுபட்டு அவர் அமைத்த கலைக்காட்சி எவ்வளவு சிறப்பாக இருந்திருக்கும் என்பதை நேரில் கண்டவர்கள்தாம் அறிவர். மேனாட்டறிஞரான எச்.ஜி. வெல்ஸ் கற்பனையில் கண்ட காலத்தேரை அவர் நேரிலேயே கொண்டு வந்துவிட்டார். கலைக்காட்சி நடைபெற்ற நாள்களில், அது நடைபெற்ற பல்கலைக் கழகத் தேர்வு மண்டபத்திற்குள் நுழைந்தவர்கள், காலத்தேரில் ஏறியவர்களுக்கு

ஒப்பானவர்கள். அவர்கள், காலத்தால் முன்னால் சென்றனர்; இடத்தால் பலவிடங்களுக்குச் சென்றனர். கல்தோன்றி மண்தோன்றாக் காலத்துக் கருவிகள், முதுமக்கட் சாடிகள், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் தமிழர்கள் வாழ்ந்த ஐந்திணை வாழ்க்கை முறை, சிலப் பதிகாரக் காலத்துப் பூம்புகார், சேரன் செங்குட்டுவன் வடித்த கண்ணகியின் திருவுரு, மாமல்லன் கண்ட சிற்பங்கள், இடைக்கால மன்னர்கள் கையாண்ட போர்க்கருவிகள் போன்ற தமிழனின் நீண்டகால வரலாற்றை விளக்கும் அத்தனை பொருள்களையும் அவர் ஒரே இடத்தில் கொண்டுவந்து சேர்த்தார்.

அவ்வாறே இடத்தால் பலவிடங்களுக்கும் செல்ல முடிந்தது. ஒரே மண்டபத்தில் நாகர்கோயில், திருவண்ணாமலை, சென்னை முதலிய இடங்களிலிருந்து வந்த தேர்களும் அவற்றின் உறுப்புகளும்; மதுரை, இராமேசுவரம், அழகர் கோயில் முதலிய இடங்களிலிருந்து வந்து நவமணி இழைத்த நகைகள்; பிள்ளையார்பட்டி, சிக்கல், மயிலை போன்ற இடங்களிலிருந்து தருவிக்கப்பெற்ற வாகனங்கள்-இவ்வாறு இடத்தாலும் கிழக்கும் மேற்கும் தெற்கும் வடக்குமாகச் செல்ல முடிந்தது.

கலைக்காட்சியைப் பல பகுதிகளாகப் பிரிக்கலாம். தொல்பொருள் பகுதி, ஓவியப்பகுதி, சிற்பங்கள், செப்புப் படிமங்கள் பகுதி, வரலாற்றுச் சிறப்புடைய பொருள்கள், தந்தக் கைவேலைப்பாடு மிக்க பொருள்கள் பகுதி, அரிய நூல்கள் பகுதி, பல்வகை இன்னிசைக் கருவிகள் பகுதி, பழங்கால நாணயங்கள், அரிய நவமணிகளாலான அணிகலன்கள் பகுதி, புகைப்படங்கள் பகுதி, பூம்புகார் மாதிரி அமைப்பு, ஐந்திணை மாதிரி அமைப்பு, தேர் வாகனங்கள் பகுதி முதலிய பகுதிகள் ஒருங்கு சேர்ந்து பார்ப்பவர் கருத்தைக் கவரும் வகையில் அமைந்திருந்தன.

தொல்பொருட்பகுதியில் பழைய கற்காலம், புதிய கற்காலம் முதற்கொண்டு சங்க காலத்திற்கு முன் வரை வாழ்ந்த தமிழர்களின் வாழ்க்கை முறை விளக்கப்பட்டிருந்தது. அவர்கள் கையாண்ட பொருள்களும் அதில் இடம் பெற்றிருந்தன. அப்பகுதியில் பழமைக்கும் புதுமைக்கும் பாலமாய் இடையில் வாழ்ந்த கண்ணகி தேவியார், குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்புமாய்ச் சிலையாய் நின்று கலைக்காட்சியை அழகு செய்து கொண்டிருந்தாள். அச்சிலை தான், அண்மையில் பூம்புகார் நகரில் அக்கற்புடைத் தெய்வத்திற்கு

எடுக்கப்பட்ட கோயிலில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழகப் பழங்குடி மக்களின் வாழ்க்கை முறையை, அவர்களுடன் நீண்டகாலமாக நெருங்கிப் பழகி ஆராய்ந்துவரும் மானிடஇயல் அறிஞர் திரு. பிலோ இருதயநாத், அவ்விடத்தில் பழங்குடி மக்களின் பொருள்களையே கொண்டுவந்து வைத்து விளக்கினார்.

அடுத்த பகுதி ஓவியப்பகுதி. மன்னனொருவனின் தேர், மலர்கள் நிறைந்த காட்டுப் பகுதியில் வேகமாகச் செல்கின்றது. அத்தேரின் கண் தொங்கிவிடப்பட்டிருக்கும் மணிகள், தேரின் வேகத்தால் பலத்த ஒலியை எழுப்புகின்றன. அவ்வொலி கேட்டு, மலர்களில் தேனுண்ணும் வண்டினங்கள் திடுக்கிட்டுப் பறந்து திரிகின்றன. மணியொலி, அவை தேனுண்பதற்கு இடையூறாக அமைந்திருப்பது கண்டு, மன்னன் இரங்கித் தேரிலுள்ள ஒவ்வொரு மணியிலும் அதன் நாவை ஒலிக்காதபடி இறுகக் கட்டி, 'மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்' ஆகின்றான். இப்படியொரு காட்சி.

ஈங்கோய் மலைச்சரிவு. வளம் பொருந்திய பகுதி. மரத்தின்மேல் முதுமந்தியொன்று தன் குட்டிக்குத் தேனுண்ணக் கொடுக்க முயல் கின்றது. தேன் கூட்டினுள் ஒடித்த மரக்கிளையைப் பாய்ச்சுகின்றது. கூட்டிலிருந்து ஒழுகும் தேனை இளமந்தி, வாழை இலையொன்றை அதற்கு நேராக நீட்டி ஏந்திப் பருகுகின்றது. 'கூழை முதுமந்தி கோல்கொண்டு தேன்பாய ஏழை இளமந்தி' தேன் பருகும் மலைவளத்தைக் காட்டும் காட்சி மற்றொன்று.

இவ்வாறாகத் தமிழர் வாழ்க்கை முறைக் காட்சிகள், வரலாற்றுக் காட்சிகள், பல்வேறு பருவ காலக் காட்சிகள் என்று, பல வண்ண வண்ண ஓவியங்கள் கண்ணைக் கவரும் வகையில், திரு. மீ.ப. சோமு அவர்களின் முயற்சியால் அமைக்கப் பெற்றிருந்தன. மணியம், மாதவன், வினு, சுபா, சித்ரலேகா, ராஜம் போன்ற தமிழ்நாட்டின் சிறந்த ஓவியர்கள் அவற்றை வரைந்திருந்தனர்.

வரலாற்றுப் பொருள்களின் பகுதியில், மூவேந்தர்கள், பிற்கால மன்னர்கள் ஆகியவர்களின் கொடிகள், இலச்சினைகள், மாலைகள், அவர்தம் போர்க்கருவிகள் முதலியவை காட்சியளித்தன. ஸ்ரீரங்கம், அழகர்கோயில் முதலிய கோயில்களிலிருந்து தருவிக்கப்பெற்ற

நுண்ணிய கைவேலைப்பாடமைந்த தந்தப் பொருள்கள் பார்த்தவரை வியக்கவைத்தன.

தமிழ் மொழி, இலக்கியம், வரலாறு போன்ற துறைகளில் எழுந்த தமிழ் - ஆங்கில அரிய நூல்களும் ஓலைச்சுவடிகளும் ஒரு பகுதியில் இடம் பெற்றிருந்தன. தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையத்திலிருந்தும், சென்னைக் கீழ்த்திசைக் கையெழுத்து ஏட்டுச்சுவடி நூல் நிலையத் திலிருந்தும் பல வகையான ஓலைச்சுவடிகளும் கையெழுத்துப் பிரதி களும் கொண்டுவரப்பட்டன. அடையாறு நூல் நிலையம், பிரிட்டிஷ் கௌன்சில், மறைமலையடிகள் நூல் நிலையம் போன்ற நூல் நிலையங் களிலிருந்தும் திரு. டி.என். ஜெயவேலு போன்ற தனிப்பட்டவர் களிடமிருந்தும் அரிய நூல்கள் தொகுக்கப்பெற்றுக் காட்சியில் வைக்கப் பெற்றன. இவையன்றித் தமிழக அரசுத் தமிழ் வெளியீட்டுக் கழகம், பிரெஞ்சு-இந்திய ஆராய்ச்சிக் கழகம் போன்ற பல பதிப்பகத்தார் அனுப்பிய ஆயிரத்துக்கு மேற்பட்ட புதிய வெளியீடுகள் தமிழ்நூற் பெருக்கை எடுத்துக்காட்டின.

தமிழர்கள் பல்வேறு காலங்களில் பயன்படுத்திய இசைக்கருவிகள், பேரியாழ் முதலிய ஐவகை யாழ்கள், சிற்பங்களிலிருந்து பார்த்துச் செய்யப்பட்ட இசைக்கருவிகள் முதலியவை தனிப்பகுதியாக அமைந்தன. பாட்டுப் பாடிக் கொண்டே அதன் இசைக்கேற்ப இருவர் இசைக்கோலம் வரைந்த காட்சி மேனாட்டாரையன்றி நம் நாட்டினரைக் கூடக் கவர்ந்தது எனலாம்.

கடைச்சங்க காலத்தைச் சார்ந்த கரிகாலனின் காசுகளும் ரோமன் காசுகளும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்குள் தமிழகத்தில் பழக்கத் திலிருந்த பல்வேறு காசுகளும், பல்வேறு கோயில்களிலிருந்தும் வந்த விலை மதிப்பிட முடியாத நகைகளும், 24 மணி நேரமும் காவல் துறையினரின் பாதுகாப்பிலேயே இருந்தன.

தமிழர் தம் கோயில் அமைப்புக் கலை படிப்படியாக எவ்வாறு வளர்ந்தது என்பதைப் புகைப்படங்கள் விளக்கின. 1800 ஆண்டுகளுக்கு முன் சீரோடும் சிறப்போடும் விளங்கிய புகார் நகரத்தின் மாதிரி அமைப்பு, அமைக்கப்பட்டிருந்த விதம் மக்களைக் கவர்ந்தது. வயது முதிர்ந்த அம்மையார் ஒருவர் காட்சியினுள் நுழைந்து, "இங்கே ஒரு மண்டபம் இருக்கிறதாமே, கண் தெரியாதவர்கள் அங்குப் போனால்

கண் தெரிந்துவிடுமாமே! அது எங்கேயிருக்கிறது?'' என்று கேட்டார். 'அதைப் போன்ற மண்டபம் ஒன்றும் காட்சியில் இல்லையே. இருந்தால் கலைக்காட்சிக்குள் நுழைய முடியுமா? தமிழக மக்கள் அனைவருமே ஒன்று திரண்டு வந்துவிடமாட்டார்களா? இருபதாம் நூற்றாண்டில் இது பெரிய அதிசயமாயிற்றே!' என்று எல்லோருக்கும் தோன்றிற்று. ''அப்படியொன்றும் இங்கே மண்டபம் இல்லையே, அம்மா!'' என்றும் சொல்லியும் அவர், ''இல்லை. இங்கேயிருக்கிறதாம், பார்த்தவர்கள் சொன்னார்கள்,'' என்று மீண்டும் கூறினார். பல்கலைக் கழகத் தேர்வு மண்டபம், சாரணர் மண்டபம் தவிர, அங்கு வேறு மண்டபம் இல்லையே என்று குழம்பிக் கொண்டிருந்த பொழுது, பூம்புகார் மாதிரி அமைப்பில் இருந்த பாவை மண்டபத்தின் சிறு மாதிரி அமைப்பு நினைவுக்கு வந்தது. உடனே அவ்வம்மையாரை அப்பகுதிக்கு அழைத்துச் சென்றோம். இவ்வாறு அப்பூம்புகார் மாதிரி அமைப்பின் புகழ், வெகுவாகப் பரவியிருந்தது.

இவ்வளவு அரிய வகையில் அமைக்கப் பெற்ற கலைக்காட்சியை உருவாக்க திரு. கணேசன் எவ்வளவு பாடுபட்டார் என்பது தெரிய வேண்டாமா? தமிழர்தம் நுண்ணிய கைவேலைப்பாடுகள் மிகுந்த சிற்பங்கள், நகைகள் முதலியவற்றைப் பல ஊர்கட்கு அவரே நேரில் சென்று தேர்ந்தெடுத்துக் கொண்டுவந்து சேர்த்தார். கோயில் நகைகளை, விலை மதிக்கவும் ஈடுசெய்யவும் முடியாத அரிய கருவூலங்களை, அவர் துணிவோடு இடம் விட்டு இடம் கொண்டுவந்ததைப் பலர் பாராட்டினர். மேனாட்டறிஞர்கள் அவற்றைக் கண்டு வியந்தனர். பிரெஞ்சு நாட்டுப் பேரறிஞர் ஒருவர், இரண்டு நாள்கள் செலவிட்டு அவற்றைப் புகைப்படமாக்கினார்.

கலைக்காட்சி அலுவலக அமைப்பு, மண்டப அலங்காரம், பற்று வரவு செய்தல்-எல்லாவற்றிலும் திரு. கணேசன், தாம் அவற்றிற்கே பிறந்தவர் என்பதுபோலச் செம்மையுறச் செய்தார். கலைக்காட்சியைக் கண்ட பல்லாயிரக்கணக்கான மக்கள், அவர்தம் தொண்டைப் பாராட்டினர். தமிழக முதலமைச்சர் மாண்புமிகு அறிஞர் அண்ணாதுரை முதல் பிற அமைச்சர்கள் உட்பட அனைவருமே மணிவிழாத் தலைவரின் சீரிய பணியைப் போற்றிப் பாராட்டினர். இத்தனை பெரிய கலைக் காட்சியைக் அமைக்க ஒரு மாத காலமே அவருக்குக்

கொடுக்கப்பட்டிருந்தும்கூட, அக்குறுகிய காலத்திலே அவர் பெரிய அளவில் காட்சியை அமைத்து இக்கால மயன் ஆனார்.

காட்சியளவான் பெரியதொரு கலைக் காட்சியை அமைத்த அவர், கையளவான ஏடு ஒன்றையும் தொகுத்துத் தமிழர்கட்கு என்றென்றும் பயன்படக்கூடிய நிலையான பணியையும் செய்தார். முப்பது நாற்பது பேர் கூடி, நூற்றுக் கணக்கான கருத்துகளைப் பரிமாறிக்கொண்டு, மலர் ஒன்றை வெளியிடும் நிலையில், தாம் ஒருவரேயாய் ஓரிருவரைத் துணைக்கு வைத்துக் கொண்டு அழியாத கலைக்களஞ்சியமான 'கையேடு' ஒன்றை நமக்கு அளித்தார். கட்டுரை என்ற பெயரால், ஏதோ பெயர் பெற்றவர்களை மகிழ்விக்க எண்ணிப் பயனற்ற சொல் தொகுப்பை வெளியிடாது, கையேட்டில் என்னென்ன பொருள்கள் பற்றிக் கட்டுரை இருக்க வேண்டுமென்று முதலில் பொருள்களை வரையறுத்துக் கொண்டு, அதன்பின் அவற்றைச் சுருக்கமாக விரைவாக, திறமையாக யார் எழுதித் தருவார்கள் என்று பார்த்து, அவர்களிடம் கேட்டு, மிகக் குறுகிய காலத்தில் 'கையேடு' என்ற பெயரில் கைக்குள்ளடங்கும் பக்க அளவோடு வெளியிட்ட பெருமை திரு. கணேசனையே சாரும்.

கையேட்டைத் தயாரிப்பதில்தான் எவ்வளவு கவனம்! அது இன்ன பாயின்ட் அச்சால் கோக்கப்பெற வேண்டும், இன்ன தாளில் அச்சிட வேண்டும் என்பதிலிருந்து, கடைசியில் கட்டடம் இவ்வாறு, முகப்பில் ஏடேந்திய கையின் படத்தோடு அமைய வேண்டுமென்பது வரை, ஒவ்வொரு கட்டத்திலும் தனிக் கவனம் செலுத்தி, அதைப்போன்ற நூல் அதற்கு முன் வந்ததில்லை என்று கூறும் வகையில் நூல் அமைத்தார்.

இவ்வாறு அவர் தம் பண்பும் பணியும் எழுத எழுதப் பெருகும். விரிக்க விரிக்க, அகலும். நீட்ட நீட்ட, வளரும். இத்தகு சிறப்புறு பணியைச் செய்து, தமிழர் தம் மனத்தில் நீங்காத இடத்தைப் பிடித்துக்கொண்டார், கலைச்செல்வர் திரு. சா. கணேசன்.



# கம்பனின் காவியத்தைத் தவம் செய்து காத்தவர்

**- தவத்திரு குன்றக்குடி அடிகளார்**

"என்றுமுள தென்தமிழ் இயம்பி இசை கொண்டவன்" கவிச் சக்கரவர்த்தி கம்பன். கம்பன் முற்போக்கு அணியைச் சார்ந்த கவிஞனே! கம்பனின் காவிய நாடு, அயோத்தி, கம்பனின் இதயத்தை அலங்கரித்த நாடு, தமிழ்நாடு. கம்பனின் எல்லை, உலகம்! கம்பன் காலூன்றி நின்றது, தமிழகத்தில்! கம்பன் பாடியது இரண்டு பேரரசுகளை! ஆனால், கம்பனின் இலக்கு, உடையாரும் இல்லை; இல்லாரும் இல்லை என்ற சமுதாயம் காண்பதேயாகும். கம்பன் தான் கண்ட நாட்டைப் பாடினான். இனிய மன்பதை உலகம் காணவேண்டிய நாட்டையும் பாடினான்! கம்பனின் பாடல்,

**"கள்வார் இலாமைப் பொருள்**
**காவலும் இல்லை; யாதும்**
**கொள்வார் இலாமைக் கொடுப்பார்களும்**
**இல்லை மாதோ"**

என்பது.

இந்தப் பாடலைப்பற்றியதும் சமுதாய மாற்றங்களை மையமாகக் கொண்டதுமான கலந்துரையாடல் ஒன்று 1954-இல் நடந்தது. இக்கலந் துரையாடலில் தமிழகத்தின் ஆதீனகர்த்தர் ஒருவர் பங்குகொண்டு சிறப்பித்தார்கள். ஆதீனகர்த்தரவர்களுக்குப் பழைய மரபுகளில் இறுக்கமான பிடிப்பு. நெகிழ்ந்து கொடுக்கமாட்டார். கலந்துரையாடலில் சாதி வேற்றுமைகள், பொருளியல் வேற்றுமைகள் பற்றிய விவாதம் நடைபெற்றது. உலகில், கடவுள் மறுப்பு இயக்கங்கள் இவ்விரண்டு

வேற்றுமைகளின் அடிப்படையில்தான் தோன்றி வளர்ந்து வருகின்றன. ஆதீனகர்த்தரவர்கள், இவ்வேற்றுமைகள் ஊழின் வழியில் அமைந் தவை; இவற்றை மாற்றுவதோ, மாற்ற நினைப்பதோ சமய மரபன்று என்று வாதிட்டார்.

கம்பன் அடிப்பொடி அவர்களுக்குச் சாதி வேற்றுமைகள் - பொருளாதார வேற்றுமைகள் நீங்க வேண்டும் என்ற ஆர்வம் உண்டு; அதே போழ்து, ஊழிலும் நம்பிக்கை உண்டு. ஆனால், கம்பன் அடிப்பொடி அவர்களின் ஊழினைப்பற்றிய இக்கருத்து, அறிவுடனும் படிப்பினைகளுடனும் இயைபுடையது. முரட்டுத்தனமான நம்பிக்கை அல்ல. இதனை விளக்கக் கம்பன் அடிப்பொடி அவர்கள் ஓர் உரையே நிகழ்த்தினார். ஆதீன கர்த்தரவர்கள் எளிதில் உடன்படவில்லை. கம்பன் அடிப்பொடி அவர்கள், அறிவு - கருத்து அடிப்படையில் விவாதிப்பதில் வல்லவர்; விவாதத்தின் போக்கு மகிழ்வாக அமையக்கூடியதாகவும் அமைத்துக்கொள்வார். விவாதத்தில் கலந்து கொள்வோர் கருத்துகளை வாங்கிக்கொள்ளாமல் - சிந்திக்காமல், முரட்டுத்தனமாக - பிடிவாதமாக விவாதித்துக் கொண்டிருந்தால் கம்பன் அடிப்பொடி அவர்களுக்குக் கோபம் வந்துவிடும். கோபம் வந்துவிட்டால் நகைச்சுவை ததும்பும் வகையில் கொச்சையான வினாக்களைத் தொடுக்க ஆரம்பித்து விடுவார். ஆதீனகர்த்தரவர்கள் ஊழின் பிடியிலிருந்து மீளவே இல்லை. கம்பன் அடிப்பொடி அவர்கள், ''ஊழினைக் கண்டு கொள்வதற்குத் துணையாய் அமைவன காரணங்களே தவிரக் காரியங்கள் அல்ல!'' என்றார். ''தீண்டாமைக்குரிய நிலையில் ஆசாரம் இல்லாமல் இருப்பது ஊழின் காரணமல்ல. முறையான உழைப்பு இல்லாமல் இருப்பது வறுமைக்குக் காரணமாக இருக்கலாம். இவை இரண்டுக்கும் காரணம், ஊழ் அல்ல; செயலின்மையேயாம். ஆதலால், ஊழின் காரணமாகத் தோன்றியவையல்ல தீண்டாமையும் வறுமையும்,'' என்று வலியுறுத் தினார்.

ஆதீனகர்த்தரவர்கள் ஊழின் பக்கமே சார்ந்து நின்று வழக் காடினார்கள். கம்பன் அடிப்பொடி அவர்களுக்குக் கோபம் வந்து விட்டது. ''7° கிளாக் பிளேடைக்கொண்டு முகத்தை மழித்துக்கொள்வது என்பதும் ஊழ்தானா?'' என்று வினாத் தொடுத்தார். உடன், அவையில் சிரிப்பு! வெகுளி! பின் அமைதி தழுவிய சூழ்நிலை தோன்றி நிலவியது!

ஆதலால், கம்பன் அடிப்பொடி அவர்கள் எப்போதும் சமுதாயத் தையே சார்ந்து இருந்தார். அவருடைய ஈடுபாடு சாதாரண மக்களைப் பற்றியதாக இருந்தது. கம்பனின் படைப்புகளில் குகன், அனுமன், கும்பகருணன், திரிசடை ஆகிய பாத்திரங்கள் கம்பன் அடிப்பொடி அவர்களுக்கு மிகவும் பிடித்தமானவை. இப்பாத்திரங்களின் குணாதி சயங்கள் கம்பன் அடிப்பொடி அவர்களின் வாழ்க்கையில் தாக்கங்களைச் செய்திருந்தன என்பதை அறிந்தவர் அறிய இயலும். அனுமனைப் போல நிரந்தினிது சொல்லுதல்-பேசுதல் கம்பன் அடிப்பொடி அவர்களுக்குக் கைவந்த கலை. இராமன்-குகன் நட்பை, உறவைக் கம்பன் அடிப்பொடி அவர்கள் நினைந்து நினைந்து பாராட்டுவார். அது போலவே, யார்மாட்டும் எளிதில் பழகுவார்; பழகிய நட்பைப் பேணுவார். சீதையைத் திரிசடை காப்பாற்றியதைப் போல் கம்பன் அடிப்பொடி அவர்கள் கம்பனின் புகழை கம்பனின் காவியத்தைத் தவம் செய்து காப்பாற்றினார். சீதையை இராமனின் மனைவி என்று இராவணன் வாயிலாகவே சொல்ல வைக்கிறான் கம்பன். அதுபோல, கம்பனை ஏற்காது மறுத்தவர்களைக் கம்பன் கழக மேடையில் ஏற்றிக் கம்பனைப் பாராட்டச் செய்த பெருமை கம்பன் அடிப்பொடிக்கு உண்டு. கும்பகருணன் அறத்தின் பக்கமும் நின்றான். அதேபோழ்து, நன்றியறிதல் உடையவனாகவும் விளங்கினான். இஃது ஒரு திட்பமான குணப்படைப்பு. கம்பன் அடிப்பொடி அவர்களுக்கு அறநெறி - அருள்நெறியில் அசைக்க முடியாத நம்பிக்கை உண்டு. ஆனாலும், அதே போழ்து இவற்றின் காரணமாக யாருக்கும் தீங்கு செய்யமாட்டார்; மற்றவர் செய்யவும் அனுமதிக்க மாட்டார்.

கம்பன் அடிப்பொடி அவர்கள் கம்பனை, அவனுடைய காவிய நலன்களை மட்டும் படிக்கவில்லை. கம்பனின் இலக்குகளும் கம்பன் அடிப்பொடி அவர்களுக்குப் பிடித்தமானவை. இராமனின் புகழ் பாடியும், இராவணனின் இகழ் மாற்றியும் கம்பன் புகழ் கொண்டான். கம்பன் அடிப்பொடி அவர்கள் கம்பனின் புகழ் பாடியும், "மானுடம் வென்றதம்மா!" என்று கம்பன் பாடிப் பரவிய மானுடத்தை வாழச் செய்தும் புகழ் பெற்றார்.

கம்பன் கண்ட நாடு உருவாக முயற்சி செய்வதே கம்பன் அடிப்பொடி அவர்களுக்குச் செய்யும் தொண்டு. கம்பன் அடிப்பொடி அவர்களின் தொண்டு நின்று நிலவுக!

# கம்பனுக்கு ஒரு பாஸ்வல்

**- அ.ச. ஞானசம்பந்தன்**

டாக்டர் ஜான்சன் என்ற ஆங்கிலேய அறிஞனுக்கு உற்ற நண்பனாக பாஸ்வல் என்ற அன்பர் ஒருவர் இருந்தார். டாக்டர் ஜான்சனின் வாழ்க்கையையும் அவருடைய எண்ண ஓட்டங்களையும் பாஸ்வல் எழுதி வைத்தார். பாஸ்வல் ஜான்சனுடன் ஒரே காலத்தில் கூடவே வாழ்ந்தார். ஒருவருடன் சமகாலத்தில் அவர்கூடவே வாழாமல், ஆயிரத்து நூறு ஆண்டுகள் கழித்து வாழும் ஒருவர் அவரைப் பற்றி, பாஸ்வலைப் போல எழுதவோ, பேசவோ முடியுமா? முடியும் என்று காட்டினார் இந்த இருபதாம் நூற்றாண்டில் நம்மிடையே வாழ்ந்த ஒரு பாஸ்வல்.

அன்று வாழ்ந்த அறிஞன் கவிச்சக்கரவர்த்தி கம்பநாடன். அவனுக்குப் பின் ஆயிரத்து நூறு ஆண்டுகள் கழித்து வாழ்ந்த பாஸ்வல் தான் 'கம்பன் அடிப்பொடி' என்று தம் பெயரை மாற்றிக் கொண்ட அன்பர் சா. கணேசன். நண்பர்களால் 'சா. க.' என்று அழைக்கப்பட்ட இவர் தம் வாழ்நாளில் பெரும் பகுதியைக் கம்பனுக்காகவே செலவழித்தார். காரைக்குடியில் கம்பன் கழகத்தைத் தோற்றுவித்துக் கம்பன் விழாவை ஆண்டுதோறும் நடத்தி வந்ததைப் பலரும் அறிவர். ஆனால், கதாகாலட்சேபத்துக்கு மட்டும் பயன்பட்டு வந்த கம்பனது இராமாயணத்தைப் புலவர்கள், அறிஞர்கள் மத்தியில் உலவ விட்டவர். சா.க.

கம்ப நாடனுடைய காலம் கி.பி. 11-ஆம் 12-ஆம் நூற்றாண்டு என்றுதான் புலவர் உலகம் நினைத்து வந்தது. திரு. வையாபுரிப் பிள்ளை, திரு. ஏ.சி. பால் நாடார் முதலியவர்களுடன் சேர்ந்து

ஆய்வுரை செய்து அவனுடைய காலம் கி.பி. 9-ம் நூற்றாண்டு என்று முடிவு கூறியவர் சா.க. அத்துடன் நில்லாமல் பங்குனி அத்த நாளில்தான் இராமகாதை அரங்கேறிற்று என்றும் கூறியவர் சா.க. கம்பநாடன் வெறும்கதை பொதி பாடல் இயற்றியவன் அல்லன் என்றும், அவன் அறியாத கலைகளோ அன்றைய விஞ்ஞான அறிவோ எதுவும் இல்லை என்றும் கண்டு கூறியவர் கம்பன் அடிப்பொடி 'அணுவினைச் சதகூறுஇட்ட கோணிலும் உளன்' என்ற பிரகலாதன் கூற்றை வைத்துக் கொண்டு கம்பன் கண்ட விஞ்ஞானம் பேசியவர்.

அவனுடைய கவிதையில் நுழைந்து மிகப்பெரிய ஆராய்ச்சிகள் செய்து அவற்றை எழுதியும் வைத்துள்ளார். கலிவிருத்தம் என்ற ஒரே வகைப் பாடலில் 40 விதமான சந்த அமைப்பைக் கவிச்சக்கரவர்த்தி பயன்படுத்தியுள்ளான் என்பதையும் கண்டு கூறினவர் அவர்தாம். இசைத்துறையில் பயிற்சி இல்லாதவராயினும் எத்தனை வகையான இசை வேறுபாடுகள் கம்பன் கவிதையில் உண்டு என்பதையும் ஆராய்ந்து எழுதி வைத்துள்ளார்.

கம்பன் பாடல்களை மட்டும் வைத்துக்கொண்டு ஒரு முழுநேர நாட்டியக் கச்சேரிக்கு ஏற்பாடு செய்து முதன் முதலில் அதனை அரங்கேற்றியவர் அவரேயாவார்.

ஆங்கில இலக்கிய மேடைகளில் மட்டுமே உலவி வந்த 'விவாத அரங்கை'ப் பட்டி மண்டபம் என்ற பெயருடன் தமிழ் இலக்கிய உலகில் முதன் முதலாகப் புகுத்திய பெருமை காரைக்குடிக் கம்பன் கழகத்துக்கே உண்டு. இன்று பட்டி தொட்டிகளிலெல்லாம் பட்டி மண்டபம் என்ற பெயரில் ஏதேதோ நடைபெறக் காண்கிறோம்.



# சாதனையாளர் கணேசன்

**- நா. மகாலிங்கம்**

**சா.** கணேசன் அவர்களை நினைக்கும் போதெல்லாம் அவருடைய எளிய தோற்றமே கண்முன்னால் வந்து நிற்கும். அவருடன் நெருங்கிப் பழகியவர்களுக்கோ, அமைதி நிறைந்த அவர் முகபாவத்தில் அன்போடு கூடிய ஒழுங்கும் கண்டிப்பும் இழையோடுவது புலப்படும்.

இடையிலே எளிய கதராடை; மேலுக்கோ சட்டை இல்லை. ஒரு சின்னத்துண்டுதான். அதுவும் மேலாடை என்று சொல்லும் அளவுக்குப் பெரிதில்லை. அன்று முதல் இன்றுவரை காந்திஜியை விடாது பின்பற்றி வருவோரில் இவரும் ஒருவர். அதேபோல், காந்திஜியின் மற்றொரு பண்பும் இவரிடம் உள்ளது. அதுதான், காலம் தவறாமை. அதிலே மிகவும் கண்டிப்பான மனிதர். பல ஆண்டுகளாகக் காரைக்குடியில் இவர் உருவாக்கி நடத்திவரும் கம்பர் விழாவில் ஒரு நிகழ்ச்சியாவது குறித்த நேரம் தவறி நடக்க முடியாது. காலை ஒன்பது மணிக்கு நிகழ்ச்சிகள் ஆரம்பம் என்று சொன்னால், யார் வருவதற்கு நேரமானாலும், ''கம்பன் வாழ்க! கன்னித் தமிழ் வாழ்க!'' என்ற முழக்கத்துடன் நிகழ்ச்சியை ஆரம்பித்துவிடுவார். காலம் தவறாமை என்ற ஒரு பண்பு ஒருவரிடம் அமைந்துவிட்டால் போதும், மற்றவை எல்லாம் தாமாகவே ஒருவருக்கு அமைவது எளிது.

அரசியலிலும் சரி, சமூகக் கண்ணோட்டத்திலும் சரி, தமக்கென்று 'சுதந்திரமான' திட்டவட்டமான கருத்துகள் கொண்டவர் இவர். அதனால்தான் சட்டசபையில் இவர் பேச்சு ஆணித்தரமாகவும் தெளிவாகவும் அமைந்திருக்கிறது. உருவான நல்ல யோசனைகளை அளிக்கும் சட்டசபை உறுப்பினர்களில் இவரும் ஒருவர்.

இதற்கேற்றபடியே இவர் பேச்சாற்றலும் வன்மையாகவும் வாதத்திறனுடன் கூடியதாகவும் இருக்கும்.

**''உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின்,**
**வாக்கினிலே ஒளிஉண் டாகும்''**

என்ற பாரதியின் பாட்டுக்கு இவருடைய பேச்சு ஓர் எடுத்துக்காட்டு. தமிழ் இலக்கியங்களில் - சிறப்பாகக் கம்பராமாயணத்தில் இவருக்குள்ள நல்ல பயிற்சி இவருடைய பேச்சுக்கு வன்மையும் வண்ணமும் ஊட்டு கின்றன. இவருடைய பேச்சாற்றல் பட்டிமண்டபங்களில் வாதாடும் பழக்கத்தால் ஏற்பட்டதா? அரசியலில் பல ஆண்டுகளாக ஈடுபட்டுப் பல கூட்டங்களில் பேசிய பழக்கத்தால் ஏற்பட்டதா என்பது சிந்திக்க வேண்டிய விஷயம். அதே சமயத்தில் இவர் பேச்சில் - சட்டப் பேரவையானாலும் இலக்கியப் பேரவையானாலும் - சுதி பிசகாது; அதாவது, தரம் சிறிதும் மாற்றுக் குறையாது. இளைய அரசியல்வாதிகள் இதைப் பின்பற்றுவது அவசியமாகும். ஆகவே, இலக்கியப் பேரவையையும் அரசியல் மேடையாக ஆக்கிவிடக் கூடாது என்பது இதனால் தானே விளங்கும்.

ஒரு முக்கியமான தொண்டை சா. கணேசன் அவர்கள் தமிழ்நாட்டிற்கு - ஏன் - தமிழ் கூறும் நல்லுலகத்திற்கே ஆற்றியிருக்கிறார். அதுதான் அவருடைய இலக்கியத் தொண்டு. காரைக்குடி கம்பர் கழகமானது இன்றைய தினம் தமிழ்நாட்டில் மிகவும் புகழ்பெற்றுவிட்டது. கம்பராமாயணத்திற்குக் கண்மூடித்தனமான ஓர் எதிர்ப்பு இருந்த காலத்தில், கம்பர் கழகத்தைத் தோற்றுவித்துக் கம்பன் கவியமுதத்தை வாரி வழங்கித் தமிழகமெங்கும் கன்னித்தமிழின் கவிச்சுவையினைப் புலப்படுத்தியவர், கணேசன். ரசிகமணி டி.கே.சி. அவர்கள் உருவாக்கிய இலக்கிய வட்டத்தை வளர்த்த செவிலித்தாய் கணேசன் என்றே சொல்லலாம். கவிதையானது அநுபவிப்பதற்கே என்பதை உணர்த்தும் மிகச் சிலரில் இவரும் ஒருவர்.

மற்றொரு தொண்டையும் மிகவும் சிறப்பாக இங்கே குறிப்பிட வேண்டும். இன்றைய தினம் நாடெங்கும் பல்லாயிரக்கணக்கான மக்களின் இதயங்களைக் கவர்ந்து இலக்கிய ஆர்வத்தைப் பரப்பி யிருக்கும் பட்டி மண்டபங்களை நடத்தத் தொடங்கிய ''கணேசர்'' இவரே என்று சொல்ல வேண்டும். பட்டி மண்டபம் என்றால் என்ன,

இலக்கியத் திறனாராய்ச்சிச் சுவை ஏற்படுமாறு அதை எப்படி நடத்துவது என்று நடத்திக் காட்டியவர் கணேசனும் அவருடைய நண்பர் குழுவினருமே ஆவர். திரு. கணேசன், திரு. அ. சீனிவாசராகவன், திரு. அ.ச. ஞானசம்பந்தன், திரு. கி.வா. ஜகந்நாதன், திரு. ஜஸ்டிஸ் மகராஜன் முதலியவர் கூடிப் பட்டி மண்டபம் பேசுகிறார்கள் என்று சொன்னால் காரைக்குடிக் கம்பன் விழாப் பந்தல் நிரம்பி வழியும்; வானொலிப் பெட்டிகளைச் சுற்றிலுங்கூடக் கூட்டம் திரண்டிருக்கும். இவர் தொடங்கி வைத்த பட்டி மண்டபங்களால் இன்றைய தினம் பல்லாயிரக்கணக்கான மக்களுக்கிடையிலே நமது பழைய இலக்கியங்களில் ஆர்வமும் இலக்கிய இரசனையும் ஏற்பட்டிருப்பது உண்மை. அரசியல் கூட்டங் களில் திரண்டு, சிலர் பேசும் சாரமில்லாத வாதங்களையும் வசை மொழிகளையும் கேட்டுப் பழகிப்போன மக்களுடைய மனங்களை இலக்கியச் சர்ச்சையில் ஈடுபடுத்தி விடுவதென்பது ஒரு பெரிய சாதனையாகும்.

முடிவாக, இவரது தொண்டுகளுக்கெல்லாம் சிகரம் வைத்தாற் போல் அமைந்திருப்பது, இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டுக் கண்காட்சியைத் தம் பொறுப்பில் திறம்பட அமைத்து, உலகப் பேரறிஞர் களின் பாராட்டைப் பெற்றதாகும். கண்காட்சியை மேலெழுந்த வாரியாகப் பார்த்துத் திரும்ப வேண்டுமென்றாலும் 2 மணி நேரம் பிடிக்கும். தமிழகத்தின் நாகரிகத்தை ஆதிகாலம் முதல் - மனிதன் நிலவறையில் வசித்த காலம் முதல் - இன்றைய தினம் வரை நூற்றாண்டு நூற்றாண்டாக நேரில் சென்று பார்த்து வந்தது போன்ற அநுபவம் கண்காட்சியை விட்டு வெளிவரும் யாருக்குமே ஏற்பட்டிருக்கும். மறக்க முடியாத மாநாட்டு நிகழ்ச்சிகளில் கண்காட்சியும் ஒன்று. கண்காட்சி மலர் ஒன்றும் இவரது சாதனைத் திறனுக்குச் சான்றாக அமைந்துள்ளது.

இப்படிப் பேச்சிலும் செயலிலும் சாதனையிலும் தமக்கென்று ஒரு வழியை வகுத்துக் கொண்டு, அதனை ஆழமாகவும் ஆணித்தரமாகவும் ஏற்று நடத்தும் நல்ல தலைவர்களில் திரு. சா. கணேசன் அவர்களும் ஒருவர். அவர் வாழ்வும் பணியும் அனைவருக்கும் நல்லதொரு வழிகாட்டி.



# மக்கட் கவியாக்கியவர்

- வ.சுப. மாணிக்கம்

"கம்பன் பிறந்த தமிழ்நாடு" என்பதனை உலகறியச் செய்யும் வகையில் கம்பன் கழகங் கண்டு, கம்பன் அடிப்பொடியாகிப் புதியதோர் அடியவர் இனத்தைத் தோற்றுவித்தவர் காரைக்குடி கணேசனார். கம்பன் உலகப் பெருங்கவிதான். எனினும் அவனை ஊரெல்லாம் அறியும் மக்கட் கவியாக்கியவர் கணேசர்.

கணேசனார் உடல் பொருள் உயிர் அனைத்தையும் நாட்டு விடுதலைக்குப் பலியாக்கிய பாரதத் தொண்டர். புலவர்க்குப் புலவர்; அறிஞர்க்கு அறிஞர்; கவிஞர்; கல்வெட்டுத்திறனர்; பல்கலை வல்லுநர். இத்துணை நிறைவுகள் வாய்ந்த ஒரு தமிழ்ப் பெருமகன் கம்பனுக்கு அடிப்பொடியாகக் கிடைத்தது இராமனுக்குக் கம்பன் கிடைத்தது போல் பெறற்கரிய பேறாகும்.

நாமும் கணேசனார் புகழ்பாடிக் கம்பன் தமிழையும் கன்னித் தமிழையும் வளர்ப்போம்.



# சடையப்பன் தனக்கும் மேலாய்...

- தமிழண்ணல்

சடையப்பன் மரபி னுள்ளார்
மகுடத்தைச் சூட ராமன்
உடையப்பன் ஆனான் அந்த
உத்தமன் காப்பி யத்தை
விடையப்பன் மரபில் வந்த
கணேசன்தன் முடியிற் சூடிச்
சடையப்பன் தனக்கும் மேலாய்ச்
சரித்திரம் படைத்தான் வாழ்க!!



# கம்பனடிப் பொடியார்

**– மரியதாஸ்**

கம்பன் அருளுங் கனிகளில், சமத்துவக் கனி பற்றி நான் காரைக்குடிக் கம்பன் விழாவில் பாடி முடித்தவுடன், அந்தக் கவிதைகளை எழுதிய என் கைகளைப் பிடித்து அவர் முத்தம் கொடுத்த காட்சி, இன்னும் கண்ணில் தெரிகிறது. அந்த நிகழ்ச்சி அடிக்கடி என் மனத்தில், ''பேறெனக்கு இதன் மேலுண்டோ?'' என்ற, சேக்கிழார் பெருமானின் வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டே இருக்கிறது. உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவன ஆய்வு மாணவர், டாக்டர். ப. மகாலிங்கம் கூறியிருப்பது போல்: ''ஆம். கம்பனடிப் பொடிகளைப் பார்த்திருக் கிறோம்; அவர் பேச்சைக் கேட்டிருக்கிறோம்; அவருடன் பழகியிருக் கிறோம்; அவர் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்திருக்கிறோம்!'' என்று கூறிக் கொள்ளும் பெருமையே ஒரு பெரும் பேறு.

நான் இந்தியப் பிரதமர்கள் இந்திராகாந்தி, மொரார்ஜி தேசாய், தமிழக அமைச்சர்கள், தமிழ் மூதறிஞர்கள் பக்கத்திலெல்லாம் உட்கார்ந்திருக்கிறேன், அப்பொழுதெல்லாம் என்னிடம் உண்டாகாத மதிப்பும் மரியாதையும் கம்பனடிப்பொடிகளின் அருகில் அமர்ந் திருக்கும் போது ஏற்படும். அந்த மரியாதை, வெண்ணிற அங்கி அணிந்திருக்கும் எங்கள் சமய குருவானவர்களுக்கு அருகில் இருக்கும் போது உண்டாகும் மரியாதையாகும். இரட்சணிய யாத்திரீகமும், விவிலியமும் கம்பனடிப்பொடியின் திருவாய்மொழியாக வருவதைப் பார்த்து மகிழ்ந்திருக்கின்றேன்.

கம்பனடிப் பொடிகள் வாழ்ந்திருந்த காலத்தில், அவருக்காக, என்னால் எழுதப்பட்டுக் கம்பன் கவியரங்குகளில், அவரது செவி குளிர நான் பாடி மகிழ்ந்த ஒரு பாடல்:

அம்புவி மக்களை ஒன்றுப டுத்திட
அன்றொரு நாளினிலே - அவர்
அண்ணனும் தம்பியு மாகஇ ருந்திட
அங்கொரு நூலினிலே - ஒரு
கம்பன்எ னப்படும் மானிடம் வந்தொரு
காவியம் செய்ததுவும் - அது
கன்னியெ னுந்தமிழ் மின்னியெ ழுந்திடும்
ஓவியம் ஆனதுவும் - அதைத்
தும்பியெ னப்பல செம்புல மைத்திரள்
தொட்டும கிழ்ந்ததுவும் - அதைத்
தொண்டும னத்தொடு மொண்டுகொ டுத்திடத்
தொண்டர்கள் வந்ததுவும் - ஒரு
கம்பன டிப்பொடி யாரெனும் பேருறு
காளையின் பணியாகும் - அவன்
காரைக் குடியெனும் ஊரைப் புகழ்வது
காவிய மொழியாகும்.



# என் ஆசான்

– **சரசுவதி இராமநாதன்**

'**வாழ்ந்தவர் கோடி, மறைந்தவர் கோடி**
**மக்களின் மனதில் நிற்பவர் யார்?**
**மாபெரும் வீரர், மானம் காப்போர்**
**சரித்திரம் தனிலே நிற்கின்றார்**' என்றார் கவியரசர். நூற்றாண்டு விழாவில் தமிழ்கூறும் நல்உலகம் போற்றும் **என் ஆசான்** கம்பனடிப் பொடி அப்படிப்பட்ட ஒருவர்! 'கொள்+கை'யுடையவர் பலர் இருக்கும் நாட்டில் 'கொள்கை'யுடையவராய் வாழ்ந்தவர் எங்கள் **'சாவண்ணாகானா.'**

## தேசமும் தெய்வமும்

அண்ணல்காந்தியின் தலைமையில் விடுதலை **வேள்வித்தீ** பொங்கியபோது தன் வீடு, தன் சுகம் என்பதையெல்லாம் அத்தீயில் **ஆகுதி** செய்த வீரமறவர், செந்தமிழ்நாட்டுத் தேசபக்தர், பலப்பலர். அவர்களில் செட்டிநாடு தந்த தமிழ்க்கடல் **ராய.சொ.** அவர்களும் **கம்பனடிப்பொடி** அவர்களும் முக்கியமானவர்கள். எனக்கு **இருகண்** போன்ற ஆசிரியர்கள் இருவரும். இவர்கள் எனக்கு நாட்டுப்பற்றைத் தமிழ்ப்பற்றுடன் சேர்த்துத் தந்தனர். என் குடும்பம் தேசபக்தர் குடும்பம் என்பதால் இருவருமே எங்களைப் பாசத்துடன் ஆதரித்தனர்.

9 வயதில் தேவகோட்டைத் தமிழிசைப் பள்ளி மாணவியாகக் கம்பன் மேடையில் பாட, ஆடவந்தவள் 22 வயதில் பேச்சாளராகவும் கம்பன் மேடைக்கு வந்தேன். ஐயா, என்மீது வைத்திருந்த நம்பிக்கை, ''விழாவில் யார் வராவிட்டாலும் நீ எந்தத் தலைப்பிலும் பேசுவாய்!'' என்று வாழ்த்தாயிற்று.

## கம்பன் திருநாள்

மூன்று நாள்கள் காரைக்குடியிலும், அத்த (ஹஸ்தம்) நாளில் நாட்டரசன் கோட்டையிலும் திருநாள் நடத்தும் நாள்களில் **பூரண விரதமிருப்பார்.** அந்த அளவு கம்பனிடம் ஈடுபாடு, இல்லை; பக்தி கொண்டிருந்தார். கம்பனின் எழுதுகோலாகப் பிறக்கமாட்டேனா அவன் தாம்பூலம் உமிழும் படிக்கமாகவாவது பிறக்கமாட்டேனா, அவன் தோள் தழுவும் உத்தரீயம் ஆக மாறமாட்டேனா என ஏங்கிக் கவிபாடுவார். குலசேகரர் **திருமலையில் ஏதேனும் ஆவேனே** என்று ஏங்கியதை நினைவூட்டுவார்! கம்பனை **வாசிப்பார்** சிலர்; **நேசிப்பார்** பலர்; **பூசிப்பார்** ஏராளம். இவரோ கம்பனையே உயிர்மூச்சாய்ச் **சுவாசித்தார்.** இவரது விழாவில் பெருமையும் உரிமையும் பெற்றுப் பங்கேற்ற அறிஞர்கள்தாம் எவ்வளவு பெரியவர்கள்! காரைக்குடியைக் **கம்பன்குடி**யாக்கியவர்.

ஒரு நிமிடம் கூடத் தாமதிக்காமல்

**'கம்பன் வாழ்க!**
**கம்பன் வாழ்க!**
**கன்னித்தமிழ் வாழ்க!'**

எனக் கணீர் என்ற குரலெடுத்து விழாத் தொடங்கியவர் இவர்போல் யார்?

கலைஞர் கருணாநிதி அவர்கள் கணேசனாரிடம் மிகுந்த மரியாதை கொண்டவர். ஒரு கவியரங்கில் ஐயாவை அறிமுகம் செய்து

**"உண்மைமிகு உயர்தமிழர்**
**வெண்மையுள்ளக் கணேசனார் வருகின்றார்;**
**வட்டியின்றிக் கடன்வழங்காச்**
**செட்டிநாட்டுச் செம்மலிவர்;**
**சட்டையில்லாத் திருவுருவம்; எதிர்ப்பைச்**
**சட்டை செய்யாப் புகழ்உருவம்;**
**கதர் அணியார்;**
**கதர் அணியார்ந்த கட்டுடல்;**
**கதர் அணியார் மல்லுக்கு நிற்பர்;** **(மல்வேட்டி)**
**இவர் தமிழ் பழித்த எதிரியுடன் மல்லுக்கு நிற்பார். - விடுதலை**
**நெல்லுக்கு வியர்வை பாய்ச்சி - இன்று**
**சொல்லுக்குச் சுவையேற்ற வந்துள்ளார்!**

என்றார். அத்தனையும் உண்மைதானே!

'மாபெரும் சபைதனில் நீநடந்தால் உனக்கு
மாலைகள் விழவேண்டும் - ஒரு
மாற்றுக் குறையாத மன்னவன் இவன்என்று
போற்றிப் புகழ வேண்டும்' என்றார் கவியரசர். அதற்கு 100% இலக்கியம் என் ஆசான்தான். காலமெனும் ஆழியிலும் காற்றுமழை ஊழியிலும் சாகாது கம்பனவன் பாட்டு. அதுபோல் என்றும் மாறாது கணேசனார் கீர்த்தி.

''கம்பனடிப்பொடி சென்னியில்சூடிடும்உங்கள்கடைப்பொடி நான்.''



# கம்பன் அடிப்பொடியே ஒரு காவியம்

- சோ. சத்தியசீலன்

**கா**கிதத்தில் அச்சிட்டு, அட்டை வைத்துக் கட்டப் பெற்ற நூல்களே காவியங்கள் என்று எண்ண வேண்டாம்!

''ஒவ்வொரு மனிதரும் ஒரு காவியந்தான், நமக்கு மட்டும் அவரை வாசிக்கத் தெரிந்திருந்தால்!'' என்று மேலைநாட்டு அறிஞன் கூறினான்.

"Every man is a volume if you know how to read him."

கம்பனடிப்பொடி காலத்தால் அழிக்க முடியாத அருங்காவியம்.

மானுடம் இருமுறை வென்றுள்ளது.

இராமாவதாரத்தால் ஒருமுறையும், கம்பனடிப்பொடியின் அவதாரத்தால் மறுமுறையும்!

கம்பனடிப் பொடி என்னும் காவியத்தில் ஆறு காண்டங்கள் உண்டு.

1. அறிவிலே தெளிவு
2. நெஞ்சிலே துணிவு
3. செயலிலே கனிவு
4. ஓயாத உழைப்பு
5. தளராத தன்னம்பிக்கை
6. காலத்தால் அழியாத கம்பன் தொண்டு.

இந்த ஆறுகாண்டங்களையும், உணர்ந்து பயின்றால், உற்றுநோக்கி உள்ளத்தில் அமைத்துக் கொண்டால், தமிழினம் இமாலய வளர்ச்சியை எளிதில் எய்தும்!

அறிவிற் சிறந்த அறிஞர்களை அழைத்துக் கம்பன் வழியில் செல்லத் தூண்டினார்! அதற்கு அடிப்படையாகக் கம்பன் கழகத்தைத் தொடங்கினார். அதை ஓர் இயக்கமாகவே வளர்த்தார். கம்பன் இயக்கம் இன்று தமிழகத்தில் மட்டுமல்ல! உலகம் முழுவதும் பரவி வளர்ந்திருக்கிறது. இது அந்தக் காவியத்தின் முதற்காண்டம்!

தமிழகத்தில் கம்பன் எதிர்ப்பு இயக்கம் காட்டுத்தீயாய்ப் பரவி எரிந்த காலத்தில் அஞ்சா நெஞ்சனாக, கம்பன் படைத்தளபதியாக நின்று அந்தப் போரில் வென்றார். இது அவருடைய இரண்டாவது காண்டம்.

இளைஞர்களையெல்லாம் அரவணைத்து, கம்பனில் அவர்களை ஈடுபடுத்திய உள்ளக் கனிவை ஒரு போதும் மறக்க இயலாது. கண்டிப்போடு கூடிய அன்புக் கனிவிற்கு இன்னொரு தலைவரை ஈடுகாட்ட இயலாது. இது மூன்றாவது காண்டம்!

அவருடைய ஓயாத உழைப்பால் தமிழகம் எங்கும் கம்பன் கழகங்கள் தோன்றின. அறிஞர்களையும், வள்ளல்களையும் அயராது சென்றடைந்த அன்புத்தூண்டல்களால்தான் இது சாத்தியமாயிற்று. இன்றும் அவரது ஆன்மாவின் தூண்டலால்தான், அகில உலகத்திலும் கம்பன் கழகங்கள் தோன்றிச் செயற்பட்டுக் கொண்டுள்ளன. இது நான்காவது காண்டம்.

அவருடைய தளராத தன்னம்பிக்கையாலும், நெஞ்சுரத் தாலும்தான் தமிழ் மக்கள் கம்பனைப் போற்றும் நிலையும், அச்சத்தையும் கூச்சத்தையும் விலக்கிக் கம்பனுக்குத் தொண்டு செய்யும் நிலையும் உருவாயிற்று என்பதில் எந்த ஐயமும் இல்லை. இது ஐந்தாவது காண்டம்.

காலத்தால் அழியாத கம்பன் தொண்டினால்தான் இன்று காரைக்குடியில் தமிழ்த்தாய் திருக்கோவிலும் கம்பன் மணிமண்டபமும் கம்பீரமாய்க் காட்சியளிக்கின்றன. இது கம்பனடிப்பொடி என்னும் காவியத்தின் ஆறாவது காண்டம்.

கம்பனுடைய சொற்களாலேயே கம்பனடிப் பொடி அவர் களுடைய பெருமையைக் கூற வேண்டுமானால்,

**கம்பனடிப்பொடி:-**

1. ஞானமும் முன்னிய நான்மறையாளன்
2. தீது அறுகுணத்தால் மிக்கோன்
3. ஆய்ந்தே கடந்தவன் அறிவு என்னும் அளக்கர்.
4. பொய்ச்சொல் கேளா வாய்மொழி மன்னவன்.
5. சாதித்த பெருந்தகை.
6. தருமத்தின் கவசத்தான்
7. எள்ளரிய நற்குணத்தான்
8. பொறையோடும் திருமனத்தான்
9. மானம் மணிமுடி மன்னன்
10. தத்துவம் நண்ணினான்
11. ஆழ்ந்த பேர் அன்பினான்.
12. தெருளுடை மனத்தான்.

''கம்பனடிப் பொடி'' என்னும் காவியத்தைக் கற்போம்! உள்ளத்தில் வைத்துப் போற்றுவோம்! மானுடத்தை வெல்ல வைப்போம்!



# கம்பன் இயக்கத்திற்கு ஒரு கொள்கை முழக்கம்

**- அ. அறிவொளி**

எல்லா வரலாறுகளிலும் காலம் என்னும் உருவமில்லாத உயிர் இல்லாத ஒரு பொருள் பெரிய மாற்றங்களை உண்டாக்கியுள்ளது.

அப்படித்தான் அறிவியல் உலகம் ஆன்மிக வரலாற்றில் மாற்றங்கள் தந்தது.

இதன் தொடர்பாகத் தந்தைப் பெரியார் அறிவுலகவாதியாக நின்று ஆன்மிகக் கருத்துக்களை எதிர்த்து வந்தார். இது சமூகநலனுக்காக வந்தது.

இதனால் இராமாயணத்தின் செல்வாக்குக்கு எதிர்விவாதங்கள் தோன்றின.

பெரியார் இராமன் படத்தையே பொது இடங்களில் எரித்தார்.

உண்மைக்கு மாறான ஆரிய திராவிடப் போராட்டமே இராமா யணக் கதை என்று அழுத்தமான பிரச்சாரம் எங்கும் பரவலானது.

உண்மையில் இராவணன்தான் வேதியர் மரபு. இராமனோ அரச மரபாகிய சத்திரியகுலம்.

இருந்தாலும் இராமனை ஆரிய வாரிசாக வெளிக்காட்டினர்.

இந்தக் கருத்து மோதல்களில் சிறந்த தமிழ்க் காவியமாகிய கம்பராமாயணம் சிக்கலில் அகப்பட்டது.

காலத்தால் இந்த மாற்றம் தோன்றியது. இதை வெறும் மனித முயற்சியால் மட்டும் தோற்கச் செய்ய முடியாது.

இதனால் காலமே ஒரு பெரும் முயற்சியாளரை உருவாக்கியது. அவர்தான் தமிழகம் முழுதும் தன் இலக்கிய ஆன்மிக உணர்வைப் பதிவு செய்த கம்பன் அடிப்பொடி சா. கணேசன் ஆவார்கள்.

அரசியல் சமூகப் புரட்சியாளர்கள் அந்தக் காலத்திற்குத் தேவைப் பட்டார்கள். அதனால் அவர்கள் பின் பெரும்பகுதி மக்கள் திரண்டார்கள்.

இவர்கள் ஆன்மிகத்திற்கு எதிர்த் தரப்பாகினர் - சிறப்பாக இராமாயணப் பற்றுதலுக்குப் பகையானார்கள்.

இப்படிப்பட்ட காலகட்டத்தில் கம்பராமாயணத்தை ஆதரிப்பதும் பரப்புவதும் இயலாத ஒரு காரியம். ஆனால், செய்து முடிக்கப்பட வேண்டிய ஒரு வேள்வியாகவும் அது இருந்தது.

இப்படிப்பட்ட காலமாறுதலை உணராவிட்டால் கம்பன் அடிப் பொடியின் சேவையை முழுவதுமாக உணர முடியாது.

**எல்லா இயக்கங்களும் ஒரு கொள்கை முழக்கத்தை ஏற்பது தவிர்க்க முடியாதது.**

**அந்த முழக்கமே அந்த இயக்கத்தின் கொள்கையை முழுமையாகப் பரப்பும்.**

**அவ்வாறு கம்பன் அடிப்பொடி உருவாக்கிய கொள்கை முழக்கம்தான்:**

**கம்பன் வாழ்க - வாழ்க வாழ்க**
**கம்பன் புகழ் வாழ்க - வாழ்க வாழ்க**
**கன்னித்தமிழ் வாழ்க - வாழ்க வாழ்க!**

இப்படி முதல் குரலும் தொடர் குரல்களுமாக இம்முழக்கத்தை உருவாக்கினார்.

தமிழுக்காக, ஒரு தமிழ்க் கவிஞனுக்காக மட்டுமே நாங்கள் கம்பராமாயணத்தைப் பாராட்டுகிறோம் என்ற கருத்து இந்தக் கொள்கை முழக்கத்தில் முதன்மையாகிறது.

இராமாயணம் தமிழுக்கு எதிரி அல்ல அது தமிழ்ப் பண்பாட்டிற்கு எதிரி அல்ல என்ற முழக்கத்தால் கம்பன் அடிப்பொடியின் கொள்கை வளரத் தொடங்கியது.

பல அரசியல் கட்சித் தலைவர்களையும் கம்பன் மேடை ஒருங்கு இணைத்தது.

காங்கிரஸ், கம்யூனிஸ்ட், தி.மு.க., தமிழரசுக்கட்சி முதலிய தமக்குள் வேறுபட்ட இயக்கங்களை அவர் ஒரு பொதுமேடையில் இணைத்தது மிகுந்த பாராட்டுக்குரியது.

தோழர் ஜீவா, ம.பொ.சி ஆகிய தலைவர்கள் கம்பன் மேடையிலும் பேசினர்.

அவர் கட்சி பேதங்களுக்கு அப்பால் தமிழ்த் தலைவர்கள் ஒன்றுபட முடியும் என்ற புதிய ஞான முறையை உருவாக்கினார்.

மேலும் இசுலாமிய, கிறித்துவ மதத்தின் சார்பாளர்களையும் கம்பன் பக்கம் இழுத்தார்.

ஒழுக்கம் கட்டுப்பாடு தியாகம் என்ற முத்திரைகளுடன் சட்டை அணியாத இக்காந்தியவாதியை யாராலும் வெறுக்க முடியவில்லை.

கம்பனுடைய காவியத்து மிக ஆழமான ஆய்வுகளைப் பலரும் செய்யத் தூண்டினார்.

இன்று உலகம் முழுதும் கம்பன் விழாக் காண வைத்தார். இவர் ''வாராதுபோல் வந்த மாமணிதானே!''



# ஒற்றை மனிதராய் கம்பன் புகழை உயர்த்திய...

**- நெல்லைக் கண்ணன்**

சட்டையே போடாமல் காந்தி வழிதன்னில்
சத்தியப் புகழானார் சா.கணேசன் தமிழ்
கற்றவர் மத்தியில் கம்பன் புகழ் தன்னைக்
கட்டியே காத்திட்ட மாமனிதர்
பெற்றவரோ தமிழ் காக்கவே பெற்றிட்டார்
பெருமைகள் சேர்த்திட்டார் கம்பனுக்கு
உற்றவர் அவர் போலக் கம்பனுக்கு இந்த
உலகினில் உள்ளாரோ சொல்க அய்யா

ஜீவா எனும் ஒரு மாபெரும் அறிஞனை
சேர்த்தே அணைத்திட்ட செந்தமிழார்
பூவாய் மனம் கொண்டு பொறுப்பான ஜீவாவை
போற்றியே மகிழ்ந்திட்ட நல் மனத்தார்
நாவாரக் கம்பனின் புகழ் பாடி என்றென்றும்
நற்றமிழ் வளர்த்திட்ட தேன் குணத்தார்
ஆவாரா அவர் போல இன்னொருவர் இங்கு
அழகுத் தமிழ்க் கம்பன் புகழ் பரப்ப

கம்பனைக் காத்தவர் சடையப்பராம் அவன்
கண்ணியம் காத்தவர் சா. கணேசன்
மன்னவன் தன்னையும் கேள்விகள் கேட்டிட்ட
மாக்கவிஞன் அவன் பேரன் இவர்
எத்தனைபெரியவர் என்றிடினும் விழா
ஏற்றம் பொலிகின்ற மேடையிலே
சற்றேனும் தாமதம் காட்டி விட்டால் இவர்
சரியாக நிகழ்வினைத் தொடங்கிடுவார்

மற்றவர் வந்தங்கு அமர்ந்திடினும் விழா
மாற்றமில்லாமலே நடந்திருக்கும் எந்தக்
கொற்றவன் தன்னையும் கண்டு அஞ்சும் கெட்ட
கோழை மனமில்லாப் பெருங்குணத்தார்
உற்றவர் கம்பனுக் காயிரம் பேர் எனில்
ஒரு பெயர் மட்டுமே உயர்ந்து நிற்கும்
கற்றவர் கம்பனைப் பெற்றவர் எங்களின்
கம்பனடிப் பொடி சா.கணேசன்

பாரதம் தன்னை விநாயகர் தாம் அன்று
பக்குவமாக எழுதித் தந்தார் எனில்
பா ரதக் கம்பனின் பேரறிவை இங்கு
பண்புடன் தந்தவர் சா.கணேசன்
ஒற்றைக் கொம்பினால் பாரதத்தை அன்று
உருவாக்கித் தந்தவர் அக் கணேசன்
ஒற்றை மனிதராய் கம்பன் புகழ் தன்னை
உயர்த்தியே வாழ்கின்றார் சா.கணேசன்.



# கம்பனா? கம்பரா?

- பாளை நகர் ச. திரவியம்

"கம்பனைக் கம்பனென்றழைப்பதா? கம்பரென்றழைப்பதா?" என்ற கேள்வி எழுந்தபோது:- பொதுவாகக் கடவுளை நாம் ஆண்டவன், இறைவன் என்றுதான் அழைக்கிறோம். ஆண்டவர், இறைவர் என அழைப்பதில்லை. அவனன்றி அணுவும் அசையாது - என்பதிலும் அவனென்றே கூறுகிறோம். கம்பனடிப் பொடியும் தம் பெயரைக் கணேசன் என்றுதான் கூறினார். கணேசர் என்று கூறவில்லை. கம்பர் என்பதைக் கம்பன் என அழைக்கச் செய்து நமக்குக் கம்பனிடம் மிக நெருக்கத்தை உண்டுபண்ணியவர் அமரர் கம்பனடிப் பொடியே.



# கணேசன் மரபுளோர்...

- 'குமுதம்' அரசு பதில்கள்

மறைந்த கம்பரடிப் பொடியாரிடம் என்னைக் கவர்ந்த சாதனை கம்பர்விழா. கம்பன் இன்னொரு முறை இராமாயணம் எழுதுவதாக இருந்தால், திருமுடி சூட்டு படலத்தில் வெண்ணெயூர்ச் சடையன் மரபுளோர் கிரீடத்தை எடுத்துக் கொடுத்தார்கள் என்ற இடத்தில், காரைக்குடி கணேசன் மரபுளோர் அதைத் துடைத்துக் கொடுத்தார்கள் என்று சேர்த்து விடுவான்.

- அரசு பதில்கள்
குமுதம், 12.8.82



# கம்பன் அடிப்பொடியும் திருப்பத்தூர் கம்பன் கழகமும்

**1977**ஆம் ஆண்டு காரைக்குடியில் நடைபெற்ற கம்பன் விழாவில் திருப்பத்தூரில் இருந்து நாங்கள் சென்று கலந்து கொண்டோம். எங்களை தமிழ்க்கடல் ராய. சொக்கலிங்கம் அவர்கள் வாழ்ந்த வீட்டில் தங்க வைத்தார்கள். விழாவை கம்பன் அடிப்பொடி ஐயா அவர்கள் நடத்திய விவரமும், அவர் ஈடுபாடும் எங்களை மிகவும் வியக்க வைத்தது. கணீரென்ற குரலில் கம்பன் வாழ்க, கம்பன் புகழ் வாழ்க, கன்னித் தமிழ் வாழ்க என்று அவர் சொல்லும்போது மெய் சிலிர்க்கும். அவரிடம் பேசிக் கொண்டிருக்கும்போது, உங்களூரிலும் கம்பன் கழகம் துவக்குங்கள். கம்பன் விழாவை நடத்துங்கள். நான் வந்து நடத்திக் கொடுக்கிறேன் என்றார். அதன் வழிமுறைகளை எல்லாம் சொன்னார். எங்களுக்கும் (திரு. K.A.S. பத்மநாப முதலியார், திரு. K.A.S. ரகுநாயக முதலியார், திரு. S. சண்முக சுந்தரம், திரு. T.G. விஸ்வநாத செட்டியார், திரு. M. துரைசாமி செட்டியார், திரு. ரத்னநடராசன், திரு. V.R. மாரிமுத்து செட்டியார்) நம் ஊரிலும் நடத்த வேண்டும் என்று ஆவல் ஏற்பட்டது. திரு. S. சண்முகசுந்தரம், தலைமை ஆசிரியராக இருந்த பள்ளியில் ஆலோசனை கூட்டம் போட்டோம். வந்திருந்த தமிழ் ஆர்வலர்கள் நடத்தலாம் என்று உற்சாகப்படுத்தினார்கள். திரு. K.A.S. பத்மநாப முதலியாரை தலைவராகவும், திரு. S. சண்முகசுந்தரம் செயலாளராகவும் கொண்ட செயற்குழுவும் அமைக்கப்பட்டது. 2 மாதத்தில் ஆர்வமுடன் வேலைகளை முடித்து 16.07.1977 சனிக்கிழமை காலை யானை மீது வெள்ளி மண்டபத்தில் ராமாயண நூல்களும், ஸ்ரீராமர் பட்டாபிஷேக படமும் வைத்து திருப்பத்தூர் நகர வீதிகளில் ஊர்வலமாக வந்து மாலை 4.00 மணிக்கு கம்பன் அடிப்பொடி திரு. சா.

கணேசன் தாய் கழகத்தின் சீர் கொடுத்து விழாவை துவக்கி வைத்தார். 17.07.1977 ஞாயிற்றுக்கிழமை காலை, மாலை இரு வேளையும் கவிஞர்கள், புலவர்கள் பேசி விழா சிறப்பாக நடைபெற்றது. எதிர் பார்த்ததை விட கூட்டம் அதிகமாகவும், நிகழ்ச்சிகளை ரசித்து மகிழ்ந்து கரவொலி எழுப்பியதையும் கண்டு எங்களுக்கு மனநிறைவு ஏற்பட்டது. விழா மலரை திரு. M. ராமு, I.A.S. வெளியிட்டு பாராட்டினார். இவையெல்லாம் எங்களை கம்பன் விழாவை தொடர்ந்து நடத்த வேண்டும் என்ற எண்ணத்தை உண்டாக்கியது.

2ம் ஆண்டு விழா 22.07.1978 சனிக்கிழமை காலையே விழாத் தலைமை ஏற்று கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன் துவக்கி வைத்து சிறப்புரை ஆற்றினார். இவ்வாண்டு கம்பன் விழா மலரில் கம்பன் அடிப்பொடி அவர்கள் ''கம்பனின் தாவர அறிவு'' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதி உள்ளார். 23.07.1978 ஞாயிறு நிறைவு விழா சொற்பொழிவாற்றி விழா நிகழ்ச்சிகளை பெரிதும் பாராட்டினார்.

3ம் ஆண்டு விழா 21.07.1979 சனிக்கிழமை காலையே விழாத் தலைமை ஏற்று கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன் அவர்கள் 3ஆம் ஆண்டு விழாவை துவக்கி வைத்து உரையாற்றினார். இந்த ஆண்டு விழாவில் சிலம்புச் செல்வர் திரு. மா. பொ. சிவஞானம், திரு. கிருபானந்தவாரியார், திரு. கி.வா. ஜெகநாதன், டாக்டர் இரா. நாகசாமி கலந்து கொண்டு உரையாற்றினார்கள். கம்பனில் வரும் தாவரங்களை கொண்டு ஒரு ''தாவர கண்காட்சி'' வைத்திருந்ததை அனைவரும் பெரிதும் பாராட்டி மகிழ்ந்தார்கள்.

22.07.1979 ஞாயிற்றுக்கிழமை முதுபெரும் தமிழ் அறிஞர்களான திரு. ஔவை சு. துரைசாமிப் பிள்ளை, புரிசை திரு. முருகேச முதலியார் இருவருக்கும் கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன் அவர்களைக் கொண்டு பாராட்டி சிறப்பு செய்தோம்.

19.07.1980 சனிக்கிழமை காலை நான்காம் ஆண்டு கம்பன் விழாவிற்கு கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன் தலைமை ஏற்று துவக்கி வைத்தார். திருமுருக கிருபானந்த வாரியார் கலந்து கொண்டார். மலர் வெளியீடு; 22.07.1980 ஞாயிறு இரண்டாம் நாள் நிகழ்ச்சிகள் சிறப்பாக அமைந்தது.

5ஆம் ஆண்டு கம்பன் விழா 18.07.1981 சனிக்கிழமை காலை கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன் தலைமை ஏற்று தொடக்கி வைத்தார். மலர் வெளியீடு இன்றைய மத்திய அரசின் உயர் பதவியில் உள்ள என். நாராயணன், இ.ஆ.ப., மற்றும் குமரி அனந்தன் கலந்து கொண்டார்கள்.

6ஆம் ஆண்டு விழா, 28.08.1982 சனிக்கிழமை ஐந்தாண்டுகளாக விழாத் தலைமையேற்று நடத்தி வந்த கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன், கம்பன் திருவடியில் கலந்துவிட்டதால் அவர் திரு உருவப்படத்தை திருமதி. டாக்டர் லலிதாகாமேஸ்வரன் திறந்து வைத்து சிறப்புரையாற்றினார். 6ஆம் ஆண்டு விழா மலர் முகப்பு அட்டையில் கம்பன் அடிப்பொடியின் படத்தை போட்டு உள்ளோம். மலரில் செயற்குழு உறுப்பினர் திரு. தி.க. சந்திரசேகரன் அவர் வாழ்ந்து கொண்டே இருக்கிறார் என்ற தலைப்பிலும், ''கம்பன் புகழ் பாடிய கம்பன் அடிப்பொடி வாழியவே'' என்ற தலைப்பில் திரு. வி. மகாலிங்கம், கட்டுரையும் வெளியிட்டுள்ளோம்.

1977ல் கம்பன் அடிப்பொடி திரு. சா. கணேசன் அவர்கள் துவங்கி வைத்த திருப்பத்தூர் கம்பன் கழகம் அவர் விரும்பியபடியே தொடர்ந்து ஆண்டுதோறும் இரு தினங்கள் கம்பன் விழாவை சிறப்பாக நடத்தி வருகிறது. 30 ஆண்டு விழாவை திரு. கணேசன் அவர்கள் நூற்றாண்டு அரங்கத்தில் நடத்தி சிறப்பு செய்தோம். தமிழகத்தின் அனைத்து பேச்சாளர்களும், கவிஞர்களும்,மாநில, மத்திய அமைச்சர்களும், சட்ட மன்ற, நாடாளுமன்ற உறுப்பினர்களும் கலந்து சிறப்புரையாற்றி வருகிறார்கள். எல்லாவற்றிற்கும் மேலாக கம்பன் அடிப்பொடியின் அடியொற்றி பணியாற்றி வரும் ''கம்பன் அடிசூடி'' பழ. பழனியப்பன் அவர்கள் எங்களுக்கு மிகவும் உதவி செய்து வருகிறார்.

கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்கள், நூற்றாண்டு விழா மலர் கம்ப இராமாயணம் போல் காலத்தில் நின்று நிலைக்கும் என்று மிகவும் விரும்பி வாழ்த்துகிறோம்.

**வி.ஆர். மாரிமுத்து செட்டியார்**
*தலைவர்*

**எஸ். சண்முகசுந்தரம்**
*செயலாளர்*

# முடிசூடா மன்னரும், முடி சூடிய மன்னரும்

**- வை. கணபதி ஸ்தபதி**

நல்லதொரு மாலை, சுமார் 7.00 மணி இருக்கும். அதே நாளில் பூம்புகாரில் இரண்டாவது கட்டமாக பல மன்றங்களை டாக்டர். கலைஞர் அவர்கள் திறந்து வைத்துவிட்டு காரைக்குடி நோக்கி வந்து கொண்டிருக்கிறார்கள். நான் அதற்கு முன்னதாக தமிழ்த்தாய் கோவில் அஸ்திவாரப் பணியை துவக்குவதற்காக கம்பன்அடிப்பொடி மேதகு சா. கணேசன் அவர்களோடு, டாக்டர் கலைஞரின் வருகையை எதிர்பார்த்து வாயிற்படியில் நின்று கொண்டிருந்தேன். எங்களுக்கு பின்னால் இருந்த அறிஞர் கூட்டமும் அங்கு வந்து எங்களுடன் சேர்ந்தது.

எதிர்பார்த்துக் கொண்டிருந்த, டாக்டர் கலைஞர் அவர்கள் சுமார் 7.30 மணிக்கு வந்து சேர்ந்தார்கள். அச்சமயத்தில் எனது வளர்ப்புத் தந்தை ஐயா திரு. சா. கணேசன் அவர்கள் அடைந்த மகிழ்ச்சியைச் சொல்லிக் காட்டிட என்னிடத்தில் வார்த்தைகள் இல்லை. அடைந்த மகிழ்ச்சியை அனுபவித்து, இரண்டு கைகளையும் விரித்து பொன் னாடை ஒன்றை கையில் வைத்துக் கொண்டிருந்த நேரத்தில் டாக்டர் கலைஞர் அவர்கள் காரை விட்டு இறங்கியவுடன் பொன்னாடை போர்த்தி தனது மகிழ்ச்சியை தெரிவித்துக் கொண்டபோது கம்பன் வாழ்க! கன்னித்தமிழ் வாழ்க! என்று கோஷம் வானைப் பிளந்தது. நான் வாய்பிளந்து வியப்புடன் பார்த்த வண்ணம் இருந்தேன்.

இந்த தமிழ்த்தாய் கோவிலுக்கு ஐந்து லட்சம் நன்கொடையாக நிதி வழங்கினார்கள் என்ற செய்தி ஒரு வரலாற்று நிகழ்ச்சியாகும். அன்று ஐந்து லட்சம் என்ற தொகை இன்று 50 லட்சததிற்கு சமம் என்று சொன்னால் மிகையல்ல.

அதை வழங்கிய டாக்டர் கலைஞர் எந்த இடத்தில் அஸ்திவாரக் கல்லைப் பதிக்க வேண்டுமென்று கேட்க, உடன் அவரை அழைத்து சென்று இடத்தைக் காண்பித்தார்கள். அப்போது நேரம் மணி 8.00ஐ நெருங்கியது.

அந்த சமயத்தில் டாக்டர் கலைஞர் அவர்கள் பேசிடவும், ஆசி கூறிடவும் அலங்காரப் பந்தல் அமைத்து, அதில் அவரை அமரச் செய்தார்கள். அதற்குள் காரைக்குடியே கம்பன் மணி மண்டபத்தில் கூடி கலைஞர் வாழ்க! என்ற கோஷத்தை பலமுறை எழுப்பினார்கள். நான் ஐயா சா. கணேசன் அவர்களை வளர்ப்பு தந்தையாக ஊரரியச் சொல்லி வந்த காரணத்தினால், வாய் விட்டு சொல்ல முடியாத உணர்ச்சி வெள்ளத்தில் திணறிக் கொண்டிருந்தேன்.

முதலில் கணீர் என்ற தனது வரவேற்புரையை நிகழ்த்தி விட்டு, டாக்டர் கலைஞரை பேசுமாறு சொன்னார்கள். தமிழ் என்றாலே கற்கண்டாக இனிக்கும் டாக்டர் கலைஞர் அவர்கள், கிட்டத்தட்ட அரை மணி நேரம் எல்லோரையும் மகிழ்ச்சி வெள்ளத்தில் திளைக்கும் வகையில் உரையாற்றினார். அவரது பேச்சு வரலாற்று சிறப்புமிக்கது என்று கூடச் சொல்லலாம். இந்த நேரத்தில் ஒரு வரலாற்று நிகழ்ச்சி நடந்தது.

டாக்டர் கலைஞர் அவர்களை நெருங்கி சா. கணேசன் அவர்கள் ஒரு சில வார்த்தைகளைப் பேச, அதை கேட்ட டாக்டர் கலைஞர் வியந்து போனார்கள். அப்போது கம்பன் அடிப்பொடி அவர்கள் பேசிய பேச்சு இன்னமும் என் காதில் ஒலிக்கிறது. ''சிற்ப கலாசாகரம்'' என்று பதிக்கப் பட்ட தங்க மெடலை (5 பவுன்) அவரிடம் காட்டி இதனை கணபதியின் தந்தைக்காகச் செய்திருந்தேன். மூதறிஞர் ராஜாஜி அவர்களைக் கொண்டு கௌரவிக்க நினைத்திருந்தேன். ஆனால் அதற்கு அவர் இப்படிச் சொன்னார் : ''நான் பெற்ற பேரும் புகழும் உங்களால் வந்தது.'' ஆகையால் நான் இதை பெற்றுக் கொள்ள இசையவில்லை என்று அன்புடன் மறுத்துவிட்டார். அதனால் பல ஆண்டுகளாக வைத்திருந்த இந்தப் பதக்கத்தை இப்போது அவரது திருமகன் கணபதிக்கு உங்கள் கையால் வழங்கிடுமாறு கோருகிறேன் என்றார்கள். அதைக் கேட்ட கலைஞர் அவர்கள் அஸ்திவாரம் போடும் போதே பதக்கம் கொடுக்கும் ஒரு தாராள வள்ளல் உள்ளத்தை உங்களிடம் பார்க்கிறேன் என்று கூறி,

டாக்டர் கலைஞர் ஐயா சா. கணேசன் அவர்களை உற்றுப் பார்த்தார். அன்று நான் பெற்ற துக்கம் கலந்த மகிழ்ச்சியை சொல்லால் சொல்லிட சொல்வளம் என்னிடம் இல்லை. என்ன சொன்னார் தெரியுமா? ''எனக்கு வயதாகி விட்டது. எத்தனை நாட்கள் இருப்பேன் என்பதையும் என்னால் சொல்ல இயலாது. எனவே கணபதி மீது நான் கொண்ட மதிப்பும், கொடுத்த பணியை திறமையாகச் செய்து முடித்துக் கொடுப்பான் என்ற நம்பிக்கையும் கொண்டுள்ளேன்'' என்று கூறி பதக்கத்தை வழங்கிடச் செய்த போது அவரது கண்ணீர் துளிகளைக் கண்டு எனது கண்ணில் கண்ணீர் வெள்ளமென வழிந்தது. எனது பூசை அறையில் இன்றும் எனது தந்தை படத்திற்கு அருகில், அவரது படத்தை வைத்து பூஜித்து வருகிறேன். என்னையும் டாக்டர் கலைஞர் அவர் களையும் வாழ்த்துமாறு அன்பு நெஞ்சங் கொண்ட அனைவரையும் வேண்டி எனது உரையை நிறைவு செய்திடுமுன் ஒரு சில வார்த்தைகள் தெரிவிக்க விரும்புகிறேன்.

கடந்த 300 ஆண்டு காலமாக நமது சிற்பக் கலையைக் காப்பாற்றி, வளர்த்து வரலாறு படைத்தவர்கள் செட்டி நாட்டு முடி சூடா மன்னர்களாகிய நகரத்தார் வரிசையிலே வந்தவர்கள் தான் கம்பன் அடிப்பொடி சா.க ணேசன் அவர்கள். எனவே அவரது பேரன் பேத்திகளில் யாராவது ஒருவருக்கு இந்த சிற்பக் கலையை கற்றுக் கொடுக்க நெஞ்சார ஆசைப்படுகிறேன். ஐயா சா. கணேசன் பேத்தி திருமதி. கண்ணகி அம்மையார் அவர்கள் என் மீதும் என் கலை மீதும் பெரும் பக்தி கொண்டவர்கள் என்பதையும் அறிந்து அந்த அம்மையார் வழிவந்த ஒருவருக்கு சிற்பக் கலையைக் கற்றுக் கொடுக்கும் வாய்ப்புக் கிடைத்திட வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். வறுமையிலே வளர்ந்த சிற்பக் கலை, இந்த நேரத்தில் டாக்டர் கலைஞர் கண்பட்டு கைபட்டு ஓங்கி வளர்ந்திருப்பதை பார்க்கிறேன். அவர் முத்தமிழோடு மட்டுமல்லாது சிற்பத்தமிழ், கட்டிடத் தமிழ் கலைகளின் சிறப்பை அனுபவித்தவர்கள். எடுத்துக்காட்டாக, உலகத்தார் வியக்கும் வகையில் வள்ளுவர் கோட்டம், கன்னியாகுமரியில் திருவள்ளுவர் சிலை நிறுவி எனக்கும் பெரும் புகழ் சேர்த்துத் தந்த அவருக்கு நன்றிக் கடனாக அவரது பேரன், கொள்ளுப்பேரன் மற்றும் கொள்ளுப்பேத்தி ஆகியோருக்கும் இந்தச் சிற்ப கலையைக் கற்றுக் கொடுக்க ஆசைப்படுகிறேன். மேலும் ''பூம்புகார் படைத்த பெருந்தச்சன்'' என்றும்

''ஐந்தமிழ் அறிஞர்'' என்றும் பட்டம் கொடுத்து அவரைச் சிறப்பித்தவன் ஆவேன்.

தமிழர் கலையாம் சிற்பக் கலை என்னுடன் முடிந்து விடாது. உலக முழுவதும் பரவிட ஒரு பயிற்சி நிலையைத்தை நான் மாமல்லபுரம் அருகிலுள்ள வடகடும்பாடியில் உள்ள எனது தொழில் பட்டறையில் துவக்கிட ஒரு கட்டிடம் கட்டி வருகிறேன். ஒரு ஆண்டுக்கு ஐந்து நபருக்கு மட்டும் சேர்க்கை அளித்து பயிற்சியும், படிப்பும் வழங்க இருக்கிறேன். "Global Gurukulam of Mayonic Science and Technology" எனப் பெயரிட உள்ளேன். இந்த நேரத்தில் எனது நன்றியை ஐயா சா. கணேசன் அவர்களுக்கும், டாக்டர் கலைஞர் அவர்களுக்கும் உரித்தாக்குகிறேன்.

நான் ஏற்கனவே இக்கலையை அமெரிக்கருக்கு சொல்லிக் கொடுத்து அவர்களது ஆராய்ச்சிக்கு உறுதுணையாக இருந்து Americian University of Mayonic Science and Technology என்ற கல்வி நிலையத்தை நியூமெக்ஸிகோவில் ஆரம்பித்து நன்றாக நடத்து வருகிறது. அதுபோல நமது உலக சமுதாயம் பயன் பெற மாமல்ல புரத்திற்கு அருகே சிற்பக்கலை நிலையம் அமைத்து வருகிறேன். Global Gurukulam of Mayonic Science and Technology நன்றாக உருவாகி வருகிறது. எனினும் அதனைத் திறந்து துவக்கி வைக்க டாக்டர் கலைஞர் அவர்களை அழைக்க ஆசைப்பட்டு அந்த நன்நாளை எதிர்பார்த்து கொண்டிருக்கிறேன். இச்செய்தியை கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்களின் நூற்றாண்டு விழாவிலே தெரிவிப்பதில் மகிழ்ச்சி யடைகிறேன்.



# வாழ்க! வாழ்க!

– கம்பன் அடிப்பொடி

நல்லவர்கள் எல்லோரும்
நலம்சிறந்து மகிழ்பூத்து
நாளும் வாழ்க!

அல்லவர்கள் அவர்களுமே
நல்லவர்கள் ஆகிநலம்
அரும்பி வாழ்க!

சொல்லரிய புகழ்க்காந்தி
தொகுத்தளித்த நல்லறங்கள்
துலங்கி வாழ்க!

எல்லையிலான் திருவருளால்
இடுக்கண் ஒழிந்து இந்தியநாடு
என்றும் வாழ்க!

கம்பன் வாழ்க!
கம்பன் புகழ் வாழ்க!
கன்னித் தமிழ் வாழ்க!





தமிழ்த்தாயின் படிமத்தை
வடித்து வெற்றி கண்ட அமரர்.
சிற்பகலா சாகரம்.ம. வைத்திநாத
ஸ்தபதியார் "நடராஜ மூர்த்திக்குப் பிறகு
இம்மூர்த்தியே பல்லாற்றானும் கலை,
தத்துவம், விஞ்ஞானம் ஆகிய
மூன்றின் கருத்துச் செறிவுமுள்ளது.
எங்களைப் போன்ற ஸ்தபதிகட்கு இந்த
இரண்டு மூர்த்திகளும்தான் அற்புதப்
பொருளாக உள்ளன"
என்று கூறி மகிழ்ந்தார்.



நிகழ்காலத்தில் தோன்றிய
தமிழ்த் தாயின்
இப்படிமத்தைக் கண்டு
அறிஞர் அண்ணா அவர்கள்
மனமுருகப் பாராட்டினார்கள்,
இதன் அச்சுப் படத்தைப்
பெற்றுக் கொண்டபோது
அதைக் கண்ணில் ஒற்றிக்
கசிந்துள்ளம் நெகிழ்ந்தார்கள்.




உமா
பதிப்பகம்